# சங்க இலக்கியம் காட்டும் மனித உறவுகள்

சென்னைப் பல்கலைக்கழகத்தின்

முனைவர் (பிஎச்.டி.,) பட்டப்பேற்றுக்காக

அளிக்கப்பெறும் ஆய்வேடு


ச. இரேணுகா

பகுதிநேர ஆய்வாளர், தமிழ்த்துறை

இராணிமேரி கல்லூரி

சென்னை - 600 004


*மேற்பார்வையாளர்*


டாக்டர் **இரா. சரளா,** எம்.ஏ., பிஎச்.டி.,

பேராசிரியர், தமிழ்த்துறை

இராணிமேரி கல்லூரி

சென்னை - 600 004


ஏப்ரல் — 2001

டாக்டர் இரா. சரளா, எம்.ஏ., பிஎச்.டி.,
பேராசிரியர்
தமிழ்த்துறை
இராணிமேரி கல்லூரி
சென்னை - 600 004

# மேற்பார்வையாளர் சான்றிதழ்

'சங்க இலக்கியம் காட்டும் மனித உறவுகள்' என்னும் இவ்வாய்வேடு, சென்னை இராணிமேரி கல்லூரித் தமிழ்த்துறையில், என் மேற்பார்வையில் திருமதி ச. இரேணுகா அவர்களால் ஆய்வு நிகழ்த்தி எழுதப் பெற்றதாகும்.

இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும், ஆய்வரங்கிற்கும் இவ்வாய்வேடு அளிக்கப் பெறவில்லை என்றும், இதன்மீது வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றிதழ் வழங்குகிறேன்.

(டாக்டர் இரா. சரளா)
மேற்பார்வையாளர்

சென்னை - 600 004
நாள் : 26-4-2001

ச. **இரேணுகா,** எம்.ஏ., எம்.எட்., எம்.ஃபில்.,
பகுதிநேர ஆய்வாளர்
தமிழ்த்துறை
இராணிமேரி கல்லூரி
சென்னை - 600 004

# ஆய்வாளர் உறுதிமொழி

*'சங்க இலக்கியம் காட்டும் மனித உறவுகள்' என்னும் இவ்வாய்வேடு, சென்னை இராணிமேரி கல்லூரித் தமிழ்த்துறையில், பேராசிரியர் டாக்டர் இரா. சரளா, எம்.ஏ., பிஎச்.டி., அவர்கள் மேற் பார்வையில் என் முயற்சியால் ஆய்வு நிகழ்த்தி எழுதப் பெற்றதாகும்.*

*இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும், ஆய்வரங்கிற்கும் இவ்வாய்வேடு அளிக்கப் பெறவில்லை என்றும், இதற்காக வேறு எந்தப் பட்டமும் வழங்கப் பெறவில்லை என்றும் நான் உறுதியளிக்கிறேன்.*

(ச. இரேணுகா)
*ஆய்வாளர்*

*சென்னை - 600 004*
*நாள் : 26-4-2001*

## நன்றியுரை

இற்றைக்கு உலகமெல்லாம் பரவும் வகையில் தேசியத் தர மதிப்பீட்டு அங்கீகாரக் குழுவின் ஐந்து நட்சத்திரத் தகுதியைப் பெற்றுள்ளதும், பல்கலைக்கழக மானியக் குழுவின் உயர் சிறப்புத் தகுதியைப் பெற்றுள்ளதுமாகிய தாய்ப் பல்கலைக்கழகம் என்னும் பெருமைக்குரிய சென்னைப் பல்கலைக் கழகம் யான் மேற்கொண்ட இவ்வாய்வுக்குத் தன் மேலான அனுமதியை அளித்து வித்திட்டு உதவியது.

சென்னைப் பல்கலைக்கழகத்தின் சீர்மைக்கு அருந்தொண்டு ஆற்றிவருகின்ற எம்பேராசிரியர் பெருந்தகை மேதகு துணைவேந்தர் பொற்கோ ஐயா அவர்களை இவ்வாய்வுத் தலைப்பின் பொருண்மை அறிய அணுகியபோது இவ்வாய்வுப் புலத்தின் ஆழத்தையும் அகலத்தையும் தெற்றெனக் காட்டி அருளினார்.

தாய்மை அன்பு மாறாத் தனித்தகைமைப் பெருமாட்டி எம் பேராசிரியர் டாக்டர். இரா. சரளா அவர்கள், யான் தொடங்கிய இவ்வாய்வுக்கு நெறியாளராகத் திகழ்ந்து, தம் நுண்மாண் நுழைபுலத்தால் ஆய்வுப் புலத்தை எனக்கு அறிவுறுத்தி நன்னெறி காட்டிப் பேருதவி ஈந்தார்.

என் ஆய்வைப் பகுதிநேர ஆய்வாக மேற்கொள்வதற்கு இராணிமேரி கல்லூரி முதல்வர் டாக்டர். பிரிமியூலா நியூசேம் எம்.ஏ., எம்.பில்., பிஎச்.டி., அவர்கள் தம் உயரிய ஒப்புதலை நல்கினார்.

இவ்வாய்வைத் தம்துறையில் தொடங்கி நிகழ்த்த, தமிழ்த் துறைத் தலைவர் டாக்டர். இரா. மல்லிகா எம்.ஏ., பிஎச்.டி., அவர்கள் உளமுவந்து தம் ஒத்துழைப்பைத் தந்தார்.

சி.டி.டி.இ. மகளிர் கல்லூரியின் தாளாளர், டாக்டர் எலிசபெத் தாமஸ் அவர்கள் இந்த ஆய்வுக்குப் பதிவு செய்யும் பொருட்டு எனக்கு அனுமதியும் யான் ஆற்றிய பணிக்கான பணிச்சான்றிதழும் அளித்துதவினார்.

சி.டி.டி.இ. மகளிர் கல்லூரியின் முதல்வர், டாக்டர் பிரேமா ரூபஸ் அவர்களும் பேராசிரியர் கவிஞர் வ. விசயரங்கன், செல்வி ந. உடையநங்கை அவர்களும் என் ஆய்வுப் பணிக்குத் தம் ஒத்துழைப்பை உவந்தளித்தனர்.

கவிதை நாடகப் பாவலர் டாக்டர் மலையமான் (இராசகோபாலன்) அவர்கள் இவ்வாய்வுக்குத் தக்கவகையில் துணை நின்றார்.

என் அன்புத் தந்தையும் தமிழறிஞருமாகிய திரு. க. சண்முகசுந்தரம் அவர்களும் பேராசிரியர் இராம. சுப்பிரமணியன் அவர்களும் இவ்வாய்வுக்குப் பற்பல ஆய்வுக் கருத்துகளை வழங்கினர்.

முன்னாள் மாவட்ட மருத்துவ அலுவலர் டாக்டர். க.க. சம்பத் அவர்கள் இவ்வாய்வுக்குப் பயன்படும் பல நல்ல நூல்களைக் கொடுத்து உதவியதோடு நுட்பமாகச் சிந்திக்கவும் ஊக்குவித்தார்.

இவ்வாய்வுக்குரிய செய்திகளைத் திரட்டப் பல்லாற்றானும் துணைநின்றவர்கள், சென்னைப் பல்கலைக் கழகத்தின் நூலகர் டாக்டர். இரா. வேங்கன் அவர்கள், சென்னைப் பல்கலைக்கழக மெரினா வளாகத்தின் கீழைக் கலையியல் நூலக நூலகர், தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றிய நூலக நூலகர் திரு. இரா. மதியழகன் அவர்கள், சென்னை மாவட்ட நூலகத்தின் புரசைவாக்கம் கிளை நூலகர், மறைமலை அடிகள் நூலக நூலகர் ஆகியோர் ஆவர்.

ஆய்வுப் பணியின்போது வாழ்க்கைச் சூழல்களால் ஏற்பட்ட சில நெருக்கடி நேரங்களில் எல்லாம், காந்த மருத்துவவல்லுநர் திருமதி கோ. பூங்கோதை அவர்கள் தம் இன்னுரைகளால் எழுச்சியூட்டினார்.

இவ்வாய்வு தடையின்றி நிகழ்த்தப்பெற, பல நிலைகளிலும் தோள் கொடுத்துத் துணைநின்றவர் என் அன்புக் கணவர் டாக்டர் பா. கிருட்டிணமூர்த்தி ஆவார்.

இந்த ஆய்வுப் பணிக்குத் தம்மாலான உதவிகளை முதுநிலை விரிவுரையாளர் திரு. ஆ. திருநாவுக்கரசு, திரு. சே. வரதராசன், கவிஞர் கா.உ. கிருட்டிணமூர்த்தி, பா. அன்புச்செல்வம், ஆசிரியர் திரு. கிள்ளிவளவன் ஆகியோர் உவந்து செய்தனர்.

இவ்வாய்வேட்டை அழகுற ஒளியச்சு செய்தும், கட்டமைத்தும் உதவி செய்தோர் திரு. கு. அர்ச்சுனன், திரு. தீ. சந்திரசேகர் மற்றும் மாணவர் நகலகத்தார் ஆவர்.

என் ஆய்வைச் சிறப்பாகச் செய்து முடிக்கப் பேரன்புடன் உறுதுணைப் புரிந்த நல்லோர் பெருமக்களாகிய இவர்கள் அனைவருக்கும் என் உள்ளம் நிறைந்த பெரு நன்றியை மகிழ்ச்சியுடன் உரித்தாக்குகிறேன்.

*- ச. இரேணுகா*

# சுருக்கக் குறியீடு

| | | |
|---|---|---|
| அகத். | - | அகத்திணையியல் |
| அகம். | - | அகநானூறு |
| அரசி. பட. | - | அரசியல் படலம் |
| இளம். | - | இளம்பூரணர் |
| இறை. | - | இறையனார் களவியல் உரை |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| களவு. | - | களவியல் |
| கலி. | - | கலித்தொகை |
| கம்ப. | - | கம்பராமாயணம் |
| கற்பு. | - | கற்பியல் |
| குறள். | - | திருக்குறள் |
| குறி.பா. | - | குறிஞ்சிப்பாட்டு |
| குறு. | - | குறுந்தொகை |
| சிறுபாண். | - | சிறுபாணாற்றுப்படை |
| சூ. | - | சூத்திரம் |
| செ.எண். | - | செய்யுள் எண் |
| செய். | - | செய்யுளியல் |
| சொல். | - | சொல்லதிகாரம் |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நச்சர். | - | நச்சினார்க்கினியர் |
| நம்பி. | - | நம்பியகப் பொருள் |
| நற். | - | நற்றிணை |

| | | |
|---|---|---|
| நெடு. | - | நெடுநல் வாடை |
| பக். | - | பக்கம் |
| ப.ப. | - | பதிற்றுப்பத்து |
| ப-ள் | - | பக்கங்கள் |
| பட்டி. | - | பட்டினப்பாலை |
| பரி. | - | பரிபாடல் |
| பால. | - | பாலகாண்டம் |
| புறத். | - | புறத்திணையியல் |
| புறப்.வெண். | - | புறப்பொருள் வெண்பாமாலை |
| புறம். | - | புறநானூறு |
| பெரு. | - | பெருமழைப்புலவர் |
| பெரும்பாண். | - | பெரும்பாணாற்றுப்படை |
| பேரா. | - | பேராசிரியர் |
| பொருந. | - | பொருநராற்றுப்படை |
| பொருள். | - | பொருளதிகாரம் |
| மது. | - | மதுரைக்காஞ்சி |
| மரபு. | - | மரபியல் |
| மலை. | - | மலைபடுகடாம் |
| முல்லை. | - | முல்லைப்பாட்டு |
| மெய். | - | மெய்ப்பாட்டியல் |
| விளி. | - | விளிமரபு |
| Pa. | - | Page |
| PP. | - | Pages |

# பொருளடக்கம்

# 1. முன்னுரை

1.0 முன்னுரை

1.1 ஆய்வு நோக்கம்

1.2 ஆய்வுத் தலைப்பு விளக்கம்

1.3 ஆய்வு ஆதாரங்கள்

1.4 ஆய்வுத் தன்மை

1.5 ஆய்வுத் திட்டம்

# 1. முன்னுரை

1.0 உலகின் உயிர்த்தோற்றம் நிலத்திலும் நீரிலும் நிகழ்கின்றன. அவற்றின் பரிணாம வளர்ச்சியால் பல வடிவங்கள் உருவாகின்றன. அவற்றை ஓரறிவு உயிர் முதல் ஆறறிவு உயிர் வரை ஆறு வகையாகப் பகுத்துள்ளனர்.

தொன்மைத் தமிழாசான் தொல்காப்பியனாரும்,

*''ஒன்றறி வதுவே உற்றறி வதுவே*
*இரண்டறி வதுவே அதனொடு நாவே*
*மூன்றறி வதுவே அவற்றொடு மூக்கே*
*நான்கறி வதுவே அவற்றொடு கண்ணே*
*ஐந்தறி வதுவே அவற்றொடு செவியே*
*ஆறறி வதுவே அவற்றொடு மனனே*
*நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத் தினரே''* [1]

என உயிர்ப்பிரிவு பற்றிக் கூறுவது குறிப்பிடத்தக்கது.

உயிர், பல வடிவில் உருப்பெற்றுத் தோன்றி மறையக் கூடியது. அவ்வாறு அவ்வுயிர் தோன்றி மறைவதற்கு இடைப்பட்ட காலம் வாழ்வு எனப் பேசப்படும். இவ்வாழ்க்கை முறை அனைத்து உயிரினங்களுக்கும் உண்டு. எனினும் மனித உயிர் ஒன்றே முழுமைத் தன்மையுள்ள சிறந்த வாழ்வு வாழ்வதாகக் கொள்ளலாம். அதனால்தான், 'அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது'[2] எனத் தமிழ் மூதாட்டி ஔவை கூறினார்.

'அன்பு' என்ற உள்ளத்தின் உணர்வு உயர்திணையாகிய மனிதனிடத்தில் மட்டுமன்றி அஃறிணை உயிரிடத்தும் காணப்படக்கூடியது. ஆனால் இவ்வுணர்வு குடும்பமாக அமைந்து சிறந்து ஓங்குவது மனித இனத்தில் மட்டுமே எனலாம். விலங்கினங்களும் பறவையினங்களும் இனப்பெருக்கத்தை இயற்கையிலேயே பெற்றிருந்தாலும் அவை, குடும்பம் என்ற அமைப்பிற்குள் உறவை வைத்துக் கட்டிக்காப்பதில்லை. அவ்வினம் தாமே தம்மைப் பாதுகாத்துக் கொள்ள முடியும் எனத் தெரிந்து கொண்டதும் பெற்றவர்களை விட்டுப் பிரிகின்றன. மனிதஇனம் அவ்வாறின்றி இறுதிக்காலம் வரை பிரிவின்றி உறவுற்று வாழ்கின்றது.

ஆனால், குரங்கினம் சற்று விதிவிலக்காக மனிதனைப் போன்ற உறவு முறையில் தன் இறுதிக்காலம் வரை வாழ்வதைக் காணலாம். இது குரங்கிலிருந்து பிறந்தவன் மனிதன்

என்ற கருத்துக்கு அரணாக அமைகிறது. மேலும் சங்க இலக்கியத்தில் ஆண் குரங்கு இறந்ததும் பெண் குரங்கும் உடன் மாய்வதைக் காணமுடிகிறது.[3]

மனிதன் பிறந்தது முதல் இறக்கும் வரை பெற்றோர், உடன்பிறந்தோர், குழந்தைகள் எனக் குருதித் தொடர்புடைய குடும்ப நிலையிலும், தன் உறவினர், நண்பர்கள் எனச் சமுதாய நிலையிலும், தன் ஆசான், தன் மாணவர், தன்னுடன் பணியாற்றுபவர், தனக்கு உயர் அலுவலர், தனக்குக் கீழ்ப் பணியாற்றுபவர் எனப் பணி நிலையிலும், தன் சமயத்தார், தன் இனத்தார், தன் மொழியார், தன் நாட்டார் எனச் சமயம், இனம், மொழி, நாடு ஆகிய நிலைகளிலும் உறவு கொள்கின்றான்.

எனவே, இவ்வுறவுகள் மனிதனுக்கு நீண்டதாகவும் தொடர் நிகழ்வுடையதாகவும் அமைகின்றன. எப்படி ஒரு மையப் புள்ளியை வைத்து அமைக்கப்படும் ஆரக்காலுக்கு எண்ணிக்கை இல்லையோ அப்படியே மனிதனுக்கும் மனித உறவுகட்கும் எண்ணிக்கை இல்லை எனலாம். இன்று இம்மனித உறவு விஞ்ஞானத்தின் விளைவுகளால் தோன்றிய பல சாதனங்கள் வழி உலக அளவில் நீண்டு பரந்து விட்டமையை நாம் அறிகிறோம்.

முன்பு மனிதன், தான் வாழும் உலகத்தை இருக்கும் இடத்தில் இருந்தவாறே கண்ணால் காண முடியாமையால் மிகப் பெரியதாக எண்ணினான். ஆனால், இன்று மக்கள் தொடர்புக் கருவிகளால் உலகச் செய்திகளைச் செவியால் கேட்கவும், உலக நடப்புகளைக் கண்ணால் காணவும் கூடியவையாக மாறியதால் உலகம் சுருங்கிவிட்ட நிலையை நம்மால் உணரமுடிகிறது.

மனிதன் உலகின் தோற்றத்தை விரிவானதாகக் கருதியபோது அவன் உறவு ஒரு கட்டுப்பாட்டுக்குள் இருந்து வரன்முறை படுத்தப்பட்டதாக அமைந்திருந்தது. அதனால் போலித்தனமோ, சண்டையோ, தீமையோ அவ்வளவாக ஏற்படவில்லை. மனித மனமும் செம்மை சான்ற நல்வழி உடையதாய் அமைந்திருந்தது.

இன்று உலகம் சுருங்கியதால் உறவுகள் மட்டும் பெருகியுள்ளன. ஆனால் போலித்தனம், சண்டை, பழிவாங்கல், ஊழல், கொலை, கொள்ளை, நாடு பறிப்பு போன்ற சொல்லுக்கடங்காத் தீங்குகள் பெருகிவருகின்றன. இதற்கு அடிப்படைக் காரணம் 'உறவு' என்ற சொல்லின் பொருளும், உறவு முறைமைகளும் மக்கட்கு விளங்காமையே ஆகும்.

இன்று கிராமப் புறங்களில் வாழ்வோரிடம் பெரியவர், சிறியவர்; அண்ணன், தம்பி; அக்காள், தங்கை; மாமன், மைத்துனன் போன்ற முறைகளில் உறவுகள் அமைந்து, ஒருவர் இன்ப துன்பத்தில் மற்றவர் பங்கேற்பதைக் காண முடிகின்றது.

நாகரிக வளர்ச்சிமிக்க நகரங்களில் அடுத்த வீட்டில் வசிப்பவன் யார்? அவன் பெயர் என்ன? எனத் தெரியாமல் வாழும் நிலைமை உள்ளது. குறிப்பாகத் தெருவில் ஒருவன் விபத்தால் அடிபட்டோ, மயக்கமுற்றோ வீழ்ந்து கிடந்தாலும் கண்டும் காணாமல் செல்வதும், நமக்கு இந்த வீண் வம்பு ஏன்? என எண்ணும் மனிதநேயமற்ற மனப்போக்கும் காணப்படுகின்றன.

குடும்ப நிலையில் நோக்கும்போது மேனாட்டில் மட்டுமன்றி நம் இந்தியத் திருநாட்டிலும் இல்லற உறவு முரிவு பெருகி வருகிறது. உடன்பிறப்பு, உற்றார், உறவினர் உறவுகள் முரிந்து உடையும் நிலை அடைந்துள்ளன.

உலக அளவில் நோக்கும்போது 'உறவு' என்ற சொல்லும், அதன் பயன்பாடும் ஏட்டளவிலும், பேச்சளவிலும் உள்ளன எனலாம். அவற்றை நடைமுறையில் காண்பதென்பது அருகிவிட்டன. இருநாடுகள் அமைதி வேண்டி ஒப்பந்த ஏட்டில் கையெழுத்திடலாம்; அடுத்த நாளே சண்டைக்குச் செல்லலாம் என்ற நிலைகள் காணப்படுகின்றன.

ஒவ்வொரு நாட்டின் எல்லை, வரைபடத்தில் கோடாய் அமைந்து அவரவர்க்கு உரிமை ஆகின்றன. ஆனால் மனதில் அந்த எல்லை வரையப்பட்டுப் பதிவாகவில்லை. அதனால்தான் எல்லையைப் பெருக்கவும், தம் ஆதிக்கத்தை எல்லை கடந்து நிலைநாட்டவும் உலக அளவில் அந்தந்த நாடுகளும் துடிக்கின்றன. இதன் காரணமாக உலகம் தழுவிய நிலையில், மனிதன் தன் நாட்டின் எல்லைப் பாதுகாப்பிற்காகச் செய்யும் செலவு அதிகமாகின்றது.

இக்கருத்திற்கு அரண் செய்வது போல ஆய்வாளர்களின் கருத்துகளும் உள.

> ***'மனிதனுக்கு மனிதன் தான் எதிரி! மனிதன் தன் சிந்தனைகளாலும், செயல்களாலும் தன்னை அழித்துக் கொள்கிறான்'***

என்று மனோதத்துவ நிபுணர்கள் கூறுகிறார்கள்[4] என்கிறார் எம்.எஸ். உதயமூர்த்தி.

> ***'இன்று உலகில் உள்ள தலைவர்களும் உலக நாடுகளும் பாதுகாப்புக்காகச் செய்கிற செலவை எண்ணிப் பார்த்தால் அந்தப் பொருளால் இன்னொரு உலகத்தையே படைத்துவிடலாம். மனிதனைக் கண்டு மனிதன் அஞ்சுகிறான். இடி, மின்னல், மழை, வெள்ளம், புயல், நிலநடுக்கம், எரிமலை - இப்படிப்பட்ட இயற்கைச் சீற்றத்துக்கு அஞ்சுவதைவிட - கொடிய***

*நோய்களுக்கு அஞ்சுவதை விட - சிங்கம், புலி, கரடி, பாம்பு, தேள் போன்ற கொடிய உயிர்களுக்கு அஞ்சுவதைவிட மனிதனைக் கண்டு மனிதன் அஞ்சுகிறான். பாதுகாப்புக்குச் செலவு செய்கிறான்'* [5]

என்கிறார் பொற்கோ.

உலக நாடுகள் அனைத்தும் எல்லை நீங்கி அன்றையப் புலவன் கணியன்பூங்குன்றனாரின், 'யாதும் ஊரே, யாவரும் கேளிர்' [6] என்னும் பொதுமை உறவு முறையில் வாழ்ந்தால் இன்றைய மக்களின் போர்க்குணமும் தன்னலப் போக்கும் ஒழியும்.

மேலும் நாட்டு மக்கட்கு உயிராக விளங்கும் அரசு, மக்களிடமும் பிறரிடமும் கொள்ள வேண்டிய உறவும், குடும்ப வாழ்வில் குடும்பத் தலைவனும் தலைவியும் பிறரும் கொள்ள வேண்டிய உறவும் ஆரவாரமின்றி அமைதிப் பண்பட்ட நற்பான்மையோடு அமைதல் வேண்டும்.

## 1.1 ஆய்வு நோக்கம்

சங்க இலக்கியங்கள் குறித்து முன்னர் நடைபெற்ற ஆய்வுகள் தனித்தனி இலக்கியங்கள் பற்றியும், தனித்தனி திணைகள் பற்றியும், இலக்கிய மாந்தர்களின் உளவியல் கூறுகள் அடிப்படையிலும் நடைபெற்றுள்ளன.

ஆனால் சங்கத் தமிழ் இலக்கியங்களில் காணக்கிடக்கும் மாந்தர்கள் 'ஒவ்வொருவரிடையேயும் அகம், புறம் என்ற இரு நிலைகளில் கொண்டுள்ள உறவு முறை குறித்த ஒரு முழுமையான ஆய்வு, தமிழாய்வுலகில் நிகழ்த்தப் பெறவில்லை.

இக்காரணம் பற்றியே 'சங்க இலக்கியம் காட்டும் மனித உறவுகள்' என்னும் தலைப்பில் இவ்வாய்வு நிகழ்த்தப் பெறுகின்றது. சங்க இலக்கியங்களில் காணப்படும் மாந்தர்கள் அகம், புறம் என்ற இரு நிலைகளில் ஒருவர் மற்றொருவரிடம் கொண்டுள்ள உறவின் சிறப்புகளைக் காண முயல்வதே இவ்வாய்வின் முக்கியக் குறிக்கோள் ஆகும்.

## 1.2 ஆய்வுத் தலைப்பு விளக்கம்

**''சங்க இலக்கியம் காட்டும் மனித உறவுகள்''** என்னும் இவ்வாய்வின் பொருளாவது, கடைச் சங்க நூல்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகிய இலக்கியங்களில் காணப்படும் மாந்தர்களின் அகவாழ்வு, புறவாழ்வு சார்ந்த உறவுத் திறன் பற்றி மேற்கொள்ளப்படும் ஆராய்ச்சி என்பதாகும்.

## 1.3 ஆய்வு ஆதாரங்கள்

இவ்வாய்விற்குச் சங்க இலக்கிய நூல்களாகிய மேல்கணக்கு எனப்படும் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என்னும் 18 நூல்கள் முதன்மை ஆதாரங்களாகக் கொள்ளப்பட்டுள்ளன.

ஆய்வுக்கு அரண் செய்யக்கூடிய வகையில் இறையனார் களவியலுரை, தொல்காப்பியம், நம்பியகப் பொருள், புறப்பொருள் வெண்பாமாலை ஆகிய இலக்கண நூல்களும் துணை ஆதாரங்களாகக் கொள்ளப்பெற்றுள்ளன.

## 1.4 ஆய்வுத் தன்மை

இவ்வாய்வு சங்க இலக்கிய மாந்தர்தம் உள்ளங்கள் கலப்புற்று விளங்கிய விரிந்த பல உறவுகள் பற்றி நிகழ்த்தப்படுவதால் அவ்விலக்கிய மாந்தர்தம் எண்ணம், சொல், செயல் ஆகியவை குறிப்பாக உரைக்கப்படாமல், விளக்கமாக உரைக்கப்பெற்றுள்ளன. அவர்தம் உரையாடல்களை விளங்க உரைத்தால் மட்டுமே அவர்களின் உறவு பற்றிச் செம்மையாக அறிந்து ஆய்வு நிகழ்த்த இயலும் என்பது இங்குக் கருதத்தக்கது.

இவ்வாய்வின் இயல் பகுப்புகளுக்கேற்ப அந்தந்த இயலுக்குரிய மாந்தர்கள் அவ்வவ்வியலில் தலைமைத் தன்மைப் பெற்று, பிற மாந்தர்களிடம் கொண்ட உறவு புலப்படும்படி ஆய்வு நிகழ்த்தப் பெறுகிறது. எனவே சில கருத்துகள்/செய்திகள் தேவைக்கேற்ப கூறியது கூறல் போலத் தோன்றுவது தவிர்க்க இயலாததாகிறது. மேலும் உறவு கொள்ளும் மாந்தர்களின் கூற்று, இடத்திற்கேற்ப தன்மை, முன்னிலை, படர்க்கை ஆகிய மூவிடத்திற்கும் உரியனவாகக் காட்டப் பெற்றுள்ளன. சங்க இலக்கிய உரைமரபு கருதிச் சில இடங்களில் மொழிநடை அமைந்திருப்பது தவிர்க்கமுடியாததாகிறது.

அக மாந்தர் உறவு, புறமாந்தர் உறவு என்னும் இருபகுப்பு இவ்வாய்வின் அடிப்படை ஆய்வுப் போக்காகும். அகமாந்தர் உறவு பற்றிய இயலில் முறையே களவுப் புணர்ச்சி சார்ந்த உறவும் பின்னர் கற்புப் புணர்ச்சி சார்ந்த உறவும் ஆராயப்பட்டுள்ளன. புறமாந்தர் உறவு பற்றிய இயலில் புற மாந்தர் ஒவ்வொருவரும் பிற மாந்தர்களுடன் கொண்ட உறவுகள் ஆராயப்பட்டுள்ளன. உறவு என்பது உளவியலைச் சார்ந்தது. ஆயினும், இவ்வாய்வில் உளவியல் பற்றி தேவையான இடங்களில் மட்டுமே குறிக்கப்படுகிறது. எனவே உறவை மையப்படுத்தியே இவ்வாய்வு மேற்கொள்ளப் பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது.

சங்க இலக்கியப் பாடல்களின் எண்ணிக்கை குறித்து ஆராய்ச்சியாளரிடையே பல்வேறு கருத்துகள் நிலவுகின்றன. இவ்வாராய்ச்சியில் கிடைக்கப்பெற்ற மொத்த பாடல்கள் 2,356 ஆகும். அவற்றுள் அகப்பாடல்கள் 1,857; புறப்பாடல்கள் 499 ஆகும்.[7]

சங்க இலக்கியப் பாடல்களில் அகவாழ்வு, புறவாழ்வு சார்ந்த உறவுகள் சிறப்பாக வெளிப்படுகின்ற பாடல்களில் மட்டுமே ஆய்வு நிகழ்த்தப்படுகின்றது. ஆகவே சங்க இலக்கியங்களின் அனைத்துப் பாடல்களும் இங்கு ஆய்வுக்கு உட்படுத்தப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## 1.5 ஆய்வுத் திட்டம்

அகம், புறம் சார்ந்த மாந்தர்கள் உறவு பற்றிய ஆய்வின் அணுகுமுறைகள் வேறுபாடுடையன. அகமாந்தர் உறவுகள் குருதித் தொடர்பாலும், நெருங்கிப் பழகும் நட்பின் பொருட்டும், வாழ்வியல் சூழல்களால் உண்டாகும் தொடர்பாலும் அமைகின்றன. இலக்கியத்தில் கிடைத்துள்ள சான்றுகளின் அடிப்படையில் வெளிப்படும் குருதித் தொடர்பான உறவுகள் தலைவி, நற்றாய், தமர், தன் ஐயன் ஆகியோரிடத்து அமைகின்றன. நட்புத் தொடர்பான உறவுகள் தலைவி, தலைவன், தோழி, பாங்கன் ஆகியோரிடத்து அமைகின்றன. தலைவன், தலைவி உறவின் வளர்ச்சிக்கு உதவி செய்வோர் என்னும் நிலைகளால் உண்டாகும் உறவுகள் தேர்ப்பாகன், பாணன், விறலி, கண்டோர், பிறர் ஆகியோரிடத்து அமைகின்றன. எதிர்நிலை உறவு பரத்தையரிடத்து அமைகின்றது.

புறமாந்தர் உறவுகள் அரசன், புலவன், வீரர், வள்ளல் போன்றோரிடத்து அமைகின்றன. எதிர்நிலை உறவாகப் பகை வீரர்கள் மேற்கொள்ளும் உறவுகளால் அமைகின்றன.

இயல்கள் பின்வருமாறு

1. **முன்னுரை**
2. **மனித உறவுகள்**
3. **தலைவி கூற்றுவழி உறவுகள்**
4. **தலைவன் கூற்றுவழி உறவுகள்**
5. **தோழி கூற்றுவழி உறவுகள்**
6. **நற்றாய், செவிலித்தாய் கூற்றுவழி உறவுகள்**
7. **பரத்தை மற்றும் பிறர் கூற்றுவழி உறவுகள்**
8. **புறப்பாடல் புலவர், கூற்றுவழி உறவுகள்**
9. **பிற புறமாந்தர் கூற்றுவழி உறவுகள்**
10. **தொகுப்புரை**

**'முன்னுரை'** என்னும் முதல் இயலில் ஆய்வுத் தலைப்பின் பொருள் விளக்கம், ஆய்வின் நோக்கம், ஆய்வு மூலங்கள், முந்தைய ஆய்வுநிலை, ஆய்வின் திட்டம் ஆகியவை வரையறுக்கப் பெற்றுள்ளன.

**'மனித உறவுகள்'** என்னும் இரண்டாம் இயலில், 'மனித உறவு' என்னும் சொற்றொடர்க்கான பொருள் விளக்கம் அளிக்கப்படுகின்றது. மனித உறவுகளுக்கு அடிப்படைக் காரணமாகிய திருமணம், குடும்பம், சமுதாயம் பற்றிய செய்திகள் விளக்கம் பெறுகின்றன. மேலும் மனித உறவுகளின் வளர்ச்சி நிலை, தலைமை உறவாகிய தாயுறவு, இன்றைய உறவின் வகைப்பாடுகள் போன்றவை ஆய்வுக்குட்படுத்தப் பெற்றுள்ளன.

**'தலைவி கூற்றுவழி உறவுகள்'** என்னும் மூன்றாம் இயலில் சங்க இலக்கியத் தலைமைப் பாத்திரங்களில் ஒருத்தியாகிய தலைவி - தோழி, தலைவன், பாணன், விறலி, அந்தணர், கண்டோர் ஆகியோருடன் நிகழ்த்துகின்ற கூற்றுவழி காணப்படும் உறவுகள் ஆராயப்பட்டுள்ளன. மேலும் அவள் காதல்மிக்குப் பிறரிடம் உரைக்கும் கூற்றுகளும் தன் நெஞ்சினிடம் நிகழ்த்தும் கூற்றுகளும் வெளிப்படுத்துகின்ற உறவுத்திறனும் உற்று நோக்கப்பட்டுள்ளன.

**'தலைவன் கூற்றுவழி உறவுகள்'** என்னும் நான்காம் இயலில், ஒப்பாரும் மிக்காரும் இல்லாத் தலைமைப் பண்புடையவனாகிய தலைவன்-தலைவி, தோழி, பாங்கன், தேர்ப்பாகன், பாணன், கண்டோர், தன்நெஞ்சு ஆகியோருடன் நிகழ்த்தும் கூற்றுகளால் புலப்படும் உறவுகள் ஆராயப்பட்டுள்ளன.

**'தோழி கூற்றுவழி உறவுகள்'** என்னும் ஐந்தாம் இயலில், தலைவன் தலைவியர் உறவுக்கு உற்ற பாலமாகத் தொண்டாற்றுகின்ற தோழி-தலைவி, தலைவன், செவிலித்தாய், உழவன், பாணன், விறலி, குயவன், அறிவர், தமர் ஆகியோருடன் நிகழ்த்தும் கூற்றுகள் ஆய்வுக்குட்படுத்தப் பெற்று, அவை காட்டும் உறவுகள் சுட்டப் பெற்றுள்ளன.

**'நற்றாய், செவிலித்தாய் கூற்றுவழி உறவுகள்'** என்னும் ஆறாம் இயலில் தலைவியை ஈன்றளித்தவளாகிய நற்றாய் - செவிலித்தாய், தோழி, தமர், தன்நெஞ்சு ஆகியோருடன் நிகழ்த்தும் கூற்றுகள் ஆய்வு செய்யப்பட்டுள்ளன. அதைத் தொடர்ந்து நற்றாயின் தோழியாகிய செவிலித்தாய்-நற்றாய், தலைவி, தோழி, கண்டோர் ஆகியோருடன் நிகழ்த்தும் கூற்றுகளும் ஆய்வுக்குள்ளாக்கப் பெற்று, இவ்விருவர் கூற்றுகள் காட்டும் உறவுகள் பெறப்பட்டுள்ளன.

**'பரத்தை மற்றும் பிறர் கூற்று வழி உறவுகள்'** என்னும் ஏழாம் இயலில் தலைவனுக்கும் தலைவிக்கும் ஊடல் உண்டாவதற்குக் காரணமானவளாகிய பரத்தை - தலைவன், தன் தோழி, விறலி, பாணன், பிற பரத்தையர் ஆகியோருடன் நிகழ்த்தும் கூற்றுகள் வழிப் பிறக்கும் உறவுகள் ஆராயப் பெற்றுள்ளன. மேலும் தலைவன் தலைவியர் உறவைச் சார்ந்திருக்கும் கண்டோர், பாங்கன், தேர்ப்பாகன், உழையர், அயலார், உணர்ந்தோர், சான்றோர், கூனர், குறளர், சுற்றம், ஆய்ச்சியர், பாணன் ஆகிய பிறர் - தலைவன், தலைவி, செவிலித்தாய் ஆகியோருடனும் தத்தமக்குள்ளும் உரையாடும் கூற்றுகள் வழிக்காணும் உறவுகள் தொகுத்து ஆராயப் பெற்றுள்ளன.

**'புறப்பாடல் புலவர், கூற்று வழி உறவுகள்'** என்னும் எட்டாம் இயல் தொடங்கி புறத்திணை உறவுகள் ஆராயப்படுகின்றன. சங்கப் புலவர்கள் பல்வேறு சூழல்களில் தம்மொத்தப் புலவர், அரசர், வள்ளல் ஆகியோருடன் நிகழ்த்தும் கூற்றுகள் புலப்படுத்தும் உறவுகள் ஆய்வுப் போக்கில் விளக்கம் அடைந்துள்ளன. புறத்திணைப் பாடல்களை யாத்த புலவர்களே பெரும்பாலும் மன்னர்களிடம் தொடர்பு கொண்டவர்களாகக் காணப்படுகின்றனர். புறத்திணைப் புலவர்கள் போல் அகத்திணைப் புலவர்கள் அரசனிடம் பரிசில் பெறுதல் போன்றவை செய்தாரில்லை. எனவே இவ்வியலில் புறத்திணைப் புலவர்கள் உறவே ஆய்வு செய்யப் பெற்றுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

**'பிற புறமாந்தர் கூற்றுவழி உறவுகள்'** என்னும் ஒன்பதாம் இயலில் புறத்திணையின் தலைமை மாந்தராகிய அரசர் கூறும் வஞ்சினம் போன்ற கூற்றுகளால் புலப்படுகின்ற அவர்க்கும் மற்றவர்க்கும் இடையிலான உறவுகள் எடுத்தியம்பப் பெற்றுள்ளன. குறிப்பாக அகத்திணை உறவில் காணப்படுவதுபோல் புறத்திணை உறவிலும் காணப்படுகின்றவராகிய விறலி, பாணன் போன்றோர் நிகழ்த்தும் கூற்றுகளும் இவ்வியலில் ஆராய்ச்சிக்கு உட்படுத்தப்பட்டுள்ளன.

**'தொகுப்புரை'** என்னும் பத்தாம் இயலில் மேற்கண்ட ஒன்பது இயல்களிலும் வகுத்தும் பகுத்தும் நிகழ்த்திய ஆய்வின் வழிக் கிடைக்கப் பெற்ற முடிவுகள் தொகுத்து அளிக்கப் பெற்றுள்ளன.

நிறைவாக வருங்காலங்களில் சங்க இலக்கிய ஆய்வை மேற்கொள்ளும் ஆய்வாளர்கள் இவ்வாய்வைத் தொடர்ந்து அடியொற்றி மேற்கொள்வதற்கு வாய்ப்பாக அமையத்தக்க ஆய்வுப் புலங்களும் சுட்டப் பெற்றுள்ளன.

# அடிக்குறிப்புகள்

1. தொல், பொருள், மரபு. 571
2. தனிப்பாடல் திரட்டு, 57, பக். 26.
3. குறு. 69.
4. எம்.எஸ். உதயமூர்த்தி, 'நாடு எங்கே செல்கிறது' பக். 85.
5. பொற்கோ, 'திருக்குறள் அரங்கம் - கருத்துரை, கட்டுரை', பக். 63.
6. புறம். 192.
7. பின்னிணைப்பு அட்டவணை ஏ-இல் காண்க.

# 2. மனித உறவு

# 2. மனித உறவு

2.0 மனித சமுதாயத்தை ஒன்றிணைப்பது 'உறவு' என்னும் ஒழுக்கமாகும். அவ்வுறவு என்னும் சொல்லுக்குப் பல்வேறு பொருள்கள் காணப்படுகின்றன.

## 2.1 உறவு - சொல் விளக்கம்

உறவு என்ற சொல்லிற்கு, உற்ற சமயம், நண்பு, சேர்க்கை என்று கழகத் தமிழகராதி பொருள் கூறும். [1]

1. Entering Upon. commencing - உறுகை
2. Relation, relationship - சுற்றம்
3. Friendship, love. intimacy - நட்பு
4. Desire - விருப்பம்
5. Wordly attachment - Opp. to - துறவு [2]

என்பன சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் அகராதி, 'உறவு' எனும் சொல் பற்றிக் கூறும் பொருள் விளக்கம் ஆகும். மிக விருப்பத்தோடு பொருந்திச் செய்யப்படும் நட்பு அல்லது சுற்றம் என்னும் உளப்பான்மையே 'உறவு' என்பதாகும்.

'உறவு' என்னும் சொல்லுக்குப் பொருள் விளக்கம் தரும் அகராதிகள் பலவாறு குறிப்பிட்டாலும், அவ்விளக்கப் பொருளில் இவ்வாய்வில் மேற்கொள்ளப்படும் உறவு முறையை அணுக முடியாது. சங்க இலக்கியத்தில் கொள்ளும் உறவின் பொருள் வேறுபட்ட, விரிந்த நிலையில் அமைந்துள்ளது. எனினும் ஒருவர் மற்றவரை, உடன் உறைந்தோ அன்றி அவ்வப்போது பார்த்தோ உரையாடவும் பழகவும் கூடிய வாய்ப்பினால் பெறும் உயிர்ப்பையும், உணர்வையும் உறவு எனச் சுட்டலாம்.

## 2.2 உறவிற்கான காரணம்

மனிதன், உறவு மேற்கொள்ள மனிதனின் தேவையும் பாதுகாப்பு உணர்வும் காரணமாக அமைகின்றன.

> *"உறவு உண்டாவதற்குத் தொடர்புகளே காரணம் என்பதை நன்கறிவோம். இத்தொடர்புகளின் வழிகள், தொடர்பு முறைகள், தொடர்பின் விளைவுகள் ஆகியன உறவுகளை உற்பத்தி செய்கின்றன. அறிவு, தேவை, சூழல், மரபு போன்ற தொடர்புகளை ஏற்படுத்துகின்றன. நல்ல உறவுகளும், தீய உறவுகளும் தொடர்புகளால் உருவாக்கப் படுகின்றன. உறவுகள் தனிமனித*

*உறவுகளில் தொடங்கி, சமுதாயம் சார்ந்த உறவாக மலர்கின்றன. சமுதாயத்தைச் சாராமல் தனித்து வாழ்கின்ற உறவுகளில் உறவு முறைமையும், உறவு வன்மையும் இல்லாத காரணத்தால் அங்கு எத்தகைய உறவும் மலர்வதற்கு வழியில்லை''* [3]

என்று கு.வை. இளங்கோ கூறுகின்றார்.

*''மனிதர் சேர்ந்து ஒன்றாகக் கூடி வாழ்ந்தமையால் உறவிலும் வேறுபாடு இல்லை. பல பெண்களுடன் உறவாடுவதில் போட்டி ஏற்பட்டிருக்க வேண்டும். அப்போட்டியின் விளைவால் இன்னின்னாரோடு உறவு கொள்ளலாம்; இன்னின்னாரோடு உறவு கொள்ளலாகாது என்ற வரையறை வந்திருக்கவேண்டும். பிறகு கூடாமை (தபு) என்பது தோன்றி விலக்கு ஏற்பட்டது. இதனால் தொடக்கக் காலத்து ஏற்படாத உறவு முறை விரிந்து உருவாகியது. குறுகிய வட்டத்துள் உலவி வந்த உறவுமுறைப் பெயர்கள் அதிகமாகப் பெருகலாயின''* [4]

எனத் தாயம்மாள் அறவாணன் கூறுகிறார்.

## 2.3 திருமணம் - குடும்பம் - சமுதாயம் — உறவின் அடிப்படை

இவ்வுறவு முறைகள் அமைய மனித வாழ்க்கையின் முக்கிய நிகழ்வாகத் திருமணம் அமைகிறது. இதன் மூலம் உறவுப் பெருக்கம் ஏற்படுகிறது.

*''திருமணம் என்ற அமைப்புதான் உறவுக்கும் உறவுப் பெயருக்கும் அரும்பெரும் அடிப்படையாகும். திருமணமின்றேல் உறவுமில்லை, உறவுப் பெயருமில்லை.''* [5]

தொல்காப்பியர் காலத்திற்கு முன் திருமணம் என்பது சடங்காக நடைபெறவில்லை. காதலர்களிடையே உண்மைத் தன்மை குன்றியபோது திருமணம் சடங்காக மாறியது. இத்திருமண முறை குறித்துக் கூறும் தொல்காப்பியர்,

> ''பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
> ஐயர் யாத்தனர் கரணம் என்ப'' [6] என்கிறார்.

'திருமணம்' பற்றிக் குறிப்பிடும் சரளா இராசகோபாலன் அவர்கள்,

***''ஆணும் பெண்ணும் இணைந்து குடும்ப வாழ்வில் ஈடுபடுவதற்குரிய நிலையினைச் சமூகத்துக்கு அறிவிப்பதே திருமணம் ஆகும்''*** [7]

என்கிறார்.

*''திருமணம் என்ற சொல் வழக்கமாக ஆண்களுக்கும் பெண்களுக்கும் இடையிலுள்ள உறவின் நெருக்கமான, பாலுறவு அம்சத்தை, அவர் களுடைய சாராம்சத்தில் உயிரியல், பாலுணர்ச்சித் தேவைகளைப் பூர்த்தி செய்வதை வலியுறுத்துகிறது. ஆழமான உணர்ச்சியினால் தூண்டப் படுகின்ற, தனிப்பட்ட, தேர்ந்தெடுக்கப்பட்ட மற்றும் பரஸ்பரப் பாலுணர்ச்சி, காதல் திருமணத்தின் வரலாற்று வளர்ச்சியான உயர்ந்த கட்டம்''* [8]

என்பதை எங்கெல்ஸ் சிறப்பாகச் சுட்டிக்காட்டுகிறார்.

இத்தகு திருமணப் பந்தத்தின் அடிப்படையில் உருவானதே குடும்பம். இதனை இல்லறம் என்றும் இல்வாழ்க்கை என்றும் அழைப்பர். இது குறித்த ஆய்வாளர்கள் கருத்துகள் பின்வருமாறு :

*''திருமணம் - குடும்ப உறவுகள் இருபால்களைச் சேர்ந்த தனிநபர்களுக்கு இடையில் நெருக்கமான உறவுகளைப் பிரதிநிதித்துவம் செய்கின்றன. அவர்கள் குடும்பம் என்ற முறையில் இனப்பெருக்கத்தின் அடிப்படை அலகாக இருக்கின்றனர்.''* [9]

*''குடும்பம் என்ற கருத்து வழக்கமாகத் திருமணத்துடன் இணைந்திருக்கிறது. அதிலிருந்து ஏற்படுகிறது; ஆனால், அதை நேரடியாகத் திருமணத்துடன் குறுக்கிவிடமுடியாது. 'குடும்பம்' என்ற சொல் பாலுணர்ச்சித் தேவைகளை மட்டுமின்றி உணவு மற்றும் இதர அன்றாடத் தேவைகளையும் (பொதுவான இருப்பிடம், குழந்தைகளைப் பெற்று வளர்த்தல், சொத்துடைமையை மரபு வழியாகப் பெறுதல்) பூர்த்தி செய்வதற்காகத் தனிநபர்கள் இடைச் செயல் புரிகின்ற நிகழ்ச்சிப் போக்கை முன்னூகிக்கிறது. குடும்பம், திருமணம் என்ற ஆதாரத்தின் மீது அமைந்திருக்கிறது. எனினும் அது திருமணத்துடன் குறுக்கப்பட்டு விடவில்லை. அது பல தலைமுறைகளைச் சேர்ந்த மரபுவழி இணைப்புகளின் பல்வேறு அம்சங்களையும் நெருங்கிய மற்றும் தூர உறவுகளில் கிளைகளின் பிரதிநிதிகளையும் சேர்த்துக் கொண்டிருக்கும்.*

*குடும்பம் திருமணத்தைக் காட்டிலும் அதிகமான சமூகத் தன்மையைக் கொண்டிருக்கிறது எனலாம். திருமணம் தன் பங்கிற்கு அதிகமான உயிரியல் தன்மையைக் கொண்டிருக்கிறது. திருமணம் மற்றும் குடும்ப உறவுகளின் வரலாற்று ரீதியான மாற்றப் போக்கு, பரஸ்பரம் இவற்றின் பங்கில் ஏற்படும் மாற்றங்களிலும், குடும்ப அமைப்பு பலப்படுவதிலும், (இது திருமணம் என்பதன் மீது மேன்மேலும் எழுந்து கொண்டிருந்தது) அடங்கியுள்ளது.*

*மெய்யான நடைமுறையில், குழு மணமுறையின் எதிர்முனை இருபாலினருக்கும் இடையில் உறவுகளைக் கண்டிப்பாக, சடங்கு முறையாக ஒழுங்குபடுத்தலாகும். இந்த ஒழுங்குபடுத்தல் பூர்விகப் பொதுவுடைமைக் குடும்பம் என்னும் அதன் பொருளாதார அடிப்படையை வழக்கமாக மறைத்தது''* [10]

என்கிறார் எங்கெல்ஸ்.

*''குடும்பம் என்பது இரத்த உறவு, திருமண உறவு, தத்து எடுத்தல் இவற்றால் தொடர்புடைய மக்கள் இணைந்த அமைப்பு எனப்படும்''* [11]

எனச் சமூகவியல் அகராதி கூறும்.

*''குடும்பம் கணவன், மனைவி, மக்கள் என இவர்களைக் கொண்டு அமைவதாகும். இவ்வமைப்பு உறவுமுறை இரத்தம், திருமணம் போன்ற உறவுகளால் ஏற்படுகின்றது''* [12]

என்கிறார் ச. சுமதி

குடும்பத்தின் அடிப்படை உணர்வுகளைப் பற்றிக் குறிப்பிடுகின்ற கரு.இராமநாதன் அவர்கள்,

*''இரண்டு உள்ளங்கள் ஒருமைப்படுவதற்குக் கருவியாய் விளங்குவது அன்பேயாகும். அன்பு, தான் செல்லும் இடம் நோக்கி வெவ்வேறு சிறப்புப் பெயர்களைப் பெற்றுத் திகழும். ஒருவன் ஒருத்திபால், அவர்களை ஒருமையுறப் பிணிப்பதற்குத் தோன்றும் அன்பே காதல் எனப் பெயர் பெறும். காதலால் ஒன்றுபட்ட ஈருயிர்களும் ஒருயிர் போல் அறநெறியில் தம் வாழ்வை நடத்துவதே இல்வாழ்க்கை எனப்படும். எனவே, இல்வாழ்க்கையின் அடிப்படை அன்பாகும். முடிவு அறமாகும். அன்பே இல்வாழ்க்கையின் தனிப் பயன்''* [13] *என உரைக்கின்றார்.*

குடும்ப வாழ்க்கையின் ஆதாரமாக உள்ள அன்பைப் பற்றிக் கூறும் தண்டாயுதம் அவர்கள்,

*''உயிர் வாழ்க்கைக்கு அன்பு அடித்தளம் என்றாலும் அது தன்னளவில் சுருங்கி நிற்கும்போது யாருக்கும் பயன்படுவதில்லை. படிப்படியாக அது விரிந்து வளர்ந்து படரும் போதே உலகம் செழிக்கின்றது. இதற்குப் படிக்கற்களாக அமைவனவே இல்லறமும், மக்கட்பேறும். தன்னளவில்*

*சுருங்கி நிற்கும் அன்பு திருமணத்திற்குப் பின் மனையளவில் விரிந்து புதல்வர்களைப் பெற்ற பின் மேலும் விரிந்து அதுவே சுற்றம், ஊர், நாடு எனப் படிப்படியாக விரிந்து முழுமையுறும்''* [14]

என்கிறார்.

இவ்வாறு திருமணத்திலிருந்து முகிழ்த்த குடும்பம் பல ஒன்று சேர்ந்து சமுதாயமாக மலர்கிறது. இது குறித்த பிற ஆய்வாளர்கள் கருத்துகள் வருமாறு :

*''மனிதனாகப் பிறந்த ஒருவன் மற்றவனை உணர்தலே சமுதாயம். இந்த உணர்வு என்று தோன்றியதோ அன்றே சமுதாயம் தோன்றிவிட்டது''* [15]

என்கிறார் அ.மு.பரமசிவானந்தம்.

சமுதாயம் என்பதற்கு விளக்கம் தரும் சாமிநாத சர்மா அவர்கள்,

*''மனிதர்கள் எவரும் தனியே வாழ இயலாது. ஏனெனில் தங்களது ஆவல்களையும், தேவைகளையும் நிறைவேற்றிக் கொள்ளப் பிறரது துணை அல்லது உதவி இன்றியமையாததாகிறது. மனிதர்களுக்குப் பலவகைப் பொருள்களும், பிறர்தம் உதவிகளும் தேவைப்படும்போது ஓரிடத்தில் கூட்டாளியாக இணைகின்றனர். இதையே சமுதாயம் எனலாம் என்கிறார் சாக்ரடீஸ்''* [16]

என்று கூறுகிறார்.

*''ஒவ்வொரு தனிமனிதனும் குடும்பத்தோடும், சுற்றத்தோடும், நட்போடும் தொடர்பு கொண்டு இருக்கின்றான். சமுதாயத்தோடு அவன் உறவு பிணைக்கப்பட்டு இருக்கிறது. ஒரு மனிதன் உயிரோடு இருக்கும்வரை இத்தகைய உறவுகள் இருக்கும்''* [17] *எனவும்*

*''குடும்பம், சுற்றம், நட்பு, சமுதாயம் ஆகிய இவை எல்லாவற்றிலும் உள்ள உறவுகள் ஒன்றோடு ஒன்று பின்னிப்பிணைந்து கிடக்கின்றன''* [18]

எனவும் பொற்கோ அவர்கள் கூறுகிறார்.

*மேலும் ''உறவு என்று அறியப்பட்ட நிலை மனித சமுதாயத்தின் முதன்மையான வளர்ச்சிக் கட்டமாகும்''* [19]

எனத் தாயம்மாள் அறவாணன் கூறுகிறார்.

### 2.4 உறவின் வளர்ச்சி

உறவு மனிதனிடத்தில் வளர்ச்சி பெற வேண்டும் எனில்,

*"ஒருவர் சொல்லும் செய்தி உரியவரைச் சென்றடைந்தவுடன், அந்த உரியவர் அச்செய்தியினை அறிந்து கொண்டு, புரிந்து கொண்டு ஏற்றத்தாழ்வுகளை உணர்ந்து முடிவு எடுத்துச் செயல்பட்டார் என்றால் உறவுகள் வளர்ச்சி பெறும்"* [20]

என்கிறார் கு.வை. இளங்கோவன்.

### 2.5 நல்லுறவாளன்

ஒருவன் குடும்பத்திலும், சமுதாயத்திலும் நல்ல உறவாளனாக இருந்தால் அவன் இந்தச் சமுதாயத்தாரால் போற்றப்படக் கூடியவனாக விளங்குகிறான். எனவே நல்லுறவாளனாக அமைதல் பற்றித் தெளிவுறுத்தும் ஆய்வாளர்,

*"ஒருவரை ஒருவர் புரிந்து கொள்ள ஏற்படும், ஏற்படுத்தப்படும் நல்ல பக்குவமே நல்ல உறவை வளர்க்கிறது. நல்ல மரபுச் சூழல், நல்ல சமுதாயச் சூழல், நல்ல பொருளாதாரச் சூழல், நல்ல உள்ளுணர்வுகள் ஆகிய நான்கும் அமையப் பெற்றால் அங்குள்ளவர்கள் நல்ல உறவுக்காரர்களாக இயல்பாகவே அமையப் பெற்றவர்கள்.*

*நல்ல மரபில் பிறக்காதிருந்தாலும், சமுதாயத்தில் நல்ல சூழலை உற்பத்தி செய்து கொண்டு, நல்ல பொருளாதாரத்தைப் பற்றிக் கவலைப்படாமல், நல்ல உள்ளுணர்வுகளால் வாழ்பவர்களிடையேயும் நல்ல உறவுகள் வளர்வதுண்டு. இவர்கள் அருள், இரக்கம், தியாகம் போன்ற எண்ணங்கள் கொண்டவர்களாகக் கூட இருப்பார்கள்"* [21]

என்று கூறுகிறார்.

### 2.6 தாய்த்தலைமை உறவு

மனிதன் திருமணம், குடும்பம், சமுதாயம் என்ற நிலையில் உறவைப் பெருக்கிக் கொண்டாலும் ஆரம்ப கால உறவுமுறை தாயின் வழியிலேயே தோன்றியது. இன்றும் தமிழ்நாட்டின் தென்கோடியிலும், கேரளாவிலும் இவ்வுறவு முறையையே காணலாம். இது குறித்து ஆய்வாளர்,

*"தொடக்கக் காலத்தில் தாய்த் தலைமையே இருந்திருக்க வேண்டும். தாய் வழிச் சமூக அமைப்பே தந்தை வழிச் சமூக அமைப்பை விடத் தொன்மையானது. அதுவே இயல்பானது."*

தாய்-மக்கள் உறவே தொன்மையாக இருந்திருக்கும் என்பதற்குக் காரணங்கள்,

'1. **தாயே குழந்தையைப் பத்து மாதங்கள் சுமக்கிறாள்.**

2. **தாயே குழந்தையை ஈன்றெடுக்கிறாள்.**

3. **தாயே குழந்தையை வளர்க்கிறாள்.''** [22]

எனக் கூறுகின்றார் தாயம்மாள் அறவாணன்.

## 2.7 உறவின் வகை

உறவை குருதித் தொடர்பால் கொள்ளும் முறைப் பெயர்ச் சுட்டிய உறவு என்றும் முறைப் பெயர் சுட்டாத செயல்வழி உறவு என்றும் இரண்டு வகையாகப் பிரிக்கலாம்.

முறைப்பெயர்ச் சுட்டிய உறவு, மனித வாழ்க்கையின் ஒரு கூறான குடும்பம் என்பதுடன் தொடர்புடையது. இவ்வுறவு முறை மனித வாழ்க்கையின் முக்கிய நிகழ்வான திருமணத்திற்கு முன்னர் குறைவாகவே காணப்படும். திருமணத்திற்குப் பின்னர் ஏற்படும் உறவு விரிவு பெறுகின்றது. இவ்வுறவிற்குப் பெயரும் வைக்கப்பட்டுள்ளது.

*இதனை ஆய்வாளர் இருவகையாகப் பகுத்து, "தாய் தந்தை வழி வரும் உறவு ஒருவகை. அதுவே இரத்த உறவாகும். கணவன் அல்லது மனைவி வழிவரும் உறவு பிறிதொரு வகை. அது தூரத்து உறவாகும்''* [23]

என்றும்,

*"தமிழர் தம் உறவுப் பெயர்கள் திருமணத்தை ஒட்டியே அமைந்துள்ளன. அவர்தம் திருமணம் இரத்த உறவு உடைய சொந்தத்தைச் சார்ந்து அமைந்துள்ளது. எனவேதான் அத்தை, அத்தான் என்றும், அம்மா, அம்மான் என்றும், மகன், மருமகன் என்றும், மகள், மருமகள் என்றும் உறவுப் பெயர்கள் தமிழில் இரத்த உறவைச் சார்ந்து அமைந்துள்ளன''* [24]

என்றும் கூறுவர்.

மேற்கூறிய வகையில் இன்றைய வழக்கின் உறவுமுறைப் பெயர்களாகச் சொல்லுமிடத்து, தாத்தா, பாட்டி; அம்மா, அப்பா; மாற்றாந்தாய் (சித்தி); பெரியப்பா, பெரியம்மா; சித்தப்பா, சித்தி; அண்ணன், அண்ணி; அக்காள், தங்கை, தம்பி; மாமன்,

மாமி, அத்தை; கணவன், மனைவி; மாமனார், மாமியார்; மகன், மகள்; மருமகன், மருமகள் பேரன், பேத்தி; கொழுந்தி, கொழுந்தன்; மைத்துனன், மைத்துனி; நாத்தனார், சகலன்; மூத்தார், ஓரகத்தி; சக்களத்தி ஆகியவை நிலவுகின்றன.

உறவுப் பெயர்கள் பற்றிக் குறிப்பிடுகின்ற ஏங்கல்ஸ் அவர்கள்,

> *"பூர்விக சகாப்தத்தில் தகப்பன், குழந்தை, சகோதரன், சகோதரி என்ற சொற்கள் வெறும் மரியாதையைக் குறிக்கும் பட்டப் பெயர்களல்ல. அவை திட்டவட்டமான, மிகக் கடுமையான பரஸ்பரக் கடமைகளைத் தாங்கி உள்ளன. அந்தக் கடமைகளின் முழுமை இந்த மக்களினங்களின் சமுதாய அமைப்பில் ஒரு முக்கியப் பகுதியாய் அமைந்துள்ளது"* [25]

என்கிறார்.

இவை அகம் சார்ந்த உறவாக அமைகின்றன. சங்க இலக்கியத்தில் தலைவிக்கு என்ன உறவு கூறப்பட்டுள்ளதோ அதுவே தோழிக்கும் வருகிறது.

இவற்றுள் தேவை கருதிய உறவுகள் பற்றி மட்டுமே சங்க இலக்கியங்கள் பேசுகின்றன. பிற உறவுகள் சங்க இலக்கியத்தில் பேசப்படாததால் அவ்வுறவுகள் அக்காலத்து இல்லை எனக் கொள்ளலாகாது.

முறைப் பெயர் சுட்டாத செயல்வழி உறவுகள் என்பது வாழும் சமுதாயத்தில் ஆற்றும் பணியில் ஏற்படும் உறவுகளாகும். இதனை தொழில் சார்ந்த உறவு (functional relation) என்று சுட்டுவர். உதாரணமாகத் தபால்காரன், பால்காரன், உடன் பணி ஆற்றுவோன் போன்ற உறவுப் பெயர்கள் ஆகும். இவற்றைப் புறம் சார்ந்த உறவாகக் கொள்ளலாம். இந்நிலையில் சங்க இலக்கிய உறவுகளில் புலவர், வள்ளல், அரசன், வீரர், கண்டோர் போன்ற உறவுகள் அடங்கும்.

## 2.8 பொதுமைப்படுத்தப்பட்ட உறவு

உறவினைப் பொதுமைப்படுத்தும்போது வயது வழி உறவு, பால்வழி உறவு, பதவிவழி உறவு, மனப்பக்குவம் வழி உறவு, பொருளாதார வழி உறவு எனக் குறிப்பிடலாம். இவ்வுறவுப் பகுப்பு எல்லாக் காலத்துக்கும் பொருத்தமாக அமையும்.

### 2.8.1 வயதுவழி உறவு

இவ்வுறவு மனிதப் பண்பாட்டுடன் விளங்குவது; எவ்வளவு பெரிய அறிவாளியாக இருந்தாலும் வயதின் காரணமாகப் பெரியோரிடம் மரியாதையுடன் நடந்து கொள்ளக்கூடிய

ஒரு சிறப்புத்தன்மை கொண்டதாக இவ்வயதுவழி உறவு விளங்குவதாகும். வயதில் பெரியவர் சிறியவரிடம் ஏவுதல், கண்டித்தல், நன்னடை நல்கல், பெயரிட்டழைத்தல், அறிவுரை வழங்கல், தீயநெறியினின்றும் திருத்துதல் போன்றவற்றைச் செய்ய இயலும். ஆனால், இவ்வாறு வயதில் சிறியவர் பெரியவரைச் செயல்படுத்த முடியாது. அப்பெரியவர் கல்வி அறிவற்றவராகவும், நாகரிகம் குறைந்தவராகவும் விளங்கினும் மூத்த வயதின் பொருட்டு அவரை இயற்பெயரிட்டு அழைக்காமல் தாம் அவரிடம் கொண்டுள்ள உறவுமுறைப் பெயரிட்டு அழைப்பர். ஆனால் இவ்வயது வழி உறவுப் பண்பாடு இன்றைய நாகரிக வாழ்வில் சிதைவு அடைந்துள்ளது.

### 2.8.2 பால்வழி உறவு

சமுதாயத்தில் ஆண், பெண் ஆகிய இருவரில் ஆணுக்கு அளிக்கும் முக்கியத்துவம் பெண்ணுக்கு அளிப்பதில்லை. ஒத்த வயதுடைய ஆண், பெண் இருவரில் ஆணைவிட பெண் சற்று அதிக அளவு அறிவு முதிர்ச்சி அடைந்திருப்பாள் என்பது அறிவியலார் கூற்று. எனவே தான் ஆடவனுக்கு அவனை விடக் குறைந்த வயதுடைய பெண்ணைத் திருமணம் செய்கிறார்கள்.

பெண் ஒருத்தி தான் பிறந்த வீட்டில் அண்ணன், தம்பியிடமும், புகுந்த வீட்டில் கணவன், கணவனுடன் பிறந்த மூத்த, இளைய ஆடவரிடமும் பழகும் (உறவு கொள்ளும்) விதத்தில் ஒரு கட்டுப்பாட்டை வைத்துள்ளனர். இவர்களை அவள் பெயரிட்டழைத்தல் கூடாது; மரியாதை குறைவாகப் பேசக்கூடாது; அவள் எப்பொழுதும் பிறர்க்கு அடங்கிப் போக வேண்டும்; பிறரின் எதிர் நின்று பேசக்கூடாது; பிறரை எதிர்த்துப் பேசக்கூடாது; அனைத்தையும் விட்டுக் கொடுத்துப் பணிந்து வாழவேண்டும். இன்னும் கிராமப்புறங்களில் தாயொருத்தி தான் பெற்ற மகனாக இருந்தாலும் ஒரு குறிப்பிட்ட வயதிற்குப் பிறகு அவனைத் தம்பி என்ற உறவுப் பெயராலேயே அழைத்துப் பணிவன்புடன் நடந்து கொள்வதைக் காண முடிகிறது.

ஆனால் இதற்கு நேர்மாறாக நகர்ப்புறங்களில் படித்த பெண்கள் சிலர் தன் கணவனாக இருந்தாலும், அவனைப் பெயரிட்டழைப்பதை நாகரிகமாகக் கருதும் உறவு முறையைக் காணலாம்.

### 2.8.3 பதவிவழி உறவு

இந்த உறவில் வயதும், அறிவும் ஒரு பொருட்டாகக் கருதப்படுவதில்லை. படித்த படிப்பிற்கேற்ற பதவியோ, அரசியல் சார்ந்த பதவியோ கிடைக்கின்ற பொழுது

உயர்பதவியில் வேலை செய்பவர்களுக்குக்கீழ் வேலை செய்பவர்கள் வயது முதிர்ந்தவர்களாக இருந்தால், அவ்வலுவலகம் சார்ந்த இடத்திலாவது மதிப்பும் மரியாதையும் தரவேண்டிய உறவுமுறை அமைகிறது. இளைய அதிகாரிகள் தமக்குக் கீழ் வேலைபார்க்கும் வயது முதிர்ந்த பணியாளர்களை மதிப்புக் குறைவாக அதாவது பெயரிட்டோ, பணிப் பெயரிட்டோ அழைக்கக் காணலாம்.

பண்டைத் தமிழ் நாட்டை ஆண்ட அரசரும் ஓர் ஊரை ஆண்ட தலைவரும் இப்பதவிவழி உறவின் அடிப்படையில் மக்களால் மதிக்கப் பெற்றனர். அவ்வரசரும் தலைவரும் இடும் கட்டளையை அப்பதவிவழி உறவின் அடிப்படையிலேயே மக்களும் செய்து வந்தனர். காரணம் மக்களின் பண்பட்ட ஒழுக்கநிலை, ஒரு கட்டுப்பாட்டுக்குள் இருந்தது. மேலும் தலைவன் எவ்வழி அவ்வழி குடிமக்கள் என்னும் நம்பிக்கையும் மக்களிடம் இருந்தது. ஆனால் இன்று 'எல்லாரும் இந்நாட்டு மன்னர்' என்னும் சுதந்திரத் தத்துவத்தின் பொருள் தவறாக உணரப் பெற்று அனைவருமே தலைவராகத் தம்மை நினைத்துக் கொண்டு இருப்பதால், மேற்கண்ட பதவிவழி உறவு என்பது இணக்கமாக இல்லை எனலாம்.

### 2.8.4 மனப்பக்குவம்வழி உறவு

ஒருவர் மற்றவரை விட வயதில் சிறியவராக இருந்து மனப்பக்குவத்தின் வழி சமுதாயத்தில் மதிக்கப்படக் கூடியவராக விளங்கினால் அவரை வயதில் மூத்தவரும் இளையவரும் மதித்துப் போற்றும் உறவைக் காணலாம். இந்தப் பிரிவில் வாழ்க்கையைத் துறந்தவர்கள், சமூகத் தொண்டாற்றுபவர்கள், பிறருக்காகத் தம் வாழ்வைத் தருபவர்கள் அடங்குவர். அதனால்தான் இத்தகையோர் இலக்கியங்களால் போற்றப்படக்கூடிய கதை நாயகர்களாக விளங்குவதைக் காணலாம். உதாரணமாக மணிமேகலைக் காப்பியத்தின் தலைவி மணிமேகலையைக் குறிப்பிடலாம்.

### 2.8.5 பொருளாதார நிலைவழி உறவு

இப்பிரிவின் அடிப்படை, மக்களின் தேவைக்குரிய பொருளாதாரம் ஆகும். பொருளாதாரத்தில் மேம்பட்டு உயர்ந்த நிலையில் இருக்கும்பொழுது அங்குச் சாதி, சமயம், இனம் பார்க்கப்படுவதில்லை. பொருளாதார உயர்நிலை காரணமாக அவ்வுயர் மட்டத்தார் அனைவரும் சமமாக உறவு கொள்வர். அப்பொழுது பொருளாதாரத்தில் தாழ்ந்து சாதி, சமயம், இனம் இவற்றால் உயர்ந்து உள்ளவன் சமுதாயத்தில் தாழ்ந்தவனாகக் கருதப்படுகிறான். எனவே பொருளாதார வழி உயர்ந்தவனுக்கு மதிப்பும் மரியாதையும் கலந்த உறவு சமூகத்தில் கிடைத்து விடுகிறது. பொருளாதாரச் சரிவு உள்ளவர்களுக்குச் சமுதாயத்தில் மதிப்பும் மரியாதையும் கலந்த உறவு கிடைப்பதில்லை.

இப்பிரிவில் அன்றும் இன்றும் என்றும் அரசர், வள்ளல், பணக்காரர் ஆகியோர் அடங்குவர். அன்று பொருளுடையான் பிறருக்காக வாழ்ந்தவனாக இருந்து இலக்கியத்திலும் போற்றப்பட்டான். உதாரணமாக அரசர், கடையேழு வள்ளல்கள், சடையப்ப வள்ளல், சீதக்காதி வள்ளல் போன்றோர். இன்று பொருளின் ஆதிக்கம் அதிகம் ஏற்பட்டு மக்களை நல்வழிப்படுத்தத் தவறியதால் இத்தகு வள்ளல் தன்மை குறைந்து காணப்படுகிறது. எனினும் ஆங்காங்கே சில வள்ளல்களைக் காணமுடிகிறது.

இப்பொதுமைப்படுத்தப்பட்ட உறவுமுறையையே ஆய்வாளர் ஒருவர், மேலும் விரிவாக வகைப்படுத்திக் கூறுகிறார். அவை,

> *''குடும்ப உறவுகள், தந்தை, தாய் உறவு, உடன் பிறந்தாரிடம் உறவு, உறவினர்களிடம் உறவு, கட்டாய உறவுகள், தேவை உறவுகள், பழக்க உறவுகள், ஒத்த உணர்வு வழி உறவுகள், இயல்பு உறவுகள், வணங்கும் உறவு, அற உறவுகள், உண்மை உறவுகள், விபரீத உறவுகள், விபத்தில் உறவுகள், வணக்கும் உறவு, சூழ்நிலை உறவுகள், இயல்பிலா உறவுகள், போலி உறவுகள், மயக்கும் உறவுகள், கீழ்மை உறவுகள், உடற்பிணி உறவுகள், உயிரீரும் உறவுகள், நெறி பிறழ் உறவுகள், உண்மையிலா உறவுகள்''* [26]

என்பனவாம்.

இங்குக் குறிப்பிடப்பட்டுள்ள,

> *''உறவுமுறைச் சொற்கள், வரலாறு, சமூகவியல், உளவியல், மொழியியல் ஆகியவற்றோடு தொடர்புடையவை''* [27]

என்று தாயம்மாள் அறவாணன் குறிப்பிடுவார்.

இவ்வாறு மனித வாழ்க்கை வரலாற்றின் தொடக்கக் காலத்தில் இல்லாத உறவு, காலப் போக்கில் உணரப் பெற்று, ஒரு ஒழுங்கு முறைக்கு வந்தது. குறிப்பாகத் தமிழ்ப் பண்பாட்டுத் திருமணமான ஒருவனுக்கு ஒருத்தி, ஒருத்திக்கு ஒருவன் என்ற மரபுகள் உருவான போதுதான் உறவின் ஒழுங்குமுறை உயர்ந்தது எனலாம்.

ஆண், பெண் எனும் இருவர் இணைந்த உறவே பின்னர் குடும்பம், சமுதாயம், நாடு, உலகம் எனப் பரந்து விரிந்தது. இத்தகைய உறவே ஒற்றுமைக்கும், வேற்றுமைக்கும், நட்புக்கும், பகைக்கும் ஆளுமைக்கும் அடிமைக்கும் ஆதாரமாக விளங்கியது.

# அடிக்குறிப்புகள்

1. கழகத் தமிழ் அகராதி, பக். 161.
2. Tamil Lexicon, Vol. I. பக். 481.
3. கு.வை.இளங்கோவன், 'உறவு-ஓர் ஆய்வு', பக். 60
4. தாயம்மாள் அறவாணன், 'உறவு முறைகள்' பக். 17.
5. தாயம்மாள் அறவாணன், 'உறவு முறைகள்' பக். 25.
6. தொல். பொருள். கற்பு. இளம். 143
7. சரளா இராசகோபாலன், 'இலக்கியப் பாதையில்' பக். 9.
8. இலி. அந்திரேயெவ், எங்கெல், 'குடும்பம், தனிச்சொத்து, அரசு ஆகியவற்றின் தோற்றம்' பக். 160.
9. இலி. அந்திரேயெவ், எங்கெல்சின், 'குடும்பம், தனிச்சொத்து, அரசு ஆகியவற்றின் தோற்றம்' பக். 164.
10. இலி. அந்திரேயெவ, எங்கெல்சின், 'குடும்பம், தனிச்சொத்து, அரசு ஆகியவற்றின் தோற்றம்' ப-ள் 161-162.
11. G. Duneannitchell "A Dictionary of Socialogy" Pa. 76.
12. ச. சுமதி, 'பழந்தமிழ் இலக்கியத்தில் மனித இன ஒருமைப்பாடு' - பிஎச்.டி. ஆய்வேடு, பக். 11.
13. லெ.ப.கரு. இராமநாதன் செட்டியார், 'சங்க காலத் தமிழர் வாழ்வு' பக். 71.
14. இரா. தண்டாயுதம், 'சங்க இலக்கியம்' - எட்டுத் தொகை, பக். 60.
15. அ.மு. பரமசிவானந்தம், 'சமுதாயமும் பண்பாடும்', பக். 26.
16. வெ. சாமிநாத சர்மா, 'பிளேட்டோவின் அரசியல் (அ) நீதியைப் பற்றி ஆராய்ச்சி', பக். 111.
17. பொற்கோ, 'திருக்குறள் அரங்கம், கருத்துரை, கட்டுரை' பக். 106.
18. பொற்கோ, 'திருக்குறள் அரங்கம், கருத்துரை, கட்டுரை' பக். 108.
19. தாயம்மாள் அறவாணன், 'உறவு முறைகள்', பக். 17.
20. கு.வை. இளங்கோவன், 'உறவு - ஓர் ஆய்வு', பக். 62.
21. கு.வை. இளங்கோவன், 'உறவு - ஓர் ஆய்வு', ப-ள். 63-64.
22. தாயம்மாள் அறவாணன், 'உறவு முறைகள்', ப-ள். 25-26.
23. தாயம்மாள் அறவாணன், 'உறவு முறைகள்', பக். 29.
24. தாயம்மாள் அறவாணன், 'உறவு முறைகள்', ப-ள். 28-29.
25. இலி. அந்திரேயெவ், எங்கெல்சின், 'குடும்பம், தனிச்சொத்து, அரசு ஆகியவற்றின் தோற்றம்' ப-ள். 115-116.
26. கு.வை. இளங்கோவன், 'உறவு - ஓர் ஆய்வு', பள். 65-91.
27. தாயம்மாள் அறவாணன், 'உறவு முறைகள்', பக். 27.

இயல் மூன்று

# தலைவி கூற்றுவழி உறவுகள்

# 3. தலைவி கூற்றுவழி உறவுகள்

3.0 முன்னுரை

3.1 களவு நெறி

3.1.1 தலைவி தோழியிடம் நிகழ்த்தும் கூற்று வழி உறவு

3.1.1.1 இரவுக் குறியில்

3.1.1.2 காப்பு மிகுதியில்

3.1.1.3 சிறைப்புறத்தில்

3.1.1.4 தோழி இயற்பழித்துழி இயற்பட மொழிதல்

3.1.1.5 அறத்தொடு நிற்றல்

3.1.1.6 வரைவிடை ஆற்றாத பொழுது

3.1.1.7 வரைவிடை ஆற்றாள் எனக் கவன்ற தோழியிடத்து

3.1.1.8 வரைவிடை வற்புறுத்தும் தோழியிடம்

3.1.1.9 வேற்று வரைவு மாற்றல் வேண்டி

3.1.1.10 வரைவு மலிதல்

3.1.1.11 உடன்போக்கு உணர்த்திய தோழியிடம்

3.1.1.12 உடன்போக்கு மீட்சியில்

3.1.2 தலைவி தலைவனிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

3.1.3 தலைவி பிறரிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

3.1.3.1 உடன்போக்கில்

3.1.4 தலைவி தன் நெஞ்சிடம் கூறும் கூற்றுவழி உறவு

3.1.4.1 காப்பு மிகுதியில்

3.1.4.2 வரைவிடை ஆற்றாது

3.2 கற்பு நெறி

3.2.1 தலைவி தோழியிடத்து நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

# 3. தலைவி கூற்றுவழி உறவுகள்

3.0 சங்க அக இலக்கியத்தில் தலைவி என்ற அக மாந்தர் படைப்பு மிகப் பெரும் முக்கிய இடத்தைப் பெற்றுள்ளது. பிற பாத்திரங்கள் எல்லாம் இத்தலைவியைச் சுற்றியே அமைந்துள்ளன. சுருங்கக்கூறின் பிற அக மாந்தர் பாத்திரங்கள் தலைவிக்காகப் படைக்கப்பட்டவை எனலாம். இத்தலைவியை மையமாகக் கொண்டு பிற பாத்திரங்கள் இயங்குகின்றன.

தலைவி என்ற சொல்லுக்குக் கழகத் தமிழகராதி, 'எப்பொருட்கும் இறைவி, மனைவி, தலைமைப் பெண், அரசி, அகப்பொருட் கிழத்தி, கதாநாயகி' [1] என்றும் 'தலைமகள்' என்பதற்குத் 'தலைவி, மனைவி, முதற்பெண்' [2] என்றும் பொருள் கூறுகின்றது.

சென்னைப் பல்கலைக் கழகத் தமிழகராதி, தலைவி, தலைமகள் எனும் சொற்களுக்குத் 'தலைமைப் பெண்-Lady mistress, matron, மனைவி, அகப்பொருட் கிழத்தி - Heroine of a Love-poem, கதாநாயகி - Heroine of a story [3] என்று பொருள் கூறுகின்றது.

தலைவி பற்றிய ஆய்வறிஞர் கூற்றுகள் இங்கு எண்ணிப் பார்க்கத்தக்கன.

> *''அகத்திணை மாந்தர்களை இணைத்து நிற்கும் இணைப்புப் பாலம் தோழி எனின், அகத்திணை வட்டத்திற்கு அமைந்த மையப் புள்ளி தலைவி எனலாம். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐந்திணைகளின் உரிப்பொருள்களாகிய புணர்தல், இருத்தல், ஊடல், இரங்கல், பிரிதல் ஆகிய ஐவகை உணர்வுகளும் தலைவியை மையமாகக் கொண்டவையே.*
>
> *அகத்திணையில் வரும் பிற படைப்புக்கள், தலைவியின் கருத்தைப் பிரதிபலிப்பவை அல்லது தலைவியின் படைப்பில் ஒளி ஊட்டுபவை. அம்மாந்தர்களுக்கு அமைந்த பின்புலங்கள் தலைவியின் மன உணர்வுகளை விளக்க முனைபவை''* [4]

என்கிறார் ஆ. இராமகிருட்டினன்.

*''காதலன் காதலி இருவரும் தலைவன் தலைவி என்று பெயர் பெற்றாலும், அகத்தலைமை பெண்ணுக்கே உரியது. புறத்தலைமையுடைய ஆடவன் இல்லத் தலைமையையும் உடன்கொள்வது ஒத்துவராது. மகவைப் பொறுக்கும் பெண்ணினத்துக்கே குடும்பத்தைச் சுமக்கும் பொறுப்பு உரியதும் எளியதும் நல்லதும் ஆம். ஆதலின் தலைவன், தோழி, செவிலி, அன்னை முதலான அகமாந்தர்கள் எல்லாரும் தலைவியின் தலைமை நோக்கி இயங்குபவர்கள்''* [5]

என்கிறார் வ.சுப. மாணிக்கம்.

*''சங்க இலக்கியங்களில் தலைவி ஒரு முக்கியமான இடம் பெற்றிருக்கிறாள். ஆண் பாத்திரப் படைப்பாகிய பாங்கனும் மகனும் தலைவியைச் சுற்றியே அமைக்கப்பட்ட பாத்திரமாகும். ஆண் பாத்திரமாகப் படைக்கப்பட்டுள்ள தலைவனும் சாதாரண பாத்திரமாகவே உள்ளான். தலைவி இலக்கியத்தில் பேசுகின்றவை உணர்த்துகின்றவை குறைவாகவே இருந்தாலும் மிகப் பெருமிடத்தில் உள்ளாள்''* [6]

என்றுரைக்கிறார் வி.டி. மாணிக்கம்.

*''அகப்பாடல்களில் தலைவியைப் பற்றி எண்ணும் பொழுது அவள் ஒரு குறிக்கோள் பெண் எனலாம். மனதளவிலும், உடலளவிலும், ஊர் அளவிலும், உலகத்தளவிலும் அனுபவசாலியாகத் திகழ்கிறாள். ஒவ்வொரு உணர்வுகளிலும் அவளுடைய பண்பின் சாயல் சிறந்தோங்கி நிற்கிறது''* [7]

என ஈ.கோ. பாஸ்கரதாஸ் கூறுகிறார்.

*''பழந்தமிழ்ச் சமுதாயம் பெண்ணினத்தை நல்லினமாகக் கொண்டாடிற்று. காதற் செய்கையிலும் இல்லறத்திலும் உரிமையளித்த பெற்றி இதற்கு ஒரு சான்று. அகமாந்தர்களுள் தலைமை தலைவிக்கே என்றும், பிற மாந்தர்கள் தலைவி வழிப்பட்டவர்களே என்றும், தலைவியின் பண்புகளுள் முதலாவது கற்புடைத் திண்மையே என்றும், பிற பண்புகள் கற்பினைச் சார்ந்து பொலிவனவே என்றும் நாம் தெளிய வேண்டும்''* [8]

என வ.சுப. மாணிக்கம் அவர்கள் தெரிவிக்கின்றார்.

*''சங்க இலக்கியத்தில் தலைவியினுடைய உயர்ந்த உண்மையான காதல் உணர்வுகள் மிக முக்கியமான இடத்தைப் பெற்றுள்ளது. ஏற்ற*

*இடத்தில் தலைவி உணர்த்தும் சரியான உணர்வுகள் விலை மதிப்பற்றதாக உள்ளது''* [9]

என்றுரைக்கின்றார் இரா.கு. நாகு அவர்கள்.

இவ்வாய்வறிஞர் கூற்றுகள் வழி அகமாந்தர்களுள் மிக முக்கிய சிறப்பிடம் பெறும் தலைவியின் இன்றியமையாமையும் இத்தலைவி வழி பிற மாந்தர்கள் விளக்கப் படுவதையும் உணரமுடிகிறது.

தலைவி கூற்றில் நற்றிணையில் 85 பாடல்களும் குறுந்தொகையில் 180 பாடல்களும் ஐங்குறுநூற்றில் 148 பாடல்களும் கலித்தொகையில் 46 பாடல்களும் அகநானூற்றில் 101 பாடல்களும் பரிபாடலில் 2 பாடல்களும் என மொத்தம் 562 பாடல்கள் உள்ளன.[10]

இவற்றுள் நற்றிணையில் ஒரு பாடலும்[11] அகநானூற்றில் 10 பாடல்களும்[12] உரையாசிரியர்களின் துறைவிளக்கத்தில் தலைவி தோழி ஆகிய இருவர் கூற்றாகவும் கூறக்காணலாம். இவ்வாய்வில் இப்பாடல்கள் மட்டும் முதலில் கூறப்பட்ட துறை விளக்கக் குறிப்பு வழி தலைவி கூற்றாகவே கொண்டு ஆராயப்படுகின்றன.

கலித்தொகையில் 6 பாடல்கள்[13] தலைவனும், தலைவியும் உரையாடும் நிலையில் அமைந்துள்ளன. எஞ்சிய 545 பாடல்கள் தலைவியின் கூற்றாகவே அமைந்துள்ளன.

இவ்வாய்வில் தலைவி, தோழி, தலைவன், பாணன், விறலி, அந்தணர், கண்டோர், காமம் மிக்க கழிபடர் கிளவி, தன் நெஞ்சு ஆகிய நிலைகளில் அமைந்த கூற்றுகளின் வழி ஆராயப்படுகின்றன. கலித்தொகையில் வருகின்ற கைக்கிளை, பெருந்திணை தலைவியரின் கூற்றுகள் ஆராயப் பெறவில்லை. ஐந்திணை அன்புறவு மட்டுமே ஆராயப்பட்டுள்ளன.

## 3.1 களவு நெறி

### 3.1.1 தலைவி தோழியிடம் நிகழ்த்தும் கூற்று வழி உறவு

தலைவி கூற்றுப் பாடல்களில் 412 பாடல்கள்[14] தோழியிடம் கூறுவதாக அமைந்துள்ளன. தலைவன் கூற்றுப் பாடல்களில் மிக அதிகமாக நெஞ்சிடம் கூற்று நிகழ்த்தும் பாடல்கள் இடம் பெறுகின்றன. இவ்வாறு தலைவன், தலைவி பாடல்கள் அமையக் காரணம் தம் உள்ளக்கிடக்கையை வெளிக்காட்ட முனைவதே ஆகும்.

ஒன்றுபட்ட தலைவன் தலைவி உள்ளக்குறிப்பை அவர்தம் பார்வை காட்டும் என்பதைத் தொல்காப்பியர்,

> *"நாட்டம் இரண்டும் அறிவுடன் படுத்தற்குக்*
> *கூட்டி யுரைக்கும் குறிப்புரை யாகும்"* [15]

என்கிறார்.

இத்தகைய, ஒன்றுபட்டுக் கலந்த உள்ளத்தராய தலைவன் தலைவியர்க்கு உறவுப் பாலமாகத் திகழ்பவள் தலைவியின் தோழி ஆவாள். அவளிடம் தலைவி நிகழ்த்தும் கூற்றுகளால் தலைவி தலைவனுக்கான உறவுத்திறம் வெளிப்படுகின்றது.

### 3.1.1.1 இரவுக் குறியில்

இரவுக்குறி குறித்த தலைவியின் கூற்றுகள், குறுந்தொகையில் மட்டும் காணப்படுகின்றன. குறிஞ்சித் திணையில் கபிலரும் மாடலூர் கிழாரும் முறையே ஒரு பாடலும்[16] நெய்தல் திணையில் அம்மூவன் ஒரு பாடலும்[17] பாடியுள்ளனர்.

தோழி தலைவியிடத்து இரவுக்குறி பற்றி உணர்த்துகிறாள். அப்போது தலைவி, என்னுடைய நெஞ்சம் அவர் திறத்து யாம் வருந்துகின்ற போது உடன் இருந்து வருந்தி நின்றது என்று கூறி தலைவன் இரவுக்குறி வரும் ஏதம் அஞ்சி அதனை மறுத்துரைக்கிறாள்.[18]

தலைவனுக்கு இரவுக்குறி நேர்ந்த தோழி தலைவிக்கு அதனைக் கூறுமிடத்து அதனைக் கேட்ட தலைவி, தலைவர் மார்பை நினைக்கும் பொழுது காம நோய் மிகுகின்றது; அந்நோய் தலைவனைத் தழுவினால் நீங்கும்[19] என்று கூறி இரவுக் குறிக்கு உடன்படுகிறாள்.

தலைவன் செய்த இரவுக்குறியை மாறாக உணர்ந்து சென்று தலைவனைக் காணாது மீண்ட தலைவி, பின்னொரு நாள் அவன் வரவு உணர்த்திய தோழிக்கு நீ உரைப்பது மெய்யோ?[20] என ஐயுற்று வினவுகிறாள்.

### 3.1.1.2 காப்பு மிகுதியில்

காப்பு மிகுதிக்கண் ஆற்றாத தலைவி கூறும் கூற்று குறுந்தொகை நெய்தல் திணையில் சிறைக்குடி ஆந்தையார் பாடிய பாடலில் மட்டும் காணப்படுகிறது.[21]

இற்செறிப்பு பற்றிய ஆய்வாளர் கருத்துகள் ஈண்டு நோக்கத்தக்கன.

*"இற்செறிப்பு இயற்கையின் நிகழ்ச்சியாலும், ஐயத்தின் விளைவாலும் நிகழும். தினை முதிர்ச்சியின் காரணமாகத் தலைவி இயல்பாக இற்செறிக்கப்படுவாள். ஊரவரின் அலர், தலைவனின் வருகை, அவன் உறவால் தலைவியின் உள்ளத்திலும், உடலிலும் ஆற்றாமையால் ஏற்பட்ட மாற்றங்களைத் தாய் உணர்ந்த நிலை என்பன தலைவிமேல் ஏற்பட்ட ஐயத்தின் விளைவாகும்"* [22]

என்றுரைக்கிறார் சரளா இராசகோபாலன்.

*"இற்செறிப்பு என்னும் குறியீட்டுச் சொல் பெண்களை வீட்டுக்குள் கட்டுப்படுத்திய நிலையைக் காட்டுவதாகும்"* [23]

என்கிறார், ச. மெய்யப்பன்.

*"பருவம் வாய்க்கப் பெற்ற பெண், செல்வத்தகுதி மிக்க குடியினள் கடுமையாகப் பாதுகாக்கப்பட்டிருக்கிறாள் என்பது உண்மையே"* [24]

என்கிறார் கு.வெ. பாலசுப்பிரமணியன்.

மகளின் களவுப் புணர்ச்சியை உணர்ந்தவராகிய தாயர் தம் பெண்டிரை இற்செறிப்புக்குள்ளாக்கி, காப்பு மிகுதி செய்யும் வழக்கம் சங்க காலத்தில் இருந்தமை புலனாகின்றது.

களவொழுக்கம் கொண்ட தலைவி காப்புக்குட்படுத்தப்பட்டபோது, பிரிவினால் தனித்தவராகிப் பெறுகின்ற துன்பத்தினின்றும் நீங்கித் தப்புவதற்குப் பூவிடைப் பட்டாலும் பல்லாண்டு பிரிந்ததைப் போன்ற துன்பமுறும் அன்றிற் பறவையைப் போலப் பிரிவதற்கு அருமையான காமத்துடன் தன்னுயிர் போகவேண்டும்[25] எனத் தோழியிடம் கூறுகின்றாள்.

### 3.1.1.3 **சிறைப்புறத்தில்**

தலைவன் சிறைப்புறமாக இருக்க தலைவி தோழியிடம் கூறும் கூற்றுகளாக நற்றிணையில் 9 பாடல்களும், குறுந்தொகையில் 16 பாடல்களும், ஐங்குறுநூற்றில் 15 பாடல்களும், அகநானூற்றில் 14 பாடல்களும் என மொத்தம் 54 பாடல்கள்[26] உள்ளன.

திணை முறையில் குறிஞ்சித் திணையில் 29 பாடல்களும்,[27] நெய்தல் திணையில் 25 பாடல்களும்[28] இடம் பெற்றுள்ளன.

அம்மூவனார் 12 பாடல்களும்[29], கபிலர் 9 பாடல்களும்[30], நக்கீரனார் 3 பாடல்களும்[31], மதுரை இளம்பாலாசிரியன் சேந்தன் கூத்தனார் 2 பாடல்களும்[32], நொச்சிநியமங்கிழார், பேராலவாயர், இளந்திரையனார், நற்றங்கொற்றனார், கச்சிப்பேட்டுப் பெருந்தச்சனார், நம்பி குட்டுவனார், மதுரை மருதங்கிழார் மகனார் பெருங்கண்ணனார், மதுரைப் பெருங்கொல்லன், ஔவையார், வெள்ளூர் கிழார் மகனார் வெண்பூதியார், ஆசிரியன் பெருங்கண்ணன், கழார்க் கீரன் எயிற்றி, கல்லாடனார், பெரும்பாக்கன், வெண்மணிப்பூதி, சேந்தன் கீரன், தும்பிசேர் கீரன், மதுரை ஈழத்துப் பூதன்தேவன், பெருங்குன்றூர் கிழார், எருமை வெளியனார் மகனார் கடலனார், பரணர், எழூஉப் பன்றி நாகன் குமரனார், நக்கண்ணையார், மோசிக் கரையனார், மதுரை பண்ட வாணிகன் இளந்தேவனார், காவட்டனார், ஊட்டியார் ஆகிய 27 புலவர்களும் முறையே ஒரு பாடலும்[33] பெயர் தெரியாத புலவர் ஒரு பாடலும்[34] பாடியுள்ளனர்.

பகற்குறியில் தலைவன் வந்து மறைவாக இருந்தபோது தலைவி தோழியிடம் அருவியைக் கண்ட நான், முதன் முதலில் அவரைச் சந்தித்த இடம் அதுதான் என நினைத்தவுடன் என் கண்களிலிருந்து கண்ணீர் வந்தது. அதைக் கண்ட என் தாய், ''என்ன செய்தாய்? அழாதே! உனக்கு முத்தம் தருகிறேன்'' என்று இன்சொல் கூறினாள். அப்போது யான் உயிரினும் சிறந்த நாணினை மிக மறந்து உண்மையைச் சொல்ல இருந்தேன். ஆனால் எவ்வாறோ சொல்லாமல் தவிர்த்துப் பிழைத்தேன்[35] என்று கூறுகிறாள். இக்கூற்றில் தாய் மகளைக் கவனிப்பதும், தலைவியின் காதல் உள்ளமும் நாணுடைமையும் அதனைத் தோழியிடம் வெளிப்படக் கூறுவதையும் காணமுடிகிறது.

தலைவன் இடையீடு இட்டு தலைவியைச் சந்திப்பதற்காகச் சிறைப்புறத்து இருந்த நிலையில் அவன் கேட்கும்படி தலைவி தோழியிடம், நாமே அவன் நாட்டிற்குச் சென்று அடைவதற்கு நமக்கு உரிமை இல்லை என்பதை 'நேரேம் ஆயினும்' என்ற குறியீட்டுச் சொல்லால் குறிப்பிட்டு, எனினும் அவன் நாட்டுக்குப் போய் வருவோமா[36] என வருந்தி வினவுகிறாள். இதனால் மகளிர் இல்லத்தை விட்டு வெளியே செல்ல முடியாத சமுதாய வழக்கம் தெரிய வருகிறது.

தலைவன் இரவுக்குறிக்கண் வந்து சிறைப்புறமாக நின்றவிடத்து அவன் கேட்க, தலைவி தோழியிடம் தலைவன் நடுஇரவில் கொடிய வழியில் வருகின்றான்; அன்னை தினையைக் காக்கும்பொருட்டு எம்மைச் செல்லச் சொன்னாள்; எனவே இனி ஈண்டு

இரவில் வராதே என்று நீ தலைவருக்குச் சொல்லின் குற்றம் ஏதாவதுண்டோ[37] என்று வினவுகிறாள். தலைவி இரவுக்குறியில் தலைவன் வருவதை விரும்பாமையையும், வழி ஏதத்திற்கு அஞ்சுவதையும், தினைப்புனத்தில் சந்திக்க விரும்புவதையும் குறிப்பாகக் கூறுகிறாள்.

மேலும் நேற்று காப்பு மிகுந்த நள்ளிரவில் புதல்வனைத் தழுவிய தாயும் 'அன்னாய்' என்று விளித்தாள்; அதுபோது தலைவன் இவ்வீட்டுப் புறத்தே வந்து நின்றனன்; யான் அவனைக் காணப் பெற்றிலேன்[38] என்றும் இரவில் தலைவன் வருவதற்கு அறியாதவன்; ஆனால் அன்னை அவனை வருகின்றான் வருகின்றான் எனப் பலமுறையும் கூறுகின்றாள்[39] என்றும், அன்னையும் உறங்காமல் உள்ளாள் யான் என் செய்வேன்[40] என்றும், அன்னை தன்னைப் பாதுகாக்கும் நிலையைத் தலைவன் அறியுமாறு கூறுகிறாள். தாயின் காப்பு மிகுதியைக் குறிப்பாகச் சுட்டி, வரைவு கடாவும் தலைவியின் நிலை தெரிகிறது.

தலைவன் இரவுக்குறிக்காக வழித்துன்பம் கண்டும் அஞ்சாமல் வருவதால் அவன் கேட்குமாறு தலைவி தோழியிடம்,

*''அருள்புரி நெஞ்சமொடு எஃகு துணையாக*<br>
*வந்தோன் கொடியனும் அல்லன்; தந்த*<br>
*நீதவறு உடையையும் அல்லை; நின்வயின்*<br>
*ஆனா அரும்படர் செய்த*<br>
*யானே, தோழி! தவறு உடையேனே''* [41]

என்றும், காவலர் அறியாமல் வந்து கதவைத் திறந்து என்னைத் தழுவிச் சென்றவன் இன்று வராததால் நெற்றியில் பசலை தோன்றியது. இவ்வாறு நாம் எப்படி வாழ்வது[42] என்றும் அன்னையின் கொடிய பார்வையும் துன்பம் தரும் பனிக்காலமும் மாலையும் ஒன்றுகூடி என்னை வருத்தவும் நீ எவ்வாறு வாழ்கின்றாய் என்று தோழீ நீ வினவுகின்றாய்; யான், சூள் உரைத்துப் பிரிந்த தலைவனது மலை உச்சியைக் கண்டு கொண்டே உயிர் வாழ்கிறேன்[43] என்றும் தன்னை நொந்தும் வருந்தியும் புலம்புகிறாள்.

தலைவன் சிறைப்புறமிருக்க, தலைவி தோழியிடம் சொல்லுமிடத்து துன்பம் தரும் காமநோயைக் கூறுவது ஆண்மகனுக்குப் பொருந்தும்; ஆனால் பெண்மை தடுப்பதால், தான் அந்நோயைத் தாங்கிக் கொண்டிருக்கிறேன் என்றுரைப்பதுடன் தன்னிடத்தில் ஆர்வம் (அன்பு) உடையராகவும் தன்னால் வருந்துபவராகவும் உள்ளவரைப் பற்றி அறியாமலிருப்பவன் மனிதன் அல்லன்[44] எனவும் தலைவனைக் கடிந்துரைக்கிறாள்.

மேலும், யான் வளை வேண்டி அழுதபொழுது என் தந்தை நோயுற்றார்க்குத் தகுந்த மருந்தை ஆராய்ந்து கொடுக்கும் மருத்துவன் போல ஒன்றைச் செய்தார். எமக்கும் நாடனுக்கும் ஏற்பட்ட நட்புச் சிறிது நீங்கி இருக்கும் செய்தியை அறிந்தவர் போன்று என் தந்தை எவ்வகையிலும் கழலாத பொன் தோள்வளை செய்து அணியாக இட்டார். அவர் நீண்ட நாள் வாழ்க[45] என்று தன் தந்தையின் செயலை எண்ணி மகிழ்வுடன் தன் தோழிக்குத் தலைவன் கேட்ப உரைக்கின்றாள். இதன்மூலம் இனி ஆற்றாமையால் தான் வருந்தினும் வளை கழலாது எனக் குறிப்பிடுகிறாள்.

தலைவி தன்னை வற்புறுத்தும் தோழியிடம் சிறைப்புறமாக இருக்கும் தலைவன் கேட்க, என் காம நோய் அளவு கடந்து போனதால் உடல் வெப்பம் கொண்டது. இதற்குத் தலைவனது மலைக்காற்றுத் தன் உடம்பில் பட்டால் நோய் தீரும்; எனவே 'முற்றத்திற்கு இவளை மெல்லக் கொண்டு சென்றால் இவள் நலம் பெறுவாள்' என்று துன்புறுத்தும் நெஞ்சம் கொண்ட நம் அன்னையிடம் இப்போதே விரைந்து போய்ச் சொல்வாயாக[46] என உரைக்கின்றாள். இது தலைவி தன் ஆற்றாமையைக் கூறித் தலைவனை வரைவு மேற்கொள்ளத் தூண்டுவதாகும்.

தலைவன் சிறைப்புறமிருக்கத் தலைவி தோழியிடம், தன் தந்தை மீன் வேட்டைக்கும், தாய் உப்பு விற்பதற்கும் சென்றிருப்பதால் தலைவன் இப்பொழுது வந்தால் தன்னிடம் அளவளாவலாம் என்ற தூதுமொழியை விரைவாய்ச் சென்று சொல்லும் துணை ஆனவரைப் பெற்றால் மிக நல்லதாகும்[47] என்றும் தலைவனைக் கண்டால் அவன்முன் சென்று, பிரிந்து செல்லுதல் உமக்குத் தகுமோ என்று துணிந்து கடுஞ்சொல்லால் இடித்துரைக்காமல் இருப்பாயாக[48] என்றும் அந்நாளில் சூளுரைத்து அதனைக் காப்பாற்றும் கடப்பாடுடையவன் அத்தலைவனே அன்றிப் பிறர் இல்லை[49] என்றும் தன் தோழியை வேண்டியும், தன் தலைவனின் நல்லொழுக்கம் புலப்படுமாறும் கூறுகின்றாள். தலைவி அவனைச் சந்திக்க விரும்புவதையும், சந்திப்பதற்குரிய கால வாய்ப்பையும் குறிப்பாகத் தலைவனுக்கு உணர்த்துகிறாள்.

தலைவன் வரையாது நீண்ட நாள் வந்தொழுகுவதால் அவன் சிறைப்புறமிருக்கத் தலைவி வரைவு கடாவும் நிலையில் தோழியிடம், எம் சிறிய நெஞ்சத்தில் இருந்து நீங்காதவன்; எனினும் தன் அழகிய நெற்றிக்குப் பசலை நோய் எவ்வாறு வந்தது[50] என்றும், தலைவன் நீர் எந்நிலையில் உள்ளீரோ என்று கேட்டு என் குறை தீர்ப்பின் அதுவே நன்று[51] என்றும் நள்ளிரவு வேளையில் ஒரு தேர் இங்கே வந்து மீண்டு செல்கிறது என்று அயலார் கூறுவர்; அதுமுதல் தாயும் துன்புறுத்துவாள்[52] என்றும் தலைவன் சிறிது பொழுது பிரியினும்

எனக்குப் பெரிய துன்பம் உண்டாக்குகின்றது[53] என்றும் தனக்கு ஏற்பட்ட மாற்றம், துன்பம் ஊரலர், அன்னை அறிதல் ஆகியவற்றைச் சுட்டி உரைக்கின்றாள்.

மேலும் தலைவி தலைவனின் நட்பைப் பிரியாமல் பெறுவதற்குரிய அரிய தவத்தைச் செய்யாததால் அவன் பிரிவுத் துன்பம் தாங்கி இங்கு உயிர் வாழ்வோம் ஆனோம்[54] என்றாள். தலைவன் நம்மைக் கூடிய போது நாடறிய நன்மணம் புரிவோம் என்று தெளிவித்ததை நாம் நம் நாணத்தால் மறந்தோம். ஆனால், நம்மை மறவாத மனம் கொண்ட தலைவன் இனி வருவதை நாமே காணலாம், அஞ்சாதே[55] என்றும் ஊரார், துறைவனுக்குப் பெண்டாயினாள் எனத் தன்னைப் பழிகூறியதால் அது கேட்ட அன்னை தன்னைச் சினந்தாள்[56] என்றும் யாம் அவன் தந்த நலத்தை உடையோம்; அதை மறந்து பிறர் கூறுவதைக் கூறாதே[57] என்கிறாள். தலைவன் மணந்து கொள்வதற்கு உரிய செயலைச் செய்யாமையால் அன்பற்றவன்[58] என்றும் மங்கையர் தம்மில்கூடி என்னை நல்லள் நல்லள் எனக் கூறி விரும்புவர்; ஆனால், தலைவனுக்கு மட்டும் தீயவளாய் நான் உள்ளேன் அது ஏன்?[59] என்றும் கேட்கிறாள். என் மேனி பசலை பாயத் தலைவன் தன் நாடு செல்வேன் என்பதால் நாம் என்ன செய்வோம்;[60] என் அழகிய நலத்தை அவன் கவர்ந்து கொண்டு தன் நலம் இழந்து வருந்தினான்[61] என்று தன் வருத்தத்தைத் தோழியிடம் கூறுமுகமாகத் தன் திருமணத்திற்கு விரைவுபடுத்துகிறாள்.

தலைவியின் நோய் கண்டு அன்னை வேலனின் வெறியாட்டு நிகழ்த்த அது கண்டு அஞ்சிய தலைவி தலைவனை வரைய வேண்டித் தன் தோழியிடம், நம் தலைவன் மணந்து கொள்ளாது போனால் நாம் செய்ய வேண்டியது என்ன என்று கூறுவாயாக[62] என வினவுகிறாள்.

### 3.1.1.4 தோழி இயற்பழித்துழி இயற்பட மொழிதல்

தோழி தலைவனை இயற்பழித்த வழித் தலைவி இயற்பட கூறும் பாடல்கள், நற்றிணை, கலித்தொகை ஆகியவற்றில் முறையே ஒரு பாடலும் அகநானூற்றில் 2 பாடல்களும், குறுந்தொகையில் 5 பாடல்களும் என 9 பாடல்கள்[63] உள்ளன.

குறிஞ்சித் திணையில் 7 பாடல்களும்[64] நெய்தல் திணை, பாலைத்திணைகளில் முறையே ஒரு பாடலும்[65] வந்துள்ளன.

கபிலர் 3 பாடல்களும்[66] மாமூலனார், தேவகுலத்தார், அள்ளூர் நன்முல்லை, வெறிபாடிய காமக்கண்ணியார், ஐயூர் முடவர் ஆகிய 5 புலவர்கள்[67] முறையே ஒரு பாடலும் பெயர் தெரியாத புலவர்[68] ஒரு பாடலும் பாடியுள்ளனர்.

தலைவன் உறவைத் தோழி பழித்துரைக்க, அதைக் கேட்ட தலைவி தனக்கும் தலைவனுக்கும் உள்ள உறவு என்பது,

*"நிலத்தினும் பெரிதே; வானினும் உயர்ந்தன்று;*
*நீரினும் ஆர்அள வின்றே"* [69]

என்று தலைவன் உறவு உலகில் உள்ள எல்லாவற்றைக் காட்டிலும் சிறந்தது என்கிறாள். மேலும்,

*"...................... துறைவனோடு*
*யாத்தேம் யாத்தன்று நட்பே*
*அவிழ்த்தற்கு அரிது அது முடிந்து*
*........................... அமைந்தன்றே"* [70]

எனத் தான் தலைவனோடு கொண்ட நட்பு பிறரால் பிரித்தற்கு அரியது என்றும் கூறுகிறாள். என் தலைவன் இப்பொழுது எம்மை கைவிட்டாரெனினும் அவர் அருள் செய்வார் என்பது உறுதியாவதுடன் அவர் அலர் உண்டாகப் பிரியினும் நட்புடையவர். அவர் வாழ்க என வாழ்த்தி உரைக்கிறாள்.[71]

தலைவனின் கொடுமையை வள்ளைப்பாட்டில் தோழி இயற்பழிக்க, தலைவி அவன் திறத்தை வள்ளைப் பாட்டில் இயற்படப் பாடுகிறாள். தோழி தமக்கு அருள் காட்டாத தலைவன் மலையைப் பழிக்க, தலைவி துலாக்கோல் போன்ற அறநெஞ்சத் தலைவன் தன் நெஞ்சம் அழியுமாறு விடமாட்டான் என்கிறாள். தலைவன் இயல்பைத் தோழி பழிக்க, தலைவி கொடையளிக்கும் வள்ளண்மைக் கைகளை உடையவன் தமக்குத் துன்பம் செய்யாது மணந்து கொள்வான் என்கிறாள். தோழி, தலைவன் தம்மை வருத்தியவன் என்று பழிக்க, மற்றவர் அஞ்சும் கொடிய செயலுக்கு அஞ்சாத அறமற்றவன் அல்லன் என்று தலைவனைப் புகழந்துரைக்கிறாள்.[72]

தலைவனை இயற்பழித்த தோழியிடம், நீ தலைவனை இயற்பழித்ததை யான் விளையாட்டாகப் பழித்தாய் என்று எண்ணுகிறேன். இவ்வாறு யான் எண்ணவில்லையாயின், நீ என்னிடம் என்ன பாடுபடுவாய் என்று சினந்து கூறுகிறாள்.

### 3.1.1.5 அறத்தொடு நிற்றல்

தலைவி தோழிக்கும் தெரியாமல் தலைவனைக் கண்டு காதல் புரியவும் நேரிடும். அப்போது தலைவியது காதல் நோய் பற்றி வினவும் தோழிக்குத் தலைவி அறத்தொடு நிற்கிறாள். மேலும் வேற்று வரைவு வரும்போதும், செவிலி தலைவியை ஐயுற்றபோதும் தலைவி தோழியிடம் மற்றவர்களுக்கு அறத்தொடு நிற்குமாறும் வேண்டுகிறாள்.

நற்றிணையின் குறிஞ்சித் திணையில் அறத்தொடு நிற்கும் துறையில் நற்சேந்தனார், கூற்றங்குமரனார் ஆகியோர் முறையே ஒரு பாடலும், குறுந்தொகையின் மருதத் திணையில் ஆதிமந்தி, ஒரு பாடலும், ஐங்குறுநூற்றின் குறிஞ்சித் திணையில் கபிலர் ஒரு பாடலும், கலித்தொகையின் குறிஞ்சித் திணையில் கபிலர் ஒரு பாடலும், முல்லைத் திணையில் அருஞ்சோழன் நல்லுருத்திரன் ஒரு பாடலும், அகநானூற்றின் குறிஞ்சித் திணையில் கபிலர், நொச்சி நியமங்கிழார் ஆகியோர் முறையே ஒரு பாடலும் என 8 பாடல்கள்[74] பாடியுள்ளனர்.

தலைவியின் மேனி வாட்டம் கண்டு தோழி வினவியபோது தலைவி,

*''எனக்குநீ உரையா யாயினை; நினக்குயான்*
*உயிர்பகுத் தன்ன மாண்பினேன் ஆகலின்,*
*அதுகண்டி சினால் யானே; என்றுநனி*
*அழுதல் ஆன்றிசின் ஆயிழை''*

என்று தன் தோழியின் வருத்தத்தைக் கைவிடக் கூறுகிறாள். மேலும் தினைப்புனக் காவலின்போது தார் அணிந்த ஒருவன் தன் முதுகைக் குளிர்ச்சியாக அணைத்த நாள் முதல் கொண்ட, அந்த நினைவு நெஞ்சில் எழ இந்நோய் தோன்றியது[75] என்று அறத்தொடு உரைக்கின்றாள். 'நினக்கு யான் உயிர் பகுத்தன்ன மாண்பினேன்' என்று கூறுவதிலிருந்து தலைவி தோழி உறவு நெருக்கம் தெரிகிறது.

தன் காதலை எவருக்கும் உரையாத தலைவி நொதுமலர் வரைவுவேண்டி வந்தபோது தன் தோழிக்கு உரைக்கிறாள். தன்னுடன் துணங்கை ஆடிய ஒருவன் மீது தான் காதல் கொண்ட செய்தியையும்[76] மலை நாடன் ஒருவன் தம் மலைச்சாரலில் உள்ள தழையும் கண்ணியும் எனக்குத் தந்தான்[77] என்ற செய்தியையும் கூறித் தலைமகள் அறத்தொடு நிற்கின்றாள்.

களவொழுக்கத்தில் தலைவன் வருவதில் தடை ஏற்பட வருந்திய தலைவி, அறத்தொடு நின்று கூறுமிடத்து, தினைப்புனக் காவலின் போது, தன்னால் அம்பு எய்யப் பெற்ற யானை சென்ற வழியைக் கண்டதுண்டோ என்று வினவியவாறு மலைநாடன் ஒருவன் வந்தான்; அவனைக் கண்ட மகளிர் பலர் இருக்க, நான் ஒருத்தி மட்டும் கண்ணீர் சொரிந்த வண்ணம் உள்ளேன். இதன் காரணம் யாதோ[78] என்று கேட்பதன் மூலம் தன் காதலை வெளிப்படுத்துகிறாள்.

களவொழுக்கத்தைப் பற்றி அறத்தொடு நிற்கக் கருதிய தோழியிடம் தலைவி, உயர்ந்த மலைநாடற்கு நீ கண்ட என் பசலையைப் பற்றி உரைக்க வேண்டும் அல்லது என் துன்பத்தைச் சிறிதும் அறியாத அன்னைக்கு, 'இந்நோய் தணியும் வழியிது' என்று

எடுத்துரைக்க வேண்டும். இவ்விரண்டில் யாதொன்றும் செய்யாமல் இருக்கின்றாய். எனவே நீ கொடியவள்[79] என்று கடிந்துரைக்கின்றாள்.

தலைவியின் வேறுபாடு கண்டு ஐயுற்ற செவிலிக்குத் தலைவி, தோழியை அறத்தொடு நிற்குமாறு கூறுமிடத்து, நம் தாய்க்கு என் நோய்க்கான காரணம் மலைநாடன் ஒருவனின் மார்பே என்று தெரிவிக்கலாமோ கூடாதோ என்று இருவகை எண்ணம் கொண்டிருந்தேன். அவற்றுள் ஒன்றை முடிவாக எண்ணினேன். என் உயிர் போவதாயினும், என் பசலைக்குக் காரணம் மலைநாடன் எனக்கூறாதே[80] என்று கூறுவதன் வாயிலாக தன் காதலை உணர்த்தவேண்டும் என்பதையே குறிப்பாக உணர்த்துகிறாள். இப்பாடலின் மூலம் தலைவியின் நாணுடைமையை அறிய முடிகிறது.

மேலும் தோழி தாய்க்கு அறத்தொடு நிற்பதற்காகத் தனக்கும் தன் தலைவனுக்கும் இடையில் ஏற்பட்ட புணர்ச்சியைப் பற்றி உரைக்கின்றாள்.[81] அதனுடன் தலைவன் ஒருவனுக்கும் தனக்கும் ஏற்பட்ட உரையாடலைக் கூறித் தந்தை தாயர்க்கு உரைக்குமாறும் கூறுகிறாள்.[82]

### 3.1.1.6 வரைவிடை ஆற்றாத பொழுது

வரைவு இடை வைத்துத் தலைவன் பிரிந்த பொழுது ஆற்றாத தலைவி தோழியிடம் கூறும் கூற்றுகள் நற்றிணையில் 4 பாடல்களும், குறுந்தொகையில் 13 பாடல்களும், ஐங்குறுநூற்றில் 5 பாடல்களும், அகநானூற்றில் 2 பாடல்களும் என 24 பாடல்களில் இடம் பெற்றுள்ளன.[83]

குறிஞ்சித் திணையில் 7 பாடல்களும்,[84] முல்லைத் திணையில் ஒரு பாடலும்,[85] நெய்தல் திணையில் 12 பாடல்களும்,[86] பாலைத் திணையில் 4 பாடல்களும்[87] இடம் பெற்றுள்ளன.

அம்மூவனார் 5 பாடல்களும்,[88] கபிலர், நக்கீரர் ஆகியோர் முறையே 3 பாடல்களும்,[89] தாயங் கண்ணனார், உலோச்சனார், கிடங்கில் காவிதிப் பெருங்கொற்றனார், மாமூலனார், குடவாயிற் கீரத்தனார், மீனெறி தூண்டிலார், வெண்பூதி ஆலத்தூர் கிழார், நன்னாகையார், உறையூர் முதுகண்ணன் சாத்தன், கொல்லன் அழிசி, பெருங்கண்ணன் ஆகிய 12 புலவர்கள் முறையே ஒரு பாடலும்,[90] பெயர் தெரியாத புலவர் ஒரு பாடலும்[91] பாடியுள்ளனர்.

தலைவன் வரைந்து கொள்ளுதல் பொருட்டுப் பொருள் ஈட்டி வரத் தலைவியைப் பிரிந்தான். அப்பிரிவின் பொழுது தலைவி தோழியிடம், தலைவன் என் பசலை கண்டு

கடவுள் முன் இவளைப் பிரியேன் என்று சூள் உரைத்தான். ஆயினும் பிரிந்து சென்றான். சூள் தவறிய அவரை நீ எந்தச் சிறிய வருத்தமும் செய்யாது காப்பாயாக என்று அவர் பொருட்டு கடவுளை நாம் வணங்கி வரச் செல்லலாமா[92] என்று வினவுகிறாள்.

தலைவன் தன்னைக் களவில் மணந்து கொண்டமைக்கு அவன் ஒருவனே சாட்சி. அவன் அதனைப் பொய்ப்பின் நான் என்ன செய்வேன்[93] என்றும் ஊரலருக்கு அஞ்சி என் காமத்தை மிகுதியாக வெளிப்படுத்தாமல் உள்ளேன்[94] என்றும் தலைவன் தன்னை அருள் செய்வான் என்று எண்ணியே யான் இன்னமும் உயிர் வாழ்கிறேன்[95] என்றும் என் நிலையைத் தலைவனுக்கு உரைப்பாரைப் பெறின் இனி உயிர் வாழ்வேன்[96] என்றும் தலைவி தன் ஆற்றாமைத் துயரைக் கூறித் தலைவன் பிரிவிடை வருந்துகிறாள்.

3.1.1.7 **வரைவிடை ஆற்றாள் எனக் கவன்ற தோழியிடத்து**

வரைவிடை தலைவன் பிரிந்த காலத்துத் தலைவி ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்குத் தலைவி கூறும் கூற்றுகள் நற்றிணையில் 3 பாடல்களிலும் குறுந்தொகையில் 18 பாடல்களிலும் என 21 பாடல்களில்[97] காணப்படுகின்றன.

குறிஞ்சித் திணையில் 11 பாடல்களிலும்,[98] முல்லைத் திணையிலும், மருதத் திணையிலும் முறையே ஒரு பாடலிலும்,[99] நெய்தல் திணையில் 6 பாடல்களிலும்,[100] பாலைத் திணையில் 2 பாடல்களிலும்[101] இக்கூற்றுகள் இடம் பெற்றுள்ளன.

கபிலர் 3 பாடல்களும்,[102] பெருவழுதி, குறமகள் குறியெயினி, ஔவையார், பரணர், கோவேங்கைப் பெருங்கதவன், கருவூர்கிழார், பூங்கணுத்திரையார், கச்சிப்பேட்டு நன்னாகையார், உலோச்சன், மதுரை எழுத்தாளன் சேந்தம் பூதன், கொல்லன் அழிசி, மாலை மாறன், குன்றியன், மாங்குடி கிழார், கணக்காயன் தத்தன், மதுரை வேளாதத்தன், இளம்பூதனார், மோசிகொற்றன் ஆகிய 18 புலவர்களும் முறையே ஒரு பாடலும் பாடியுள்ளனர்.[103]

தலைவி தன்னை ஆற்றுவிக்கும் தோழியிடம், அவர் பால் சென்ற நெஞ்சம் அவருடன் வரலாம் என்றுள்ளதோ அன்றி திரும்பி வந்து என் பசலை மேனி கண்டு இவள் அயலிலாட்டி என என்னைத் தேடுகின்றதோ தெரியவில்லை[104] என்கிறாள்.

> *''தளிர்வனப்பு இழந்த என் நிறனும் நோக்கி,*
> *யான்செய் தன்றுஇவள் துயர்என, அன்பின்*
> *ஆழல் வாழி தோழி''* [105]

எனத் தன் நிலையும் தோழி நிலையும் எண்ணி உரைக்கின்றாள். தன் காதல் நோய்த் துன்பம் அறியாது ஊர் உறங்குவது கண்ட தலைவி,

"முட்டு வேன்கொல் தாக்கு வேன்கொல்
ஓரேன், யானுமோர் பெற்றி மேலிட்டு
ஆஅ! ஒல்லெனக் கூவு வேன்கொல்" [106]

என்று தன் நிலையை வெளிப்படையாகக் கூறமுடியாது தவிக்கின்றாள்.

தன் நிலை கண்டு வேறுபட்ட தோழியிடம் தலைவி, தலைவன் தன் நெஞ்சையே களனாகக் கொண்டு ஒருபோதும் உன்னைப் பிரியேன் என்றுரைத்த உறுதிமொழியே உன்னுடைய வருத்தத்திற்குக் காரணமோ[107] என்று வினவுகிறாள்.

மேலும், தலைவி தன் நெஞ்சம், தன்னைப் பிரிந்த தலைவன் தனிமையில் துன்புறுவான் என எண்ணி வருந்துகின்றதே அன்றி, என் தனிமைத் துன்பம் குறித்து வருந்தவில்லை[108] என்கிறாள். தலைவனைத் தான் நினைத்துக் கொண்டிருப்பதன்றி அவன் நேரில் வரவில்லை. அவ்வாறு அவன் இருத்தல் உயர்வுடையது அன்று என்று நீ கூறுவாயாக[109] என வேண்டுகிறாள். தலைவனது இயல்பை உணர்ந்த யான் என் மெலிவை ஆற்றியிருக்க நீ ஆற்றினாய் இல்லை[110] என்றும், தன் மேனி, நெஞ்சம், தோழி ஆகியோருடைய துன்பத்தைச் சுட்டி உரைக்கின்றாள்.

### 3.1.1.8 **வரைவிடை வற்புறுத்தும் தோழியிடம்**

வரைவிடை வற்புறுத்தும் தோழிக்குத் தலைவி கூறும் கூற்றுகள் நற்றிணையில் 5 பாடல்களிலும், குறுந்தொகையில் 8 பாடல்களிலும், ஐங்குறுநூற்றில் 7 பாடல்களிலும் என மொத்தம் 20 பாடல்களில்[111] காணப்படுகின்றன.

குறிஞ்சித் திணையில் 13 பாடல்களும்,[112] நெய்தல் திணையில் 6 பாடல்களும்,[113] பாலைத் திணையில் ஒரு பாடலும்[114] இடம் பெற்றுள்ளன.

கபிலர் 5 பாடல்களும்,[115] அம்மூவனார் 3 பாடல்களும்,[116] குன்றியனார், நற்றமனார், குன்றூர்கிழார் மகன் கண்ணத்தனார், பெருங்குன்றூர் கிழார், நிகண்டன் கலைக் கோட்டுத் தண்டனார், கச்சிப்பேட்டு நன்னாகையார், கிள்ளி மங்கலங்கிழார், மதுரை மருதன் இளநாகன், மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார், மதுரைக் கடையத்தார் மகன் வெண்ணாகன், தும்பி சேர் கீரன், உறையூர் முதுகூத்தன் ஆகிய 12 புலவர்கள் முறையே ஒரு பாடலும் பாடியுள்ளனர்.[117]

தன்னை வரைவிடை வற்புறுத்தும் தோழியிடம் தலைவி, அச்சம் தரும் துன்பத்தை அவர் செய்யமாட்டார் என்ற அன்புடைய உன் சொல் சிறிது இன்பமாய் எனக்கு இருக்கிறது என்கிறாள்.[118] தலைவன் என்னை மணக்க எண்ணவில்லை[119] என்றும், என் பிரிவுநோய் மற்றவருக்குத் தெரியாதவாறு மறைத்தல் வேண்டும்[120] என்றும், கூதிர் காலத்திலும்

தலைவன் வராததால் இனி அவர் வந்து வரைவார் என்று நீ கூறுவது எவ்வாறு நடைபெறும்[121] என்றும் நொதுமலர் வரைவிற்கு இடம் ஏற்படுவதால் யான் ஆற்றேன்[122] என்றும், தாய் பாதுகாத்த என் பெண்மை நலத்தைத் தலைவன் கொள்ளை கொண்டமையால் யாம் நலம் இழந்தனம்[123] என்றும், என் நிலையைத் தாய் அறியின் இனிமேலும் உயிருடன் இருப்பேனோ?[124] என்றும் தலைவனின் சொற்களோ தமக்குரிய இயல்பினின்று வேறுபட்டவையாக உள்ளன[125] என்றும் நீ அவனை மறக்குமாறு கூறினாய் எனினும் அவனது குன்றம் தோன்றி மறக்க இயலவில்லை[126] என்றும் என் நோய்க்கு அவனது அருள் மருந்தாகும் என்பதனை அவனது அருள் உள்ளம் அறியுமோ?[127] என்றும் இவ்வாறு பலபடத் தன் ஆற்றாமையைக் கூறுகிறாள்.

### 3.1.1.9 **வேற்று வரைவு மாற்றல் வேண்டி**

வேற்று வரைவு வருதல் அறிந்து அதனை மாற்றல் வேண்டித் தலைவி தோழியிடம் கூறும் பாடல்கள் குறுந்தொகையில் கபிலர் குறிஞ்சித் திணையில் பாடிய ஒரு பாடலும் கலித்தொகையில் சோழன் நல்லுருத்திரன் முல்லைத் திணையில் பாடிய ஒரு பாடலும் காணப்படுகின்றன.[128]

தலைவன் எப்பொழுதும் அன்று இருந்தாற்போல மாறுபாடு இல்லாமல் இருக்கும் நட்பினை உடையவன். இதனை அறியாத ஆரவாரம் உள்ள இவ்வூரானது வேற்று வரைவு எண்ணியுள்ளது. அதனை மாற்ற வேண்டும்[129] என்கிறாள்.

> *"திரு நுதல் ஆயத்தார் தம்முள் புணர்ந்த*
> *ஒரு மணம் தான் அறியும்; ஆயின் எனைத்தும்*
> *தெருமரல் கைவிட்டு இருக்கோ அலர்ந்த*
> *விரிநீர் உடுக்கை உலகம் பெறினும்*
> *அரு நெறி ஆயர் மகளிர்க்கு*
> *இரு மணம் கூடுதல் இல்இயல்பு அன்றே"* [130]

என்று தன் குல வழக்கை எடுத்தியம்பியும், வேற்று மணத்தை மறுத்துரைக்கிறாள்.

### 3.1.1.10 **வரைவு மலிதல்**

தலைவன் வரைவு மலிந்து வந்தமை பொருட்டுத் தலைவி தோழிக்குக் கூறும் கூற்றுகள் குறுந்தொகையின் மருதத் திணையில் நக்கீரர் பாடிய ஒரு பாடலிலும் ஐங்குறுநூற்றின் நெய்தல் திணையில் அம்மூவனார் பாடிய 2 பாடல்களிலும் குறிஞ்சித் திணையில் கபிலர் பாடிய 3 பாடல்களிலும் என 6 பாடல்களில்[131] காணப்படுகின்றன.

தலைவன் வரைதற் பொருட்டு வருவதால் தலைவி தோழியிடம், 'இனி எந்தத் தீங்குமின்றித் தலைவனுடன் கூடியிருப்பேன்'[132] என்றும், என் கையில் வளைகள்

அவன் வருகையால் பொருந்தின[133] என்றும், தலைவன் மணந்து கொள்ளும் அருள் புரிந்தால் அலர் ஆரவாரமுடைய இவ்வூர் வாழ்வதற்கு இனிதாகும்[134] என்றும், தலைவன் வந்து மணந்து கொள்வானாயின், நம் தாய் தன் மனையிலும் மணச்சிறப்பு செய்வள் ஆவாளோ கூறுக[135] என்றும் மண நிகழ்வில் தனக்கேற்படும் நிலையை மகிழ்ந்துரைக்கின்றாள்.

### 3.1.1.11 உடன்போக்கு உணர்த்திய தோழியிடம்

உடன்போக்கு உணர்த்திய தோழிக்குத் தலைவி கூறுவதாக குறுந்தொகையில் வெள்ளி வீதியார் பாடிய பாலைத்திணைப் பாடல் ஒன்றும், அகநானூற்றில் கந்தரத்தனார், பாடிய பாலைத்திணைப் பாடல் 2-உம்[136] உள்ளன.

அகன் ஐந்திணையில் உடன்போக்கு முக்கிய பங்கு வகிக்கின்றது. கருத்தொருமித்த காதலரின் களவு வாழ்வில் உடன்போக்கு நிகழ்ச்சி ஒரு திருப்பு மையம் எனலாம்.

இவ்வுடன்போக்கு குறிந்த ஆய்வாளர்தம் கருத்துகள் இங்கு எண்ணத்தக்கன.

> *''தலைவி தலைவனுடன் கொள்ளும் உறவும், தாயுடன் கொள்ளும் உறவும் முற்றிலும் தனித்து நிற்பவை அல்ல; ஒன்று மற்றொன்றுடன் பின்னி நின்று சிக்கலை உருவாக்குபவை. இரண்டில் ஒன்றையே தனதாக்க முடியும் நிலை தோன்றும்போது தலைவி தாயின் உறவை உதறிவிட்டுத் தலைவனின் உறவைத் தனதாக்க முடிவு செய்கிறாள். தாயின் இற்செறிப்பால் தலைவனுடன் அமையும் புணர்வு தடைபடும்போது, மனவிழைவிற்கும் புறக்கட்டுப்பாட்டிற்கும் இடையே தலைவியின் உள்ளத்தில் நடைபெறும் இப்போராட்டத்தில் தலைவி புறக்கட்டுப்பாட்டை மீற மனவிழைவை நிறைவு செய்யும் உடன்போக்கை ஏற்கிறாள்''* [137]

என்கிறார் ஆ.இராமகிருட்டினன்.

> *''தலைவியின் உடன்போக்குக்கு அவள் தன் தாய்முன் நிற்க அஞ்சும் அச்சமே காரணமாம்''* [138]

என்கிறார் வ.சுப. மாணிக்கம்.

> *''ஊரலரினின்றும் அன்னையர்தம் கடுமொழியிலிருந்தும் தப்பிப் பிழைக்கவே உடன்போக்குக்குத் தலைவி உடன்படுகிறாள்''* [139]

என்கிறார் தியாகராஜன்.

தலைவனுடன் உடன்போக்கு மறுக்கும் தலைவி உடன்படவும் செய்கிறாள். அதற்குக் காரணம் ஊரார் கூறும் அலர் தன் மகளுக்குப் பொருந்துவது அல்ல என்று தெய்வத்தைப் பரவுகிறாள் தாய்; அத்தாய் முன் தலைவியின் மெலிந்த நிலை காணப்பட்டால் அத்தாய் வருந்துவாள் என்பதனால் தலைவனுடன் உடன்பட்டு உடன்போக்குச் செல்வதாக உரைக்கின்றாள்.[140]

3.1.1.12 **உடன்போக்கு மீட்சியில்**

உடன்போக்கு மேற்கொண்டு தலைவி மீண்டு வந்த பொழுது தோழி வினவ அவளுக்குக் கூறும் கூற்றுகள் ஐங்குறுநூற்றில் கபிலர் குறிஞ்சித் திணையில் பாடிய ஒரு பாடலிலும், ஓதலாந்தையார் பாலைத் திணையில் பாடிய ஒரு பாடலிலும் என 2 பாடல்களில் காணப்படுகின்றன.[141]

தலைவனுடன் உடன்சென்று மீண்ட தலைவியிடம் தோழி நீ சென்ற நாட்டு நீர் இனிய அல்ல; எவ்வாறு பருகினாய் என்று கேட்டவிடத்துத் தலைவி, தம் தோட்டத்தில் கிடைக்கும் தேன்கலந்த பாலைவிட தலைவன் நாட்டிலுள்ள இலை மட்கிய பள்ளத்திலுள்ள மான் கூட்டம் உண்டு கழித்த கலங்கிய சிற்றளவு நீர் இனியன[142] என்றுரைக்கிறாள்.

தலைவி தலைவனுடன் உடன்போய் மீண்டுவந்த பொழுது ஏற்பட்டிருந்த வருத்தத்தைக் கண்டு தோழி வருத்தமுறும் பொழுது தலைவி, 'நீ வருந்துதல் ஒழிக அவ்வாறு வருந்தினால் அது உனக்கு முடிவற்ற துன்பத்தையே தரும்'[143] என்று உரைக்கின்றாள்.

களவுநிலையில் தலைவி, தலைவன் தன்னை வரைதல் வேண்டி எதிர்பார்க்கிறாள். அவன் வரைவிற்குக் காலம் நீட்டிக்குமிடத்து ஆற்றாது தன் மேனி நலம், ஊரலர், அன்னை அறிந்தமை, பிற வரைவு இவற்றின் மூலமாகவே தோழியிடம் கூறுவதுபோல் தலைவனுக்கு உரைக்கின்றாள். தன் காதல் உறவை தோழியிடம் அறத்தொடு நின்று உரைப்பதுடன் அவன் அன்னை முதலியோருக்கு உரைக்கும் கருவியாகவும் துணையாகவும் அவளை நாடுகிறாள். இதன் மூலம் சுற்றத்தார் விரும்ப மணம் நடைபெற வேண்டுமென்ற தலைவியின் கற்பொழுக்கமும், குடிப்பெருமையும் உணரலாம். ஆனால் இவ்வாறு நடைபெறாதபோது தன்னைப் பெற்று வளர்த்த அன்னையையே எதிர்த்து தலைவனுடன் உடன்போக்கு செல்ல எண்ணியமை அவளது மனத்துணிவைக் காட்டுவதுடன் அவள் தலைவன் மீது கொண்ட காதலையும் நம்பிக்கையையும் புலப்படுத்துகின்றன.

### 3.1.2 தலைவி தலைவனிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

தலைவி தலைவனிடம் களவுக்காலத்தில் கூறும் கூற்றுகள் அகநானூற்றில் 2 பாடல்களில்[144] மட்டும் காணப்படுகின்றன.

இந்நிலைப் பாடல்களை மதுரைப் பண்ட வாணிகன் இளந்தேவனார் குறிஞ்சித் திணையில் இரவுக்குறி இடத்து வந்த தலைவனிடம் தலைவி கூறும் துறையில் பாடியுள்ளார்.

மணந்து கொள்ளும் எண்ணமின்றி காலம் நீட்டித்து இரவுக்குறியிடம் வரும் தலைவனிடம் உள்ளுறையாக, கொடிச்சியரின் தந்தையர் தம் தொழிலுக்கு இடையூறு உண்டானபோது மட்டும் இல்லத்தை நினைந்து வந்து தங்குவது போல் நீயும் நின் காரியத்தில் கண்ணாய் இருந்து, இடையூறு நேரிடும் போது மட்டும் என்னை எண்ணி வருகின்றாய். இவ்வாறு வருதலினும் வாராமையே நன்று[145] என்று உரைக்கின்றாள்.

இரவில் கடும் காவலுடைய நள்ளிரவில் எம் காமநோயை வெளிப்படுத்தும் முன்னமேயே குறிப்பால் உணர்ந்து, துயிலாது என்னுடன் இருந்த தோழி, வருந்தாதே! நம்மைப் பிரிந்தவர் காலம் தாழ்த்தாது இப்போதே விரைந்து வருவார் எனக் கூறி ஆற்றுவித்தாள்; நின் வருகை கண்டு அவள் மகிழ்ந்தமையே நீ வரும் வருகையினும் எனக்கு இனிமையாய் இருந்தது என்று தலைவனிடத்துத் தன் தோழி மகிழ்வை எண்ணிப் போற்றி[146] உரைக்கின்றாள்.

களவில் தலைவனிடம் ஆறாக் காதல் கொண்ட தலைவி, தன் காதல் மன உணர்வை தோழியிடம் கூறுவது போல் தலைவனிடம் வெளிப்படையாக உரைப்பதில்லை என்பது அவள் தலைவனிடம் கூறும் கூற்றின் குறைந்த எண்ணிக்கையாலும் கருத்தாலும் அறியலாம். அவள் கூற்றில் தலைவனின் இயல்பும், தலைவனினும் தோழியே தலைவிபால் அன்புடையவள் என்னும் உணர்வும் வெளிப்படுவதைக் காணலாம்.

### 3.1.3 தலைவி பிறரிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

#### 3.1.3.1 உடன்போக்கில்

தலைவி களவில் உடன்போக்கு மேற்கொண்டு செல்லும்பொழுது வழியிடையில் கண்டோரிடம் நிகழ்த்தும் கூற்று ஐங்குறுநூற்றின் பாலைத் திணையில் ஓதலாந்தையார் பாடிய ஒரு பாடலில்[147] மட்டும் காணப்படுகின்றது.

தலைவி தலைவனுடன் உடன்போக்கு செல்லும் வழியில் தன் எதிரே வந்த கண்டோரைப் பார்த்து,

> *"நல்தோள் நயந்து பாராட்டி*
> *எற்கெடுத்து இருந்த அறனில் யாய்க்கே"*

எனத் தாயைப் பற்றிக் கூறி, அத்தாயைக் காணின் நின் மகள் அஞ்சாமையுடைய தன் காதலனுடன் நெடுந்தேர் ஏறிச் சென்றாள் என்று உரைப்பீராக[148] என்று கூறுகிறாள்.

தலைவி உடன்போக்கு மேற்கொண்டு மீள்கின்ற நிலையில் வழியில் கண்டோரிடம் நிகழ்த்தும் கூற்று ஐங்குறுநூற்றில் பாலைத் திணையில் ஓதலாந்தையார் பாடிய ஒரு பாடலில்[149] மட்டும் காணப்படுகிறது.

தலைவி உடன்போக்கு சென்று மீண்டு வந்துழி வழியிடைக் கண்டோரிடம், சுரத்தைக் கடந்து அண்மையில் வருகின்றாள் என்று இனிய நகை கொண்ட என் ஆயத்தார்க்கு எமக்கு முன்னே விரைவாகப் போகும் நீவிர் கூறுவீராக[150] என்று உரைக்கின்றாள்.

தலைவி உடன்போக்கு செல்லுழி வழியிடை எதிர்வரும் அந்தணர்க்குக் கூறும் கூற்று ஐங்குறுநூற்றின் பாலைத் திணையில் ஓதலாந்தையார் பாடிய ஒரு பாடலில் மட்டும் காணப்படுகிறது.[151]

தலைவி தன் எதிர்வரும் அந்தணரை நோக்கி, உங்களை ஒன்று இரந்து சொல்கின்றேன். நீவிர் எம் ஊருக்குச் செல்வீராயின் என் தோழியர்க்கு, 'உங்கள் தோழி தன் தாய் போற்றி வளர்த்த அழகிய நலம் வனப்பு மிகுமாறு செல்வதற்கரிய காட்டைக் கடந்து போனாள் என்று கூறுவீராக[152] என்று உரைக்கின்றாள்.

தலைவி தன் காதல் வாழ்வில் தன்னை வளர்த்த தாயையும், தன் தலைவனையும் ஒரு சேர எண்ணினாலும், தாயின் கண்டிப்பை விடத் தலைவனுடன் நம்பிக்கை கொண்டு செல்வதை விரும்புகிறாள். அப்போது தாயை அறனில்லாதவள் என்கிறாள். மீளுமிடத்துத் தன் வரவு கண்டு மகிழ்வது தன் ஆயமே என உணர்ந்து அவர்களுக்கு உரைக்கச் செய்கிறாள்.

### 3.1.4 தலைவி தன் நெஞ்சிடம் கூறும் கூற்றுவழி உறவு

பாங்கற் கூட்டத்தில் மட்டும்தான் தலைவன் தன் கருத்துகளைப் பாங்கனிடம் கூறுகிறான். அதன்பிறகு அவன் காதல் வாழ்வில் தோழியைத் தவிர வேறு ஒருவரிடமும் கூறாத நிலையே உள்ளது. அவன் தன் மன உணர்வுகளை வெளிப்படுத்தியாக வேண்டும் என்ற நிலை ஏற்படும்போது தன் நெஞ்சினிடம் கூறுகிறான். தலைவியின் கருத்துகளைக்

கூற உயிர்த்தோழி இருப்பதால் அவளிடம் கூறல் இயல்பாகிறது. இக்கூற்று உளவியலின் அடிப்படையில் அமைந்து சிறக்கிறது. தலைவி தலைவனைப் போலன்றி மிகக் குறைந்த அளவே தன் நெஞ்சிடம் கூற்றுகள் நிகழ்த்துகிறாள்.

தலைவன் பகற்குறி வந்து மீளும் செலவு நோக்கித் தலைவி தன்னுள் கூறியதாக நற்றிணையின் நெய்தல் திணையில் ஔவையார் பாடிய பாடல் ஒன்று[153] உள்ளது.

### 3.1.4.1 காப்பு மிகுதியில்

காப்பு மிகுதிக்கண் ஆற்றாத தலைவி கூறும் கூற்றுகள் நற்றிணையின் நெய்தல் திணையில் உலோச்சனார் பாடிய ஒரு பாடலிலும் குறுந்தொகையின் நெய்தல் திணையில் அம்மூவனார் பாடிய 2 பாடல்களிலும் கலித்தொகையின் நெய்தல் திணையில் நல்லந்துவன் பாடிய ஒரு பாடலிலும் என 4 பாடல்களில்[154] காணப்படுகின்றன.

காப்பு மிகுதியான காலத்துத் தலைவி தன் நெஞ்சிடம், தலைவனைக் கண்டால் அவனால் வருகின்ற எல்லாத் துன்பங்களையும் மறந்து விடுகின்றேன்[155] என்றும், அவனுடன் அளவளாவியதால் ஏற்பட்ட வேறுபாடு அவனைக் காணாமல் இருக்கச் செய்தது[156] என்றும் தன் காதலனுடன் சென்ற நெஞ்சு பலமுறை போயும் வந்தும் தடுமாறி வருத்தம் ஒன்றை மட்டுமே பெற்றது[157] என்றும் வருந்திக் கூறுகிறாள்.

காப்பு மிகுதிக்கண் தோழி அறத்தொடு நிற்பாளாகத் தனது ஆற்றாமை தோன்றத் தலைவி தன்னுள்ளே கூறும் கூற்று குறுந்தொகை மருதத்திணையில் குப்பைக் கோழியார் பாடிய ஒரு பாடலில்[158] காணப்படுகிறது.

தலைவனைக் கண்ட கண்களால் ஏற்பட்ட காமமாகிய தீ, எலும்பை வருத்தினும் அவரிடம் விரும்பிச் சென்று அளவளாவுதலுக்கு அரியராயினோம். அவரும் நம்மிடம் வந்து நம் துன்பம் தீர்த்தார் அல்லர். இத்தகு என் துன்பம் நீக்கும் துணையானவரைப் பெற்றிலேன்[159] என்று வருந்திக் கூறுகிறாள்.

### 3.1.4.2 வரைவிடை ஆற்றாது

வரைவிடை ஆற்றாது தலைவி கூறும் கூற்றுகள் நற்றிணை நெய்தல் திணையில் முக்கல் ஆசான் நல்வெள்ளையார் பாடிய ஒரு பாடலிலும், குறுந்தொகையின் பாலைத் திணையில் மாமூலனார் பாடிய ஒரு பாடலிலும், மருதத்திணையில் அள்ளூர் நன்முல்லையார் பாடிய ஒரு பாடலிலும், ஐங்குறுநூற்றின் குறிஞ்சித் திணையில் கபிலர் பாடிய ஒரு பாடலிலும் என 4 பாடல்களில்[160] காணப்படுகின்றன.

தலைவன் வரைந்து கொள்ளாது நெடுங்காலம் வந்தொழுக ஆற்றாத தலைவி, என் விருப்பம் வீணாக, அதனால் பெரிதும் செயலற்ற என் சிறுமை பலர் வாயில் அலராக எனக்கு நோய் ஆனது, அந்நோய் பல நோயினும் பெரிதாகியது[161] என்றும் மொழி வேறுபட்ட நாட்டில் தலைவர் இருப்பினும் அவரிடம் செல்லுவதை யான் எண்ணியுள்ளேன்; நீயும் இப்பொழுதே எழுவாயாக[162] என்றும் தன் நெஞ்சிடம் கூறிப் புலம்புகிறாள்.

தலைவனுடன் கொண்ட காதலால் ஊர் அலர் எழ, அதனால் அன்னை காப்பு மிகுதிப்படுத்துகிறாள். சிறைப்பட்ட தலைவி தன் தலைவனைக் காண முடியாமையாலும் விரைந்து வரைந்து கொள்ளுதல் வேண்டும் என்ற ஆவலாலும் ஆற்றாமை மீதூர நெஞ்சிடம் உரைக்கின்றாள்.

## 3.2 கற்பு நெறி

### 3.2.1 தலைவி தோழியிடத்து நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

#### 3.2.1.1 செலவு குறிப்பறிந்து

செலவு குறிப்பறிந்த தலைவி தோழியிடம் கூறும் கூற்றுகள் நற்றிணையில் 6 பாடல்களும், குறுந்தொகையில் 5 பாடல்களும், அகநானூற்றில் 7 பாடல்களும் என 18 பாடல்களில்[163] அமைந்துள்ளன.

அவை குறிஞ்சித் திணையில் 2 பாடலும்,[164] பாலைத் திணையில் 16 பாடல்களுமாக[165] இடம் பெற்றுள்ளன.

கபிலர், மூலங்கீரனார், கண்ணகனார், குதிரைத் தறியனார், கோப்பெருஞ்சோழன், கிள்ளி மங்கலங்கிழார், வெண்பூதி, உறையன், ஔவையார், வேம்பற்றூர்க் குமரனார், மாமூலனார், கழாஅர்க் கீரன் எயிற்றியார், காவன்முல்லைப் பூதனார், வடம வண்ணக்கன் பேரிசாத்தன், தங்கால் பொற்கொல்லனார் ஆகிய பதினைந்து புலவர்கள்[166] முறையே ஒரு பாடலும், பாலை பாடிய பெருங்கடுங்கோ 2 பாடல்களும்[167], பெயர் தெரியாத புலவர் ஒரு பாடலும்[168] பாடியுள்ளனர்.

தலைவனின் பிரிவைத் தோழி தலைவிக்கு உணர்த்தியபோது, நம் காதலர் நிலைத்ததும் நீண்ட நாள் இனிமைத் தருவதும் ஆகிய சொல்லை உடையவர். என்னைப் பிரிவதை அறியாதவர். நீரில்லாத உலகம் போல் அவரில்லாமல் நாம் வாழ முடியாது. அத்தகையவர் என்னைப் பிரிந்து சிறுமை அடைய மாட்டார்[169] என்று தலைவன் மீது தனக்குள்ள நம்பிக்கையைப் புலப்படுத்துகிறாள்.

தலைவனின் பிரிவைத் தோழி மூலம் உணர்ந்த தலைவி தோழியிடம் தலைவன் பிரிந்து செல்வதைத் தடுப்பதற்குரிய வழிமுறைகளை வினவுகிறாள். முன்னர் பிரிய மாட்டேன் என்று உறுதி கூறியவர்[170] இப்பொழுது பிரிந்து செல்ல நினைத்ததைப் பற்றி நான் என்ன சொல்வேன்[171] என வருந்துகிறாள். நம் காதலர் தன் வினையை மேற்கொண்டு விரைந்து செல்வார். ஆனால் நாமோ அவர் பொருட்டுத் துன்புற்றுச் சாவோம். இனிமேல் ஆகப்போவது என்ன உள்ளது[172] எனவும், தன் மனம் நொந்து கூறுகிறாள். தலைவன் அருளுடையவன் ஆயினும் பொருளின் பொருட்டுத் தன்னைப் பிரிந்து செல்வது தகாது[173] எனவும், தலைவன் பிரிவினால் அழுகின்ற என் கண்களிடம் தலைவர் வந்தார் என்று கூறித் துடைப்பாரைப் பெறாமல் ஆற்றியிருக்க வேண்டுமென்று ஆறுதல் கூறுவாரையே யான் பெற்றுள்ளேன்[174] எனவும் தன் நிலைக்கு இரங்குகிறாள். தலைவனைப் பிரிந்து வருந்தும் என் துன்பம் நீங்க வெள்ளிவீதி என்பவள் காட்டில் தன் கணவனைத் தேடிச் சென்றதைப் போல நானும் என் தலைவனைத் தேடிச் செல்ல விரும்பினேன்[175] எனவும், யான் தலைவனைப் பிரிந்து தனித்திருக்கும் இயல்புடையவள் அல்லள்; அத்தகு இயல்புடையார்க்குத் தலைவன் தன் பிரிவைச் சொல்வாராக[176] எனவும், பொருளை விரும்பிய நெஞ்சத்தோடு தலைவன் பிரிந்து சென்றதால் நம் இல்லம் தனிமை அடைந்து காணப்படுகிறது[177] எனவும், நாம் தலைவனிடம் போய் நீ அருளில்லாமல் பொருளை விரும்பிச் செல்லுதல் உனக்குப் பொருத்தமானதன்று என்று சொல்லி ஊடல்கொண்டு வருவோம் வா[178] எனவும் வருத்தமுற்றும், இரங்கியும் பலவாறு கூறுகின்றாள்.

### 3.2.1.2 **பிரிவிடை ஆற்றாது**

பிரிவிடை ஆற்றாத தலைவி தோழியிடம் கூறும் கூற்றுகளாக நற்றிணையில் 6 பாடல்களும் குறுந்தொகையில் 10 பாடல்களும், ஐங்குறுநூற்றில் 14 பாடல்களும், கலித்தொகையில் ஒரு பாடலும், அகநானூற்றில் 21 பாடல்களும் என 52 பாடல்கள்[179] இடம் பெற்றுள்ளன.

குறிஞ்சித் திணையிலும், மருதத் திணையிலும் முறையே ஒரு பாடலும்,[180] முல்லைத் திணையிலும், நெய்தல் திணையிலும் முறையே 2 பாடல்களும்,[181] பாலைத் திணையில் 46 பாடல்களும்[182] அமைந்துள்ளன.

ஓதலாந்தையார் 14 பாடல்களும்,[183] மாமூலனார் 6 பாடல்களும்,[184] ஔவையார், பரணர், மதுரை மருதனிள நாகனார், பாலை பாடிய பெருங்கடுங்கோ, காவன் முல்லை பூதனார் எனப்படும் காவன் முல்லை பூதரத்தினார் ஆகியோர் முறையே 2 பாடல்களும்[185], சேகம் பூதனார், நப்பாலத்தனார், காமக்கணிப் பசலையார், கழாஅர்க்கீரன் எயிற்றியார், அள்ளூர் நன்முல்லையார், குடவாயிற் கீரத்தனார், மதுரை சீத்தலைச் சாத்தனார், பூதம்

புல்லன், கடியலூர் உருத்திரங் கண்ணனார், நல்லந்துவனார், ஒரோடோகத்துக் கந்தரத்தனார், குன்றியனார், காவிரிப்பூம்பட்டினத்துச் செங்கண்ணனார், கல்லாடனார், இடைக்காடனார், கழாஅர்க்கீரன் எயிற்றியார், உறையூர் முதுகூத்தனார், ஆவூர் மூலங்கிழார், எயினந்தை மகனார் இளங்கீரனார், ஆகிய 19 புலவர்கள்[186] முறையே ஒரு பாடலும், பெயர் தெரியாத 3 புலவர்கள்[187] முறையே ஒரு பாடலும் பாடியுள்ளனர்.

தலைவன் வினைபொருட்டுச் சென்ற நாட்டிலும் இம்மாலைக் காலம் தோன்றினால் அவர் எவ்வாறு தன் வினையை நிறைவேற்றுவார் என்று இரங்கியும்,[188] காட்டுவழிச் சென்ற தலைவன் பின் சென்ற நெஞ்சம் நல்வினைப்பட்டது. ஆனால் நான் தீவினையால் நோய்வயப்பட்டேன்[189] என வருந்துகிறாள்; மேலும்,

> *"பிறர்க்கு என முயலும் பேர் அருள் நெஞ்சமொடு*
> *காமர் பொருட் பிணிப் போகிய*
> *நாமவெங் காதலர் சென்ற ஆறே"* [190]

எனத் தலைவன் சென்ற வழியை எண்ணியும், இவ்வுலகைப் படைத்தவன் இக்கொடிய பாலை நிலத்தில் சென்று விரைந்து வருந்தவேண்டும்[191] எனக் கடிந்தும்

> *"இன்னாது ஆகிய காலை, பொருள்வயிற்*
> *பிரியல் ஆடவர்க்கு இயல்பு எனின்*
> *அரிது மன்றம்ம அறத்தினும் பொருளே"* [192]

என ஆடவர் இயல்பு எண்ணியும், பலவாறு தலைவன் பிரிவில் ஆற்றாது தோழியிடம் கூறுகிறாள்.

தலைவன் தன்னிடம் சொல்லாது பிரிந்து சென்றதால் ஏற்பட்ட துயரம் நல்ல பாம்பு கடித்ததினால் வருந்துவது போல உள்ளது[193] என்றும், தலைவன் தனக்குத் தண்ணளி செய்யவில்லை என்றாலும் பலமுறை காணுந்தோறும் என் உள்ளம் இன்புறுகின்றது[194] என்றும் என்னை வழியிடை நினையாரோ[195] என்றும் பிரிந்த நாட்கள் பலவாயின[196] என்றும், தலைவன் அங்கு சிற்றூரில் தங்கினாரோ? அதற்கான வன்மையை எவ்வாறு பெற்றார்[197] என்றும் தலைவி பலவாறு ஆற்றாது தன் தோழியிடம் உரைக்கின்றாள்.

தலைவன் சென்ற நெறியின் கொடுமையைப் பிறர் கூறக்கேட்டு என் மனம் கவலை கொள்கிறது[198] என்றும், காட்டில் விலங்குகள் கொடியன; அதனால் ஐயனே தலைவியைப் பிரிந்து செல்வது கொடியது என்று தலைவனுக்குக் கூறவில்லையே என்று தோழியை வினவியும்[199] பறவைக் கூட்டங்கள், யாங்கள் ஒன்றாய்க் கூடி இருக்க நீ நின் தலைவியைப் பிரிந்து எவ்வாறு வந்தாய் என்று கூறாமையால் அவை வல்லமை அற்றன என வருந்தியும்,[200] யான் அழும்படி பிரிந்த அவர் கல்லினும் வன்மையுடையவர்[201] எனச்

சினந்தும், தலைவன் விரும்பிய பொருள் நம் இன்பத்தினும், மிக இன்பம் அளிப்பனவாகும்[202] என நினைந்தும், ஊரில் அலர் உண்டானதால் ஆற்றாமை கொண்டோம் என்பதை அவர் அறியாரோ[203] என வினவியும் பலவாறு தோழியிடம் உரைக்கிறாள் தலைவி.

> *''சிறு காரோடன் பயினொடு சேர்த்திய*
> *கல்போல் பிரியலம் என்ற சொல்தாம்*
> *மறந்தனர் கொல்லோ''* [204]

என ஐயுற்றும், பிறர் பெண்டிர், தலைவன் கொடிய காட்டிடையே சென்றதைப் பழிக்காமல் இவள் பிரிவாற்றாது வருந்தினாள் என்று என்னையே பழிக்கின்றனர் என்று வருந்தியும்,[205] தலைவனுக்கு நாம் வெறுக்கத்தக்க செயல் எதுவும் செய்யவில்லை; எனவே இம்மையில் நன்மை செய்தால் தீது வருவதில்லை என்ற பழமொழி பொய்த்து விட்டதோ,[206] என வினவி யும், ஆற்றியிருத்தல் நின் கடன் எனத் தோழி கூறக் கேட்ட தலைவி பறவை தன் கூட்டை விட்டு அகன்று போவது போல என் உயிர் உடம்பை விட்டு நீங்கிடின், யான் அழாமல் இருப்பேன்[207] என ஆற்றாதும், நம்மைப் பிரிந்தாராயினும் தாம் மேற்கொண்ட வினையை முடித்து வருவாராக[208] என்று எண்ணியும், நம் நலன் கெடப் பிரிந்தவர் இரும்பால் ஆன உயிர் உடையவராவர்[209] என்றும், பொருள் தேடும் முயற்சியால் நம்மை மறந்து விட்டா-ரோ[210] என்றும், வருந்தியும் ஆற்றாதும் வினவியும் தலைவி தன் தோழியிடம் கூறுகின்றாள்.

### 3.2.1.3 பிரிவிடை ஆற்றாள் எனக் கவன்ற தோழியிடம்

பிரிவிடை ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்குக் கூறும் கூற்றுகள் குறுந்தொகையில் 16 பாடல்களிலும், அகநானூற்றில் 8 பாடல்களிலும் என 24 பாடல்களில்[211] காணப்படுகின்றன.

குறிஞ்சித் திணையில் 3 பாடல்களும்,[212] முல்லைத் திணையில் 2 பாடல்களும்,[213] மருதத் திணையில் ஒரு பாடலும்,[214] நெய்தல் திணையில் 4 பாடல்களும்,[215] பாலைத் திணையில் 14 பாடல்களும்[216] இத்துறையில் அமைந்துள்ளன.

கபிலர், நக்கீரர் என்ற நக்கீரனார், பாலை பாடிய பெருங்கடுங்கோ, ஔவையார் ஆகியோர் முறையே 2 பாடல்களும்,[217] காமஞ்சேர் குளத்தார், நரிவெரூஉத்தலையார், ஓதலாந்தையார், வெள்ளிவீதியார், அணிலாடு முன்றிலார், மாமிலாடன், கருவூர்க் கதப்பிள்ளை, வெண்கொற்றன், கொற்றன், கூவன் மைந்தன், நண்ணாகையார், உறையூர் மருத்துவன் தாமோதரனார், மதுரை மருதங் கிழார் மகனார் பெருங்கண்ணனார், மாமூலனார், கருவூர்க் கந்தப்பிள்ளைச் சாத்தனார் ஆகிய 15 புலவர்கள் முறையே ஒரு பாடலும்,[218] பெயர் தெரியாத புலவர் ஒரு பாடலும்[219] பாடியுள்ளனர்.

தலைவனது பிரிவில் தலைவி ஆற்றாள் என்று தோழி கூறுமிடத்துத் தலைவி, என் கண்ணீரைத் துடைத்து அரவணைக்கும் தலைவன் இப்பொழுது பிரிந்திருப்பதால் எனது நெஞ்சம் வருந்துகின்றது[220] என்றும், இவ்வூர், தலைவன் சென்ற வழியின் கொடுமை பற்றி நினையாது வேறுபட்ட சொற்கள் கூறி என்னை இடித்துரைக்கும்[221] என்றும், நம் துன்பத்தைத் தலைவன் அறிந்திருந்தும், தான் சென்ற நாட்டிலிருந்து வாராமல் இன்னும் அங்கேயே தங்கி உள்ளார்[222] என்றும், அவர் பொருட்டுக் கடவுள் வழிபாடு, நிமித்தம் பார்த்தல் இவற்றால் என்ன பயன்[223] என்றும், காமநோய் மிகுந்து ஆற்றேனாயினேன்[224] என்றும், பிரிந்த தலைவர் மீண்டு வரின் எம் கூந்தலை அலங்கரிப்பதையும் எம்மைத் தொடுவதையும் விட்டு ஒழிக என்று யான் கூறுவதைக் காண்பாயாக[225] என்றும், உன் வருத்தம் துயிலாத நோயினும் கொடியது[226] என்றும் பலவாறு கூறித் தன் ஆற்றாமையைப் புலப்படுத்துகின்றாள்.

மேலும் நம் தலைவன் கான்யாற்று நீரை உண்ணும் எம்முடன் வர வல்லாயோ என்று வினவினார்; அதன் பொருட்டு அஞ்சுகிறேன்[227] என்றும், நின்னைப் பிரியேன் என்று வஞ்சினம் கூறிப் பொருள் விரும்பிச் சென்றாரே என்று எண்ணி வருந்தாதே; அவர் பழியுடையவர் அல்லர்; என் தோள்களே தவறுடையன[228] என்றும், தாம் உரைத்த சூள் பழுதாயின் பழிவரும் என்று அஞ்சாது தலைவன் சென்றதால் நாம் செய்யத்தக்க ஒன்றை ஆராய்ந்து கூறுவாயாக[229] என்றும், தலைவன் சென்ற நாட்டிற்குச் சென்றால் என்ன? என்றும் தன் தலைவன் பொருட்டு வருந்தியும் தன் ஆற்றாமையை வினவியும் உரைக்கின்றாள்.

### 3.2.1.4 **பிரிவிடை வற்புறுத்தும் தோழிக்கு**

பிரிவிடை வற்புறுத்தும் தோழிக்குக் கூறும் கூற்றுகள் நற்றிணையில் 3 பாடல்களிலும், குறுந்தொகையில் 11 பாடல்களிலும், ஐங்குறுநூற்றில் ஒரு பாடலிலும், அகநானூற்றில் 18 பாடல்களிலும் என 33 பாடல்களில்[230] காணப்படுகின்றன.

முல்லைத் திணையில் 3 பாடல்களும்,[231] மருதத் திணையில் ஒரு பாடலும்,[232] நெய்தல் திணையில் 2 பாடல்களும்,[233] பாலைத் திணையில் 27 பாடல்களும்,[234] இத்துறையில் உள்ளன.

ஓதலாந்தையார், நக்கீரர் என்ற நக்கீரனார், கழார்க்கீரன் எயிற்றியார், காவன் முல்லைப் பூதனார் ஆகியோர் முறையே 2 பாடல்களும்,[235] மாமூலனார் 3 பாடல்களும்,[236] மீளிப் பெரும்பதுமனார் கணிபுன்குன்றனார், அம்மூவனார், ஔவையார், அள்ளூர் நன்முல்லை, உலோச்சன், பேரிசாத்தன், மதுரை மருதன் இளநாகனார், குடவாயிற் கீரத்தன், கல்பொரு

சிறுநுரையார், கடம்பனூர்ச் சாண்டிலியன், குறுங்குடி மருதன், வெள்ளிவீதியார், சீத்தலைச் சாத்தனார், நோய்பாடியார், மதுரைக் கவுணியன் பூதத்தனார், ஆலம்பேரி சாத்தனார், கொடியூர்கிழார் மகனார் நெய்தல் தத்தனார், அதியன் விண்ணத்தனார், கல்லாடனார், பரணர், இடையன் சேந்தங் கொற்றனார் ஆகிய 22 புலவர்கள் முறையே ஒருபாடலும்[237] பாடியுள்ளனர்.

பிரிவிடை வற்புறுத்தும் தோழியிடம் தலைவி,

*''சாதல் அஞ்சேன்; அஞ்சுவல் சாவின்*
*பிறப்புப் பிறிது ஆகுவது ஆயின்*
*மறக்குவேன் கொல், என் காதலன் எனவே''* [238]

என்று தலைவன் நினைவு பொருட்டுச் சாதலுக்கு அஞ்சுவதைக் கூறுகிறாள்.

தோழியிடம் ஊரவர் கூறும் பழிமொழி எனக்குத் துன்பம் தராது[239] என்றும், பாவையையும், எம்மையும் நினைக்காத அவர் கொடியவர்[240] என்றும், கடத்தற்கரிய காட்டைக் கடந்து சென்றனரோ[241] என்றும், தலைவன் அரிய வழியில் சென்று ஈட்டக்கருதியது பொருளே ஆனால் நீயோ அறியாமல் தலைவனின் காதல் நம்மிடம் அருள் என்கிறாய்[242] என்றும், உன் ஆறுதல் சொல்லால் ஆற்றுவேன்; எனினும் அத்தகு வலிமை எனக்கு இல்லையே[243] என்றும் நம்மைப் பிரிந்த தலைவர் செயல் முடியாது தாழ்ந்திருப்பினும் அவர் எத்தகு துன்பமுமின்றி நீடு வாழ்வாராக[244] என்றும், நாம் அழும்படி தலைவன் பிரிந்து செல்லினும் காவிரிப்பூம்பட்டினத்தைப் போன்ற பெருஞ்செல்வத்தைப் பெறுவாராக[245] என்றும் தலைவனைப் பலகாலம் நினைந்து வருந்துவதினும் சிறிதேனும் மறந்திருப்போம் என்கிறாய்; காதலர் செய்த காதலை ஒரு நொடிப் பொழுதும் மறத்தல் முடியுமோ?[246] என்றும், தலைவன் எத்தகு துன்பமுமின்றித் திரும்பி வந்தால் என் கண்கள் அழமாட்டா[247] என்றும், என்னைப் பாதுகாத்து உன்னைப் பாராட்டி நம் இல்லத்தில் இருந்த தலைவர், தன்னை நாடி இரந்து வந்தவருக்குப் பொருள் தர வேண்டிக் காட்டைக் கடந்து சென்றார்; அவர் பொருட்டு ஆற்றாதிருப்பது எங்ஙனம்[248] என்றும் தலைவனுக்காகத் தலைவி இரங்கியும் வாழ்த்தியும் கூறுகிறாள்.

பிரிவிடை வற்புறுத்தும் பாணர் கேட்பத் தோழியிடம் கூறும் கூற்றுகள் ஐங்குறுநூற்றில் பேயனார் முல்லைத் திணையில் பாடிய 2 பாடல்களில்[249] உள்ளன.

தலைவி தோழியிடம் நம் தலைவரைக் குற்றமற்ற ஒளியுடைய நெற்றி விளங்கும் வண்ணம் அழைத்து வருவேன் என்றுரைக்கும் பாணன் அறிவு நன்றாய் உள்ளது[250] என்றும், என் மெலிவு கண்டு பாணன் வருந்துவதால் நம் தலைவன் போலல்லாமல் நம்மிடம் மிக்க அன்புடையவனாக உள்ளான்[251] என்றும் பாணனது அன்பை எண்ணிப் பாராட்டி உரைக்கின்றாள்.

### 3.2.1.5 வன்பொறை எதிரழிந்து

தலைவி வன்பொறை எதிரழிந்து தோழியிடம் கூறும் கூற்றுகள் நற்றிணையில் 7 பாடல்களிலும், குறுந்தொகையில் 5 பாடல்களிலும், அகநானூற்றில் 2 பாடல்களிலும் என 14 பாடல்களில்[252] காணப்படுகின்றன.

குறிஞ்சித் திணையில் ஒரு பாடலும்,[253] முல்லைத் திணையில் ஒரு பாடலும்,[254] நெய்தல் திணையில் 6 பாடல்களும்,[255] பாலைத் திணையில் 6 பாடல்களும்[256] காணப்படுகின்றன.

உலோச்சனார், நெய்தல் தத்தனார், பேரி சாத்தனார், மதுரைப் பெருமருதனார், கழார்க்கீரன் எயிற்றியார், மாரோக்கத்து நப்பசலையார், மதுரை ஆருலவிய நாட்டு ஆலம்பேரி சாத்தனார், கச்சிப்பேட்டு நன்னாகையார், நம்பி குட்டுவன், பூதத்தேவன், வெள்ளி வீதியார், கங்குல் வெள்ளத்தார், விற்றூற்று மூதெயினனார், மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார், ஆகிய 14 புலவர்களும்[257] முறையே ஒரு பாடல் பாடியுள்ளனர்.

தலைவி வன்புறுக்கும் தோழியிடம், தலைவன் மூதூரில் தன் செயல் செய்து வாழும் வாழ்க்கையைக் காட்டிலும் இனியது உண்டோ? என்பதை அறியாது சென்றார். இப்பெரிய முயக்கம் கொண்டவள் என்ன செய்வாள் என்று ஒருநாள் கூடக் கூறினாரில்லை. என் நோய் இவ்வுலக எல்லையினும் பெரிதாயிற்று யான் எவ்வாறு பிழைப்பேன்[258] என்று வருந்தியுரைக்கிறாள்.

என்னை வாட்டும் காமநோயைப் பொறுத்துக் கொள்ள வேண்டும் என்றுரைக்கிறாய்; அது எவ்வாறு முடியும்[259] என்றும், நாம் இல்லை என்றாலும் தலைவன் பொருளை ஈட்டுக என்று யான் கூறினேன்; அதற்கு நீ இவ்வாறு வெறுத்துப் பேசாதே, நின்மேனி அழகு கெடுவதை நோக்கி வருந்தாதே என்று கூறினாய்; ஆனால் இப்போதே திரும்பி வருவேன் என்று கூறிய தலைவன் இன்னும் திரும்பவில்லையே; யான் யாது செய்வேன்[260] என்றும் தோழியிடத்துத் தலைவி தன் ஆற்றாமையை உரைக்கிறாள்.

### 3.2.1.6 பருவங் கண்டு அழிந்த இடத்து

தலைவி, தலைவன் வருவேன் என்று குறித்த பருவம் வரக்கண்டு அழிந்து கூறும் கூற்றுகள் நற்றிணையில் 5 பாடல்களிலும், குறுந்தொகையில் 14 பாடல்களிலும், ஐங்குறுநூற்றில் 7 பாடல்களிலும் அகநானூற்றில் 4 பாடல்களிலும் என 30 பாடல்களில்[261] காணப்படுகின்றன.

முல்லைத் திணையில் 24 பாடல்களிலும்,[262] நெய்தல் திணையில் 2 பாடல்களிலும்,[263] பாலைத் திணையில் 4 பாடல்களிலும்[264] வந்துள்ளன.

பேயனார் 6 பாடல்களும்,[265] ஒக்கூர் மாசாத்தியார் 3 பாடல்களும்,[266] வாயிலான் தேவன் 2 பாடல்களும்,[267] மாறன் வழுதி, கருவூர்க் கோசனார், கந்தரத்தனார், மருங்கூர்ப் பட்டினத்துச் சேந்தன் குமரனார், ஔவையார், கருவூர்க் கலிங்கத்தார், இடைக்காடனார், கருவூர் நன்மார்பன், மதுரை மருதங்கிழார் மகனார் பெருங்கண்ணனார், கோவூர்கிழார், கோக்குளமுற்றன், கிள்ளி மங்கலங்கிழார், இளங்கீரந்தையார், மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார், கோவர்த்தனார், தேரதரன், மிளைப் பெருங் கந்தன், பொன்மணியார், ஓதலாந்தையார் ஆகிய 19 புலவர்கள் முறையே ஒருபாடலும்[268] பாடியுள்ளனர்.

தலைவன் குறித்த பருவம் வரக்கண்டு தலைவி தோழியிடம் புகழும், இன்பமும், கொடையும் ஆகிய இம்மூன்றும் சோம்பலோடு இருப்பவர்க்குக் கிடைத்தல் அரியன எனக் கருதி வினை மேற்சென்ற தலைவர் நம்மில் வேறுபடு கொள்கை உடையவராய் உள்ளார். அவர் குறித்த பருவம் இங்கு வந்ததை அந்நாட்டில் அவர் கேட்கவில்லையா[269] என்று வினவுகிறாள்.

மேலும் உலகம் தன் நிலை மாறினும் காதலர் தான் கூறிய சொல்லிலிருந்து நிலைமாறாதவர். இக்கார் காலத்தில் என் காமத்தீ அவரால் அவிக்கப் பெறாத அருளற்ற நிலையில் இருக்கின்றேன்[270] என்றும் அரிய துன்பத்தால் வருந்திக் கொண்டிருப்பதால் அதுவே அன்புடன் இருப்பதற்குப் போதுமானது என்பது உலக உரை; சாக்காடு இல்லாமல் யான் இருப்பதால் அன்பு இல்லாதவள் அல்லேன். இக்கார் பருவத்தில் இப்பிரிவுத் துன்பத்தை நான் எப்படித் தாங்குவேன்[271] என்றும் தலைவி ஆற்றாது உரைக்கின்றாள்.

> *''வாரார் ஆயினும் வரினும் அவர் நமக்கு*
> *யார் ஆகியரோ தோழி!*
> ---------------------------------
> *இன்னாது எறிதரும் வாடையொடு*
> *என் ஆயினள்கொல் என்னா தோரே''* [272]

என வெறுத்தும், தலைவர் வந்தார் இலர் எவ்விடத்து உள்ளார் என வருந்தி இருப்ப, முல்லை நம்மைப் பார்த்துச் சிரிக்கும் என்று வருந்தியும்[273] மிக்க குளிர்ந்த இப்பருவத்தைக் கார் அன்று என்று நீ கூறின் இது கனவா என்று யான் கேட்டதற்கு நீ பதில் உரைப்பாயாக[274] என வினவியும், இப்பருவத்தில் எங்கு இருக்கின்றாரோ என்று வருந்தியும் பருவ வரவில் தோழியிடம் உரைக்கின்றாள்.[275]

என் மடங்கெழு நெஞ்சம் பிரிவதற்கரிய கார் காலத்தில் தம்மைப் பிரிந்து வாழ்வதை ஆற்றாதாயினும், அவரை மறந்து சிறிது பொழுதுகூட அமைதி அடையவில்லை. நான்

என் செய்வது[276] என்றும், நம்மைப் பிரிந்தவர் தொலைவில் உள்ளார், காலம் தாழ்த்தாது வருவார் என்று நீ கூறுகின்றாய். மிக்க துன்புறுத்தும் வாடையில் அவரை நினைந்து நாம் வருந்த மாட்டோமா[277] என்றும் தோழியிடம் கூறுகின்றாள்.

### 3.2.1.7 பருவங் கண்டு ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்கு

பருவங் கண்டு ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்குத் தலைவி கூறும் கூற்றுகள் குறுந்தொகை முல்லைத் திணையில் ஓதலாந்தையார், கதக்கண்ணன், ஔவையார், பெருங்கண்ணன் ஆகியோர் முறையே பாடிய ஒரு பாடலிலும், நெய்தல் திணையில் மிளைகிழான் நல்வேட்டன் பாடிய ஒரு பாடலிலும், பாலைத் திணையில் கச்சிப் பேட்டுக் காஞ்சிக் கொற்றன் பாடிய ஒரு பாடலிலும் என 6 பாடல்களில்[278] காணப்படுகின்றன.

தலைவன் குறித்த பருவம் வரக்கண்டு, ஆற்றாள் என்று கவன்ற தோழிக்குத் தலைவி, இது கார்ப்பருவம் என்று மலர்களால் தெரிவித்தாலும் நான் தெளியமாட்டேன்; ஏனென்றால் அவர் பொய்மொழி கூறாதவர்[279] என்றும், மேகத்தின் இடியோசை கேட்பின் பிரிவுத் துயரால் மேலும் எந்நிலையினை அடைவாரோ[280] என்றும், இணைந்திருக்கும் மான்களைக் கண்டு விரைவில் வருவார்[281] என்றும் முன்பு துணியாத என் நெஞ்சம் இப்பொழுது தலைவன் வினைமுடித்துத் திரும்பி வருவர் என்ற துணிவைப் பற்றுக்கோடாகக் கொண்டு வாழ்வேன்[282] என்றும் தலைவன் மீது நம்பிக்கையும், அவனை நினைந்து வருந்தியும் கூறுகின்றாள்.

### 3.2.1.8 பருவங் கண்டு அழிந்த தலைவியை வற்புறுத்தும் தோழிக்கு

பருவங் கண்டு அழிந்த தலைவியை வற்புறுத்தும் தோழிக்குக் கூறும் கூற்றுகள் குறுந்தொகையில் 7 பாடல்களிலும் அகநானூற்றில் 2 பாடல்களிலும் என 9 பாடல்களில்[283] காணப்படுகின்றன.

குறிஞ்சித் திணையில் ஒரு பாடலும்,[284] முல்லைத் திணையில் 5 பாடல்களும்,[285] நெய்தல் திணையில் 2 பாடல்களும்,[286] பாலைத் திணையில் ஒரு பாடலும்,[287] இடம் பெற்றுள்ளன.

கடுவன் மள்ளன், கச்சிப்பேட்டு நன்னாகையார், ஔவையார், உறையூர் முதுகொற்றன், பார்காப்பான், பேரிசாத்தன், தாயங்கண்ணன், உம்பற் காட்டு இளங்கண்ணனார், கழார்க்கீரன் எயிற்றியார் ஆகிய 9 புலவர்கள்[288] முறையே ஒரு பாடல் பாடியுள்ளனர்.

வற்புறுத்தும் தோழியிடம் தலைவி, தலைவர் நம்மிடம் விருப்பம் இன்றி மறந்தனர் போலும்[289] என்றும், பாசறையில் உள்ள தலைவன் நம் நிலையை அறியவில்லை என்றாலும் தம் நிலையையாவது அறிந்தாரோ[290] என்றும் வருத்தமுற்று உரைக்கின்றாள்.

### 3.2.1.9 நன்கு ஆற்றினாய் என்ற தோழியிடம்

தலைவன் வரும்வரை நன்கு ஆற்றினாய் என்ற தோழியிடம் தலைவி கூறும் கூற்றுகள் குறுந்தொகை குறிஞ்சித் திணையில் கிடங்கில் குலபதி நக்கண்ணன், பெயர் தெரியாத புலவர் ஆகியோர் முறையே ஒரு பாடலிலும் முல்லைத் திணையில் அரிசில்கிழார் ஒருபாடலும் நெய்தல் திணையில் செய்தி வள்ளுவன் பெருஞ்சாத்தன் ஒருபாடலிலும் என 4 பாடல்களில்[291] காணலாம்.

ஆற்றினாய் என்ற தோழியிடம் தலைவி, தலைவன் வரைவுக்கு உரியவற்றுடன் வருவான் என்று அயல் இலாட்டி கூறினாள்; ஆதலின் அவள் அமிழ்தம் உண்பாளாக[292] என்றும், பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனை மாறுபாடின்றி நீ ஏற்றது ஏன் என வினவினாய்; தலைவன் சான்றோன்; பெரியோர் தம்மைப் புகழ்வதற்கு முன்னரும் நாணுவர்; எனவே பழிக்கு நாணும் இயல்பினனான அவனை நான் ஏற்றுக் கொண்டேன்[293] என்றும் கூறுகிறாள்.

### 3.2.1.10 தோழிக்கு வாயில் மறுத்தல்

தலைவி தோழிக்கு வாயில் மறுத்தல் என்னும் கூற்றுகள் நற்றிணையில் 3 பாடல்களிலும், குறுந்தொகையில் 5 பாடல்களிலும், ஐங்குறுநூற்றில் 16 பாடல்களிலும் அகநானூற்றில் 2 பாடல்களிலும் என 26 பாடல்களில் காணலாம்.[294]

குறிஞ்சித் திணையிலும், பாலைத் திணையிலும் முறையே ஒரு பாடலும்,[295] மருதத் திணையில் 16 பாடல்களும்,[296] நெய்தல் திணையில் 8 பாடல்களும்[297] அமைந்துள்ளன.

ஓரம்போகியாரும், அம்மூவனாரும் முறையே 8 பாடல்களும்,[298] கபிலர், பரணர், மதுரை அறுவை வணிகன் இளவேட்டனார், செல்லூர்க் கோசிகன் கண்ணனார், நெடும் பல்லியத்தன், பாலை பாடிய பெருங்கடுங்கோ, கள்ளில் ஆத்திரையன் ஆகிய 7 புலவர்கள் முறையே ஒரு பாடலும்,[299] அள்ளூர் நன்முல்லையார் 2 பாடல்களும்[300] பெயர் தெரியாத புலவர் ஒருபாடலும்[301] பாடியுள்ளனர்.

காதலர் மீண்டு வந்து இனிதாக முயங்கி ஓரிடத்தில் தங்கியிருப்பினும், நீ பெரிதும் மனமழிந்து ஏன் வருந்துகிறாய் என்ற தோழியிடம் தலைவி, தலைவன் முன்பு பிறன் மாதரை விரும்பாத கொள்கையுடன் இருந்தான்; ஆனால் இப்போது விரும்பிய

கொள்கையுடன் இருக்கிறான். அன்பற்ற தழுவல் எத்தன்மையதாய் இருக்கும் என்றுரைக்கிறாள்.[302]

யான் துயரம் கொண்டேன் போல ஊடல் உறுவேன்[303] என்றும், எனது நல்மனையில் விருந்தினர்களை உபசரிப்பதைக் கைவிடாமல் இருப்பதால் அவரை நேர் காணவில்லை[304] என்கிறாள்.

*"................................ அவர் நமக்கு*
*அன்னையும் அத்தனும் அல்லரோ*
*புலவி அஃது எவனோ அன்பிலங்கடையே"* [305]

எனத் தலைவன் தனக்குத் தாயும் தந்தையுமாகத் திகழ்கிறான் என்றும் அவன் முன்பு இனியவற்றைச் செய்து இப்பொழுது இன்னாதனவற்றைச் செய்து ஒழுகுதலால் என் நெஞ்சு நோகின்றது[306] என்றும், மனத்தால் நீங்கி ஒழுகுகின்ற என் தலைவனிடத்து முன்பு ஒரு காலத்தில் பரிவுடையவளாக இருந்தேன்; இப்பொழுது அப்பரிவு இல்லை[307] என்றும் தலைவன் நம்மோடு ஓர் ஊரிலே வாழ்ந்தாலும் நம் தெருவிற்கோ இல்லத்திற்கோ வராதவன்; என்னைக் கண்டும் வெறுத்து அன்பின்றி ஒதுங்கிச் செல்லும் ஒழுக்கமுடையான்[308] என்றும் மறைமுகமாகவும், வெளிப்படையாகவும் தலைவனது இயல்பைக் கூறி வாயில் மறுக்கிறாள்.

தலைவன் கொடியவனே ஆயினும் அவன் மார்பு ஒன்றே இனிய உறக்கத்தை உண்டாக்கும் இயல்புடையது. எனவே அதனை நினைத்தே ஆற்றேன் ஆயினேன்[309] என்கிறாள். தலைவன் நாளும் புதிய பரத்தையரிடம் விருப்பு உடையவன் என்பதறியாது என் மடப்பமுடைய நெஞ்சம் அவனை நினைந்து வருந்துகின்றது[310] என்கிறாள். களவுக் காலத்தில் நன்மை தரும் சொற்களைச் சொல்லி மணந்தவன் இக்கற்புக் காலத்தில் நின்னைப் பிரியேன் என்று கூறுவதன் கருத்து யாதோ[311] என்றும், 'பரத்தமையை நான் விரும்பேன்' என்று செய்த சூளை மறவாது கடைப்பிடித்தல் தனக்கு முறையன்று என்று கூறுவானோ[312] என்றும், தலைவன் பொருட்டு என் நெஞ்சு உடைந்தாலும் யான் அவற்கு வாயில் நேர்தலை ஆற்றேனாயினேன்[313] என்றும் உரைக்கிறாள்.

பரத்தையை மணப்பான் என்று பலரும் கூறுவது அவனுக்கு அறனும் அருளும் ஆகும்[314] என்றும், களவில் யான் பஞ்சாய்ப் பாவையைப் பெற்றேன். எனவே இது போதுமானது[315] என்றும், தலைவன் தகுதி நமக்குத் தீமை செய்வதுடன் தனக்கும் அலரை உண்டாக்கியது[316] என்றும் அவன் நமக்குத் தலையளி செய்வதாகக் கூறி அங்ஙனம் செய்யவில்லை ஆயினும் அவன் நமக்கு முன்பே உறவான தன்மையுடையவன் என்று அறிக[317] என்றும் கூறுகிறாள். தலைவனை நீ நல்லன் என்றாய். அவ்வாறாயின் என் கண்கள் பசலை பாய்தல் யாது கருதியோ! அறியேன்[318] என்றும் தலைவன் பரத்தையை

மணத்தற்பொருட்டு தேரில் வந்தான்; அவரைக் காண வந்த மகனிடம் வீட்டுக்குச் செல் என்று தலைவன் கூறியும் மகன் செல்லாததால் அவனை அடிக்கக் கோலுடன் சென்றேன்; அப்பொழுது தலைவன் தன் மகனை அணைத்துக் கொள்ளும் நேரத்தில் பரத்தை வீட்டில் மண ஓசை எழுந்தது. அதைக் கேட்டு, முன்பு நமக்கு செய்த சூளுரை வருத்திடவும் அவன் அத்திருமணத்தைக் கைவிட்டான்[319] என்றும், பலவாறு கூறி வாயிலுக்கு உடன்படுவாள் போல மறுக்கிறாள்.

### 3.2.1.11 தோழிக்கு வாயில் நேர்தல்

தலைவி தோழிக்கு வாயில் நேர்தல் என்னும் நிலையில் அமைந்த கூற்றுகள் குறுந்தொகை, அகநானூறு ஆகியவற்றில் முறையே 2 பாடல்களிலும், கலித்தொகை யிலும் ஐங்குறுநூற்றிலும் முறையே ஒருபாடலிலும் என 6 பாடல்களில்[320] காணப் படுகின்றன.

மருதத் திணையில் 4 பாடல்களும்,[321] நெய்தல் திணையில் 2 பாடல்களும்[322] இடம் பெற்றுள்ளன.

அழிசி நச்சாத்தனார், சாத்தன், பாண்டியன் காணப்பேரெயில் தந்த உக்கிரப் பெருவழுதி, பரணர், மருதன் இளநாகன், அம்மூவனார் ஆகிய 6 புலவர்களும்[323] முறையே ஒரு பாடலைப் பாடியுள்ளனர்.

தலைவனைத் தெளிந்து மணந்து கொண்டது ஒரு நாளே ஆகும். அதுவே பலநாள் அவன் கொடுமையை நினைந்து வருந்துவதற்கு ஏதுவாயிற்று என்று கூறுவது[324] அறம் கருதித் தலைவனை ஏற்றுக் கொள்ளும் கருத்தாக அமைகிறது.

தலைவனிடம் நம் நலத்தை மீண்டும் பெறுவோம் என்று தோழி உரைக்கக் கேட்ட தலைவி, அவ்வாறு கேட்பதிலும் உயிரிழத்தல் நன்று என்று கூறித் தலைவனைக் கடியாதே[325] என்கிறாள்.

தோழி தலைவியிடம் எவ்வாறு ஊடல் தீர்ந்தாய் என வினவ, தலைவி யான் இம்மகனுக்குத் தாயாவதற்குப் பொருந்துவோம், நீவிர் பரத்தையர்க்குப் பொருத்தமானவர் என்று கூறக் கேட்ட தலைவன், யாமும் அவனிடம் அன்புடையோம் எனச் சொல்லிப் பின்னால் வந்து தன்னைத் தழுவிக் கொண்டான்[326] என்றும் தலைவன் தன் தவறுக்கு நாணி இருந்தமையைக் கண்டு நெஞ்சம் உருகினேன்[327] என்றும் யான் விருந்தினரை எதிர் கொள்வதாலும்; அவனது பொய்ச் சூளால் நமக்கு வருத்தம் உண்டாகும் என்று அஞ்சுவதாலும்; பெறுவதற்கு அரிய மகனைத் தழுவிக் கொண்டு அவன் உறங்குவதைக்

காண்பதற்காகவும் என் புலவியை மறப்பேன்[328] என்றும் கூறித் தன் ஊடலை நீக்கி வாயில் நேர்கிறாள்.

கற்பு நிலையில் தலைவன் பாலைத் திணையில் பொருள் வயிற் பிரிவையும் முல்லைத் திணையில் போர் வயிற் பிரிவையும் மருதத் திணையில் பரத்தையர் பிரிவையும் மேற்கொள்கிறான். இத்தகு பிரிவுகளால் தனிமைத் துயருறும் தலைவி தலைவனது வரவு குறித்து மிகவும் வருந்துகிறாள். வருத்தத்தால் உண்டான மெலிவையும் தலைவன் குறித்த பருவம் வந்தும் வாராமையால் அவள் படும் துன்பத்தையும் தோழி காண்கிறாள். அதனால் தோழி தானும் வருத்தமுற்று, தலைவியையும் ஆற்றுவிக்கிறாள். தலைவி தன் ஆற்றாமை யால் வருந்தி உரைப்பதுடன் தன் பொருட்டு வருந்தும் தோழியை ஆற்றுவிக்கவும் செய்கிறாள். தோழி தலைவனைப் பழிக்குமிடத்து அவன் மீது கொண்ட காதலால் தலைவி தோழியை இடித்துரைக்கவும் செய்கிறாள். வாயிலாக வருவோரை மறுக்குமிடத்து தலைவனது கொடு மன இயல்பையும், வாயில் நேரும் போது தலைவனது அன்புடைமையையும் கூறுகிறாள். தலைவன் திரும்பி வாராமையால் தன்னிடம் அவன் அன்பு கொள்ளவில்லை என வருந்துகிறாள். புதல்வனைத் தலைவன் வாயிலாகக் கொண்ட இடத்துத் தலைவி தன் புதல்வனுக்காகவும், தலைவனுக்காகவும், சமுதாயத்திற்காகவும் தலைவனது கொடுமை களை எல்லாம் மறந்து ஏற்றுக் கொள்கிறாள். தனிமைத் துயருற்று இருந்தபோது தனக்குத் துணையான தன் புதல்வனைப் பிறமகளிர் உறவு கொள்வதை விரும்புவதில்லை. இத்தகு நிகழ்வுகளுக்கு அடிப்படைக் காரணம் அவள் தலைவன் மீது கொண்ட அன்பும், நம்பிக்கை யுமாக அமைந்திருந்து அதனால் ஏற்படும் ஆற்றாமையே ஆகும். இதற்கு வடிகாலாக அமைபவள் அவள் தோழி எனலாம்.

### 3.2.2 தலைவி தலைவனிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

#### 3.2.2.1 தலைவனது செலவுக் குறிப்பறிந்து

கற்பில் தலைவனது செலவுக் குறிப்பறிந்து தலைவி தலைவனிடம் கூறும் பாடல்களாகப் பெருங்கடுங்கோன் பாலைத் திணையில் பாடிய 3 கலித்தொகை பாடல்கள்[329] மட்டும் காணப்படுகின்றன.

தலைவன் தான் செல்லும் காட்டின் கொடுமைகளைக் கூறித் தலைவி உடன் வருவதைத் தவிர்க்க எண்ணுகிறான். அப்போது,

> *"............... ஆற்றிடை நும்மொடு*
> *துன்பம் துணையாக நாடின், அது அல்லது*
> *இன்பம் உண்டோ எமக்கு"* [330]

என்று அவன் தன்னை விட்டுப் பிரிந்து சென்றால் தான் உண்ண மறுப்பேன்[331] எனவும், உயிர் நீங்கும்[332] எனவும் பிரிவாற்றாது உரைக்கின்றாள்.

### 3.2.2.2 தலைவி தலைவனோடு ஊடிய பொழுது

தலைவன் பரத்தையிற் பிரிந்து வந்து தலைவியை நாடியபோது, அவனிடத்து ஊடல்கொண்டு கூறிய கூற்றுகள், நற்றிணையில் 4 பாடல்களிலும், குறுந்தொகையில் ஒரு பாடலிலும், ஐங்குறுநூற்றில் 18 பாடல்களிலும், கலித்தொகையில் 5 பாடல்களிலும், அகநானூற்றில் 5 பாடல்களிலும் என 33 பாடல்களில்[333] வந்துள்ளன.

ஐங்குறுநூற்று ஓதலாந்தையாரின் 2 பாடல்கள்,[334] மட்டும் பாலைத் திணையில் வந்துள்ளன. ஏனைய 31 பாடல்கள்[335] மருதத் திணையில் அமைந்துள்ளன.

ஓரம்போகியார் 17 பாடல்களும்,[336] பரணர், மருதன் இளநாகனார் ஆகியோர் முறையே 5 பாடல்களும்,[337] மதுரைநக்கீரர், நக்கீரர் என்று அழைக்கப்படும் ஒருவர் 2 பாடல்களும்[338] வெள்ளி வீதியாரும், சாகலாசனாரும் முறையே ஒரு பாடலும்[339] பாடியுள்ளனர்.

பரத்தையிடம் இருந்து பிரிந்து வந்த தலைவன் தான் யாரையும் அறியேன் என்று கூறுமிடத்து, பரத்தை மருத நிலத் தலைவனாகிய உம்மிடத்துத் தங்கி, நேற்று தெருவில் சென்றனள்; இன்று உன் முயக்கமில்லாது தெருவில் சென்றனள்[340] என்றும், பரத்தை ஒருத்தி நின் புதல்வனைக் கண்டு அணைத்துக் கொண்டு நின்றாள்; அதனைக் கண்ட யான் நீயும் இவனுக்குத் தாயே என்று சொல்ல, அப்பரத்தை நாணி நின்றாள்; எனவே அவள் நின் மகனுக்குத் தாய் ஆவதைக் கண்டு அவளை நான் விரும்பினேன்; பொய் சொல்லாதே[341] என்றும், நீ ஒருத்தியுடன் குறி செய்து ஒழுகினை என்று கூறப்படும் அலரானது வேனிற் காலத்துக் குயில் செய்யும் ஓசையை விடப் பெரியதாயிற்று[342] என்றும் தலைவி, தான் அறிந்தமையைக் கூறுகிறாள்.

தலைவன் தனக்குப் பரத்தமை இல்லை என்று தலைவியிடம் தெரிவிக்கும் போது தலைவி, 'ஐய! யான் உன்னுடன் சிரித்து மகிழ்ந்த தூய வெண்பற்கள் மலையைக் குத்திய யானையினது கொம்பைப் போல் விரைவாக முறிவனவாக; எனது உயிர் பாணர் தாம் பிடித்த பச்சை மீனை வைத்த உண்கலம் போல எமக்கும் வெறுப்பைத் தந்து, உம்மையும் யாம் பெறாமல் கெட்டு அழிவதாகுக'[343] என்று வெறுப்புற்றுக் கூறுகிறாள்.

தலைவன் பரத்தை ஒருத்திக்குப் பூவணிந்தான் என்று கேள்வியுற்ற தலைவி, 'நின்னால் மாலை சூட்டப்பட்டவள் யார் என்பதை மறைக்காமல் எனக்குக் கூறுவாயாக'[344] என ஆற்றாமை மீதூர வினவுகிறாள்.

தலைவன் பரத்தையிற் பிரிந்து தலைவியிடம் வந்த பொழுது, நீ இப்போது காதல் மிகவும் உள்ளவன் போல வந்துள்ளாய்; என் கூந்தல் மலர் மாலை வாடும்படி செய்த

பகைவன் நீ, யான் உன்னுடைய செய்கையினை மறக்கவில்லை[345] என்கிறாள். நீ வையை ஆற்றங்கரையில் ஒருத்தியை மணந்ததால் உண்டான அலர் மூவேந்தரின் வெற்றி வீரர் எழுப்பிய மகிழ்ச்சி ஆரவாரத்தினும் பெரிது, நான் தவறிழைக்கவில்லை என்று பொய் கூறாதே[346] என்றும், நீ முருகப் பெருமான் மீது உரைத்த சூளே எமக்கு மிகுந்த துன்பத்தைத் தருவதாய் உள்ளது[347] என்றும், கடவுளைக் கண்டு வந்தேன் என்று கூறும் நீ கடவுளாகிய பரத்தையிடமே செல்வாயாக[348] என்றும், நின்தேர் இப்போது எந்த ஊரில் போய் நிற்கின்றது[349] என்றும், எம் அழகு முற்றும் கெடினும் பிறரைக் கூடித் தழுவின நின் மார்பை யாம் கூடோம்[350] என்றும், புதல்வனை விரும்பி நீ இல்லம் நோக்கி வந்தபொழுது நின்னைத் தடுத்தவள் யார்[351] என்று புலந்தும் வினவவும் செய்கிறாள். யாம் மகவைப் பெற்றதால் அழகற்ற பேயினைப் போன்றுள்ளேன். நீ தூய்மையும் நறுமணமும் உடைய பெண்டிர் மாட்டு செல்வாயாக[352] என்றும், நீ பரத்தையுடன் புனலாடிய சிவந்த கண்ணை உடையதால் பொய் கூறாதே[353] என்றும், எமக்கு அருள் புரியவில்லை ஆயினும் இவ்வூர் பரத்தையர் நின் பெண்டு என்று கூறுமாறு ஒழுகுவாய்[354] என்றும், பலவாறு தலைவி புலந்து கூறுகிறாள்.

மேலும் நின் பரத்தை அங்கு உன்னிடம் செய்த குறியுடன் இங்கு என்னிடம் வரும் நின்னை யாம் விரும்போம்[355] என்கிறாள். நல்ல மகளிரை மணம் செய்து கொள்ள விரும்பும் நீ என்னிடம் இப்படி நிகழாது என்று கூறுவது ஏன்[356] என்றும், நீ பரத்தையுடன் புனலாடியதைப் பலர் பார்த்தால் எம்மிடம் மறைக்க வேண்டாம்[357] என்றும், புதல்வனைப் பெற்று முதிர்ந்த எம் மேனியைத் தழுவாதே; அது நின் மார்பின் அழகைக் கெடுத்துவிடும்[358] என்றும், தன்னை இகழ்ந்த பரத்தை அறியாமை நிரம்பிய இளையவள் ஆவாள்[359] என்றும், யான் ஆறு என அடங்கி இருக்க, பலமுறை என்னைப் புறங்கூறும் பரத்தை அடக்கப் பொருளைத் தன்னிடம் பெறாதவளோ[360] என்றும், மையுண்ட கண்கள் சிவக்குமாறு அழுதபடி நிற்பவள் நின் பெண்டே என்பதை யாம் தெளிவாகக் கண்டுள்ளோம்; நீ இல்லை என்று மறுப்பது ஏன்[361] என்றும், நீ சிறுவர் போல் பின்னால் வருந்தக்கூடியச் செயலைச் செய்வதால் நின்னைக் கண்டவர் நகுதலைச் செய்வாரே[362] என்றும், பலவாறு வினவியும், வருந்தியும், வெறுப்புற்றும் கூறுகிறாள்.

தலைவனிடம்

*''புல்லேன் மகிழ்ந! புலத்தலும் இல்லேன்''* [363]

என்று நொந்து உரைக்கின்றாள்.

என் நலன் தொலையினும் என் கை உன்னைத் தடுத்து வல்லமையுடன் தீண்டுவது குற்றமுள்ள கலங்களைத் தீண்டுவது போன்றதாகும். எனவே நீ இங்கு வாராது இருப்பாயாக.

நீயும் நின் பரத்தையும் நீடூழி வாழ்க![364] என்றும், நேற்று பரத்தையுடன் இருந்த நீ இன்று எம்மிடம் வந்து 'மாசு இல் கற்பின், புதல்வன் தாய்' என்று கூறி என் முதுமையை இகழாதே. எம் இளமை கழார் என்ற ஊரைப் போலப் பழைமையாயிற்று. நின்னுடைய பொய்மொழி எமக்கு எப்படி இன்பத்தைத் தரும்[365] என்றும், தன் துன்பமான மனநிலையைக் கடிந்துரைப்பதன் மூலம் வெளிப்படுத்துகிறாள்.

தலைவன் மீண்டு வந்த பொழுது தலைவி, நீ எங்குச் சென்றாய், எங்குத் தங்கினாய் என்று வினவினாள். அதற்குத் தலைவன் தான் சிவல்போர் காணச் சென்றதாகவும், குதிரை, யானை ஆகியவற்றின் மீதேறிப் பார்ப்பதற்கும், புனலாடவும், தங்கியதாகக் கூறினான். அது கேட்ட தலைவி பரத்தையைச் சிவல், குதிரை, யானை எனத் தொடர்புபடுத்தி நீயும் அங்கே அவற்றுடன் தங்குக[366] என இகழ்ந்து உரைக்கின்றாள்.

### 3.2.2.3 தலைவனுக்கு வாயில் மறுத்தல்

தலைவன் பரத்தையிற் பிரிந்து மீண்டு வந்து தலைவியிடம் வாயில் வேண்டிய இடத்தில் தலைவி வாயில் மறுத்துக் கூறும் கூற்றுகள் ஐங்குறுநூற்றின் மருதத் திணையில் ஓரம்போகியார் பாடிய 3 பாடல்களிலும், நெய்தல் திணையில் அம்மூவனார் பாடிய ஒரு பாடலிலும் கலித்தொகை மருதத் திணையில் மருதன் இளநாகனார் பாடிய 2 பாடல்களிலும் என 6 பாடல்களில்[367] காணப்படுகின்றன.

தலைவி வாயில் வேண்டி வந்த தலைவனிடம், உன் பொய்களை எம்மிடம் சொல்லாமல், எம் தங்கையாகிய பரத்தையரிடம் போய்ச் சொல்[368] என்றும், எம் மகனைப் பல பாராட்டித் தழுவினால் அவன் நின் மார்பில் உள்ள மாலையையும் பல்லணிகலன்களையும் அழிப்பான். ஆதலால் நின் பரத்தை சினம் கொள்வாள். எனவே எம் புதல்வனை இங்கேயே விட்டுவிட்டு அப்பரத்தையிடமே செல்வாயாக[369] என்கிறாள். பாணனை வாயிலாகப் பெற்று வந்த தலைவனிடம், உன்னை விடப் பாணன் பல பொய்களைக் கூறிச் சூளுரைப்பவன் ஆவான்[370] என்றும், நீயும் பாணனைப் போலப் பல பொய் கூறுவாய்[371] என்றும் நின் காதற்பரத்தை வருத்தம் தீர நீ விரைந்து சென்று முன்புபோல அவளைக் கூடுவாயாக[372] என்றும் இகழ்ந்துரைத்து வாயில் மறுக்கிறாள்.

### 3.2.2.4 தலைவனுக்கு வாயில் நேர்தல்

தலைவன் பரத்தையிற் பிரிந்து மீண்டு வந்து தலைவியிடம் வாயில் வேண்டிய இடத்தில் தலைவி வாயில் நேர்ந்த கூற்றுகள் குறுந்தொகையின் நெய்தல் திணையில் அம்மூவனார் பாடிய ஒரு பாடலிலும் கலித்தொகையின் மருதத்திணையில் மருதன்

இளநாகனார் பாடிய 5 பாடல்களிலும் முல்லைத் திணையில் நல்லுருத்திரன் பாடிய ஒரு பாடலிலும் என 7 பாடல்களில்[373] காணப்படுகின்றன.

தலைவன் பரத்தையிடத்து இருந்து மீண்டும் வந்து தலைவியின் வாயில் பெற்ற பின், தலைவி அவனது அன்பை நினைத்து,

*''இம்மை மாறி மறுமை ஆயினும்*
*நீ ஆகியர் எம் கணவனை*
*யான் ஆகியர் நின் நெஞ்சு நேர்பவளே''* [374]

என்று உள்ளன்புடன் உரைக்கின்றாள்.

மேலும் நீ இங்கு வந்ததால் நின் அருளை யாம் பெற்றோம், நீயும் எமக்கு அருள் செய்தாய்; இதுவே எமக்குப் போதும்[375] என்றும், 'நின்பெண்டு' எனப் பிறர் கூறும் பழி மாறப் பெற்றேன்[376] என்றும் கூறுகிறாள். தந்தையைக் கண்ட மகன் 'அத்தா அத்தா' என்றுரைக்கக் கண்டு தலைவி சினம் கொண்டாள். தலைவன் 'எந்தை பெயரனை யாம் கொள்வேம்' என்று கூற அவள் ஊடல் தீர்கிறாள்.[377]

தலைவன் தலைவியிடம் பணிந்து வேண்டியிவிடத்து, நீ கூறும் மிகவும் பொய்யான சூள் வருத்தத்தைச் செய்யுமெனில், அது எங்கள் மேலன்றி யார் மேல் வரும் என அஞ்சியும்,[378] இவனிடம் சினம் கொண்டால் தப்பினேன் என்று என் அடிகளில் வீழ்ந்து வணங்கினாலும வணங்குவான். எனவே நம்மை மறவாத இவனுக்கு இந்த ஊடல் போரில் தோற்று அதன் பயனைக் காண்போம்[379] எனவும் வெளிப்படக்கூறி ஊடல் தீர்கிறாள்.

தலைவி தலைவனிடம் நிகழ்த்தும் கூற்றுகள் களவில் மிக மிகக் குறைவாகும். ஆனால் கற்பில் தலைவன் பொருள் வயிற் பிரிவால் ஏற்படும் துன்பத்தில் நிகழ்த்தும் கூற்றினும் பரத்தையிற் பிரிவால் ஏற்படும் துன்ப நிலைக் கூற்றுகள் மிக அதிகமாகக் காணப்படுவதற்குக் காரணம் அவளது மனநிலை பாதிப்பே ஆகும்.

ஒருத்திக்கு ஒருவன், ஒருவனுக்கு ஒருத்தி என்றும், தனக்கு மட்டும்தான் தன் கணவன் சொந்தம் என்றும் வாழ்ந்துவரும் சமுதாயத்தில் மனைவி கணவனது பரத்தமையை வெறுக்கிறாள். ஊடல் கொண்ட பொழுது கணவனை இகழ்ந்தும், புலந்தும், கடிந்தும், நொந்தும் பேசுகிறாள். வாயில் மறுக்குமிடத்தும் இகழ்ந்துரைக்கிறாள். இவை அவளது ஆற்றாமையை வெளிப்படுத்துவதாகும். ஆனால் ஊடல் தீர்க்கும் பொழுது அவனது அன்பை நினைத்து இம்மை மட்டுமின்றி மறுமையிலும் தன் கணவனாக அவனையே எண்ணும் எண்ணம் அவளது கற்பு மேம்பாட்டையும், கணவனைப் போற்றும் இல்லற மாண்பையும் காட்டுகின்றன.

ஐங்குறுநூற்றில் கபிலர் குறிஞ்சித் திணையில் பாடிய பாடல் ஒன்றில், முதல் மனைவி மகப்பேறு அடையாததால் தலைவன் செய்து கொண்ட மறுதிருமணத்திற் குரியவளாகிய பெண்ணை, முதல் மனைவியாகிய தலைவி, தன் தங்கையாகவும் அவள் தலைவனை விடச் சிறந்தவள் ஆனாள்[380] எனவும் கூறுகிறாள்.

இவ்வாறு தன் கணவனது விருப்பமும், குடிப்பெருமையும் தனக்கும் உரியன என்பதை உணர்ந்த தலைவி உலகியலுடன் ஒத்துப் போகிறாள். எனவே, தன் கணவனது மறுமணத்தை ஏற்று வரவேற்பதுடன் அப்பெண்ணையும் தன் தங்கையாக எண்ணும் அவளது உறவு எண்ணிப் பார்க்கத்தக்கதாகும். அக்காலச் சமுதாயத்தில் மகளிர் நிலையை அறிய நல்ல வாய்ப்பாக இப்பகுதி அமைகிறது.

### 3.2.3 தலைவி புதல்வனிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

தலைவன் பரத்தையிற் பிரிந்துவந்த பொழுது அவனது செயலை இகழ்ந்துரைக்கும் வண்ணம் மகனிடம் கூறும் கூற்றுகள் கலித்தொகை மருதத் திணையில் மருதன் இளநாகனார் பாடிய 3 பாடல்களில்[381] மட்டும் காணப்படுகின்றன.

பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன் சிறைப்புறமாக இருக்க தலைவி மகனிடம், நின் அசைந்த தளர் நடையைக் காண்பதும், 'அத்தா, அத்தா' என்று நீ கூறும் இனிய சொல்லைக் கேட்பதும், திங்களாகிய குழந்தையே! நீ இவனுடன் விளையாட வருவாயாக! என்று கூறி, அத்திங்களுக்கு உன்னைக் காட்டுவதும் ஆகிய அனைத்தும் எனக்கு மகிழ்வு தரும் இனியவையாகும், ஆனால் உம் தந்தை நலம் விரும்பிச் சென்ற மகளிரைக் காணுமிடத்து அத்தோற்றம் இன்னாது ஆகும் என்று கூறுவதுடன் என் பூவற்ற வெறும் கூந்தலில் உன்னை எடுத்து வைத்துக் கொள்வது உம் தந்தை மார்பில் உள்ள பூமாலையை அறுத்து விளையாடவே. நீ அவ்வாறு விளையாடுவதால் யானும் எமக்குப் பகையான மகளிரிடம் அவன் (தலைவன்) வைத்த அன்பு குறையக் காண்போம்[382] என்று தனக்கு இனியதும் இன்னாததும் கூறித் தலைவனுடைய பரத்தமைச் செயலை இகழ்ந்துரைக்கிறாள்.

தலைவி தன் மகனை இறைவனை வணங்கி வரத் தன் தோழியருடன் அனுப்பி வைக்கிறாள். அங்குப் பரத்தையர் அவனுக்கு அழகு செய்தனர். அவன் நேரமாகித் திரும்பி வந்தபோது அவனைக் கண்ட தலைவி, தலைவன் சிறைப்புறமாக இருக்க, தன் மகனிடம் நீ பரத்தையர் இல்லம் செல்வதை விட்டு, எம்மைப் போல் செயலற்றவர் இல்லத்திற்குச் செல்வதே அன்றி நீ வெளியே போகும் தொழில் முடிவுற்றது[383] என்றுரைக்கிறாள்.

தலைவன் சிறைப்புறத்தானாக மகனுக்குப் பாலூட்டும் தாய், தான் விரும்பும் பரத்தையைத் தன் வயமாக்குதலைத் தனக்குத் தொழிலாகக் கொண்டு திரியும் உன் தந்தையின் சில பகுதியாகிய பாலையும், உன் தந்தையின் சூளுறவை மெய் என எண்ணித் துயிலாத உன் தாய்ப் பாங்கான சில பகுதி பாலையும் உண்பாயாக என்று பாலைக் கூறிட்டுக் கூறியும் உண்ணாத தன் பிள்ளையிடம் சினம் கொண்டு, உன் தாயார்க்குரிய பகுதியான பாலைக் குடி[384] என்று உரைக்கிறாள். இது தலைவன் வந்ததைத் தான் வெறுத்தவளாய் ஊடலுடன் பாராட்டிக் கூறுவதாகும்.

தலைவன் பரத்தையிற் பிரிந்ததால் வருந்தியுள்ள தலைவி தன் புதல்வன் செயல் கண்டு ஆறுதல் அடைவதுடன் அவனது வளர்ப்பில் அவள் காட்டும் பொறுப்புணர்வும் இதனால் புலப்படுகின்றது.

### 3.2.4 தலைவி பாணனிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

தலைவன் வினைவயிற் பிரிந்து சென்ற பொழுது அப்பிரிவில் ஆற்றாது உள்ள தலைவியை வற்புறுத்தும் பாணனிடம் கூறும் கூற்றுகள் ஐங்குறுநூற்று முல்லைத் திணையில் பேயனார் பாடிய 2 பாடல்களில்[385] மட்டும் காணப்படுகின்றன.

தலைவன் சென்ற நாட்டிற்குச் செல்வேன் என்றுரைத்த பாணனிடம் தலைவி, அவர் எம்மை மறந்தாலும் யாம் அவரை மறவாதுள்ள ஆற்றாமையைச் சொல்வாய்[386] என்றும், பிரிவாற்றாமை தலைவனுக்கு உளது என்றுரைத்த பாணனிடம் முல்லையின் அன்பில்லாத மாலைக் காலமாவது அவர் சென்ற நாட்டில் உள்ளதோ[387] என்றும் வினவுகிறாள்.

பாணன் தன் இல்லத்துக்கு வர, தலைவி அவனிடம் கூறும் கூற்றான ஐங்குறுநூற்று மருதத் திணையில் ஓரம்போகியார் பாடிய ஒரு பாடலில், தலைவன் மார்பில் உள்ள மலர் மாலையில் இருந்த வண்டினம் என் கூந்தலின் மலரில் தங்கின என்று அயலார் கூறக் கேட்டு பரத்தை வெகுண்டாள் என்று பலர் கூறக் கேட்டேன். அதையே பொறுக்காத பரத்தை நீ இங்கு வருவதை அறிந்தால் சினம் மிகுதியாக அடைவாள். எனவே விரைந்து நீ நீங்கிடுவாயாக[388] என்றுரைக்கிறாள்.

தலைவனது வரவுணர்த்திய பாணனிடம் தலைவி கூறும் கூற்றாக வரும் குறுந்தொகையின் மருதத் திணையில் படுமரத்து மோசிகீரனார் பாடிய ஒரு பாடலில், தலைவனுடைய வரவை எதிர்பார்த்துக் காத்திருந்த தலைவி, தலைவனது வரவை உணர்த்திய பாணனின் கூற்றில் ஐயுற்று, நீ கண்டனையோ? அல்லது கேட்டனையோ என்று பலமுறை வினவுகிறாள்.[389] இது பிரிந்த தலைவன் வரவை எதிர்பார்க்கும் தலைவியின் மனநிலையை நன்கு வெளிப்படுத்துகிறது.

தலைவி, வாயிலாக வந்த பாணனுக்கு மறுத்துக் கூறும் கூற்றுகள் நற்றிணையின் நெய்தல் திணையில் உலோச்சனார் பாடிய ஒரு பாடலிலும், ஐங்குறுநூற்றின் மருதத் திணையில் ஓரம்போகியார் பாடிய ஒரு பாடலிலும் நெய்தல் திணையில் அம்மூவனார் பாடிய 9 பாடல்களிலும், அகநானூற்றின் மருதத் திணையில் உவர்க்கண்ணூர்ப் புல்லங்கீரனார் பாடிய ஒரு பாடலிலும் என 12 பாடல்களில்[390] காணப்படுகின்றன.

வாயிலாக வந்த பாணனிடம் தலைவனது பரத்தையை யார்க்கும் மாற்றல் அரிது. எனவே நீ ஈண்டு வாராதே[391] என்றும், மாயத் தலைவனின் வாய்மொழியினை நம்பித் தன்னுடைய நலத்தைத் துறக்கத் துணிந்த மற்றோர் பரத்தை இருப்பாள் அங்கு நீ சென்று அவளது ஊடலைத் தீர்ப்பாயாக[392] என்றும் தான் ஈனும் பார்ப்பையே உண்ணும் அன்பற்ற முதலையை உடைய ஊரினன் என்றும் உரைத்துத் தலைவனது அன்பற்ற கொடுமை கூறித்[393] தலைவி வாயில் மறுக்கிறாள்.

மேலும் தலைவனது நட்பு அலர் இன்றி நிகழ்வதாயின் நன்று என மறைமுகமாகவும்[394] பரத்தையரிடம் அவன் காட்டும் அருள் அலர் ஆகியது என்று நேர்முகமாகவும்,[395] கூறுகிறாள். தலைவன் சிறிது காலம் பிரியினும் நெகிழ்கின்ற என் தோள்கள்[396] அவன் வந்துழி என் அழகு தானே வந்து பொருந்துகிறது[397] என்று கூறியும், நீ தலைவன் பொருட்டுக் கூறும் சொற்களை வீணாகக் கூறுவதால், நாணம் அற்றவன் ஆவாய்[398] என்று கூறியும் உம் தலைவனை விரும்பிய மகளிருள் உம்மூரில் இழந்த தம் நலத்தைத் திரும்பவும் முன்புபோலப் பெறுபவர் உளரோ[399] என்று வினவியும், தலைவனைக் கண்டு அன்பற்ற கடுஞ்சொல் கூறி அவனை எம்மிடம் கொண்டு வராத நீ பண்பில்லாதவன்[400] என்று கூறியும் வாயில் மறுக்கிறாள்.

இக்கூற்றுகளிலும் தலைவி தலைவன் மீது கொண்ட காதல் சிறப்பையும் அவளது மனப் போராட்டத்தையும் காணலாம்.

### 3.2.5 தலைவி பிறரிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

கற்பு வாழ்வில் தலைவன் தான் பரத்தமை மேற்கொண்டு மீண்டு வர எண்ணிய இடத்து அவனுக்குத் தூதாகத் தலைவியிடம் சென்ற வாயில்களுக்குத் தலைவி கூறும் கூற்றுகள் உள.

குறுந்தொகையின் மருதத் திணையில் குன்றியனார் பாடிய ஒரு பாடலிலும் ஐங்குறுநூற்றின் மருதத் திணையில் ஓரம்போகியார் பாடிய 3 பாடல்களிலும் நெய்தல் திணையில் அம்மூவனார் பாடிய ஒரு பாடலிலும் குறிஞ்சித் திணையில் கபிலர் பாடிய ஒரு பாடலிலும் என 6 பாடல்களில்[401] காணப்படுகின்றன.

தலைவனால் அனுப்பப்பட்டுத் தூதாக வந்தவரிடம் தலைவி, தலைவன் தன்னைப் புறக்கணித்தமையால் யான் மெலிந்தேன்[402] என்றும் அவன் விரும்பும் பரத்தையர் நடு இரவிலும் உறங்காதவர்; எனவே அப்பெண்டிர் அறியாதவாறு அவன் எவ்வாறு வரக்கூடும் அது இயலாது என்றும், முன்பு வந்து கூடிய தலைவன் 'இனிப் பிரியேன்'[403] என்று கூறிப் பின்னர் யான் அழப்பிரிந்து சென்றான்; அவனுக்காக நீங்கள் வந்து வாயில் வேண்டுவது என்ன?[404] என்றும் அவன் இல்லில் உண்ணும் காலமான பகற்பொழுதிலும் வாராமல் பரத்தையிடமே தங்கினான்; அவன் பொருட்டு வாயில் வேண்டுவது ஏன்?[405] என்றும் தூதர் தலைவனது அன்புடைமை பற்றிக் கூறியபோது, அவரது நட்பு எமக்குக் கடலைவிடப் பெரியது[406] என்றும் பொன் போன்ற புதல்வனையும் என்னையும் மறந்துள்ள அவனுக்காக நீவிர் வாயில் வேண்டுவது ஏன்?[407] என்றும் பலவாறு வினவியும் தன் நிலையை உரைத்தும் வாயில் மறுக்கிறாள்.

இவற்றால் தலைவன் பொருட்டுத் தூதாக வந்தவரிடம் தலைவன் செயலால் தான் கொண்ட துன்பம் உரைத்து, தலைவி வாயில் மறுக்கிறாள். எனினும் அவள் தலைவன் மீது கொண்ட காதலும் நம்பிக்கையும் இதனால் புலப்படுவதையும் அறியலாம்.

### 3.2.6 தலைவி தன் நெஞ்சிடம் கூறும் கூற்றுவழி உறவு

கற்பில் தலைவன் பிரிவிடை ஆற்றாத தலைவி கூறும் கூற்றுகள் நற்றிணையின் பாலைத் திணையில் தனிமகனார், முப்பேர் நாகனார், ஆகியோர் முறையே பாடிய ஒரு பாடலும், குறுந்தொகையில் அள்ளூர் நன்முல்லையார் குறிஞ்சித் திணையில் பாடிய ஒரு பாடலும் என 3 பாடல்களில்[408] காணப்படுகின்றன.

தலைவன் பொருள்வயிற் பிரிந்த காலை, தலைவி தன்னுள் கூறுமிடத்து, முதிர்ந்தோர் இளமையை மீண்டும் அடைய மாட்டார்கள்; வாழ்நாளின் வகையும் அளவும் அறிந்த அறிஞரும் யாரும் இல்லை என்பதை உணர்ந்து அவர் தம் சொல்லை நெஞ்சுறப் பொய்த்தனர்; இருப்பினும் எவ்விதத் தீதுமின்றி அவர் வாழ்க[409] என்றும் முன்பனிக் காலத்தால் உண்டாகும் துன்பத்தைப் போக்கும் மருந்து அவர் மார்பு என்பதை,

'மருந்து பிறிது இல்லை அவர் மணந்த மார்பே'[410] என்றும் கூறி வருந்துகிறாள்.

#### 3.2.6.1 பருவங் கண்டு அழிந்த போது

தலைவி பருவங் கண்டு அழிந்து தன்னுள் கூறும் கூற்றுகள் நற்றிணையில் 2 பாடல்களிலும் குறுந்தொகையில் 2 பாடல்களிலும், ஐங்குறுநூற்றில் 14 பாடல்களிலும் என 18 பாடல்களில்[411] காணப்படுகின்றன.

முல்லைத் திணையில் 6 பாடல்களும்,[412] பாலைத் திணையில் 12 பாடல்களும்[413] அமைந்துள்ளன.

ஓதலாந்தையார் 10 பாடல்களும்,[414] பேயனார் 4 பாடல்களும்[415] பெருங்கடுங்கோ, மதுரை மருதன் இளநாகனார், பரணர், ஒரோடகத்துக் கந்தரத்தன் ஆகியோர் முறையே ஒரு பாடலும்[416] பாடியுள்ளனர்.

இப்பாடற் கூற்றுகளில் பிரிந்து சென்ற தலைவன் உரைத்த பருவம் வரக்கண்டு அக்கால நிகழ்வுகளை எண்ணி வருந்தியும் தனிமைத் துயரை ஆற்றாதும் புலம்புவது தலைவன் வாராமையால் அவளுக்கு ஏற்பட்ட மனப்போராட்டத்தைக் காட்டுகிறது.

தலைவி நெஞ்சிடம் நிகழ்த்தும் கூற்றுகளில் களவை விட கற்பில் தலைவன் வரவை எதிர்பார்த்து நிகழ்த்தும் கூற்றுகள் அதிக இடம் பெற்றுள்ளன. காரணம் தலைவன் சென்ற கொடிய வழியாலும், அவன் குறித்த காலத்தில் வராமையாலும் ஏற்பட்ட அச்சமே அவளை இவ்வாறு புலம்பச் செய்கிறது.

### 3.2.7 காமம் மிக்க கழிபடர் கிளவியால் நிகழும் கூற்றுவழி உறவு

தலைவி தன் தலைவன் மீது கொண்ட காமம் மிகுந்த காரணத்தால்

> *"ஞாயிறு திங்கள் அறிவே நாணே*
> *------------------------------*
> *அவையல பிறவு நுதலிய நெறியாற்*
> *சொல்லுந போலவுங் கேட்குந போலவுந்*
> *சொல்லியாங் கமையும் என்மனார் புலவர்"* [417]
>
> *"நெஞ்சம் நாணு நிறைசேர் அறிவும்*
> *------------------------------*
> *தன்சொற் கேட்குந போலவும் தனக்கவை*
> *இன்சொற் சொல்லுந போலவும் ஏவல்*
> *செய்குந போலவும் தேற்றுந போலவும்*
> *மொய்குழற் கிழத்தி மொழிந்தாங் கமையும்"* [418]

எனும் அகத்திணைக் கொள்கை வழி ஆறு, தும்பி, மாலை, தெய்வம், வாடை, திங்கள் பொழுது, நாரை, கிளி, கடல், நண்டு, சேவல், மலை போன்றவற்றுடன் கூற்று நிகழ்த்துகிறாள்.

இத்துறையில் நற்றிணையில் 8 பாடல்களும், குறுந்தொகையில் 6 பாடல்களும், ஐங்குறுநூற்றிலும் அகநானூற்றிலும் முறையே 2 பாடல்களும் என 18 பாடல்கள்[419] உள்ளன.

குறிஞ்சித் திணையில் 4 பாடல்களும்,[420] மருதத் திணையில் 2 பாடல்களும்,[421] நெய்தல் திணையில் 8 பாடல்களும்,[422] பாலைத் திணையில் 4 பாடல்களும்[423] இடம் பெற்றுள்ளன.

அம்மூவனார் 3 பாடல்களும்,[424] வெள்ளிவீதியார் 2 பாடல்களும்,[425] சேந்தங்கண்ணனார், செம்பியனார், தாமோதரன், மதுரைக் கண்ணனார், மதுரைக் கள்ளிற் கடையத்தன் வெண்ணகனார், இம்மென்கீரனார், தும்பிசேர் கீரனார், கபிலர், வெள்ளைக்குடி நாகனார், கருவூர்க் கதப்பிள்ளைச் சாத்தனார், ஓரம்போகியார், ஓதலாந்தையார் ஆகிய 12 புலவர்களும்,[426] முறையே ஒரு பாடலும் பெயர் தெரியாத புலவர் ஒருவர் ஒரு பாடலும்[427] பாடியுள்ளனர்.

தலைவன் வரையாது வந்து சிறைப்புறமாக இருக்க, தலைவி ஆற்றைப் பார்த்துக் கூறுகிறாள். அவள் தலைவனது நிலையைக் காட்டிலும் நினது இயல்பு மிகவும் கொடியது[428] என்கிறாள். என் தலைவன் கொடுமையற்றவன் என் மனம் அவரை விரும்பியதே என் மெலிவிற்குக் காரணம்[429] என்றும் யாம் துன்பமடைய அருளாதவன் என்று உலகம் கொடுமை கூறும்; அதனால் யான் தன்னுடன் பிணக்குவேன் எனத் தலைவன் தன் நாட்டிலிருந்து வரும் உன்னை எம் ஊர்வழிச் செல்ல விட்டானோ என்றும் கூறுவதன் மூலம் தலைவனது கொடுமையை இயற்கைப் பொருளிடத்து ஏற்றிக் கூறுகிறாள்.[430]

இவ்வாறு தலைவி இயற்கைப் பொருளிடத்து கூற்று நிகழ்த்துவது காமம் மிக்கதால் உண்டான அவள் ஆற்றாமை உள்ளத்தின் பிரதிபலிப்பே எனலாம்.

## 3.3 ஆய்வு முடிவுகள்

1. தலைவியின் கூற்று அதிக அளவில் இடம்பெறும் நூல் குறுந்தொகை ஆகும். அந்நூலின் மொத்த பாடல் தொகையில் ஏறத்தாழ 50 விழுக்காட்டை நெருங்கும் அளவிற்கு அதிக அளவு பாடல்கள் தலைவியின் உணர்வுகளை வெளிப்படுத்து வனவாகக் காணப்படுகின்றன.

2. தலைவியின் கூற்று அதிக அளவில் இடம்பெறும் நூல் வரிசையில் ஐங்குறுநூறு இரண்டாம் இடத்தையும் அகநானூறு மூன்றாம் இடத்தையும் பெறுகின்றன. இம்முறையில் நற்றிணை, கலித்தொகை அடுத்தடுத்த இடத்தில் உள்ளன.

3. தலைவனுடைய பிரிவை ஆற்றாது புலம்பும் தலைவியின் கூற்று அதிக அளவில் பாலைத் திணையில் காணப்படுகின்றன. இம்முறையில் வரைவின் பொருட்டும்,

பிரிவின் பொருட்டும் காலம் நீட்டிக்கும் தலைவனை எண்ணி வருந்தும் தலைவி கூற்று இரண்டாம் நிலையில் நெய்தல் திணையில் காணப்படுகிறது.

4. தலைவன் தன்னை மணந்து கொள்ளக் காலம் நீட்டிக்கும் நிலையில் துன்புறும் தலைவியின் கூற்றுப் பாடல்கள் குறிஞ்சித் திணையில் அமைந்து மூன்றாம் இடத்தைப் பெறுகின்றன.

5. பரத்தைப் பிரிவின் காரணமாகத் தலைவன், தோழி, வாயில்கள் ஆகியோருடன் தலைவி நிகழ்த்தும் கூற்றுகள் மருதத் திணையில் அதிக அளவில் இடம்பெற்றுள்ளன.

6. பிரிவில் ஆற்றாதும், பருவங்கண்டு ஆற்றாதும் தலைவி புலம்பிக் கூறும் கூற்றுகள் முல்லைத் திணையில் உள்ளன.

7. தலைவியின் கூற்றாக விளங்கும் மொத்தப் பாடல்களின் எண்ணிக்கையில் கற்பு நிலைப்பாடல்கள் நான்கில் மூன்று பங்காக அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்க தாகும்.

8. தலைவன் மேற்கொள்ளும் பொருள்வயிற் பிரிவு, பரத்தையிற் பிரிவு, வினைமேற் பிரிவு ஆகியவற்றாலும் பருவங்கண்டும், வாயில் மறுத்தும், தலைவனொடு ஊடல் கொண்டும், காமமிக்கும் உரைக்கின்ற தலைவியின் கூற்றுகள் அதிக அளவில் இருப்பதாலும் கற்புநிலைப் பாடல்களின் எண்ணிக்கை அதிக அளவில் உள்ளன.

9. களவு, கற்பு நிகழ்வின்போது தலைவி தோழியிடம் நிகழ்த்தும் கூற்றுகளே அதிக அளவில் காணப்படுகின்றன.

10. தலைவி தலைவனுடன் நிகழ்த்தும் கூற்றுகள் இரண்டாம் இடத்தைப் பெற்றாலும், களவில் இரண்டு பாடல்கள் மட்டுமே இக்கூற்றாக அகநானூற்றில் காணப்படுவது குறிப்பிடத்தக்கது.

11. தலைவி தன் நெஞ்சிடம் புலம்பிக் கூறும் கூற்றுகள் மூன்றாவது இடத்தைப் பெறுகின்றன.

12. தலைவியின் கூற்றுகள் ஆற்றாமையின் பொருட்டே அதிகமாகக் காணப்படுகின்றன. அப்போது அவள் தலைவனின் இயல்புகளையே பெரிதும் பேசுகிறாள்.

13. காமம் மிக்க கழிபடர் கிளவியாகத் தலைவியின் கூற்றுகள் தும்பி, மாலை, திங்கள், வாடை, கடல் போன்றவற்றைக் கண்டுரைப்பனவாக அமைந்துள்ளன. அக்கூற்றுகளும் தலைவனை உட்படுத்தியே விளங்குகின்றன.

14. அம்மூவனார், கபிலர், ஓரம்போகியார், ஆகியோர் முறையே முதல் மூன்று இடத்திலும், ஓதலாந்தையார், மருதனிள நாகனார் ஆகியோர் அதற்கடுத்த நிலையிலும் பேயனார், மாமூலனார் ஆகியோர் அதற்கடுத்த நிலையிலும் தலைவி கூற்றுப் பாடலை அதிகம் பாடியவர்கள் ஆவர்.

15. தலைவி தாயின் கடுஞ்சொல்லுக்கும் பார்வைக்கும் அஞ்சுகிறாள். ஆனால் தன்னைப் பாதுகாத்து வளர்த்த அன்னையைப் போற்றுகிறாள்.

16. தலைவி தன் தோழியையே உற்ற துணையாக எண்ணுகிறாள். தன் மனப் போராட்டத்திற்கும், ஆற்றாமைக்கும் அவளையே வடிகாலாகப் பயன்படுத்து கிறாள். தன் மீது தோழி கொண்ட அன்பால் அவளுக்காக வருந்தவும் தலைவன் மீது தான் கொண்ட அன்பால் அவனைப் பழிக்கும் தோழியை இடித்துரைக்கவும் செய்கிறாள்.

17. தலைவி, தலைவன் மீது கொண்ட அன்பைக் களவிலும் கற்பிலும் நேரடியாகக் கூறாமல், அதிக அளவு தோழியிடம் கூறுவதாலும் பிறருடனும் பிறவற்றுடனும் கூறுவதாலும் வெளிப்படுத்துகிறாள். பிரிவில் வாராத காலை தலைவனைத் தன்னிடம் அன்பற்றவனாகவே எண்ணுகிறாள். உலகியல் கருதி அவன் பரத்தைப் பிரிவை மறக்கிறாள். அதே நேரத்தில் அவன் குடிப்பெருமை கருதி இன்னொரு மணத்திற்கு உட்படுகிறாள். மேலும் அவனைத் தன் தாயாகவும், தந்தையாகவும் எண்ணிப் போற்றும் தலைவியின் அன்புறவு தமிழ்க்குடிப் பெண்டிரின் மாண்பைப் புலப்படுத்துவதாக உள்ளது.

18. தலைவன், மறுதிருமணம் புரிந்த பெண்ணையும், அவன் விரும்பிச் சென்று சேர்ந்த பரத்தையையும், தன் தங்கையாகவே எண்ணும் தலைவியின் மாண்பு எண்ணத்தக்கது. இம்மாண்பு அக்காலத்துக்கு ஏற்புடையதாக இருந்தது.

19. தன் புதல்வனைப் பாலூட்டிச் சீராட்டி வளர்ப்பதும், தந்தை போல அவன் புறத்தொழுக்கம் இல்லாதிருக்க எண்ணுவதும், தலைவன் பிற மகளிர் உறவு கொள்ள நினைப்பதை வெறுப்பதும், தலைவன் மீது கொண்ட ஊடல் தீர மகன் வாயிலாவதும் காணுமிடத்து அவள் தன் மகன் மாட்டுக் கொண்ட அன்பும் வளர்ப்பு முறையும் அறியப்படுகின்றன.

20. கண்டோர், அந்தணர், தலைவன் பொருட்டுத் தன்னிடம் தூதாக வந்தார் ஆகியோரைத் தலைவி தன் வாழ்வின் இன்ப துன்பங்களைப் பகிர்ந்து கொள்ளும் உறவினராகவே எண்ணுகிறாள்.

21. செவிலித்தாய் தன் மகளைக் கண்ணும் கருத்துமாகப் பாதுகாத்து அக்கறையுடன் வளர்ப்பதைக் காணமுடிகிறது.

22. தோழி, தன் தோழியாகிய தலைவிக்காகத் தன் வாழ்வை அர்ப்பணிப்பதைக் காணமுடிகிறது. தோழி ஒருத்தியே தலைவியின் களவிலும் கற்பிலும் உண்டாகும் இன்பதுன்பங்களில் பங்கேற்றுத் தலைவியை நல்வழிப்படுத்த முடிகிறது. அவள் தலைவியின் மகிழ்வைத் தன் மகிழ்வாகவும் அவள் துன்பத்தைத் தன் துன்பமாகவும் அவள் குடும்பத்தைத் தன் குடும்பமாகவும் எண்ணும் உறவு குறிப்பிடத்தக்கது.

23. தலைவன் உலகியல் அடிப்படையில் இல்லற மாண்பை அறிந்தும், பொருள், வினை, அறம் இவற்றைச் சில பொழுது காதலினும் மேலாகக் கருதியும், தன் காதலி மாட்டும் புதல்வன் மாட்டும் அன்பு கொண்டு இல்லறக் கடமை ஆற்றுகிறான்.

24. பாணன் போன்றோர் தலைவியின் பிரிவுத் துயரை அறிந்து அவளைத் தேற்றுவதையும் அவள் பொருட்டுத் தலைவனிடம் தூது செல்ல எண்ணுவதையும் காண முடிகிறது.

# அடிக்குறிப்புகள்

1. கழகத் தமிழ் அகராதி, பக். 474.
2. கழகத் தமிழ் அகராதி, பக்.473.
3. Tamil Lexicon vol III PP. 1782-1783 - Pa. 1788.
4. ஆ. இராமகிருட்டினன், 'அகத்திணை மாந்தர் ஓர் ஆய்வு', பக். 107.
5. வ.சுப. மாணிக்கம், 'தமிழ்க் காதல்', பக். 461.
6. V.T. Manikkam, 'A study of Maruthath Thinai in Tamil Literature, Marutham' Pa.63 Iyal 5.
7. ஈ.கோ. பாஸ்கரதாஸ், 'எட்டுத்தொகையில் தலைவி', பக். 11.
8. வ.சுப. மாணிக்கம், 'தமிழ்க்காதல்', பக். 29.
9. R.K. Naghu, A critical study of Palaith Thinai in Cangam Literature Pa. 70.
10. பின்னிணைப்பு - தலைவி கூற்றுகள், அட்டவணை 'அ' இல் காண்க.
11. நற். 128.
12. அகம். 37, 101, 119, 187, 264, 293, 305, 329, 352, 388.
13. கலி. 62, 64, 110, 112, 113, 116.
14. பின்னிணைப்பு - தலைவி தோழி கூற்றுகள், அட்டவணை 'அ' இல் காண்க.
15. தொல் - பொருள் - களவு 93.
16. குறு. 121, 150.
17. குறு. 340.
18. குறு. 340.
19. குறு. 150.
20. குறு. 121.
21. குறு. 57.
22. சரளா இராசகோபாலன், 'சங்க இலக்கியத்தில் தோழி', பக். 93.
23. ச. மெய்யப்பன், 'சங்க இலக்கியத்தில் பெண்கள்' இலக்கியத்தில் பெண்கள், பக்.5.
24. கு.வெ. பாலசுப்பிரமணியன், 'சங்க இலக்கியத்தில் புறப்பொருள்', பக். 207.
25. குறு. 57.
26. நற். 17, 31, 51, 94, 136, 144, 236, 275, 388, குறு. 125, 141, 158, 161, 219, 239, 246, 261, 269, 296, 299, 311, 318, 320, 326, 360, ஐங். 111-117, 119, 120, 204, 215, 221, 224, 272, 278, அகம். 8, 72, 102, 122, 128, 138, 252, 260, 290, 292, 328, 348, 378, 388.

27. நற். 17, 51, 136, 144, 236, குறு. 141, 158, 161, 239, 261, 360, ஐங். 204, 215, 221, 224, 272, 278, அகம். 8, 72, 102, 122, 128, 138, 252, 292, 328, 348, 378, 388.
28. நற். 31, 94, 275, 388, குறு. 125, 219, 246, 269, 296, 299, 311, 318, 320, 326, ஐங். 111-117, 119, 120, அகம். 260, 290.
29. நற். 275, குறு. 125, 318, ஐங். 111-117, 119, 120.
30. குறு. 246, ஐங். 204, 215, 221, 224, 272, 278, அகம். 128, 292.
31. நற். 31, குறு. 161, அகம். 290.
32. அகம். 102, 348.
33. நற். 17, 51, 94, 136, 144, 236, 388, குறு. 141, 158, 219, 239, 261, 269, 296, 299, 311, 320, 360, அகம். 8, 72, 122, 138, 252, 260, 328, 378, 388.
34. குறு. 326.
35. நற். 17.
36. ஐங். 114.
37. குறு. 141.
38. குறு. 161.
39. ஐங். 272.
40. அகம். 252.
41. அகம். 72: 18-22.
42. அகம். 102.
43. அகம். 378.
44. நற். 94.
45. நற். 136.
46. நற். 236.
47. குறு. 269.
48. குறு. 296.
49. குறு. 318.
50. நற். 388.
51. குறு. 219.
52. குறு. 246, 311.
53. குறு. 326.
54. ஐங். 111.
55. ஐங். 112.

56. ஐங். 113.
57. ஐங். 117.
58. ஐங். 119.
59. ஐங். 204.
60. ஐங். 221.
61. ஐங். 278.
62. அகம். 292, குறு. 360.
63. நற். 14, குறு. 3, 96, 187, 313, 322, கலி. 42, அகம். 22, 332.
64. குறு. 3, 96, 187, 322, கலி. 42, அகம். 22, 332.
65. குறு. 313, நற். 14.
66. குறு. 187, கலி. 42, அகம். 332.
67. நற் 14, குறு 3, 96, 322, அகம். 22.
68. குறு. 313.
69. குறு. 3:1-2.
70. குறு. 313.
71. நற். 14.
72. கலி. 42.
73. குறு. 96.
74. நற். 128, 244, குறு. 31, ஐங். 201, கலி. 54, 111, அகம். 52, 82.
75. நற். 128.
76. குறு. 31.
77. ஐங் 201.
78. அகம் 82.
79. நற். 244.
80. அகம் 52.
81. கலி. 54.
82. கலி. 111.
83. நற். 219, 249, 358, 364, குறு. 13, 25, 38, 54, 97, 105, 112, 118, 133, 145, 266, 310, 395, ஐங். 141, 142, 144, 146, 150, அகம். 325, 345.
84. குறு. 13, 25, 38, 54, 105, 112, 133.
85. நற். 364.
86. நற். 219, 249, 358, குறு. 97, 118, 145, 310, ஐங். 141, 142, 144, 146, 150.
87. குறு. 266, 395, அகம். 325, 345.

88. ஐங். 141, 142, 144, 146, 150.

89. குறு. 13, 25, 38, நற். 358, குறு. 105, 266.

90. நற். 219, 249, 364, குறு. 54, 97, 112, 118, 133, 145, 310, அகம். 325, 345.

91. குறு. 395.

92. நற். 358.

93. குறு. 25.

94. குறு. 112.

95. குறு. 133.

96. குறு. 310.

97. நற். 56, 309, 357, குறு. 28, 36, 134, 153, 170, 171, 172, 205, 226, 240, 245, 249, 301, 302, 304, 315, 334, 377.

98. நற். 309, 357, குறு. 36, 134, 153, 170, 249, 301, 302, 315, 377.

99. குறு. 240, 171.

100. குறு. 172, 205, 226, 245, 304, 334.

101. நற். 56, குறு. 28.

102. நற் 309, குறு. 153, 249.

103. நற் 56, 357, குறு. 28, 36, 134, 170, 171, 172, 205, 226, 240, 245, 301, 302, 304, 315, 334, 377.

104. நற். 56.

105. நற். 309; 3-5.

106. குறு. 28:1-3.

107. குறு. 36.

108. குறு. 172.

109. குறு. 302.

110. குறு. 377.

111. நற். 117, 133, 332, 347, 382, குறு. 30, 152, 160, 185, 208, 223, 316, 371, ஐங். 161, 162, 163, 209, 222, 262, 274.

112. நற். 133, 332, 347, குறு. 152, 160, 185, 208, 223, 371, ஐங். 209, 222, 262, 274.

113. நற். 117, 382, குறு. 316, ஐங். 161, 162, 163.

114. குறு. 30.

115. குறு. 208, ஐங். 209, 222, 262, 274.

116. ஐங். 161, 162, 163.

117. நற். 117, 133, 332, 347, 382, குறு. 30, 152, 160, 185, 223, 316, 371.
118. நற். 133.
119. நற். 332.
120. நற். 382.
121. குறு. 160.
122. குறு. 208.
123. குறு. 223.
124. குறு. 316.
125. ஐங். 162.
126. ஐங். 209.
127. ஐங். 262.
128. குறு. 385, கலி. 114.
129. குறு. 385.
130. கலி. 114.
131. குறு. 368, ஐங். 181, 192, 213, 253, 263.
132. குறு. 368.
133. ஐங். 192.
134. ஐங். 181.
135. ஐங். 253.
136. குறு. 149, அகம். 95.
137. ஆ. இராமகிருட்டினன், 'அகத்திணை மாந்தர் ஓர் ஆய்வு, பக். 119.
138. வ.சுப. மாணிக்கம், 'தமிழ்க்காதல்', பக். 25.
139. Thiagarajan, Studies of Agananuru Ph.d. Thesis University of Madras 1969, PP. 334-335.
140. அகம். 95.
141. ஐங். 203, 392.
142. ஐங். 203.
143. ஐங். 392.
144. அகம். 58, 298.
145. அகம். 58.
146. அகம். 298.
147. ஐங். 385.
148. ஐங். 385.

149. ஐங். 397.
150. ஐங். 397.
151. ஐங். 384.
152. ஐங். 384.
153. நற். 187.
154. நற். 287, குறு. 306, 401 கலி. 123.
155. குறு. 306.
156. குறு. 401.
157. கலி. 123.
158. குறு. 305.
159. குறு. 305.
160. நற். 272, குறு. 11, 157, ஐங். 295.
161. நற். 272.
162. குறு. 11.
163. நற். 17, 73, 79, 177, 224, 296 குறு. 20, 76, 174, 207, 398, அகம். 147, 157, 187, 217, 293, 305, 355.
164. நற். 17, குறு. 76.
165. நற். 73, 79, 177, 224, 296, குறு. 20, 174, 207, 398, அகம். 147, 157, 187, 217, 293, 305, 355.
166. நற். 17, 73, 79, 296, குறு. 20, 76, 174, 207, அகம். 147, 157, 187, 217, 293, 305, 355.
167. நற். 224, குறு. 398.
168. நற். 177.
169. நற். 1.
170. நற். 79.
171. நற். 224.
172. நற். 296.
173. குறு. 20, 174.
174. குறு. 398.
175. அகம் 147.
176. அகம். 157.
177. அகம். 187.
178. அகம். 355.

179. நற். 69, 84, 107, 186, 240, 243, குறு. 35, 43, 60, 67, 77, 79, 104, 154, 190, 352 ஐங். 314, 317-320, 331-338, 340 கலி. 119, அகம். 01, 23, 31, 40, 101, 103, 113, 135, 139, 151, 155, 185, 235, 255, 265, 273, 329, 341, 347, 349, 395.

180. குறு. 60, 35.

181. நற். 69, குறு. 190, அகம், 40, கலி. 119.

182. நற். 84, 107, 186, 240, 243, குறு. 43, 67, 77, 79, 104, 154, 352 ஐங். 314, 317-320, 331-338, 340, அகம். 1, 23, 31, 101, 103, 113, 135, 139, 151, 155, 185, 235, 255, 265, 273, 329, 341, 347, 349, 395.

183. ஐங். 314, 317-320, 331-338, 340.

184. அகம் 1, 31, 101, 265, 347, 349.

185. குறு. 43, அகம். 273, குறு. 60, அகம். 135, குறு. 77, அகம் 255, அகம் 155, 185, குறு. 104, அகம் 151.

186. நற். 69, 240, 243, குறு. 35, 67, 79, 154, 190, 352, கலி. 119, அகம். 23, 40, 103, 113, 139, 235, 329, 341, 395.

187. நற். 84, 107, 186.

188. நற். 69.

189. நற். 107.

190. நற். 186; 8-10.

191. நற். 240.

192. நற். 243; 9-11.

193. குறு. 43.

194. குறு. 60.

195. குறு. 67.

196. குறு. 104.

197. குறு. 79, 154.

198. ஐங். 314, 331, 335.

199. ஐங். 332.

200. ஐங். 333.

201. ஐங். 334.

202. ஐங். 337.

203. ஐங். 340.

204. அகம். 1:5-7.

205. அகம். 31.

206. அகம். 101.

207. அகம். 113.

208. அகம். 155, 347.

209. அகம். 185.

210. அகம். 235.

211. குறு. 4, 5, 12, 27, 41, 46, 64, 86, 102, 191, 218, 224, 241, 264, 283, 325, அகம். 11, 133, 141, 247, 249, 267, 281, 309.

212. குறு. 86, 241, 264.

213. குறு. 64, 191.

214. குறு. 46.

215. குறு. 4, 5, 102, 325.

216. குறு. 12, 27, 41, 218, 224, 283, அகம். 11, 133, 141, 247, 249, 267, 281, 309.

217. குறு. 241, 264, அகம். 141, 249, குறு. 283, அகம். 267, குறு. 102, அகம். 11.

218. குறு. 4, 5, 12, 27, 41, 46, 64, 86, 218, 224, 325, அகம், 133, 247, 281, 309.

219. குறு. 191.

220. குறு. 4.

221. குறு. 12.

222. குறு. 64.

223. குறு. 218.

224. குறு. 102.

225. குறு. 191.

226. குறு. 224.

227. அகம். 133.

228. அகம். 267.

229. அகம். 281.

230. நற். 109, 226, 397, குறு. 39, 140, 175, 278, 279, 281, 290, 307, 329, 330, 344, ஐங். 311, அகம். 45, 53, 67, 74, 97, 115, 163, 175, 205, 241, 243, 301, 331, 333, 367, 375, 389, 391.

231. குறு. 279, 344, அகம். 74.

232. குறு. 330.

233. குறு. 175, 290.

234. நற். 109, 226, 397, குறு. 39, 140, 278, 281, 307, 329, ஐங். 311, அகம். 45, 53, 67, 97, 115, 163, 175, 205, 241, 243, 301, 331, 333, 367, 375, 389, 391.

235. குறு. 329, ஐங். 311, அகம். 205, 389, குறு. 330, அகம். 163, 241, 391.

236. அகம். 97, 115, 331.

237. நற். 109, 226, 397, குறு. 39, 140, 175, 278, 279, 281, 290, 307, 344, அகம். 45, 53, 67, 74, 175, 243, 301, 333, 367, 375

238. நற். 397:8-10.

239. குறு. 175.

240. குறு. 278.

241. குறு. 281.

242. அகம். 53.

243. அகம். 74.

244. அகம். 115.

245. அகம். 205.

246. அகம். 301.

247. அகம். 375.

248. அகம். 389.

249. ஐங். 474, 475.

250. ஐங். 474.

251. ஐங். 475.

252. நற். 38, 130, 199, 241, 281, 304, 338, குறு. 192, 243, 285, 386, 387, அகம். 37, 229.

253. நற். 304.

254. குறு. 387.

255. நற். 38, 130, 199, 338, குறு. 243, 386.

256. நற். 241, 281, குறு. 192, 285, அகம். 37, 229.

257. நற். 38, 130, 199, 241, 281, 304, 338, குறு. 192, 243, 285, 386, 387, அகம். 37, 229.

258. நற். 130.

259. நற். 338.

260. அகம். 229.

261. நற். 97, 214, 238, 289, 381, குறு. 65, 98, 103, 108, 110, 126, 148, 186, 188, 194, 195, 220, 234, 391, ஐங். 339, 453, 454, 455, 456, 457, 459, அகம். 183, 194, 277, 364.

262. நற். 97, 238, 289, 381, குறு. 65, 98, 108, 110, 126, 148, 186, 188, 194, 220, 234, 391, ஐங். 453, 454, 455, 456, 457, 459, அகம். 194, 364.

263. குறு. 103, 195.
264. நற். 214, ஐங். 339, அகம். 183, 277.
265. ஐங். 453-457, 459.
266. குறு. 126, 186, 220.
267. குறு. 103, 108.
268. நற். 97, 214, 238, 289, 381, அகம். 183, 194, 277, 364, குறு. 65, 98, 110, 148, 188, 194, 195, 234, 391, ஐங். 339.
269. நற். 214.
270. நற். 289.
271. நற். 381.
272. குறு. 110.
273. குறு. 126.
274. குறு. 148.
275. குறு. 195.
276. ஐங். 457.
277. அகம். 183.
278. குறு. 21, 94, 183, 216, 289, 341.
279. குறு. 21.
280. குறு. 94.
281. குறு. 183.
282. குறு. 341.
283. குறு. 82, 197, 200, 221, 254, 314, 319, அகம் 264, 294.
284. குறு. 82.
285. குறு. 221, 314, 319 அகம். 264, 294.
286. குறு. 197, 200.
287. குறு. 254.
288. குறு. 82, 197, 200, 221, 254, 314, 319, அகம் 264, 294.
289. குறு. 254.
290. அகம். 264.
291. குறு. 252, 201, 193, 228.
292. குறு. 201.
293. குறு. 252.

294. நற். 174, 217, 280, குறு. 93, 202, 203, 231, 293, ஐங். 14, 15, 17, 20, 22, 23, 31, 35, 151, 152, 154, 155, 164, 165, 167, 170 அகம். 56, 66.

295. நற். 217, 174.

296. நற். 280, குறு. 93, 202, 203, 231, 293, ஐங். 14, 15, 17, 20, 22, 23, 31, 35, அகம். 56, 66.

297. ஐங். 151, 152, 154, 155, 164, 165, 167, 170.

298. ஐங். 14, 15, 17, 20, 22, 23, 31, 35, 151, 152, 154, 155, 164, 165, 167, 170.

299. நற். 217, 280, குறு. 203, 231, 293, அகம். 56, 66.

300. குறு. 93, 202.

301. நற். 174.

302. நற். 174.

303. நற். 217.

304. நற். 280.

305. குறு. 93:2-4.

306. குறு. 202.

307. குறு. 203.

308. குறு. 231.

309. ஐங். 14.

310. ஐங். 17.

311. ஐங். 22, 23.

312. ஐங். 31.

313. ஐங். 151.

314. ஐங். 152.

315. ஐங். 155.

316. ஐங். 164.

317. ஐங். 167.

318. ஐங். 170.

319. அகம். 66.

320. குறு. 271, 349, அகம். 26, 236 கலி. 75, ஐங். 169.

321. குறு. 271, கலி. 75, அகம். 26, 236.

322. குறு. 349, ஐங். 169.

323. குறு. 271, 349, அகம். 26, 236, கலி. 75, ஐங். 169.

324. குறு. 271.

325. குறு. 349.

326. அகம் 26.

327. அகம். 236.

328. கலி. 75.

329. கலி. 6, 20, 23.

330. கலி. 6:8-10.

331. கலி. 23.

332. கலி. 20.

333. நற். 20, 260, 340, 350, குறு. 169, ஐங். 48, 49, 61-71, 80, 83, 85, 369, 370, கலி. 93, 95, 96, 97, 98 அகம். 6, 16, 36, 196, 266.

334. ஐங். 369, 370.

335. நற். 20, 260, 340, 350, குறு. 169, ஐங். 48, 49, 61-71, 80, 85, கலி. 93, 95, 96, 97, 98 அகம். 6, 16, 36, 196, 266.

336. நற். 20, ஐங். 48, 49, 61-71, 80, 83, 85.

337. நற். 260, 350, அகம். 6, 196, 266, கலி. 93, 95-98.

338. நற். 340, அகம். 36.

339. குறு. 169, அகம். 16.

340. நற். 20.

341. அகம். 16.

342. ஐங். 369.

343. குறு. 169.

344. ஐங். 370.

345. நற். 260.

346. அகம். 36.

347. அகம். 266.

348. கலி. 93.

349. ஐங். 62.

350. ஐங். 63, அகம். 196.

351. ஐங். 66.

352. ஐங். 70.

353. ஐங். 71, 80.

354. ஐங். 83.

355. ஐங். 48.

356. ஐங். 61.
357. ஐங். 64.
358. ஐங். 65.
359. ஐங். 67.
360. ஐங். 68.
361. ஐங். 69.
362. ஐங். 85.
363. நற். 340.
364. நற். 350.
365. அகம். 6.
366. கலி. 95, 96, 97, 98.
367. ஐங். 42, 43, 47, 160, கலி. 73, 79.
368. கலி. 73.
369. கலி. 79.
370. ஐங். 43.
371. ஐங். 47.
372. ஐங். 160.
373. குறு. 49, கலி. 66, 77, 81, 88, 89, 108.
374. குறு. 49:3-5.
375. கலி. 66.
376. கலி. 77.
377. கலி. 81.
378. கலி. 88.
379. கலி. 89.
380. ஐங். 292.
381. கலி. 80, 82, 85.
382. ஐங். 80.
383. ஐங். 82.
384. ஐங். 85.
385. ஐங். 473, 476.
386. ஐங். 473.
387. ஐங். 476.
388. ஐங். 82.

389. குறு. 75.

390. நற். 74, ஐங். 41, 131-138, 140 அகம். 146.

391. நற். 74.

392. அகம் 146.

393. ஐங். 41.

394. ஐங். 131.

395. ஐங். 132.

396. ஐங். 133.

397. ஐங். 134.

398. ஐங். 136.

399. ஐங். 137.

400. ஐங். 138.

401. குறு. 50, ஐங். 13, 18, 95, 184, 265.

402. குறு. 50.

403. ஐங். 13.

404. ஐங். 18.

405. ஐங். 95.

406. ஐங். 184.

407. ஐங். 265.

408. நற். 153, 314, குறு. 68.

409. நற் 314.

410. குறு. 68.

411. நற். 118, 302, குறு. 24, 155, ஐங். 341-350, 451, 452, 458, 460.

412. குறு. 24, 155, ஐங். 451, 452, 458, 460.

413. நற். 118, 302, ஐங். 341-350.

414. ஐங். 341-350.

415. ஐங். 451, 452, 458, 460.

416. நற் 118, 302, குறு. 24, 155.

417. தொல். பொருள். செய். 192.

418. நம்பி. 223.

419. நற். 54, 70, 102, 193, 196, 277, 343, 335, குறு. 87, 92, 107, 122, 163, 327, ஐங். 183, 312, அகம். 170, 398.

420. நற். 102, குறு. 87, 327, அகம். 398.

421. நற். 70, குறு. 107.

422. நற். 54, 196, 335, குறு. 92, 122, 163, ஐங். 183, அகம். 170.

423. நற். 193, 277, 343, ஐங். 312.

424. குறு. 163, 327, ஐங். 183.

425. நற். 70, 335.

426. நற் 54, 102, 196, 227, 343, குறு. 87, 92, 107, 122, ஐங். 312, அகம். 170, 398.

427. நற். 193.

428. குறு. 327.

429. குறு. 87.

430. அகம். 398.

# 4. தலைவன் கூற்று வழி உறவுகள்

| | |
|---|---|
| 4.0 | முன்னுரை |
| 4.1 | களவு நெறி |
| 4.1.1. | தலைவியிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு |
| 4.1.1.1 | புணர்ந்து நீங்கும் பொழுது |
| 4.1.1.2 | இரவுக்குறி மறுக்குமிடத்து |
| 4.1.1.3 | உடன்போக்கு - விளக்கம் |
| 4.1.1.3.1 | உடன்போகும் தலைவன் தலைவிக்கு உரைத்தல் |
| 4.1.1.3.2 | உடன்சென்று மீளும் தலைவன் தலைவிக்கு உரைத்தல் |
| 4.1.2 | தோழியிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு |
| 4.1.2.1 | தோழியின் பின்னின்ற இடத்து |
| 4.1.2.2 | மடலேறுதல் - விளக்கம் |
| 4.1.2.2.1 | மடல் வலித்த தலைவன் கூற்று |
| 4.1.3 | பாங்கனிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு |
| 4.1.3.1 | தலைவன் நிலை கண்டு பாங்கன் வினவுமிடத்து |
| 4.1.3.2 | கழறிய பாங்கனுக்கு எதிர் மறுத்து உரைக்குமிடத்து |
| 4.1.4 | தன் நெஞ்சிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு |
| 4.1.4.1 | நெஞ்சுக்கு நேர்நின்றுரைக்கும் கூற்றுகள் |
| 4.1.4.1.1 | பின் நின்ற தலைவன் நெஞ்சிற்குக் கூறல் |
| 4.1.4.1.2 | புணர நின்ற தலைவன் நெஞ்சிற்கு உரைத்தல் |
| 4.1.4.1.3 | புணர்ந்து நீங்கும் தலைவன் நெஞ்சிற்கு உரைத்தல் |
| 4.1.4.1.4 | அல்லகுறிப்பட்டு நீங்கும் தலைவன் நெஞ்சிடம் கூறல் |
| 4.1.4.1.5 | உடன்போகும் தலைவன் நெஞ்சிற்குக் கூறல் |
| 4.1.4.2 | தோழி கேட்பத் தன் நெஞ்சுக்கு உரைத்தல் |
| 4.2 | கற்பு நெறி |
| 4.2.1 | தலைவியிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு |

# 4. தலைவன் கூற்று வழி உறவுகள்

4.0 சங்க இலக்கியத்தில் மனித உறவு கொள்ளும் மாந்தர்களில் தலைவன் தலைமையாகக் கருதப்படுபவன் ஆவான். சங்க இலக்கியத் தலைவன் சான்றாண்மையாளன்; அஞ்சுவது அஞ்சும் பழிநீங்கிய அறிவு நலம் உடையவன் என்பதை அவ்விலக்கியங்களால் அறியமுடிகிறது.

தலைவனுக்குரிய தகுதியாகப் 'பெருமையும் உரனும் ஆடூஉ மேன'[1] எனக் கூறுகிறது தொல்காப்பியம். 'பெருமையாவது - பழியும் பாவமும் அஞ்சுதல். உரன் என்பது அறிவு. இவை இரண்டும் ஆண்மகனுக்கு இயல்பு என்றவாறு[2] என்கிறார் தொல்காப்பிய உரைகாரர்.

தலைவன் என்னும் சொல்லுக்குப் பொருளுரைக்கும் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழகராதி,

> ***"முதல்வன், அரசன், கணவன், குரு, மூத்தோன், சிறந்தோன், கடவுள், அகப்பொருட் கிழவன், (Hero of a love poem), கதாநாயகன்"*** [3]

எனப் பல்பொருள் தருகிறது.

கழகத் தமிழகராதி,

> ***"அண்ணன், அரசன், குரு, புருடன், மூத்தோன், எப்பொருட்கும் இறைவன்"*** [4]

எனப் பொருளுரைக்கிறது.

'தலைவன்' எனும் சொல்லுக்கு இத்தகைய பல்வேறு பொருட்கள் இருப்பினும் இவ்வாராய்ச்சியில் அக இலக்கியங்களுக்கு அகப்பொருட் கிழவன் என்னும் பொருளும் புற இலக்கியங்களுக்கு அரசன் என்னும் பொருளும் கையாளப்படுகின்றன.

ஒப்பாரும் மிக்காரும் இல்லாத சங்க இலக்கியத் தலைவனின் உறவு, தலைவி, தோழி, பாங்கன், தேர்ப்பாகன், கண்டோர், பாணன், தூதர் ஆகியோருடன் நிகழ்கின்றது. இவருடன் தலைவன் கொள்ளும் உறவு களவு, கற்பு ஆகிய இரு கூட்டத்தின்போதும் உண்டாகின்றது. மனித உறவுகள் மலர்வதற்கு அடித்தளம் அன்பு. இருப்பினும் அவ்வன்புப் பரிமாற்றத்திற்கு மனிதர்தம் வாய்மொழியாகிய கூற்றுகளே கருவியாக அமைகின்றன.

தலைவன் பிறரிடம் கொள்ளும் உறவுகள் அவன் நிகழ்த்தும் கூற்றுகள் வழி அறியப்படுகின்றன.

தலைவனது கூற்றுகள் களவில் தலைவி, தோழி, பாங்கன், தன் நெஞ்சு ஆகியோருடன் நிகழ்கின்றன; கற்பில் தலைவி, தோழி, தேர்ப்பாகன், கண்டோர், தூதர், பாணன், தன்நெஞ்சு ஆகியோருடன் நிகழ்கின்றன.

தலைவனின் இத்தகையக் கூற்றுகள் வழி, அவன் கொண்ட உறவுகள் இவ்வியலில் ஆராய்ச்சிக்கு உட்படுத்தப்படுகின்றன.

## 4.1 களவு நெறி

### 4.1.1. தலைவியிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

#### 4.1.1.1 புணர்ந்து நீங்கும் பொழுது

புணர்ந்து நீங்கும் தலைவன் தலைவிக்குக் கூறல் என்னும் துறையில் சங்க இலக்கியத்தில் நற்றிணையில் 2 பாடல்களும், குறுந்தொகையில் 3 பாடல்களும், ஐங்குறுநூற்றில் 2 பாடல்களும் என மொத்தம் 7 பாடல்கள் உள்ளன.[5]

திணை முறையில் குறிஞ்சித் திணையில் 4 பாடல்களும்,[6] நெய்தல் திணையில் 2 பாடல்களும்,[7] பாலைத் திணையில் ஒரு பாடலும்[8] என அமைந்துள்ளன.

நற்றிணையில் பராயனார், மருதன் இளநாகனார் ஆகியோர் முறையே ஒரு பாடலும், குறுந்தொகையில் செம்புலப் பெயனீரார், பாலை பாடிய பெருங்கடுங்கோ, சிறைக்குடி ஆந்தையார், ஆகியோர் முறையே ஒரு பாடலும் ஐங்குறுநூற்றில் அம்மூவனார், கபிலர் ஒரு பாடலும் பாடியுள்ளனர்.[9]

தலைவன் தலைவி மீது கொண்ட காதலால் இரண்டாம் கூட்டத்து எதிர்வில், ‘நின் கண்களும், தோள்களும் என்னை வருத்தின’ என்று கூறி அவள் விருப்பத்தை உரைக்குமாறு வேண்டுகிறான்.[10] மேலும் அவள் கடலின் பரப்பில் அமர்ந்து வாழும் அணங்கோ அன்றி பெரிய கழியின் பக்கத்தில் இருப்பவளோ என வினவ, அவளிடம் முறுவல் தோன்றிக் கண்களில் நீர்த்துளிகள் பரந்தன.[11] இங்குத் தலைவன் கூற்றுக்குத் தலைவியின் எதிர் உரை இல்லாமை குறிப்பிடத்தக்கது.

தலைவனின் இக்கூற்று,

> *“அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை*
> *மாதர்கொல் மாலும்என் நெஞ்சு”* [12]

எனும் ‘தகையணங்குறுத்தல்’ அதிகாரக் குறட்பாவை நினைவூட்டுகின்றது.

தலைவன் பிரிவானோ எனத் தலைவி வருந்துமிடத்துத் தலைவன், 'நின்னைப் பிரியேன்; வினைமேற்கொண்டு பிரியின் அங்ஙனம் செல்லுமிடத்தில் இரவலரைப் பெறாத துன்பத்தை யான் அடைவேன்'[13] எனத் தன்னையே பழித்துக் கொள்கிறான்.

தலைமகள் வேறுபாட்டைக் குறிப்பால் கண்ட தலைவன், 'என் தாயும் தந்தையும் நின் தாய் தந்தையரை முன்பறிந்த உறவினரல்லர்; யானும் நீயும் ஒருவரை ஒருவர் இதற்கு முன்னர் அறிந்தோமில்லை; ஆனாலும் செம்மண் நிலத்தில் பெய்த மழை போல அன்பு நிறைந்த நம் இருவர் நெஞ்சமும் இரண்டறக் கலந்தன' என்று தமக்கேற்பட்ட காதலுறவை நினைவூட்டுகின்றான்.[14] மேலும் கடல் சூழ்ந்த இவ்வுலகையே யான் பெற்றாலும் உன் காதல் உறவைக் கைவிடமாட்டேன்[15] எனத் தன் காதல் உறுதியை உரைக்கின்றான்.

இன்பம் தரும் தூய இரு மனத்தின் விருப்பம் அவர்தம் ஊழ்வினைப் பயனால் விளைந்தது என்பது தலைவன் கருத்தாக உள்ளதைக் காணமுடிகின்றது.

இக்கூற்றையே, தமிழர்தம் வாழ்வியல் இலக்கணம் வகுத்த தொல்காப்பியனாரும் உரைக்கின்றார்.

*''ஒன்றே வேறே என்றிரு பால்வயின்*
*ஒன்றி உயர்ந்த பால தாணையின்*
*ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப*
*மிக்கோ னாயினுங் கடிவரை இன்றே''* [16]

என்னும் தொல்காப்பிய நூற்பாவிற்கு உரை காணும் இளம்பூரணர்,

***''ஒன்றே வேறே என்றிரு பால்வயின் என்பது - ஒருவனும் ஒருத்தியுமாக இல்லறஞ் செய்துழி, அவ்விருவரையும் மறுபிறப்பினும் ஒன்றுவித்தலும் வேறாக்குதலுமாகிய இருவகை ஊழினும் என்றவாறு.***

***ஒன்றி உயர்ந்த பாலதாணையின் என்றது - இருவருள்ளமும் பிறப்புத் தோறும் ஒன்றி நல்வினைக்கண்ணே நிகழ்ந்த ஊழினது ஆணையின் என்றவாறு. உயர்ந்ததன் மேற்செல்லும் மனநிகழ்ச்சி உயர்ந்த பாலாயிற்று. காம நிகழ்ச்சியின் கண் ஒத்த அன்பினராய்க் கூடுதல் நல்வினையான் அல்லது வாராதென்பது கருத்து''*** [17]

என உரைக்கின்றார்.

புணர்ந்துடன் பகற்குறியில் வந்த தலைமகனைக் கண்புதைத்த தலைவியை அன்பு பாராட்டும் தலைவன், 'உன்னைத் தவிர என் நெஞ்சில் அமர்ந்த மங்கையர் எவரும் இலர்' என்று கூறித் தன் கற்பு நிலையை வெளிப்படுத்துகிறான்.[18]

### 4.1.1.2 இரவுக்குறி மறுக்குமிடத்து

இரவுக்குறி மறுக்கப்பட்டு ஆற்றானாய தலைமகன் சொல்லியது எனும் துறையில் நற்றிணையின் புலவர் பெயர் தெரியாத குறிஞ்சித்திணைப் பாடலில், தலைவி வழியின் ஏதம் கருதி இரவுக்குறி மறுக்கப்பட்டதாகக் காரணம் கூறுமிடத்து, 'மலைச்சாரலின் நீண்ட வழியில் நீ எம்மை விரும்பி வருதல் கூடாது' என்று புலம்பி அழுகின்றாய். ஆனால் உன் அழகிய நலத்தை நினைத்து யான் வந்தால், எமக்கு மலையடியிலுள்ள வழி, பாதுகாப்பாயிருக்கும். ஆகவே நீ அழுவதை விடுக'[19] என்று அவள் மீது கொண்ட காதல் உயர்வைக் கூறி அவளை ஆற்றுவிக்கிறான்.

### 4.1.1.3 உடன்போக்கு - விளக்கம்

தலைவன் தலைவியர் காதலுறவு பெற்றோர் ஒப்புதலுடன் திருமணமாக மலர வேண்டும். இன்றேல் இருவரும் உடன்போக்கு மேற்கொள்கின்றனர்.

உடன்போக்கு நிகழ்வதற்கான காரணங்களாக ஆராய்ச்சியாளர்கள் கூறும் பல்வேறு கருத்துகள் ஈண்டு நோக்கத்தக்கன.

> *''இற்செறிப்பு, ஊரலர், வெறியாட்டு, நொதுமலர் வரைவு என்ற இன்னாச் சூழ்நிலைகளைக் கடத்தற்கு இரண்டு வழிகள் உள. ஒன்று அறத்தொடு நிற்கை; ஏனையது உடன்போகுகை. இவற்றுள் ஒன்று நிகழின் மற்றொன்று நிகழாது. அறத்தொடு நின்ற பின் உடன்போகார். உடன்போய பின் அறத்தொடு நிற்பதாற் பயனில்லை. இரண்டில் ஒன்றே களவு நாடகத்தின் இறுதிக் காட்சியாகும்''* [20]

என்று வ.சுப.மாணிக்கம் கூறுகிறார்.

> *''நொதுமலர் வரைவு, தலைவியின் ஆற்றாமைப் பெருக்கம், அம்பலும் அலரும் களவை வெளிப்படுத்திவிடும் என்ற மகளிரின் அச்சம், ஊரவரின் அலர் மிகுதியைப் பொறுக்க இயலாமை, தலைவன் வரைவிடை வைத்த பிரிவால் பிரிவானோ என்ற தலைவியின் அச்சம், சிறுகோல் கொண்டு அலைக்கும் தாயின் காவல் மிகுதி, களவு கற்பாக மாறவிரும்பும் பெண்மையின் விருப்பம். அன்னையிடம் தோழி அறத்தொடு நிற்கும் சூழல் வாய்க்காத நிலை ஆகியவற்றை உடன்போக்கின் காரணங்களாகக் கொள்ளலாம்''* [21]

என்கிறார் சரளா இராசகோபாலன் அவர்கள்.

*"களவு வாழ்வில் தோன்றும் அன்னை பற்றிய அச்சமும், அலர்ப் பெருக்கமும் உடன்போக்கை ஊக்குவிக்கும் களங்கள்"* [22]

என்று ஆ. இராமகிருட்டினன் கூறுகிறார்.

தனிமனித ஆசைகள் வேகப்படும்பொழுது ஏற்படும் உள்ளத் துணிவுகள் பற்றி உளவியலார் கூறும் கருத்துகளும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கன.

*"ஈடுபாடு மிகுதிப்படுத்தப்படும் பொழுது மனித உள்ளம், தான் அடைந்து வந்த நன்மைகள் எல்லாவற்றையும் புறந்தள்ளித் தடைகளைத் தாண்டுவதற்கு வியப்படையத் தக்க விரைவுடன் செயலாற்றத் தொடங்குகிறது"* [23]

என்கிறார் ஆர்தர் சோபனார்.

*"மூத்தோர்தம் அறிவுரைப்படி நடப்பதைக் காட்டிலும் ஏற்படும் இடையூறு களை எதிர்நோக்குதலில் காதலர்களுக்கு இன்பம் உண்டாகிறது"* [24]

என்கிறார் ஹோலிங்வொர்த்.

*"பிறப்பினால் கட்டுப்பாடில்லாமல் இருந்த மனிதன் சமுதாயத்தில் உள்ளபோது ஒவ்வொரு திருப்பு முனைகளிலும் கட்டுப்பாடுகளை உணர்கிறான். சமுதாயம் தன் கட்டமைப்பை எண்ணிச் சில கட்டுப்பாடுகளையும் மரபுகளையும் கடமைகளையும் சுமக்கிறது"* [25]

என்கிறார் கிறிஸ்டோபர் கால்டுவெல்.

*"இன்ப விருப்பம் இளமைப்பருவத்தில் அடிப்படைப் பண்பாக உள்ளது. மகிழ்ச்சியாக இருப்பதற்கு இளைஞர்கள் விரும்புகின்றனர். அம்மகிழ்ச்சி நிலை பெற்றிருக்கவும் விருப்பம் கொண்டுள்ளனர். அதன் பொருட்டு உடன்பாடு, எதிர்மறை ஆகிய இரண்டு அணுகு முறைகளால் அதில் ஈடுபடுகின்றனர். துன்பத்தை நீக்கி, இன்பத்தை அதிகப்படுத்துதல் என்ற இருபக்க முயற்சிகளையும் மேற்கொள்கின்றனர்"* [26]

என்று சிக்மன்ட்பிராய்ட் கூறுகிறார்.

### *4.1.1.3.1 உடன்போகும் தலைவன் தலைவிக்கு உரைத்தல்*

உடன்போகும் தலைவன் தலைவிக்கு உரைத்தல் என்னும் துறையில் நற்றிணையில் 5 பாடல்களும், ஐங்குறுநூறு, அகநானூறு ஆகியவற்றில் முறையே 2 பாடல்களும் என 9 பாடல்கள்[27] காணப்படுகின்றன.

அந்த 9 பாடல்களும் பாலைத் திணையிலேயே உள்ளன.[28]

பாலை பாடிய பெருங்கடுங்கோ 3 பாடல்களும்,[29] ஓதலாந்தையார் 2 பாடல்களும்,[30] அம்மூவனார், ஆவூர்க் காவிதிகள் சாதேவனார், மதுரை மருதன் இளநாகனார், உறையூர் மருத்துவன் தாமோதரனார் ஆகியோர் முறையே ஒரு பாடலும்[31] பாடியுள்ளனர்.

உடன்போக்கின் வழியில், 'நிழலில் தங்கி இளைப்பாறியும், மணலில் வீடு கட்டி விளையாடியும்,[32] அஞ்சும் வழியில் அஞ்சாமலும் வருத்தம் நீங்கி வருமாறும்[33] தலைவன் தலைவியிடம் கூறுகின்றான்.

மணந்து இல்லறம் நடத்திப் புதல்வனைப் பெற்று இருவரையும் பாதுகாப்பேன்[34] எனவும் நம்பிக்கையூட்டுகிறான். வெயில் இல்லாமல் காற்று வீசுகின்ற நேரத்திலேயே விரைந்து செல்வாயாக எனவும்,[35] தம்பலப் பூச்சிகளைப் பிடித்து விளையாடிப் பின்னர் வருக எனவும் ஆறுதல் கூறுகிறான்.

*"அமர்வரின் அஞ்சேன், பெயர்க்குவென்*
*நுமர்வரின் மறைகுவென் மாஅயோளே"* [36]

எனும் தலைவன் கூற்று, தலைவியின் சுற்றத்தாரை எதிர்க்க எண்ணாமல் இணங்கிப் போக எண்ணுகின்ற, தலைவி குடும்பத்தின் மீதான அன்புறவை வெளிப்படுத்துகின்றது.

வேனிற் காலத்தில் பாலை வழியில் தன் அடி சிவப்பத் தன்னுடன் உடன்போக்கு வந்த தலைவியின் வலிமையைப் போற்றுவதுடன் அவளை வியந்து பலவாறு நலம் பாராட்டிச் செல்கிறான்.[37]

### *4.1.1.3.2 உடன்சென்று மீளும் தலைவன் தலைவிக்கு உரைத்தல்*

உடன்சென்று மீளும் தலைவன் தலைவிக்கு உரைத்தல் என்னும் துறையில் ஐங்குறுநூற்றில் ஓதலாந்தையார் பாலைத் திணையில் பாடிய பாடல்கள் 2 மட்டும் உள்ளன.[38]

தலைவன், கொடிய காட்டினின்றும் நாட்டிற்கு மீண்டதால் அச்சமின்றி நடந்து செல்ல வேண்டுமெனத் தலைவிக்கு அறிவுறுத்துகிறான்.[39] மேலும் தலைவிக்கு நடந்த களைப்பு நீங்க, 'தாம் மீள்வதற்கு முன்னர் மணந்து கொண்டதை அவளுக்கு நினைவூட்டும் வகையில் நாம் பகல்பொழுதில் விருந்தினராய்ச் செல்வோம் என்றும் மகிழ்ச்சியூட்டுகிறான்.[40]

இக்கூற்றுகள் வழி, தலைவன் தலைவியை நேரிடையாகச் சந்தித்துப் பேசும்போது அன்புப் பிணைப்பால் இன்ப உணர்வு மேலிட மகிழ்ந்திருப்பது தெரிகிறது.

உடன்போக்கில், பெற்றோர், சுற்றம் இவர்களை விட்டுத் தனித்துத் தன்னை நம்பிவரும் தலைவிக்குத் 'தானே எல்லாம்' என்று உணர்ந்து பாதுகாப்பது அவனது அன்புணர்வை வெளிப்படுத்துகிறது.

சங்க இலக்கியப் பாலைப் பாடல்களில் நில வருணனை மிகக் கொடுமையாகக் காட்டப்பட்டிருக்கிறது. ஆனால் பாலைத் திணையில் அமைந்துள்ள உடன்போக்கு துறைப் பாடல்கள் இயற்கை வளமும், விலங்கு, பறவை ஆகிய இவைகளின் அன்புக் காட்சிகளையும் கொண்டதாக அமைந்துள்ளன. இவற்றை உற்று நோக்கு மிடத்து நில வருணனையை விடத் தலைவன் தலைவியரின் அன்புறவால் ஏற்பட்ட காதலை வெளிப்படுத்துவதே புலவர்தம் நோக்கமெனக் கொள்ளலாம். மேலும் உளவியல் அடிப்படையில் தலைவன் தலைவியை, தாம் செல்லும் வழியினது கொடுமையிலிருந்தும், தனித்த புதிய உறவின் அச்சத்தினின்றும் ஆற்றுவித்தற் பொருட்டெனக் கொள்ளலாம்.

### 4.1.2 தோழியிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

#### 4.1.2.1 தோழியின் பின்னின்ற இடத்து

பின் நின்ற தலைவன் தோழிக்கு உரைத்தது என்னும் துறையில் நற்றிணையில் 6 பாடல்களும், குறுந்தொகையில் 5 பாடல்களும், ஐங்குறுநூற்றில் 4 பாடல்களும் என மொத்தம் 15 பாடல்கள்[41] உள்ளன.

திணைமுறையில் 10 பாடல்கள்[42] குறிஞ்சித் திணையிலும், 5 பாடல்கள்[43] நெய்தல் திணையிலும் வந்துள்ளன.

அம்மூவனார் 3 பாடல்களும்[44], மாமூலனார், வெள்ளியந்தின்னனார், கந்தரத்தனார், கச்சிப்பேட்டுப் பெருந்தச்சனார், மிளை கிழான் நல்வேட்டனார், மடல்பாடிய மாதங்கீரனார், பேரெயின் முறுவலார், அள்ளூர் நன்முல்லையார், மதுரைக் காஞ்சிப் புலவன், எயிற்றியனார், பொதுக் கயத்துக் கீரந்தை, கபிலர் ஆகிய 12 புலவர்களும்[45] முறையே ஒரு பாடலும் பாடியுள்ளனர்.

இவற்றுள் 4 பாடல்கள் 'மடலேறுதலை' மையப்படுத்தித் தோழியிடம் தலைவன் உரைக்கின்றான். எனவே இப்பாடல்கள் மடல் வலித்த தலைவன் கூற்று என்னும் துறையில் ஆராயப்படுகின்றன.

தோழியால் சேட்படுக்கப் பெற்று ஆற்றாத தலைவன், தான் தலைவி மீது கொண்ட காதல் குறித்துத் தோழி நகையாடியதைக் கண்டு, 'அவள் செயல், பாம்பு-உயிர்களை

அச்சுறுத்துவது போன்றதென்றும், தன் துன்பம் நீங்குமாறு நகைக்காமல் தலைவி தனக்குக் கிடைப்பதற்கான வழிவகை செய்யுமாறும் வேண்டுகிறான்''[46]

மேலும், 'கொல்லிப் பாவை போன்ற தலைவி என்னைக் கொலை செய்வது போன்ற துன்பம் செய்வதாக நான் உணர்கிறேன்; என் காமம் கைமிகுந்து யான் படும் துன்பத்தைக் கண்டும் எனக்கு அருள் செய்யவில்லையாயின் நான் துன்பப்பட வேண்டியதுதான்[47] எனத் தனக்குத் தோழியைத் தவிர உதவிட வேறு எவருமில்லை என்பதைத் தலைவன் உணர்த்துகிறான்.

தலைவன் தன் துன்பத்திற்குக் காரணமாய், 'பரதர் மகளைக் காணாத முன்பு வருத்தம் இல்லாமல் இருந்தேன்; ஆனால் இப்பொழுது பெருந்துன்பம் அடைகிறேன்'[48] என்று தன் உள்ளத்தை வெளிப்படுத்துகின்றான். மேலும், 'என் பண்பையும் உறக்கத்தையும் நின் தோழி கவர்ந்து கொண்டு என்னிடம் அவை இல்லாதவை ஆக்கினாள்; அதற்கு யான் செய்த தவறு என்ன?[49] என்று வினவுகிறான். யான் அவளையே எண்ணி ஒருபோதும் மறந்ததில்லை எனத் தன்னுள்ளத்தைத் தலைவிக்குக் காட்டுமாறு கூறுகின்றான்.[50]

தோழியின் அருள் தனக்குக் கிட்டவில்லையாயின், தன்னால் விரும்பப்பட்ட தலைவியின் தோளும் கூந்தலும் பாராட்டி வாழும் இல்வாழ்க்கைத் தனக்கு அமையாது எனக் கூறும் தலைவன் அத்தோழியின் உதவியால் தன் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ள விழைகின்றான்.[51]

இவ்வாறெல்லாம் தலைவன் வேண்டியும் குறை முடிக்காத தோழியைப் 'போரில் பெரும் புண்பட்டுக் கிடந்தாரைப் பேய் காத்தது போல இவள் செயல் இருக்கிறது. இவள் பின் வெறுப்பின்றித் திரிவதால் நம் காதலி என்ன நினைப்பாளோ' என்று வருத்தமடைகிறான்.[52]

### 4.1.2.2 மடலேறுதல் - விளக்கம்

தன் காதல் நிறைவேறாத நிலையில் தலைவன் ஊரார்க்கும் தலைவியின் பெற்றோர்க்கும் தன் காதலை உணர்த்தும் எண்ணத்துடன் தான் விரும்பும் தலைவியின் அழகிய வடிவைக் கிழியில் எழுதிக் கூரிய பனங்கருக்கு மடல்களால் அமைந்த தேரில் அக்கிழியைப் பொருத்தித் தலைவியின் தெருவழியே ஊர்ந்து வருவான். இது மடலூர்தல் அல்லது மடலேறுதல் எனப்படும்.

மடலேறுதல் குறித்த ஆய்வறிஞர் கூற்றுகள், ஈண்டு கருதத்தக்கன.

மடல் குறித்துத் தலைவன் இரு சூழ்நிலைகளில் பேசுகிறான். அவையாவன:

*1. ''களவின் தொடக்கத்தில் பின் நின்ற தலைவனுக்குத் தோழியால் குறை மறுக்கப்படும்போதும். 2. களவின் முடிவில் தலைவனுக்குத் தமரால் வரைவு மறுக்கப்படும்போதும்.*

*முன்னதில் மடல் பெரிதும் கூற்றளவில் காணப்படுகிறது. பின்னதில் அது செயல் வடிவம் கொள்கிறது.*

*பின்னின்ற தலைவன் குறைநேராது தயங்கி நிற்கும் தோழியின் தயக்கத்தை, அவள் அணுக இயலும் அண்மையில் இருத்தலால் தீர்க்க இயலும் என நம்பிக்கை கொள்கிறான். ஆதலின் கூற்றளவில் நிறுத்திக் கொள்கிறான். முழுநம்பிக்கையும் இழந்த நிலையில் மடல் ஏறத் துணியும் தலைவன், தன்வேண்டுதல் நிறைவேறின் மடல் ஏறாது ஒழிதலையும் தோழி கேட்ப மொழிகிறான்.*

*வரைய முனையும் தலைவன், பெண்தரத் தயங்கி நிற்கும் தமரின் தயக்கத்தை அணுகித் தீர்க்க வாய்ப்பில்லை. ஆதலின் அவனுக்கு நம்பிக்கை தோன்றவும் வாய்ப்பில்லை. மடல் ஏறுவேன் என்னும் அச்சுறுத்தல், இங்குச் செயல் வடிவம் கொள்ளுதற்கு இது காரணம் ஆகலாம்''* [53]

என்று கூறுகிறார் ஆ. இராமகிருட்டினன்.

*''தலைவன் தலைவிபால் கொண்ட அன்பினை வெளியிட முயல்வது''* [54]

என்று அ.ச.ஞானசம்பந்தமும்,

*''தலைவி தலைவன் மேல் காதல் உடையவள், காதலித்து நிற்பவள் என்ற அன்பின் அடிப்படையிற்றான் மடற்கூற்று நிகழ்வது''* [55]

என்று வ.சுப.மாணிக்கமும்,

*''தன் காதலின் உறுதிப்பாட்டைத் தலைவியின் பெற்றோர்க்கு உணர்த்தித் தான் வரைந்து கொள்வதற்கான இசைவினைப் பெறுவது''* [56]

என்று கே.கே.பிள்ளையும் தலைவன் மடல் ஏறுவதற்குரிய நோக்கமாகக் கூறுகின்றனர்.

*''பெண்ணைப் பெற்றோர்க்குச் சமுதாயச் சிக்கல் ஒன்றை உருவாக்கி ஆணொருவன் தான் விரும்புகின்ற பெண்ணை மணந்து கொள்வது அன்பும்*

*அறனும் ஆகாது. இப்படி மடலூர்ந்து தான் விரும்பிய ஒருத்தியை ஒருவன் பெறுவது பகைவர்கள் வென்ற மன்னனுக்கு அஞ்சித் திறை கொடுத்தது போல ஆகும் (நெய்தற் கலிப்பாடல் 24) இதனால் அகத்தெழுகின்ற அன்பின் காரணமாக அமைய வேண்டிய அகத்திணை வாழ்வு, புறத்தே உண்டாக்குகின்ற சமுதாய நெருக்கடிகளுக்கு ஆளாகின்ற மாற்றத்தைக் காண முயல்கின்றது"* [57]

என்று பொன். சௌரிராஜன் கூறுகிறார்.

### *4.1.2.2.1 மடல் வலித்த தலைவன் கூற்று*

மடல் வலித்த தலைவன் கூறல் என்னும் துறையில் நற்றிணையில் ஒரு பாடலும், குறுந்தொகையில் 2 பாடல்களும், கலித்தொகையில் 3 பாடல்களும் என 6 பாடல்கள்[58] உள்ளன.

திணைமுறையில் குறிஞ்சித் திணையில் 2 பாடல்களும்,[59] நெய்தல் திணையில் 4 பாடல்களும்,[60] அமைந்துள்ளன.

நல்லந்துவன் 3 பாடல்களும்,[61] ஆலம்பேரி சாத்தனார், தொல்கபிலர், கோழிக் கொற்றன்[62] ஆகியோர் முறையே ஒரு பாடலும் பாடியுள்ளனர்.

குறை நிறைவேறாத நிலையில், மடலேறத் துணிந்து முன்னிலைப் புறமொழியாகத் தோழி கேட்பத் தலைவன் பற்பல கூறுகிறான். மடல்மா ஊர்ந்த தலைவன் தோழியின் முன்னிலையில் வேறொருவனுடன் பேசுவது போல் தோழி கேட்ப, 'யான் எவ்வாறு ஆவேனோ? யான் இரங்கத் தக்கவன்' [63] எனத் தனக்குத்தானே இரக்கங் கொள்கிறான். தலைவன் தன் நாணத்தைவிட்டு மடலூர்ந்தாகிலும் தலைவியை அடைந்தே தீர வேண்டும் என மனஉறுதி கொள்ளும் நிலையையும் காணமுடிகின்றது.[64]

தன்னுடன் தலைவியைத் தோழி இணைத்து வைக்காவிடினும் மடலூர்ந்தாவது தலைவியைத் தான் பெறும் எண்ணத்தைத் தலைவன் தோழிக்குக் குறிப்பால் உணர்த்துகிறான்.[65] மடலேறினால் தம் காதலை ஊரார்க்குப் புலப்படுத்துவதன் வாயிலாகத் தலைவியையும் காட்டிக் கொடுத்ததாக அமையும். இருப்பினும் தலைவன் தலைவியைக் காட்டிக் கொடுக்க விரும்பாதவனாகவும் விளங்குகிறான். ஆனால் அவளைப் பிரிந்து

வாழ முடியாத பெருங்காதல் நிலையும் அவன் அடைந்துள்ளான்[66] என்பதும் குறிப்பிடத்தக்கது.

தோழியிடம் குறையிரக்கும் தலைவன், 'நீ என் குறையைத் தீர்க்காவிட்டால் நான் இனி மடலேறி அவளைப் பெறுவேன்'[67] என அச்சுறுத்தவும் செய்கிறான். மேலும் தான் தலைவியின் பொருட்டு மடலேறி அறங்கூறும் அவையத்துச் சான்றோர்தம் துணைக்கொண்டு மணந்து கொள்ளவும் விரும்புகிறான்.[68]

தலைவியை இற்செறிப்புச் செய்ய சேட்படுக்கப் பெற்றவனாகிய தலைவன் மடலூர்ந்து தன் காதலை உலகறியப் பண்ண விரும்புகிறான். பின்னர் அவ்வெண்ணத்தை விலக்குகிறான். ஆனால் அவள் மீது கொண்ட காதல் எண்ணத்தையே தனக்கு நோயாகக் கொண்டு தான் இறந்து போகலாம்[69] என்றும் முடிவு செய்கின்றான்.

'மடலேறுதல்' பெருந்திணைக்கு உரியது என்பதை 'ஏறிய மடல் திறம்' எனும் தொல்காப்பியக் கூற்றால் உணரலாம்.[70] கைக்கிளையிலும் ஐந்திணையிலும் மடலூர்தல் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

தலைவனுக்கு மடன்மா ஏற விருப்பம் உண்டெனினும் தலைவியின் பெயருக்குக் களங்கம் நிகழாதிருக்க மடலூரேன் எனக் கூறுவது முன்னர் ஆராயப் பெற்றது. இருப்பினும் தன் காதல் கைகூடும் பொருட்டுத் தலைவன் 'மடன்மா கூறும் இடனு மாருண்டே' எனும் தொல்காப்பியர் கூற்றுப்படித் தலைவியைப் பெறத்தான் மடலேறுவேன்[71] என்று கூறுவது உண்டு. ஆனால் ஊர்வது இல்லை என்பது தமிழர்தம் காதல் நாகரிகம் என்பதை அறிய முடிகின்றது.

ஆனால் கலித்தொகையில் மட்டும் தான் விரும்பியவளைப் பெறுதற் பொருட்டு மடலேற முயலும் தலைவன் சான்றோர்க்குக் கூறியது எனும் துறையும், கண்டோர்க்குக் கூறியது எனும் துறையும் இடம் பெற்றுள்ளன.

மடல்மா ஊர்ந்து செல்லும் தலைவன், அங்குள்ள சான்றோரிடம் காமம் என்னும் கொடிய பகையால் ஆண்மை அழிந்த தனக்கு இம்மடல்மா பிழைக்கும் வழியாயிற்று; நெருப்பாகிய காமநோய்க்கு நிழலாக மடல்மா உதவுகிறது. இத்தகையத் தன் வருத்தத்தைச் சான்றோர் அறிவாராயின் அத்துன்பத்தை நீக்குதலே அச்சான்றோர்க்குரிய கடமை என்கிறான்.[72]

மேலும் கண்டோரிடம் கூறும் தலைவன், 'தலைவி உண்டாக்கிய நோயை அறிந்தும் இவ்வூரார் அதைத் தீர்க்கக் கருணை காட்டவும் அறியவில்லையே; என் நோயைக் கூறிய எனக்கு அது நீங்குமாறு அருள்புரிவீராயின் அது உங்கட்கு அறமும் புகழும் ஆகும் என்கிறான்.[73]

கலித்தொகையில் வரும் மற்றொரு துறைத் தலைவன் மடலேறித் தலைவியை அடைந்தமை தெரிகிறது. மடலூர்ந்து தலைவியை எய்திய தலைவன் மடலூர்ந்தவாறும் அவளை எய்தியவாறும் தனக்குப் பாங்காயினார்க்குக் கூறியது எனும் அத்துறைப்பாடல் இங்குக் கருதத்தக்கது. மடலூர்ந்த தலைவன் தன்னுயிர், தலைவியின் நினைவாய்த் தேய்வதைப் பலவாறு பாட அதைக் கேட்ட தலைவி அவன் பொருட்டு இரங்கி இன்பம் அடையுமாறு செய்ததாகத் தன் பாங்கரிடம் உரைக்கின்றான்.[74]

அன்பின் ஐந்திணைக் களவொழுக்கத்தில் தலைவியைக் கூடிப் பெறாத தலைவன் அவளைப் பெறும் பொருட்டு மடல் ஊர்வேன் எனக் கூறுதலோடு அமையாது 'மடலூர்ந்தும்' தலைவியைப் பெற்றதாகக் கூறும் கலித்தொகைப் பாடற்கூற்று மேற்கண்ட தொல்காப்பியர் கூற்றுடன் பொருந்தாமையைக் காணலாம்.

தலைவன் கூற்றுவழி தலைவியோடு வளரும் தன் காதல் உறவு நிறைவுறத் தோழியை மட்டுமே நாடுகிறான். களவில் தலைவன் தன்னை வருத்தும் தலைவியை அடையத் தனக்கு வாயிலாகவும், உற்ற துணையாகவும் விளங்குபவள் தோழியே என்று கருதுகிறான். எனவே அவளிடம், தன் விருப்பை நிறைவேற்றிக் கொள்ளப் பல வழிகளைக் கையாண்டு உதவி புரிந்திடுமாறு வேண்டுகிறான்.

தலைவன் தன் காதல் நிறைவுறத் தோழியை நாடக் காரணம்,

1. தனக்குத் தன் பாங்கன், தோழி போல உதவிட முடியாது. ஏனெனில் அவன் ஓர் ஆடவன். தமிழ்ப் பண்பாட்டின் அடிப்படையில் முன்பின் அறிமுகமில்லாத ஆடவனும் பெண்ணும் நேராகப் பார்த்தோ, பேசுவதோ கிடையாது. எனவே பாங்கன் தலைவனையும் தலைவியையும் கூட்டுவிக்க இயலாது.

2. ஒத்த வயதினர் தம் உளப்பாங்கினை ஒளிவு மறைவின்றிப் பகிர்ந்து கொள்வர் என்பது உலகியல். எனவே தலைவி தன் உளக்கருத்தைத் தோழிக்குக் கூறுவதுடன்

தன் காதல் நிறைவேற அவளையே துணையாக நாடுபவள். அதனால்தான் தலைவன் தோழியை நாடுகிறான்.

3. தோழியைத் தலைவிக்கு ஒப்பாகக் கருதுவதால், தன் உளக் கருத்தைத் தலைவியிடம் நேரடியாகக் கூறாது தோழி மூலம் தன் காதல் எண்ணம் நிறைவேறற் பொருட்டு வேண்டியும், இரங்கியும் மடலேறுவேன் என அச்சுறுத்தியும் கேட்கிறான்.'

### 4.1.3 பாங்கனிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

தலைவிக்குத் தோழி உற்றுழி உதவிசெய்து அவள் காதல் உறவுக்குத் துணை நிற்கும் அளவு தலைவனுக்குப் பாங்கன் உதவியாக விளங்குவான் அல்லன். தலைவியுடன் தோழி நேரிட்டுத் தலைவனுக்கு உறுதுணை ஆவாள். ஆனால் பாங்கன் தலைவியை நேர்கொண்டு பேசுதல் இன்றி மறைமுகமான நிலையிலேயே தலைவனுக்கு உதவுகின்றான். இதையே,

> *''தோழியிற் கூட்டம் போலப் பாங்கன் உரையாடி இடைநின்று கூட்டாமையிற் பாங்கற் கூட்டம் என்றதனைத் தலைமகன் பாங்கனைக் கூடும் கூட்டமென்று கொள்க''* [75]

என நச்சினார்க்கினியர் உரைக்கின்றார். பேராசிரியரும்,

> *''தன்வயிற் பாங்கன் அவள்வயிற் பாங்கு செய்யானாகலின், அதன் பின்னர்த் தோழியாற் குறைமுடித்துக் கோடலுமென இந்நான்கும் முறையான் நிகழும் களவொழுக்கம்''* [76]

என்று களவொழுக்கில் தோழியாலன்றிப் பாங்கனால் தலைவனின் குறைமுடித்தல் இயலாது எனச் சுட்டுகின்றார்.

இதுபற்றிக் கூறும் வ.சுப.மாணிக்கம்,

> *''தலைவியாவாளைப் பாங்கன் நேர்நின்று காணலும், முன்னின்று மொழிதலும் தமிழ் அகத்திணைக்கு ஒவ்வா; தமிழகம் பெற்ற மகளிர் நாணத்துக்கு ஏலா. ஈண்டு பாங்கன் தலைவியைத் தான்* [illegible]

*அவளால் காணப்படான். தலைவி பாங்கன் தன் பக்கமாய்ச் செல்வதைக் கண்டாலுங்கூட, அவனை ஒரு வழிப்போக்கன் எனவே கருதிவிடுவாள். தன்னைப் பார்த்து வரத் தலைவன் விடுத்த தோழன் என எண்ணாள். ஏன்? தலைவனது தோழர்கள் யார் என்பது பற்றி அவளுக்குத் தெரியாது''* [77]

என விளக்கம் தருகிறார்.

### 4.1.3.1 தலைவன் நிலை கண்டு பாங்கன் வினவுமிடத்து

தலைவனது தோற்றம் கண்டும், உறங்காமை கண்டும், பாங்கன் நுமக்கு என்னவாயிற்று என்று வினவிய இடத்து தலைவன் இன்ன இடத்து இத்தன்மை ஆயிற்று என்று கூறும் துறையில், நற்றிணையில் ஒரு பாடலும், குறுந்தொகையில் 8 பாடல்களும், ஐங்குறுநூற்றில் 3 பாடல்களும், அகநானூற்றில் முறையே 2 பாடல்களும் என 14 பாடல்கள்[78] உள்ளன. திணைமுறையில் குறிஞ்சித் திணையில் 10 பாடல்களும்,[79] நெய்தல் திணையில் 4 பாடல்களும்,[80] உள்ளன.

கபிலரும், அம்மூவனாரும் முறையே 4 பாடல்களும்,[81] கோட்டம்பலவனார், மன்னனார், சத்திநாதனார், கோப்பெருஞ்சோழன், மீளைப் பெருங்கந்தன், எயிற்றியனார் ஆகியோர்[82] முறையே ஒரு பாடலும் பாடியுள்ளனர்.

தலைவன் தன் நிலை கண்டு வினவிய பாங்கனிடத்து 'ஒரு பெண்ணின் சிறிய நெற்றியானது புதிதாகப் பிணிக்கப்பட்ட யானையைப் போல் எம்மைப் பிணித்தது'[83] என்றும், பூவினை ஒத்த கண்கள் அம்புகளைப் போல எனக்குத் துன்பத்தை உண்டாக்கின[84] என்றும், தொடி அணிந்த பெண் என் நெஞ்சைக் கவர்ந்து கொண்டமையால் இரவில் உறக்கம் இல்லை[85] என்றும், ஓர் இளைய மகள் என்னைத் தன் அழகினால் வருத்தினாள்[86] என்றும், சீறூரில் வாழ்பவளாகிய கொடிச்சியால் பிணிக்கப்பட்ட என் நெஞ்சு அவள் கையில் உள்ளதால் அதனைப் பிறர் எவரும் விடுவிக்க இயலாது[87] என்றும், குறவர் மகளின் நீர்போன்ற மென்மை தீப்போன்ற என் வலிமையை அழித்தது[88] என்றும் தன் வருத்தத்திற்கான காரணத்தைக் கூறுகிறான்.

மேலும் குரைக்கும் நாய்க்கு அஞ்சிய உப்பு வணிகர் மகளின் அஞ்சிய கண்களால் எனக்கு நோய் உண்டானது[89] என்றும், உப்பின் விலையை உரைத்தவளிடம் அவள் உடல் இன்பத்தின் விலை யாதெனக் கேட்ட என்னை 'நீர் யார்?' எனக் கூறிச் சென்றவள் பொருட்டு என் நெஞ்சம் துன்புறுகிறது[90] எனறும், தலைவன் தலைவியிடம் உறவு கொள்ளத் துடிக்கும் தன் நெஞ்சத்தியல்பை எடுத்துரைக்கிறான். தலைவியது எழில் நலம் பாராட்டி, அத்தகையவளைக் கண்டால் நீ கடிய மாட்டாய்[91] என்றுரைக்கிறான். தன்

மனங்கவர்ந்த தலைவி தன்னால் காண்பதற்கும்,[92] சூரர மகளிர் போல் பெறுவதற்கும் அரியவள்[93] என அவளது அருமையை உரைக்கிறான்.

காமநோயுறல் தகாது என்ற பாங்கனிடத்து, அடங்கி இருக்கும் யானையின் மதம் அதிமதுரத் தழை உண்டபோது வெளிப்படுவது போல ஊழ்வலியால் காண்பதற்குரியாரைக் கண்டுவிட்டால் உள்ளத்துள் அடங்கி இருக்கும் காமம் வெளிப்படும்[94] எனத் தலைவன் தன் காதல் உறவுக்கான காரணம் பகர்கிறான்.

### 4.1.3.2 கழறிய பாங்கனுக்கு எதிர் மறுத்து உரைக்குமிடத்து

இத்துறையில், நற்றிணையில் 2 பாடல்களும், குறுந்தொகையில் 7 பாடல்களும், அகநானூற்றில் ஒரு பாடலும் என 10 பாடல்கள் உள்ளன.[95] திணைமுறையில் குறிஞ்சித் திணையில் 8 பாடல்களும்,[96] நெய்தல் திணையில் 2 பாடல்களும்,[97] வந்துள்ளன.

பரணர், வெள்ளிவீதியார், சிறைக்குடி ஆந்தையார், பாண்டியன் ஏனாதி நெடுங்கண்ணன், ஆரிய அரசன் யாழ்ப்பிர மதத்தன், ஐயூர் முடவன், ஒருசிறைப் பெரியன், நக்கீரர், வெண்கண்ணனார், ஆகிய 9 புலவர்கள்[98] முறையே ஒருபாடலும், பெயர் தெரியாத புலவர் ஒருவர் ஒருபாடலும்[99] பாடியுள்ளனர்.

தலைவன் தன் நெஞ்சம் ஒரு பெண்ணால் பறிபோனதெனக் கூறித் துன்புற்றதைக் கண்ட பாங்கன் அவனைக் கழறினான். அதைக் கேட்ட தலைவன் அதற்கு எதிர் மறுப்பவனாய்,

> *"நயனும் நண்பும் நாணு நன்கு உடைமையும்*
> *பயனும் பண்பும் பாடு அறிந்து ஒழுகலும்*
> *நும்மினும் அறிகுவென் மன்னே*
> *.............................................. இவள்*
> *அரிமதர் மழைக்கண் காணா ஊங்கே"* [100]

என்று கூறுவதுடன் நீங்களும் அவ்விடம் சென்றால் அக்கண் வலையில் அகப்படுவீர்[101] அன்றி இவ்வாறு கூறமாட்டீர்.[102] இத்தகு தலைவி மறத்தற்கரிய இயல்புடன்[103] பெறுதற்கரியவள்[104] என்கிறான்.

மேலும் இனிமை உடையவளது இனிமையான குணங்களும் காமத்தின் தொடர்பு காரணமாக இன்மை செய்யுமாயின் அக்காமம் தாங்குதற்கு அரியது என்கிறான்.[105]

தலைவனுக்குத் துன்பம் தருகின்ற அக்குறவர் மகளை நினைக்கக்கூடாது என்று பாங்கன் கூறுமிடத்து, தன் நெஞ்சில் புகுந்த கொல்லிப் பாவை போன்றவள் என் நெஞ்சிலிருந்து நீங்காதவளாய் இருக்கிறாள்; யான் யாது செய்வேன்[106] என வருந்துகிறான்.

தன் காமநோயின் கொடுமை கூறுமிடத்து, சூரிய வெப்பமுடைய பாறையில் கையிழந்த ஊமையன் தன் கண்ணாலே பாதுகாக்க முயலும் வெண்ணெய் உருகிப் பரந்தாற்போலக் காமநோய் என்னிடம் பரவியுள்ளது. அதை நீ தடுத்து நிறுத்தினால் நல்லது. அந்நோயைப் பொறுத்துக் கொள்ளுதல் எனக்கு அரிய செயலாகும்[107] என மறுக்கிறான்.

பார்ப்பன பாங்கனிடம், 'வேதம் அறிந்த நின் அறிவுரைகளுள் பிரிந்த தலைவன் தலைவியரைப் புணர வைக்கும் மருந்துண்டோ? பிரிந்தாரைச் சேர்க்காமல் இவ்வாறு இகழ்ந்துரைப்பது நின் அறியாமையால் உண்டானது'[108] என்றுரைக்கிறான்.

தலைவி தனக்குப் பெரிதும் இன்றியமையாதவள் எனக் கூறும் தலைவன், 'என் நெஞ்சைத் தன்னிடம் பிணித்துக் கொண்ட தலைவியின் மெல்லிய மேனியை என் ஐம்புலன் பொருந்த தழுவுதலைப் பெறுவேனாயின் அதன்பின் அரைநாள் வாழ்வையும் விரும்பேன்'[109] என அவள் தழுவலில் கொண்ட ஆர்வத்தைக் காட்டுகிறான்.

இத்தலைவன் கூற்றுடன்,

> *"கண்டுகேட்டு உண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்*
> *ஒண்டொடிக் கண்ணே யுள"*[110]

எனும் குறட்பாவை ஒப்பிட்டுக் காணலாம்.

தலைவனின் காதலுணரும் பாங்கன் அதன் ஆழம் அறியாதவனாய் இருக்கின்றான். அதனாலேயே தலைவனின் காதல் துன்பம் அவனுக்கு நகைப்பாகத் தோன்றுகின்றது. ஆயினும் தலைவனின் ஆழ்மனக் காதல் புலப்பட்டதும், தான் தலைவனுக்குக் கூறும் அறிவுரையை நிறுத்திக் கொள்கின்றான்.

> ***"தலைவனது புதிய உணர்ச்சியையும், புதிய உறவையும் அவன்தன் மெய்ப்பாட்டாலும் சொல்லாலும் தெரிந்து கொண்ட பாங்கன் குணமும் குலமும் அறிவும் சுட்டி மாற்ற முயல்கின்றான், பயனின்மை கண்டபின் அவனொடு கூடவருவதை நிறுத்திக் கொள்கின்றான். இதனால் தலைவனுக்குத் தலைவியைக் காண வேண்டும்போது தனித்துச் செல்லும் பெருவாய்ப்புக் கிடைக்கின்றது. இவ்வாறு பாங்கன் தலைவனது காமப்புதுமையைக் காது கொடுத்துக் கேட்கும் செவியனாய், மேலும் சிறிது இடையூறும் செய்யாத தோழனாய்க் களவின் தொடக்கத்தே வந்து போய்விடக் காண்கின்றோம். ஐந்திணை இலக்கியத்து இவன் வரவு இதனொடு முற்றும்'*** [111]

என்கிறார் வ.சுப.மாணிக்கம்.

*''தலைவன் தன் மனநிலையை உணர்ந்த தோழியின் முன் இரந்து பின் நிற்பது போலப் பாங்கன் முன் இரந்து பின் நிற்பதாகக் காட்டப்படவில்லை. கழறும் பாங்கனிடம் தலைவன் கூட்டுவிக்குமாறு வேண்டியதாகச் சான்று இல்லை. தலைவியைத் தினைப்புனம் காத்தற்கு வரச்செய்து அதன் வாயிலாகப் புணர்வுக்கு வழிசெய்த, கிளையையும் வரைவுக்கு வழிசெய்த தோழியையும், தலைவன் புகழ்வது போன்று தலைவன் பாங்கனை யாண்டும் புகழ்ந்துரைக்காமை நோக்கத்தக்கது''* [112]

என்கிறார் ஆ. இராமகிருட்டினன்.

தோழியிற் கூட்டம் நடந்தது போல் பாங்கற் கூட்டம் நடைபெற்றதற்கான பாடற் சான்றுகள் இல்லை. தொல்காப்பிய உரையாசிரியர் நச்சினார்க்கினியர் அவர்கள்,

*''இனிப் பாங்கன் தலைவி தன்மை தலைவற்குக் கூறுவனவும், இடங்காட்டுவனவுஞ் சான்றோர் செய்யுளுள் வரும் வழிக் காண்க''* [113]

என்று பாங்கற்கூட்டம் பற்றிய நூற்பாவுரையில் சுட்டிச் செல்கிறார்.

இவ்வுரையாசிரியர் உரைக்குறிப்புக்கேற்பப் பாடல் ஏதும் இல்லை. எனினும் ஐங்குறுநூற்று 175 ஆம் பாடலின் துறைக் குறிப்பில், 'பாங்கற் கூட்டம் கூடி நீங்கும் தலைவன்' என்ற குறிப்பு காணப்படுகின்றது.[114] ஆனால் அப்பாடலில் பாங்கனைப் பற்றிய செய்தி காணப்படவில்லை. இது பற்றிக் கூறும் ஆய்வாளர்,

*''அந்தாதித் தொடர் அமைதியும், தொடர் பொருளமைதியும் கொண்ட இத்தொண்டிப் பத்தின் பிற்பகுதியில் (ஐங்.176-180) தலைவன்-தோழி உரையாடல் இருத்தலின், இதன் தொடக்கப்பாடல்களைத் (ஐங்.172-174) தலைவன் பாங்கனின் துணையோடு கொள்ளும் பாங்கற் கூட்டமாகத் துறைக் குறிப்பாசிரியர்கள் கொள்கின்றனர். இவ்வூகத்தைத் தவிர பாங்கற் கூட்டத்தை விளக்குபவை என அறுதியிடும் சான்றுகள் இப்பாடல்களில் இல்லை. ஐங்குறுநூறு தவிர்ந்த பிற நூல்களில் பாங்கன் கூட்டுவிக்கும் மனநிலையோடு இருப்பதாகக் குறிப்புக் காணப்படவில்லை.''* [115]

என்கிறார்.

இக்காரணங்கள் பற்றியே பாங்கற்கூட்டப் பாடல்கள் மிகக் குறைவாக உள்ளன என்பதும் 'பாங்கன்' என்னும் அகமாந்தர் பற்றிய செய்தி பின்னர் வேறெங்கும் இடம் பெறவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கன.

### 4.1.4. தன் நெஞ்சிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

அக இலக்கியங்களின் தலைவன் கூற்றுப் பாடல்கள் 346 ஆகும். அவற்றுள் 163 பாடல்கள்[116] அவன் நெஞ்சுக்குக் கூறுவனவாக அமைந்துள்ளன.

பாங்கனைப் பற்றிய ஆய்வில் கண்டவாறு தலைவிக்கும் தோழிக்கும் உள்ள உள ஒற்றுமை உணர்வைத் தலைவனுக்கும் பாங்கனுக்கும் உள்ள உறவில் காணமுடியவில்லை. இதுவே தலைவன்-பாங்கன் உறவு பற்றிய பாடல்களைக் காட்டிலும் தலைவன் தன் நெஞ்சுக்குக் கூறுவனவாக அமைந்த பாடல்களின் எண்ணிக்கை மிகைபட இருத்தற்கான காரணமாகும் எனக் கருத இடமளிக்கிறது.

தலைவி தன் ஆற்றாமையை வெளிப்படுத்தற்குரிய களமாகத் தோழியைக் கொள்கிறாள். அதுபோலத் தலைவன் தன் ஆற்றாமையை வெளிப்படுத்தற்குரிய களமாகத் தன் நெஞ்சையே கொள்வது சிந்திக்கத்தக்கது. இக்கூற்றுகள் தலைவன் தன் நெஞ்சுக்கு நேர் நின்று உரைப்பதாகவும், தோழி கேட்பத் தன் நெஞ்சுக்கு உரைப்பதாகவும் ஆகிய இருநிலைகளில் இயல்கின்றன.

#### 4.1.4.1. நெஞ்சுக்கு நேர்நின்றுரைக்கும் கூற்றுகள் :

#### *4.1.4.1.1. பின் நின்ற தலைவன் நெஞ்சிற்குக் கூறல்*

இத்துறையில் நற்றிணையிலும் குறுந்தொகையிலும் முறையே 4 பாடல்கள் உள்ளன.[117] குறிஞ்சித் திணையிலேயே அனைத்துப் பாடல்களும் உள்ளன.[118]

பரணர் 3 பாடல்களும்,[119] கபிலர், பூதங் கண்ணனார், ஔவையார், மடல்பாடிய மாதங்கீரன் ஆகியோர் முறையே ஒரு பாடலும் [120] பெயர் தெரியாத புலவர் ஒரு பாடலும்[121] பாடியுள்ளனர்.

தலைவன் தலைவி காதலுறவு அலராகியது. அதனால் தலைவி இற்செறிக்கப்பட்டாள். இதனைத் தோழி மூலம் தலைவன் அறிந்தான். அப்பொழுது நெஞ்சிடம் தலைவியிடம் கொண்ட இக்காமம் இம்மையிலன்றி மறுமையிலும் நிலைத்திருக்கும். ஆதலால் அவளை இம்மையில் அடையாவிடினும், மறுமை உலகத்தில் அடையும் பயன் ஒன்றுள்ளது[122] என ஏக்கத்துடன் உரைக்கிறான்.

மேலும் தலைவி இற்செறிப்பால் தலைவனால் சந்திக்க இயலாத நிலையில் தோழியை நாட, தோழி குறை முடிக்கவில்லை. அப்போது ஆற்றாத தலைவன், 'வேற்று நாட்டரணை அழித்துப் பெருமூச்சு விடுதல் போன்ற நிலை தமக்கு ஏற்பட்டுள்ளது[123] எனத் தன் நெஞ்சைத் தேற்றுகிறான்.

தோழியிடம் பலமுறை பின் சென்றும் குறை முடிக்காதவிடத்து,

> *"பந்தொடு பெயரும் பரிவி லாட்டி*
> *அருளினும் அருளான் ஆயினும் பெரிது அழிந்து*
> *பின்னிலை முனியல்மா நெஞ்சே"* [124]

என்று கூறுவதில் அவள் பின்னிற்றலை வெறுக்காதே எனத் தன் நெஞ்சிற்கு உறுதியும் ஊக்கமும் ஊட்டுகிறான்.

'சிவந்த வாய் நகைக்கு மகிழ்ந்த நெஞ்சமே![125] தோழியால் குறை மறுக்கப்பட்டும் தலைவி அழகு கண்டு மீண்டும் அவளை விரும்பினாய். நீ இப்போது துன்புறுவாயாக[126] எனத் தன் துன்பத்திற்கு நெஞ்சமே காரணம் என இடித்துரைக்கிறான்.

தலைவியை மடலேறிப் பெறலாம் என்ற எண்ணத்தைத் தன் நெஞ்சிடம் உரைக்கின்றான்.[127] 'ஒலிமென் கூந்தல் நம் வயினானே[128] என்று தன் பக்கம் தலைவி இருப்பதால், இத்தோழியால் என்ன செய்து விட முடியும் எனத் தன் நெஞ்சிடம் கூறி ஆற்றுவிக்கிறான். தோழியால் இரவுக்குறி மறுக்கப்படுமிடத்து, பின்னும் கூடற்கு அவாவும் நெஞ்சிடம், என் கருத்தை நிறைவேற்றுவோரைப் பெற்றால் உனது போராட்டம் மிகவும் பெருமையுடையதாகும்'[129] என்று இரங்கிக் கூறுகிறான்.

தமரால் மணம் மறுக்கப்பட்டதைத் தோழி மூலம் அறிந்து ஆற்றானாகிய தலைவன், 'கீழ்த்திசையில் தோன்றும் விடிவெள்ளி போல ஒருநாள் உறுதியாக என் காதலியை மணப்பேன். அவள் என் அருகிலேயே இருக்கும்படி செய்ய நமக்கு வாய்ப்புக் கிடைக்கும். அப்போது உன் அலைச்சல் இல்லாமல் போகும்[130] என்று தன் நெஞ்சுக்கு ஆறுதல் அளிப்பான். இம்மொழி, எப்படியும் தலைவியை ஒருநாள் திருமணம் முடிப்போம் என்ற அவனுடைய உறுதியான நம்பிக்கையைப் புலப்படுத்துகின்றது.

### *4.1.4.1.2 புணர நின்ற தலைவன் நெஞ்சிற்கு உரைத்தல்*

இத்துறையில் ஐங்குறுநூற்று குறிஞ்சித் திணையில் கபிலர் பாடிய 3 பாடல்களிலும் நெய்தல் திணையில் அம்மூவனார் பாடிய ஒரு பாடலிலும் என 4 பாடல்கள்[131] இடம் பெற்றுள்ளன.

குறிவழிச் சென்று தலைமகளைக் கண்டு வந்த பாங்கன் குறிப்பிட்ட இடத்திற்குச் செல்லக் கருதிய தலைவன், 'இனிமேல் கூடுதற்குரிய இடம் இஃது எனக் குறித்தனளாகலான்; யான் போய் அவளைச் சேர்தல் தவறாது கைகூடும்[132] எனத் தன் மனத்துள் கூறுகிறான்.

தலைவியை மணந்து கொள்ள வேண்டும் எனத் துணிந்த தலைவன், வரைந்து கொள்ளக் காலந்தாழ்த்துகின்றமைக்குத் தலைமகள் வருந்துகின்ற வருத்தம் தோழி காட்டக் கண்டு, இனி அது விரைவில் முடியுமென மகிழ்ந்த உள்ளத்தனாய்த் தன் நெஞ்சுக்குக் கூறுமிடத்து, 'மலைவாழ் இறைவனைப் பலியிட்டு வணங்கி நீர் வடியும் கண்ணளாய் வேட்கை மிக்கு வருந்தச் செய்தவளாகிய குன்றக் குறவர் மடமகளை இனி விரைந்து மணந்து கொள்ள முடியும்'[133] எனத் தனக்குத்தானே கூறுகிறான்.

### *4.1.4.1.3 புணர்ந்து நீங்கும் தலைவன் நெஞ்சிற்கு உரைத்தல்*

இத்துறையில் நற்றிணையில் ஒரு பாடலும், குறுந்தொகையில் 6 பாடல்களும், ஐங்குறுநூற்றில் 3 பாடல்களும், அகநானூற்றில் 7 பாடல்களும் என 17 பாடல்கள் இடம் பெற்றுள்ளன.[134]

குறிஞ்சித் திணையில் 14 பாடல்களும்,[135] நெய்தல் திணையில் 3 பாடல்களும்[136] வந்துள்ளன.

பரணர் 7 பாடல்களும்,[137] கபிலர் 3 பாடல்களும்,[138] அம்மூவனார் 2 பாடல்களும்[139] சிறைக்குடி ஆந்தையார், ஓரம்போகியார், இளங்கீரன், மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார், ஆகியோர்[140] முறையே ஒரு பாடலும் பெயர் தெரியாத புலவர் ஒரு பாடலும்[141] பாடியுள்ளனர்.

இயற்கைப்புணர்ச்சி புணர்ந்து நீங்கும் தலைவன், தலைவி தன் பாங்கியர் கூட்டத்தோடு சேர்ந்ததைக் கண்டு மகிழ்கிறான். பின்னர்,

''*யார் மகள் கொல்? இவள் தந்தை வாழியர்,*' என அவள் தந்தையையும்,

*திண்தேர்ப் பொறையன் தொண்டி*
*தன்திறம் பெறுக இவள் ஈன்ற தாயே''* [142]

என அவள் தாயையையும் நன்றிப் பெருக்கோடு வாழ்த்துகிறான்.

தலைவியின் கண்களில் காமக்குறிப்புக் காணும் தலைவன் தலைவியுடன் தான் சேர்ந்தாற்றும் இல்லறம் நன்மை பயக்கும் எனக் கூறுகிறான். மேலும் அவள் தன் தலையைச் சிறிது தாழ்த்தியமையால் தன் மீது அவளுக்கு அன்பு உண்டென்று தன் நெஞ்சுக்குப் புலப்படுத்துகிறான்.[143]

தலைவி தன் புணர்ச்சிக்குக் கிடைக்கப் பெறுவதை உணர்ந்து மகிழ்ச்சி அடையும் தன் நெஞ்சிடம் அவள் தாம் நினைக்கும் பொழுதெல்லாம் எளிதாகக் கிடைக்க மாட்டாள் என அவளின் அருமைப்பாட்டை உரைக்கின்றான்.[144]

தலைவி நிறைந்த காமத்துடன் வந்து தன் துன்பத்தை நீக்கிப் புணர்ந்ததனால் அவள் வாழ்க என நெஞ்சிடம் கூறி மகிழ்ந்து வாழ்த்துகிறான். மேலும் நம்மைத் தழுவிய இன்பம் நினைந்து நீ மகிழ்ந்திருப்பாயாக என்கிறான்.[145]

தலைவி தன் அன்புச் சொல்லை நம்பி மழை பொழியும் நள்ளிரவிலும், தன்னை அன்புடன் தழுவிச் செல்வாள். எனவே அவள் மானிட மகளல்லாத சூரர மகளாவாள் எனப் பாராட்டுகிறான்.[146]

தலைவியை முன்பு தழுவி இன்புற்றது போல இப்பொழுதும் இன்புறுவேன் என்றும்,[147] தலைவி தரும் இன்பம் ஐம்புலனுக்கும் விருந்தாக அமைகிறது[148] என்றும், அவளது கூந்தல், தோள் ஆகியவற்றின் நலம் பாராட்டி அவை துன்பம் செய்கின்றன[149] என்றும் கூறுகிறான்.

தனிமை கொள்ளும் மாலைப் பொழுது மறைந்தகாலை நன்மை பொருந்தியுள்ள தன் மார்பை எனக்கு அளிப்பாள்.[150] தான் தலைவியைப் பிரிந்த பிறகும் தன் நெஞ்சம் அவள் இடத்தில் இருக்கிறது. இதனைத் தலைவி அறிந்தனளோ இல்லையோ எனக் கவலையுறுகிறான்.[151]

தலைவியைப் பாராட்டும் வண்ணம் சுனையிலுள்ள குவளை மலரும் இவள் கண்களைப் போன்று மலர்வது அரிது. மயிலுக்கு இவளைப் போன்று சாயல் பெறுதலும் அரிது எனக் கூறி மகிழ்கிறான்.[152]

இரவுக்குறி வந்து நீங்குமிடத்து இரவில் தன்னுடன் வந்து கூடும் தலைவி விடியற் காலத்தில் தன் தமரோடு சேர்ந்தாள் என்றுரைக்கும் தலைவன் அவள் தன்னைப் பிரியா வண்ணம் மணந்து கொள்ள விரும்பும் தன் விருப்பத்தை நெஞ்சுக்குரைக்கிறான்.[153]

### *4.1.4.1.4 அல்லகுறிப்பட்டு நீங்கும் தலைவன் நெஞ்சிடம் கூறல்*

இத்துறையில் குறுந்தொகையில் 2 பாடல்களும், அகநானூற்றில் 9 பாடல்களும் என மொத்தம் 11 பாடல்கள் உள்ளன.[154]

குறிஞ்சித் திணையில் 8 பாடல்களும்,[155] நெய்தல் திணையில் 2 பாடல்களும்,[156] மருதத் திணையில் ஒரு பாடலும்[157] என வந்துள்ளன.

பரணர் 7 பாடல்களும்,[158] மதுரைக் கணக்காயனார் 2 பாடல்களும்,[159] நக்கீரர், அம்மூவனார் ஆகியோர் முறையே ஒரு பாடலும்[160] பாடியுள்ளனர்.

இரவுக்குறியில் தலைவன் அல்லகுறிப்பட்டுத் தலைவியைக் கூடாது மீள்கிறான். அதனால் தன் நெஞ்சிடம் தலைவியை நினைத்ததனால் ஊழ்வினை உடைய துன்பத்தை நீ அடைந்தாய்[161] எனவும், அல்ல குறியால் தன் நெஞ்சம் இறந்துவிடும்[162] எனவும், அவள் தந்தையின் விருப்பத்திற்குரியவனாகி ஒழுகினால் அவள் தந்தை அவளைத் தனக்குத் தருவான் போலும்[163] எனவும், அவள் பெறுதற்கரியவள் என்பதை உணராமல் வருத்தம் அடைவாய்[164] எனவும், அவள் புணர்ச்சியின் பொருட்டு இடைவிடாமல் அவளுக்குத் தூது அனுப்புவோம்[165] எனவும், தன் விருப்பத்திற்கு மாறாகத் தன் நெஞ்சம் அவளை நினைப்பதால், தான் தன் நெஞ்சுக்கு உறவினன் இல்லை[166] எனவும், பலவாறு இடித்துக்கூறி இனி இரவுக்குறிச் சென்று அல்லகுறியால் அல்லற்படாமல் அவளை மணப்பதற்கான உத்திகளை மேற்கொள்ள வேண்டும் எனத் தெளிவுறுத்துகிறான்.

### *4.1.4.1.5 உடன்போகும் தலைவன் நெஞ்சிற்குக் கூறல்*

இத்துறையில் நற்றிணையில் பாலை பாடிய பெருங்கடுங்கோ பாடிய பாலைத்திணைப் பாடல் ஒன்றில், தலைவன் தன் நெஞ்சிடம், 'வருந்தும் என் துன்பத்திற்குக் கிடைத்த மருந்துபோல நம்மொடு அன்னம்போல் நடந்து வருவாளைக் காண்பாயாக' எனக் கூறுகிறான். மேலும் இவளோடு இல்லம் செல்லும் யாம் இவள் இல்லறம் நடத்தப் பொருள் கொணர்ந்து கொடுப்போம்[167] என்னும் இறைச்சிப் பொருளாகத் தன் நெஞ்சிடம் கூறுகிறான்.

### 4.1.4.2 **தோழி கேட்பத் தன் நெஞ்சுக்கு உரைத்தல்**

பின்நின்ற தலைவன் நெஞ்சுக்கு உரைத்தது என்னும் துறையில் மட்டும் இக்கூற்றுகள் அமைகின்றன.

நற்றிணை குறிஞ்சித் திணையில் பரணர், மள்ளனார், நொச்சி நியமங்கிழார் ஆகியோர் முறையே ஒரு பாடலும், மருதத் திணையில் பூதன் தேவனார் ஒரு பாடலும், நெய்தல் திணையில் மிளைகிழான் நல்வேட்டனார் ஒரு பாடலும் என மொத்தம் 5 பாடல்கள்[168] பாடியுள்ளனர்.

தலைவன் தன் குறை முடிக்குமாறு தோழியிடம் தாழ்ந்து நின்றான். அவன் குறை முடிக்கப்படாதபோது அவன் ஆற்றானாய்த் தோழி கேட்பத் தன் நெஞ்சிற்குப் பல சொல்கிறான்.

தினைக் கொல்லையில் உள்ளவளாகிய இளமகள் பேசும் இனிய குரல் எனக்குக் கேட்குமானால் என் துன்பம் தீரும். அக்குரல் கேளாது இருந்தால் என் உயிரோடு கூடிய,

அனைத்தும் அழியும்[169] எனத் தன் வாழ்விற்குத் தலைவியே உயிர் என்பதைத் தலைவன் உணர்த்துகிறான்.

தான் முன்பு செய்த குறியிடத்து இனிய சொற்கள் கூறித் தன் சிறு குடியினுள் தலைவி செல்லும் போது அவள் முதுகின் அழகை நோக்கி அவளைக் கைவிட்டுக் கலங்கிய நெஞ்சம் அவளைக் கைவிடலாகாது[170] எனத் தன் நெஞ்சுக்கு அறிவுறுத்துகிறான்.

'போர் செய்து பெரும்புண் பட்டுக் கிடந்தாரைப் பேய் காத்தது போலச் செயலாற்றும் இத்தோழியின் பின்னால் வெறுப்பின்றித் திரியும் நம்மைப் பற்றி நம் காதலியாகிய பரதவர் மகள் என்ன நினைப்பாளோ[171] தெரியவில்லையே எனத் தன் குறைமுடிக்காத தோழியைப் பேய் எனப் பழித்துரைக்கின்றான்.

தலைவன் தன் காதல் நோய்க்கு,

> *''பெருந்தோள் குறுமகள் அல்லது*
> *மருந்து பிறிதுஇல்லை யான்உற்ற நோய்க்கே''* [172]

என்று உரைப்பதின் மூலம் இந்த இளமகளைத் தவிர மருந்து பிறிதில்லை என்கிறான்.

இக்கருத்துக்கு இயைபாக 'மருந்து பிறிது இல்லை'[173] எனத் தலைவன்தன் நோய்க்குத் தலைவி மருந்து என வருவதைக் காணலாம்.

இக்கருத்துக்கு மாற்றாகத் தலைவிக்கு ஏற்பட்ட காதல் நோய்க்குத் தலைவனே மருந்தாவான் எனக் கூறும் முறையையும் நற்றிணையில் காணமுடிகின்றது.[174]

இக்கருத்தையே திருவள்ளுவரும்,

> *''பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை*
> *தன்நோய்க்குத் தானே மருந்து''* [175] *என்று கூறுகிறார்.*

இரவுக் குறியிடத்துத் தலைவன் தலைவியைக் காண முடியாது ஆற்றாதவிடத்து, 'அவள் இருக்குமிடம் பொருந்தச் சென்று என்னைப் பற்றிச் சொல்லுவார் உண்டானால், 'இவர் யார்?' என்று கேட்க மாட்டாள். அவள் யான் வந்துள்ளேன் என்பதை எண்ணி மகிழ்ச்சியால் பெரும் மயக்கம் அடைவாள்'[176] என்று தலைவன் தோழியிடம் தன் பெருமையைக் கூறி இரவுக்குறிக்குத் தலைவியை உடம்படுத்தச் செய்ய வேண்டும் எனத் தன் நெஞ்சுக்குரைக்கிறான்.

நேரடியாக நெஞ்சிடம் கூறும் கூற்றுகளில், தலைவி மீது அவன் கொண்ட காதல், அவளைப் புணர்ந்ததால் கொண்ட மகிழ்ச்சி, தலைவியின் அருமை, தலைவியைப்

பாராட்டுதல், அவளை விரைந்து மணக்க வேண்டுமென்ற விருப்பம், அல்லகுறிப்பட்ட இடத்து வருந்துதல், குறியிடம் மறுக்குமிடத்து வருந்துதல், தலைவியையே நாடிச் செல்லும் தன் நெஞ்சிற்கு ஊக்கமும் உறுதியும் கூறல், வருந்தும் நெஞ்சை இடித்துரைத்தல் ஆகியவை வெளிப்படுகின்றன.

தோழி கேட்பக் கூறுமிடத்து, தன் உயிராக விளங்கும் தலைவியை அடைய வேண்டி வெறுப்பின்றித் தோழியின் பின்னால் சென்றும் உதவாத தோழியைப் பேய் என்றே பழிக்கிறான்.

இவற்றால் தன் ஆற்றாமையைக் கேட்டு உதவுவாறின்றித் தலைவன் வருந்துவதும் தோழி கேட்பக் கூறுவதால் அவளாவது தன் ஆற்றமை உணர்ந்து உதவிட மாட்டாளா என்ற அவனது எதிர்பார்ப்பும் வெளிப்படுவதை அறியலாம்.

## 4.2 கற்பு நெறி

### 4.2.1 தலைவியிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு :

#### 4.2.1.1 செலவுக் குறிப்பினால் வேறுபட்ட தலைவியிடத்து

இத்துறையில் நற்றிணையில் 4 பாடல்களும், ஐங்குறுநூற்றில் 2 பாடல்களும், அகநானூற்றில் ஒரு பாடலும் என மொத்தம் 7 பாடல்கள் உள்ளன.[177]

பாலைத் திணையில் 5 பாடல்களும்,[178] முல்லைத்திணையில் 2 பாடல்களும்[179] இடம் பெற்றுள்ளன.

பேயனார் 2 பாடல்களும்,[180] பெருந்தலைச் சாத்தனார், பாலை பாடிய பெருங்கடுங்கோ, மதுரைப் போத்தனார் ஆகியோர் முறையே ஒரு பாடலும்[181] பெயர் தெரியாத புலவர் 2 பாடலும்[182] பாடியுள்ளனர்.

வினைமேற் செல்லும் தலைவனிடம் தனியே இருத்தல் ஆற்றேன் உம்மோடு வருவேன் என்ற தலைவியிடத்து, 'நான் செல்லும் இவ்வேனிற் காலத்து உன்னால் காட்டில் வரமுடியாதெனத் தடுக்கிறான்.[183]

தலைவன் பொருள்வயிற் பிரிவை மேற்கொள்ளின் தலைவி தன் அழகு அழிந்துபடும் என வருந்துகிறாள். அப்பொழுது தலைவன்[184] அவளை விட்டுப் பிரியமாட்டேன் எனக் கூறுகிறான். தன் நெஞ்சு பொருளுக்குப் பிரிய எண்ணும் இடத்து வறுமையது இழிவைச் சொல்லி முடியாது[185] எனக் கூறிச் செலவைத் தவிர்க்கிறான்.

சுரத்தினது அருமை கூறியும் அவளுடைய அழுகையை நிறுத்தியும்[186] தலைவியது அழகைக் கண்டு மகிழ்ந்தும்,[187] புதல்வனது விளையாட்டைக் கண்டு மகிழும் 'அன்பு' கடலினும் பெரிதாய் உள்ளதென எண்ணிப் பார்த்தும்[188] தலைவியை ஆற்றுவித்துச் செலவைத் தவிர்க்கிறான்.

வேந்தன் பொருட்டு வினைமேற்கொண்டு திரும்பிய தலைவன் இனியும் பிரிவானோ என்றெண்ணிய தலைவியிடம் மன்னன் போர் ஒழிந்தமையையும், தான் போர் மேல் செல்வதைத் தவிர்ந்தமையையும்[189] கூறி அவளது கவலையைத் தீர்க்கிறான்.

4.2.1.2 **வினைமுற்றி மீண்ட தலைவன் தலைவியிடத்து**

இத்துறையில் குறுந்தொகையில் ஒரு பாடலும், அகநானூற்றில் 2 பாடல்களும், ஐங்குறுநூற்றில் 19 பாடல்களும் என 22 பாடல்கள் உள்ளன.[190]

முல்லைத் திணையில் 16 பாடல்களும்,[191] பாலைத் திணையில் 6 பாடல்களும்[192] இடம் பெற்றுள்ளன.

பேயனார் 15 பாடல்களும்,[193] ஓதலாந்தையார் 4 பாடல்களும்,[194] பாண்டியன் பன்னாடு தந்தான், வெள்ளாடியனார், மதுரைச் செல்கண்ணனார் ஆகியோர்[195] முறையே ஒரு பாடலும் பாடி உள்ளனர்.

கார் காலத்திற்கு முன்னரே தன் வினை முடித்து மீண்ட தலைவன் தலைவியுடன் இன்புறும் எண்ணத்தில் இளமையின் இனிமையைக் குறிப்பிட்டு நீராடவும், காட்டில் விளையாடவும் அன்புடன் அழைக்கின்றான்.[196] வினைமேற்கொண்டு விரைந்து திரும்பியதன் காரணம் உரைக்கும் தலைவன், தலைவியின் அழகின் துணையாலும், தலைவியை ஒப்பக் கண்ட இயற்கை நிகழ்வுகளாலும் விரைந்து திரும்பினான்[197] என உரைக்கிறான்.

வினைமுற்றி மீண்ட தலைவனிடம் எம்மை நினைத்தீரோ? என்று தலைவி கேட்குமிடத்து, பொருளீட்டும் விருப்பத்துடன் என்னுடல் அங்கே இருந்ததே அன்றி நெஞ்சம் நின்னிடமே இருந்ததென கூறுகிறான்.[198] தன்னை மறந்தானோ என்ற தலைவிக்குத் தலைவன் காட்டில் தான் படுத்துறங்கியபோது பெண்மான் போல் எதிர்நின்ற அவளைத் தழுவ முயன்றபோது விழிப்பு உண்டானது; அது கனவு என எண்ணி மனம் கலங்கியதை அறியாமல் ஊடல் கொள்ளற்க எனத் தன் அன்புடைமை தோன்றக் கூறி மகிழ்விக்கிறான்.[199]

தலைவன் தான் பெற்ற அளவில் மட்டுமே பொருளைக் கொண்டு மீண்டு வந்து, தலைவியிடம், நின் நலத்தை நினைந்து உடன் வந்தவர் ஒருவரிடத்தும் சொல்லாமல் மீண்டு வந்தேன்[200] என்று அவள் அழகைப் புகழ்ந்து உரைக்கின்றான். மேலும் கொடிய காட்டில் வினைமேற் கொண்ட என் நெஞ்சை மடக்கி மீளும்படி செய்த நின் குணங்கள் நினைத்தற்கு இனிமை உடையன[201] எனப் பாராட்டுகிறான்.

வினைமேற் செல்லுழித் தலைவனுக்குச் சுரத்தின் வழி மிக மிக நீண்டதாகவும், மீண்டு வரும் காலத்து அணிமையில் உள்ளதாகவும்[202] கூறுவதுடன் அவா மிக்க தன் நெஞ்சம் முயக்கத்தை விரும்பி வருவதால் சுரத்து அருமை எளிமையானது எனக் கூறுகிறான்.[203]

பரத்தையிடம் சென்று திரும்பி வந்த தலைவன் கூற்றாகக் கலித்தொகையில் மருதத் திணையில் மருதன் இளநாகனார் பாடிய பாடல் ஒன்றில் தலைவன் பரத்தையிடம் சென்று திரும்பியதால் தலைவி ஊடல் கொண்டாள். அவளது ஊடலைப் போக்க அவன் தெய்வ மகளிர் விளையாடிய விளையாட்டைக் கனவில் கண்டதாக உரைக்கிறான். அவள் தலைவனின் பரத்தையர் அவனைப் புலந்ததைக் கூறுவதாகக் கூறுகிறாள். தலைவனோ தான் பொய் சொல்லேன்; மன்மதனுக்கு விருந்து படைக்க மதுரை மகளிர் சோலையில் சேர்ந்து விளையாட அணி பூண்பர். ஆகவே நான் கண்ட கனவு உண்மையென எண்ணுவாய்[204] என அவள் ஊடல் தீரும்வழி அவளை அமைதிப்படுத்துகிறான்.

இக்கூற்றுகள் வழி தலைவன், வாழ்விற்கு இன்றியமையாத பொருள் ஈட்டப் பிரிய நினைக்கும்போதும், பிரிந்த போதும், பிரிந்து திரும்பி வந்தபோதும் தலைவியையே நினைப்பதை அறியலாம். இதனால் தலைவனது நெஞ்சும் செயலும் தலைவியைச் சுற்றியே இயங்குகின்றன எனத் தெளியலாம். தலைவன் பரத்தையர் பிரியினும், அவன் வந்தபோது இல்லறச் சிறப்புக் கருதித் தலைவி ஏற்றுக் கொள்கிறாள். எனவே தலைவன் அவளைப் பலவாறு பாராட்டி ஊடல் தீர்க்கிறான் என்பதை உணரலாம்.

### 4.2.2 தோழியிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

#### 4.2.2.1 மீண்டு வந்தபோது தோழியிடம் நிகழ்த்தும் கூற்று

பொருள்வயிற் பிரிந்து மீண்டு வந்து தோழியை நோக்கி உரைப்பவனாய்த் தலைவிக்குத் தனது அன்பைப் புலப்படுத்தும் தலைவன்கூற்றாகக் குறுந்தொகையின் பாலைத்திணையில் பாலை பாடிய பெருங்கடுங்கோ பாடிய பாடலில், தலைவன் காத்தற்கரிய மலையைக் கடந்து சென்றபோது, தலைவியின் நட்பையே நினைத்திருந்ததாகக் கூறித் தன் காதலைப் புலப்படுத்துகிறான்.[205]

பிரிந்து வந்த தலைமகனிடத்துத் தோழி வினவ அதற்கு மறுமொழியாகக் கூறும் கூற்றுகளாக ஐங்குறுநூற்றுப் பாலைத் திணையில் ஓதலாந்தையாரின் 2 பாடல்களும், குறுந்தொகையில் ஔவையாரின் முல்லைத் திணைப்பாடல் ஒன்றும் என 3 பாடல்கள் உள்ளன.[206]

பிரிந்து வந்த தலைவன் தலைவியை நலம் பாராட்டக் கண்ட தோழி, 'இவள் குணத்தை நீ மறந்திருந்தவாறு எவ்வாறு என வினவுகிறாள். அதற்குத் தலைவன் தோழியிடம், சுரத்தில் யான் சிறிது கண்ணயர்ந்தாலும் தலைவியின் அழகு நலத்தைக் கண்டு அமைந்திருந்தேன். ஆதலால் தலைவி குணத்தை நான் மறத்தலரிது'[207] என்றுரைக்கிறான்.

சுரத்தின் வெம்மை எங்ஙனம் ஆற்றினீர் என்று தோழி வினவுமிடத்து,

*'வெம்பலை அருஞ்சுரம் நலியாது*
*எம்வெங் காதலி பண்புதுணைப் பெற்றே''* [208]

என்று தன்னால் விரும்பப்பட்ட காதலியின் குணங்களைத் துணையாகப் பெற்றுச் சென்றேன்; அதனால் கொடிய சுரம் என்னை வருத்தவில்லை என்று கூறித் தலைவன் அன்பைப் புலப்படுத்துகிறான்.

நீர் பிரிந்தவிடத்து எம்மை நினைத்தீரோ என்று தோழி வினவினாள். அதற்குத் தலைவன், 'நான் எப்பொழுதும் தலைவியை நினைத்துக் கொண்டே இருக்கிறேன்'[209] எனக் கூறுகிறான்.

### 4.2.2.2 வாயில் வேண்டிய இடத்து

இத்துறையில் அகநானூற்றில் நல்லாவூர்கிழார் மருதத் திணையில் பாடிய ஒரு பாடலும், ஐங்குறுநூற்றில் ஓரம்போகியார் மருதத் திணையில் பாடிய மூன்று பாடல்களும் என மொத்தம் 4 பாடல்கள் உள்ளன.[210]

பரத்தையிற் சேரியினின்றும் திரும்பி வந்த தலைவன் தலைவி பொருட்டுத் தோழியை வாயில் வேண்ட, அவள் மறுத்துரைத்தாள். அது போழ்து தலைவன், 'முன்னம் எங்கள் இருவர்க்கும் திருமணம் நிகழ்ந்தபோது அவளைச் சுற்றத்தார் என்னிடம் சேர்க்க, அவளை அணைக்க அவள் முகத்தை மூடியிருந்த ஆடையை நீக்கினேன்; அப்போது நின் உள்ளம் நினைத்ததைக் கூறுவாயாக' என்றபோது அவள் தலைகுனிந்து நின்றாள்.[211] இத்தகைய அன்புடையாளின் கருத்தை அறியாமல் நீ வாயில் மறுப்பது நேர்மையன்று எனக் கூறித் தோழியை வாயில் நேர ஊக்குவிக்கிறான்.

மேலும் தலைவி புலவி நீங்கி அவளுடன் புதுப்புனல் ஆட வேண்டிய தலைமகன் களவுக் காலத்தில் புனலாட்டு நிகழ்ந்ததனைத் தலைவி கேட்பத் தோழியிடம் எடுத்துரைக்கிறான்.[212]

இவற்றால் கற்புக் காலத்தும் தலைவனுக்குத் தன் தலைவியுடன் கூடிய இல்லற வாழ்க்கை செம்மையாக இருக்கத் தோழியே வாயிலாகவும் உற்ற துணையாகவும் விளங்குவதை அறியலாம்.

### 4.2.3 தேர்ப்பாகனிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

வினை முற்றி மீளும் தலைமகன் தேர்ப்பாகனுக்குக் கூறும் கூற்றுகள், நற்றிணையில் 11 பாடல்களும், குறுந்தொகையில் 8 பாடல்களும், அகநானூற்றில் 21 பாடல்களும், ஐங்குறுநூற்றில் 12 பாடல்களும் என 52 பாடல்களில்[213] உள்ளன.

முல்லைத் திணையில் 46 பாடல்களும்,[214] பாலைத் திணையில் 5 பாடல்களும்,[215] நெய்தல் திணையில் ஒரு பாடலும்[216] இடம் பெற்றுள்ளன.

பேயனார் 14 பாடல்களும்,[217] இடைக்காடனார் 5 பாடல்களும்,[218] மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார் 4 பாடல்களும்[219] மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார் 2 பாடல்களும்[220] மருதன் இளநாகனார், கீரத்தனார், கபிலர், அகம்பன் மாலாதனார், தொண்டைமான் இளந்திரையன், விழிக்கட்பேதைப் பெருங்கண்ணனார், ஔவையார், கருவூர்ப்பவுத்திரன், மதுரை ஈழத்துப் பூதன் தேவன், பேயன், மாயேண்டன், அள்ளூர் நன்முல்லை, நாமலார் மகன் இளங்கண்ணன், பதடிவைகலார், கல்லாடனார், மதுரை மருதன் இளநாகனார், குடவாயிற் கீரத்தனார், மாற்றூர் குழார் மகனார் கொற்றங் கொற்றனார், ஆர்க்காடுகிழார் மகனார் வெள்ளைக் கண்ணத்தனார், நண்பலூர்ச் சிறுமேதாவியார், சீத்தலைச் சாத்தனார், பொதும்பிற் புல்லாளங் கண்ணியார், மதுரைக் காமக்கணி நப்பாலத்தனார், ஆவூர் மூலங்கிழார் மகனார் பெருந்தலைச் சாத்தனார், மதுரைக் கூத்தனார் ஆகியோர் முறையே ஒரு பாடலும்[221] பெயர் தெரியாப் புலவர்கள் 2 பாடலும்[222] பாடியுள்ளனர்.

#### 4.2.3.1 வினைப் பொருட்டுச் செல்லுமிடத்து

தலைவன் தேர்ப்பாகனிடம் கூறும் கூற்றுகளில் வினையின் பொருட்டுச் செல்லும்போது தேரை விரைந்து செலுத்துக எனக் கூறும் கூற்று குறுந்தொகையில் பாலைத் திணையில் அமைந்த ஒரு பாடலில் மட்டும் காணப்படுகிறது.

தலைவன் தேர்ப்பாகனிடம், 'இன்று சென்று வினையை முடித்து விட்டு மாலைக் காலத்தில் தலைவியின் இடத்து விரைந்து திரும்பி வருதல் வேண்டும்'[223] என்று கூறுவதிலிருந்து தலைவனுக்குத் தலைவி மீதுள்ள தீராக் காதல் புலப்படுகிறது.

தலைவன் பொருள்வயிற் பொருட்டோ, வேந்தின் போர் வினைப் பொருட்டோ தலைவியைப் பிரிய நேரிடுகிறது. அவ்வாறு பிரிந்த தலைவன் வினைமுடித்துத் திரும்பி வருமிடத்துத் தேர்ப்பாகனிடம் தேரை விரைந்து செலுத்த வேண்டும் என்று உரைக்கிறான்.

### 4.2.3.2 **வினைமுற்றி மீண்டு வருமிடத்து**

தலைவன் தலைவியரது களவுக் காலத்தில் தலைவன் தலைவியை வரைந்து கொள்ளுதற்காகப் பொருள் ஈட்டி வரச் சென்று மீளும்போது தேர்ப்பாகனிடம் கூறும் கூற்றுகள் குறுந்தொகையில் மட்டும் காணப்படுகின்றன.

தலைவன் வாடைக் காற்றை விளித்து உரைப்பது போல, தேர்ப் பாகனிடத்துக் கூறுவதால் தலைவி வாடைக் காற்றால் வருந்துவாள் என்பதைப் புலப்படுத்தி அவள் தங்கியுள்ள இடத்தையும் குறிப்பால் உணர்த்துகிறான்.[224] மேலும் முல்லை நிலத்தின் இடையே தோன்றும் அந்த இடமே தலைவியின் ஊராகும்[225] என்றும் உரைக்கிறான்.

நம்பியகப் பொருள், 'காண்பவை எல்லாம் அவையே போறலும்'[226] எனக் கூறும் காதல் அவத்தைப் போலத் தலைவன் தலைவியின் ஊரைக் கண்டதுமே அவளைக் கண்ணுற்றது போல எண்ணி மகிழ்ந்தான் எனலாம். காதல் வயப்பட்டோர் தம்மால் காதலிக்கப்படுவோரின் பேரும் ஊரும் உறவும் பிறவும் கேட்டாலும் அவராக எண்ணி மகிழ்வர் எனும் உலகியல் கூற்றும் இங்குக் கருதத்தக்கது.

தலைவன் தேர்ப்பாகனிடத்துக் கூறும் பிற கூற்றுகள் அனைத்தும் கற்புக் காலத்துக் கூற்றுகளாகும்.

### 4.2.3.3 **முன்னர் நடந்ததெண்ணி**

வினை முடித்துத் திரும்பிவரும் தலைவன் தேர்ப்பாகனிடம், 'தலைவி விளையாடிக் களைப்புற்ற அந்த நேரத்தில் யான் சென்று, பொருள் தேடப் போக வேண்டுமென்ற உளக்கருத்தைக் கூறினேன்; அதுகேட்ட அவள் மறுமொழியின்றி அறிவு மயக்கமுற்றவளாகி மடப்ப நிலையுடன் இருந்தாள். அதனை நீ அறிந்தாயோ இல்லையோ? விரைவில் தேரைச் செலுத்துக'[227] என்கிறான்.

இதனால் வினைமேற் பிரியும் காலை அறிவு மயங்கி இருந்த தலைவியின் நிலையைக் காணத் துடிக்கும் தலைவனது உள்ளம் வெளிப்படுகிறது.

தான் வினைமுற்றித் திரும்புங்கால் தன் வரவை வீரர்கள் தலைவிக்கு அறிவிக்க அதுவரையில் கழுவாதிருந்த கூந்தலை மாசறக் கழுவி மலர் கொண்டு முடித்துக் கொண்டிருந்தாள். அப்போது இல்லத்தில் புகுந்த தன்னைக் கண்டு தன் உடல் துவள எழுந்து கூந்தல் பூ அவிழ்ந்ததை முடித்துக் கொண்டு வந்து அணைத்துக் கொண்டாள். அவ்வாறு அவள் மகிழ்ந்து வரவேற்றுக் கொண்டாடிய அந்நிலையை மறக்க முடியாது.[228] என்று முன்னர் நடந்தது எண்ணித் தேர்ப்பாகனிடம் தலைவியினது காதலை மகிழ்வுடன் உரைக்கின்றான்.

### 4.2.3.4 **இல்லுறை தலைவியை எண்ணி**

வினை முடித்துத் திரும்பி வரும் தலைவன், இல்லில் உள்ள தலைவியின் நிலையை எண்ணிக் கூறும் கூற்றுகள் பல உள்ளன.

காதலரைப் பிரிந்தவர் அவரை எண்ணி வருந்தும் காலம் மாலைப் பொழுதாகும்.[229] எனவே அவள் தம்மைக் கண்டு மகிழுமாறும்,[230] பசலை அடைந்த அவளது கூந்தலின் பிணிப்பு நீங்கவும்,[231] தேரை விரைந்து செலுத்துமாறு தலைவன் கூறுகிறான்.

மேலும், நம் தலைவர் இப்பொழுது வந்து விடுவார் என்று அடிக்கடி வெளியே வந்து பார்ப்பாள்; பொழுதும் இரவாயிற்று.[232] எனவே அவள் இன்பம் அடையுமாறும் பாசறை வருத்தம் நீங்குமாறும் வண்டுகள் அஞ்சி நீங்கி ஓட இன்று மாலையே ஊரினைச் சென்று சேர குதிரையை விரைந்து ஓட்டுக[233] எனத் தேர்ப்பாகனிடம் வேண்டுகிறான்.

முல்லைக் காட்டின்கண் அமைந்துள்ள வீட்டில் தலைவி தனித்துள்ளாள்.[234] அவள்,

> *"...................................... காமம்*
> *நம்மினும் தான்தலை மயங்கிய*
> *அம்மா அரிவை உறைவுஇன் ஊரே"* [235]

என்று தலைவன் கூறுவதிலிருந்து தலைவி தன் இல்லில் தலைவனை விட மிகுந்த காமத்துடன் காணப்பட்டாள் என்று அறியலாம்.

தலைவி வீட்டில் இருக்கும் நிலையை எண்ணிப் பார்க்கும் இடத்துத் தலைவன் காட்டில் பொறுமையுடன் இருக்கும் தலைவியிடம் யான் விரைவில் செல்லாவிட்டால் மிகவும் வருந்துவாள்[236] என்றும், நோயினால் வருந்தி உறையும் தலைவி இறந்துவிடாமல் தடுத்தற்குத் தேரை விரைந்து செலுத்துக[237] என்றும், தொடி அணிந்துள்ள அவளது அரிய

துயர் நீங்கும்படியும்[238] அவளது துன்பம் போக்கவும்,[239] பசுக்களின் கழுத்தில் கட்டப்பட்ட மணிகளின் ஒலியைக் கேட்டு வருந்தும் நம் தலைவியின் துன்பம் களையவும்,[240] தேரை விரைந்து செலுத்துக எனக் கூறுகிறான்.

மேலும் முல்லையும் தம் மலர்கள் உதிரும் வண்ணம் தேரை விரைந்து செலுத்திச் சென்றால் வளை அணிந்த கையாள் வருந்த மாட்டாள்[241] என்றுரைக்கிறான். தேரை விரைந்து செலுத்துவதால் தலைவியது பொறுத்தற்கரிய துன்பத்தைத் தீர்ப்பது எளிதாகும்[242] என்றும் கூறுகிறான்.

கார் காலம் தொடங்கியதால் மழை பெய்யத் தொடங்கிவிட்டது, எனவே தலைவி தன் கைவளையல்கள் கழன்று விழ ஏங்கி அழத் தொடங்கியிருப்பதுடன் கோவலர்கள் தமது புல்லாங்குழலை, முழங்கும் இடி ஓசை போல ஊதத் தொடங்கிவிட்டனரே'[243] என்று வருந்தி உரைக்கிறான்.

இல்லில் உள்ள தலைவி தன் தோழியிடம், 'நம் பெருமான் அருள் மாறினும் மாறுக' என்று வருந்தியிருக்கும் நிலையில் நம் வெற்றித் திருவினை நம்மவர் நமக்கு முன் சென்று கூறுவதைக் கேட்டுத் தலைவி நம்முடன் புணர்ந்தது போல மகிழ்வாள் அல்லவோ[244] என்று தன் நெஞ்சிடம் கூறுகிறான். மேலும் தலைவி தன் தோழியிடம் 'கார் காலத்தில் நம் தலைவர் வந்தாலும் வராவிட்டாலும் அவர் உள்ள இடம் இனியதோ' என்று கூறித் தன் கண்ணானது சிவப்ப வருத்தத்துடன் காணப்படுகிறாள்'[245] என்று தன்னிடம் தூதாக வந்த பாணன் கூறும் கூற்றையும் எண்ணிப்பார்த்துரைக்கிறான்.

இத்தகு நிலையிலுள்ள தலைவியைக் காண்பதற்காக[246] இதுவரையில் தீண்டாமல் வைத்திருந்த கூரிய தாற்றுக்கோலால் குதிரையைத் தீண்டித் தேரைச் செலுத்துக'[247] என்று முடுக்கி விடுகிறான்.

#### 4.2.3.5 தலைவியைக் காணவும், அவள் நலம் பெறவும் எண்ணி

தலைவியின் நல்ல நெற்றி நலம் பெறுதற் பொருட்டும்[248] தலைவியை மறந்து நீண்ட காலம் தாழ்த்தாது,[249] இப்போதே நகைமுகம் காணத் தேரை விரைவாகச் செலுத்த வேண்டும்[250] என்கிறான். மெல்லிய சாயலை உடைய இளங்காதலி விருந்தினர் இரவில் வந்தாலும் மகிழ்ச்சியடைவாள்.[251] அத்தகையவள் தனக்கு விருந்து செய்யும் விருப்பத்துடன் வருந்திச் சமைத்து மகிழ்ந்த அவள் இன்பத்தைக் காண வேண்டும்[252] என விரும்புகிறான். எனவே கார் காலத்தில் நம்மைத் தலைவி விருந்தாக ஏற்றுக் கொள்ளவும் போய்ச் சேர வேண்டும்[253] என விரைவுபடுத்துகிறான்.

தெளிந்த அன்பு கொண்ட தலைவி தன் புதல்வனைப் பொய்கூறி ஆற்றுவித்துக் கொண்டிருக்கிறாள்.[254] மேலும் புதல்வன் உறங்குமிடம் சென்று, 'எந்தையே வருக' என்று எழுப்புவாள்.[255] ஆண்மான் பெண்மானையும் குட்டியையும் தேடுவது போல, தானும் தன் மனைவியையும் புதல்வனையும் காண வேண்டும் என்ற எண்ணம் மிக்கவனாகத் தலைவன் இருக்கிறான்.[256]

இக்கூற்றுகளால் தன் மனைவி, மழலைக்குழவி ஆகியோரின் இன்முகத்தைக் கண்டும், இன்சொல்லைக் கேட்டும் மகிழ வேண்டும் என்ற தலைவனின் உள்ளத் துடிப்பு தெரிகின்றது.

### 4.2.3.6 **தலைவியின் இன்ப உணர்வு எண்ணி**

தலைவி மீது கொண்ட இன்ப நுகர்வை எண்ணுமிடத்து நாணம் மிக்க நம் தலைவியின் சிறந்த இன்பத்தை அடையவும்[257] காதலியின் ஆகத்து இனிய துயிலைக் கொள்ளவும்[258] அவளுடைய பெரிய தோள்கள் இழந்த நலத்தை மீண்டும் அடையும் வகையில் முயங்கவும்[259] நாள்தோறும் முயங்கியபோதும் பிரிவாற்றாமைக்குக் காரணமான பேரின்பத்தைக் கொடுக்கும் காதலியைக் காணவும்[260] மான்கள் துணையுடன் வதியும் காட்சி கண்டு தலைவியை அடையும் எண்ணம் கொண்டும்,[261] நெடுந்தொலைவில் உள்ள தலைவியினது இடத்திற்கு விரைந்து தேரைச் செலுத்துமாறு பணிக்கிறான்.[262]

தலைவியின் தோள்களில் துயின்று சென்ற நாட்களே, இவ்வுலகத்தில் வாழும் நாட்களாகும். ஏனைய நாட்கள் எல்லாம் பயனற்றவை[263] என்று கூறுவது தலைவன் தலைவியின் இன்ப நுகர்வைப் பெறும் நாட்களைத் தன் வாழ்நாளின் சிறந்த நாட்களாக எண்ணி மகிழ்வதைக் காட்டுகிறது.

வினை முடித்துத் தேரில் விரைந்து வரும் தலைவனது நெஞ்சம், அவனினும் விரைவாகச் சென்று, பல்லி சொல்வதைக் கேட்கும் தலைவியின் கூந்தலைத் தீண்டித் தழுவிக் கொண்டதோ[264] என்று வினவுகிறான்.

பாகன் செலுத்தும் தேரொலி கேட்பின் கலைமான்களும் பெண்மான்களும் பகலில் விருப்புடன் புணரும் கூட்டத்திற்கு இடையூறுண்டாகும் எனக்கூறிப் பேரொலி எழாதவாறு தேரைச் செலுத்தக் கூறும்[265] தலைவன் உள்ளம் காதல் உணர்வுடன் கூடும் விலங்குகளிடத்தும் இரக்கம் கொண்டு விளங்குவதை அறிய முடிகின்றது. இதனால் எவ்வுயிர்க்கும் காதலுணர்வு நிறைந்திருப்பதை அறிந்து போற்றும் தலைவனின் அறிவையும் பண்பையும் காணலாம்.

தலைவி காதல் நோயினால் இறந்து விடாமல் இருப்பதற்காக விரைந்து தேரை ஓட்டி வந்து அவளைத் தந்தனை[266] நீ வாழ்க[267] என்று கூறி தலைவன் தேரோட்டியின் செயல் கண்டு மகிழ்ந்து மனதார வாழ்த்துகிறான்.

இக்கூற்றுகள் இல்லற வாழ்வில் ஈடுபட்டிருக்கும் தலைவன் தலைவியின் உண்மையான பேரின்பக் காதல் உணர்வை வெளிப்படுத்துகின்றன. தலைவன் தன் புதல்வன் மீது கொண்ட அன்பைப் புலப்படுத்துகிறது. தலைவியின் மன உணர்வுகள் தலைவன் கூற்று மூலமாகத் தான் தெரிகிறது. காரணம் தலைவன் மனத்தில் வேறு எண்ணமின்றி விரைந்து தலைவியைக் காணப் போகிறோம் என்ற ஒரு சிந்தனையே இருக்கிறது. மாறாகத் தலைவி கார்ப்பருவம் கண்டு தலைவன் வருவானோ வரமாட்டானோ என ஐயுற்று ஆற்றாது தோழியிடம் புலம்பும் கூற்றுகள் அதிகமாக இடம் பெற்றுள்ளமை நோக்கத்தக்கது.

தலைவன் வினைமுடித்துத் திரும்பி வரும்பொழுது தனது மனநிலையையும் உணர்வையும் வெளிப்படையாகக் கூறாமல் தலைவியின் நினைவால் தனக்கு ஏற்பட்டதாக உணர்த்துகிறான். கார்கால மாலைப்பொழுதில் தனித்திருக்கும் தலைவியை அடைய எண்ணும் அவனது துடிப்பும் வெளிப்படுகிறது.

வினைமேற் செல்லும் காலத்துக் கூறும் கூற்று ஒன்று மட்டுமே காணப்படுகிறது. களவில் பிரிந்து வரும் தலைவன் கூற்றுகள் 2 காணப்படுகின்றன. ஆனால் கற்புக் காலக் கூற்றுகள் மிகுதியாக உள்ளன. இதன் மூலம் தலைவன் தலைவியின் இல்லற மாண்பும், போர், பொருள் ஆகிய இவ்விரு வினையினும் காதலுக்கு முதலிடம் தர நினைக்கும் தலைவனின் மனநிலையும் புலனாகின்றன.

### 4.2.4 பாணனிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

தலைவன் பாணனிடம் கூறும் கூற்றுகளாக, நற்றிணையில் மருதத் திணையில் மதுரை ஓலைக் கடையத்தார் நல்வெள்ளையார், உறையூர்க் கதுவாய்ச் சாத்தனார் ஆகிய 2 புலவர்களும் தனித்தனியே பாடிய 2 பாடல்களும், ஐங்குறுநூற்றில் முல்லைத் திணையில் பேயனார் பாடிய 3 பாடல்களும் என 5 பாடல்கள்[268] உள்ளன.

போர்ப் பாசறையிலிருந்து கொண்டு தலைவி மாட்டுப் பாணனைத் தூதாக விடுக்கும் தலைவன், துன்பமுறும் தலைவியின் செயலற்ற மனத்திற்கு உதவியாக நீ சென்று அங்குத் தங்கினால் அங்கு என் தேர் வரக் காண்பாய்'[269] எனக் கூறுகிறான்.

தலைவியின் தூதனாக வந்த பாணனிடம் தலைவன் தன் தலைவி துன்பமுற்றுத் தனக்குக் கூறியனுப்பும் செய்தி தன்னுடைய தனிமைத் துன்பத்திற்கு மருந்தாக இனிமை அளிப்பதால் அதைக் கூறுமாறு வேண்டுகிறான்.[270]

தலைவன் தன் புதல்வனொடு சென்றால் தலைவியின் ஊடல் தீரும் என எண்ணிச் செல்வதுண்டு. இருப்பினும் தலைவி தான் கொண்ட ஊடல் தீராமல் இருக்கிறாள். தலைவன் தொடர்ந்து அவள் ஊடல் தீர்க்கும் முயற்சியில் ஈடுபடுகிறான். அதனால் குடிக்குதவியாக ஆண்குழந்தையை ஈன்று முதியவள் ஆனாயோ என அவள் தூக்கத்திற்குக் காரணம் கேட்கிறான். ஆனால் அவள் தான் இன்னமும் இளையள் என்ற பொருளில் ஊடல் தீர்ந்து கூடல் நிகழ நாணத்துடன் முறுவல் செய்கிறாள்.[271]

பாணன் தலைவனுக்குத் தூதனாகவும், வாயிலாகவும் விளங்கி உதவி செய்கிறான். எனவே தலைவன் தன் தேவை கருதியே அவனிடம் கூற்றுகள் நிகழ்த்துகிறான். அதனால் தலைவன் பாணனிடம் நிகழ்த்தும் கூற்றுகள் குறைவாகவே காணப்படுகின்றன.

### 4.2.5 கண்டோரிடம் நிகழ்த்தும் கூற்று

தலைவன் கண்டோரிடம் நிகழ்த்தும் கூற்று நற்றிணையின் முல்லைத் திணையில் வண்பரணர் பாடிய ஒரு பாடலில் உள்ளது.

வினைமேற்கொண்டு தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன் வினைமுற்றி மீளும்போது இடைச்சுரத்துக் கண்டோரிடம், தான் வினைமேல் சென்றபோது கண்ணீர் சிந்தி இருந்த தலைவி வினைமுற்றி மீண்டபோது தனக்கு விரும்பி விருந்து படைக்கும் தொழிலில் ஈடுபட்டாள்; அந்த இருநிலைகளை இதற்கு முன்பு தான் பெற்றதில்லை எனக் கூறி அவள் நலம் பாராட்டி மகிழ்கிறான்.[272]

தலைவன் கற்புக் காலத்துத் தன் தலைவியைப் பிரிவுழி தன் நெஞ்சின் ஆற்றாமையைக் கண்டோரிடம் கூறுகின்றான். இக்கூற்றுகளும் மிகக் குறைவு.

### 4.2.6 உழையரிடம் நிகழ்த்தும் கூற்று

ஐங்குறுநூற்றின் பாலைத்திணையில் ஓதலாந்தையார் பாடிய 2 பாடல்கள்[273] உள்ளன.

தலைவியைப் பிரிந்து வருவதால், தலைவன் கடந்துவரும் காடு குளிர்ந்து தோன்றினும் அது வெப்பம் உடையதாகவே விளங்குகின்றது. இடைச்சுரத்தில் மீண்டுவரும் நெஞ்சை நொந்து தலைமகன் பக்கத்தார்க்குக் கூறும்போது தலைமகளால் கவர்ந்து கொள்ளப் பெற்ற தன் நெஞ்சம் தன்னுடன் வாராமல் மீண்டு செல்வதை எண்ணுமோ[274] என்கிறான்.

தலைவன் தலைவியைப் பிரிவதால் துன்பம் மிகக் கொள்கின்றான் என்பதுடன் அத்துன்பத்தை வழிப்போக்கின்போது ஆற்றிக் கொள்ள பக்கத்தில் உள்ளாரிடமும் கூறிக் கொள்கின்றான்.

### 4.2.7 தலைவன் நெஞ்சிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

#### 4.2.7.1 தலைவியைப் பிரிய எண்ணும் இடத்து

இக்கூற்றில் நற்றிணையில் 12 பாடல்களும், குறுந்தொகையில் 10 பாடல்களும், அகநானூற்றில் 19 பாடல்களும் என மொத்தம் 41 பாடல்கள்[275] உள்ளன. பாலைத் திணையில் 39 பாடல்களும்[276] நெய்தல், குறிஞ்சி ஆகிய திணைகளில் முறையே ஒரு பாடலும் உள்ளன.[277]

இளநாகனார், மருதன் இளநாகனார், மதுரை மருதனிளநாகனார் என்னும் பெயர்களால் வழங்கப்படுபவர் 5 பாடல்களும்[278] எயினந்தை மகள் இளங்கீரனார், பாலை பாடிய பெருங்கடுங்கோ ஆகியோர் முறையே 3 பாடல்களும்,[279] இளங்கீரனார், சிறைக்குடி ஆந்தையார், பெயர் தெரியாத புலவர் ஆகியோர் முறையே 2 பாடல்களும்,[280] பாலத்தனார், பெருங்கண்ணனார், சல்லியங்குமரனார், விற்றூற்று வண்ணக்கண் தத்தனார், கழார்க்கீரன், எயிற்றியார், மதுரை ஈழத்துப் பூதந்தேவனார், உகாய்க்குடிக்கிழார், கருவூர் ஓத ஞானி, பரூஉ மோவாய்ப் பதுமன், தூங்கலோரி, காலெறி கடிகையார், உருத்திரன், காவிரிப்பூம்பட்டினத்துச் சேந்தன் கண்ணன், படுமரத்து மோசிக் கொற்றன், மதுரை ஆசிரியர் நல்லந்துவனார், பெருந்தேவனார், எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார், கடியலூர் உருத்திரங்கண்ணனார், ஒரோடோகத்து கந்தரத்தனார், கல்லாடனார், மருங்கூர் பாகைச் சாத்தன் பூதனார், மதுரைத் தத்தங் கண்ணனார், மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார், மாறோக்கத்துக் காமக்கனி நப்பாலத்தனார் ஆகியோர் முறையே ஒரு பாடலும்[281] பாடியுள்ளனர்.

கற்பு வாழ்வில் அறச்செயல் முக்கிய பங்கேற்பதால் அச்செயலுக்கான பொருள் தேடல் மிகுதியும் பேசப்படுகிறது. 'பொருளிலார்க்கு இவ்வுலகில்லை' எனும் திருவள்ளுவர் கருத்து இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.[282]

> *''கடமைகளைச் செய்து குடும்பம் நடத்துவதற்குப் பொருள் வேண்டும். அதனை வேற்றூர் சென்றும், வேற்றுநாடு சென்றும் ஈட்டுவதற்குத் தலைவியைப் பிரிவான் தலைவன். இப்பிரிவு இன்றியமையாத உலகியல் அறமாகும்''* [283]

என்கிறார் வ.சுப. மாணிக்கம் அவர்கள்.

*"ஆடவர்கள் சமுதாய அரங்கில் பெரும்பங்கு வகிப்பவர்கள்; குடும்பத்தில் அவர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்ட ஒன்றே என்றாலும்; தலையாயது என்பதை மறுப்பதற்கில்லை. இல்லறம் என்னும் தேர் நல்ல முறையில் இயங்குவதற்கு அடிப்படையாக - அச்சாணியாக விளங்கும் பொருளை யீட்டுவது ஆடவர்க்குரிய மிகப் பெரும் பொறுப்பாகின்றது"* [284]

என்று கு. மோகனராசு கூறுகிறார்.

இவ்வாய்வாளர் கூற்றுகளால் பொருளின் இன்றியமையாமையும் அவற்றை ஈட்டுதல் சங்க இலக்கிய ஆடவனின் மிகப் பெரிய பொறுப்பு என்பதையும் நன்கறியலாம்.

#### 4.2.7.2 பின்னும் பொருள் கடைக் கூட்டிய நெஞ்சிடம்

முன் ஒரு காலத்துப் பொருள்வயிற் பிரிந்த தலைவன் பின்னும் பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்குச் சொல்லுமிடத்து, மாலை நேரத்தில் தலைவி விளக்கேற்றும் செயல் எண்ணித் தான் வருந்தியதையும்,[285] திங்களைப் பார்த்து அந்நிலையிலேயே நின்று காதலியை நினைத்துத் தான் வருந்தியதையும்,[286] இடைச் சுரத்தில் தலைவியின் நலம் விரும்பி மீளலுற்றதையும்,[287] கூறித் தன் செலவைத் தவிர்க்கிறான்.

மேலும் முன்பு ஒருமுறை தலைவியைப் பிரிந்து தன்னைத் திரியச் செய்த உள்ளம் திரும்பவும் அவ்வாறு திரியும்படி தூண்டுதல் தகுதியன்று எனவும்,[288] நாளது செலவு, மூப்பு வருதல், காமத்தின் இயல்பு ஆகியவற்றை அறியாமல் காட்டு வழியைக் கடந்து தலைவி யின் குணங்களை நினைத்தால் மேற்கொண்டு எவ்வாறு தலைவியைப் பிரிந்து செல்வாய்[289] எனவும், தலைவியின் இன்பத்தைக் காட்டிலும் சிறந்த பொருள் காணாத என்னைப் பொருள் ஈட்ட வற்புறுத்தினால் அவள் குணங்கள் காட்டில் செல்லும்போது துன்புறுத்தும்[290] எனவும் தலைவன் தன் நெஞ்சிடம் இடித்துக் கூறித் தன் பிரிவை நீக்குகிறான்.

தலைவன் பொருள் கடைக்கூட்டிய நெஞ்சினை நெருங்கி, செல்வத்தை உலகு அளக்கும் கருவியாகக் கொண்டு ஏழுமுறை அளக்கும் அளவுக்கு அதைப் பெற முடிந்தாலும் விரும்பமாட்டேன். என் காதலியின் குளிர்ந்த இனிய பார்வையில் யான் ஆற்றலழிந்தேன் என்கிறான்,[291] பட்டினப்பாலையில்

*"முட்டாச் சிறப்பின் பட்டினம் பெறினும்*
*வாரிருங் கூந்தல் வயங்கிழை ஒழிய*
*வாரேன் வாழிய நெஞ்சே"* [292]

எனக் காவிரிப் பூம்பட்டினத்தையே தனக்குரியதாய்ப் பெற்றாலும் தலைவியைப் பிரிந்து செல்ல விரும்பவில்லை என்கிறான் தலைவன்.

தனக்கு அரியவளாகியத் தலைவியை விட்டுத்தான் பிரிய மாட்டேன் எனவும், பொருள் தேடிச் செல்வதற்குத் துணையாகத் தலைவியும் வருவாளோ அல்லது எம்மை மட்டும் தனியே செலுத்துகிறாயோ சொல்வாயாக[293] எனவும், இனிய உறுப்பு நலன்களும், தான் அணுகுவதற்கு இனிமையும் உடைய தலைவியைப் பிரிந்து செல்வது தனக்கு அரிது[294] எனவும், தலைவியைப் பிரிந்து செல்லாமல் அவள் உடம்பைக் கூடி இன்புறும் கார்ப்பருவத்தில் தம் தலைவியைப் பிரிந்து செல்லும் அறிவில்லாதவர் எம்மால் இரங்கத்தக்கவர்[295] எனவும், பொருளீட்டும் பொருட்டுத் தான் பிரிந்து சென்றால் தலைவி உயிர் வாழ மாட்டாள்[296] எனவும், பொருளை விடத் தலைவியே சிறந்தவள்[297] எனவும், தலைவியுடன் தங்கி இருக்கும் பொழுது இனியது; எனவே அவளின்றித் தனித்துத் தங்கியிருத்தல் இயலாதது[298] எனவும், தலைவியைப் பிரிந்து சென்றால் அவள் கலங்கிய பார்வையையும் வெறுப்பையும் ஆற்றமுடியாது[299] எனவும் தலைவி தனித்திருக்கும் வலிமையுடையவள் என அறிந்தால் அவளை நீங்கிச் செல்க[300] எனவும், இன்பம், துன்பம், புணர்ச்சி, பிரிவு என்பவை மாறுபட்டவை என்பதை உணராமல் பிரிந்து காட்டைக் கடந்து செல்லும்போது என்னை எண்ணுவாயோ; பொருளாசைத் தூண்டலால் தலைவியைப் பிரிந்து நீங்குவார் போல் நான் செய்ய மாட்டேன்[301] எனவும் கூறிப் பொருளின் பொருட்டுப் பிரியும் தன் நெஞ்சின் செலவைத் தவிர்க்கிறான்.

மேற்கண்டவாறு தன் பிரிவை நீக்கும் தலைவன் தலைவியைத் தன்னுடன் அழைத்துக் கொண்டு போனால் தான் செல்லும் பாலை வழி அரியவையல்ல[302] எனத் தன் நெஞ்சிற்குக் கூறித் தன் பிரிவிற்கு இசைவளிக்கத் துணிகிறான்.

#### 4.2.7.3 **பொருள் வலித்த நெஞ்சிடம்**

பொருள் வலிக்கப்பட்ட நெஞ்சிற்கு இளமை பயனின்றிப் போகுமாறு தலைவியைப் பிரிந்து சென்றால் அது இறப்பிற்குச் சமம்[303] எனவும், தலைவி என் பொருட்பிரிவிற்கு உடன்படாததால் யான் பிரிந்து செல்லேன்[304] எனவும், தலைவியுடன் சேர்ந்து உறங்கும் இனிய உறக்கம் இல்லாமல் போகுமாறு அவளைப் பிரிந்து செல்லமாட்டேன்[305] எனவும் கூறும் தலைவன் தலைவியை நினைத்துப் பிரிந்து சென்றால் துன்பம் மிகுந்த காடுகளும் இனியவாகும்[306] எனப் பிரிவிற்கு உடன்படுவான் போலக் கூறுகின்றான்.

தலைமகன் தன் நெஞ்சிடம் வள்ளல் ஓரியின் கொடைப் பொருள் தலைவியோடு வாழும் வாழ்விற்கு இணையாகாது[307] எனவும், தலைவியைத் தன் நெஞ்சம் பிரிய நினைந்தால் அவளைக் காட்டிலும் ஏதோ அரியதொன்றை அது அடைந்துவிட்டது போலும், ஆயினும் யான் உன்னுடன் வாரேன்[308] எனவும், தான் பிரிந்து சென்றால் தலைவியின் மாமை நிறம் அழகு கெட்டுவிடும்[309] எனவும், தலைவி என் பிரிவை உணர்ந்து அது

அறமாகாது என்னும் குறிப்பில் தன் புதல்வனின் தலை மாலை வாட்டம் அடையுமாறு வெப்பத்துடன் மோந்தாள்; நான் அருகில் இருக்கும்போதே இவ்வாறு வருந்துபவள் பிரிந்து சென்றால் உயிர் வாழாள்[310] எனவும், கொடிய பிரிவை எண்ணிச் செல்லுமிடத்தில் சிறந்த பொருளை எளிதாய்ப் பெறுவதாயினும் இவளுடைய கண்களில் கண்ணீர் தோன்றி அவளையும் நம்மையும் வருத்தும்; ஆதலால் இவளைப் பிரிவதைக் கைவிடுக[311] எனவும், காட்டைக் கடந்து சென்று பொருளை ஈட்டும் வலிமை பெற்றிருப்பாயானால் தலைவியைத் தேற்றிவிட்டுப் பிறகு செல்க[312] எனவும் கூறித் தன் செலவினைத் தவிர்க்கிறான்.

தோழியால் பொருள் வலிக்கப் பெற்ற தலைவன் தலைவியை அடைந்து ஆற்றாத நெஞ்சிடம் நெருங்கிச் சொல்லிச் செலவு நீங்குகிறான். அச்சம் தரும் அரிய பாலை வழியைக் கடந்து பொருள் தேட வேண்டும் என நினைத்தும் இவளது அழகிய தோள்களைப் பார்த்தும் ஒரு பக்கமும் உறுதி கொள்ளாமல் நிற்கிறாய்; பொருள் தேடிவரச் சொல்லும் தோழியின் மொழி கேட்டு நாம் மலை வழியைச் சேர்ந்த பின்னர், தலைவியைப் பார்க்க முடியாது அல்லவா[313] எனக் கூறிப் பிரிவினை நிறுத்திக் கொள்கிறான்.

### 4.2.7.4 இடைச்சுரத்து நின்ற தலைவன் நெஞ்சிடம்

இத்துறையில் நற்றிணையில் 7 பாடல்கள், குறுந்தொகையில் ஒரு பாடல், ஐங்குறுநூற்றில் 6 பாடல்கள் அகநானூற்றில் 26 பாடல்கள் என மொத்தம் 40 பாடல்கள் உள்ளன.[314] அனைத்துப் பாடல்களும் பாலைத் திணையிலேயே வந்துள்ளன.[315]

எயினந்தை மகன் இளங்கீரனார், ஓதலாந்தையார் ஆகியோர் முறையே 6 பாடல்களும்,[316] மருதன் இளநாகனார், மதுரை மருதன் இளநாகனார் என அழைக்கப்படுபவர் ஒருவர் 4 பாடல்களும்,[317] குடவாயிற் கீரத்தனார் 2 பாடல்களும்,[318] முடத்திருமாறன், இளங்கீரனார், இளவேட்டனார், தேய்புரிப் பழங்கயிற்றினார், மதுரைப் பள்ளி மருதங்கிழார் மகனார் சொகுத்தனார், சிறைக்குடி ஆந்தையார், பொருந்தில் இளங்கீரனார், காவன் முல்லைப் பூதனார், மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார், குன்றியனார், ஆலம்பேரி சாத்தனார், நக்கீரர், கல்லாடனார், கடுந்தொடைக் காவினார், காவிரிப் பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார், தொண்டியாமூர்ச் சாத்தனார், பரணர், இருங்கோன் ஒல்லையாயன் செங்கண்ணனார், பாலை பாடிய பெருங்கடுங்கோ, நரைமுடி நெட்டையார், பாண்டியன் ஏனாதி நெடுங்கண்ணனார், மதுரை இளங்கௌசிகனார் ஆகியோர் முறையே ஒரு பாடலும்[319] பாடியுள்ளனர்.

பொருள் வயிற் பிரிந்த தலைவன் இடைச் சுரத்தில் தலைவியை நினைத்து வருந்தி, ஆள்வினை மேற்கொண்டு மேற்செல்வது அல்லது திரும்புவது ஆகியவற்றில் ஏதாவது

ஒன்றில் துணிவுகொண்டு எடுக்கும் முடிவை உரைக்குமாறு வேண்டுகிறான்.[320] தலைவன் பொருள் தேடச் செல்லும் பிரிவைக் கேட்டவுடன் வருந்திக் கூந்தலால் முகத்தை மறைத்து ஏங்கி அழுத அவள் பார்வைகள் சுரத்திலும் தன்னைத் தொடர்கிறது[321] என்றும், தலைவன் சென்ற கடமை முடிந்தநிலையில் தலைவியின் துன்பத்தைத் தீர்ப்பதற்கு அவளிடம் செல்வோம்; கடமையை இடையில் விடக்கூடாது என்பதால் இடித்துரைத்து விரைவாகப் போகாதே; என இருவேறு நிலையில் கூறும் நெஞ்சின் செயலால் என் உடம்பு அழிந்து போக வேண்டியதுதான்[322] என்றும், இடைச்சுரத்தில் அவளை நினைத்து மகிழ்ந்தாலும் அவள் கிடைப்பதற்கரியவள்[323] என்றும், கொடிய பாலை வழியில் உருவெளித் தோற்றம் கண்ட தலைவன் அதை உணராமல் என் காதலி இங்கு எவ்வாறு வந்தாள்[324] என்றும், தலைவி என் இனிய உறக்கத்தைக் கவர்ந்து கொண்டதனால் நான் எவ்வாறு ஆற்றுவேன்[325] என்றும் தன் நெஞ்சிடம் கழறுகிறான்.

தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன் இளவேனிற் பருவத்தை உணர்ந்த தன் நெஞ்சிடம் தலைவி குயில் ஒலி கேட்கும் தோறும் நாம் வாராமையால் நம்மை நினைத்துப் பெரிதும் வருந்தி அழுவாள்; ஆதலால் அவளைக் காண மீள வேண்டும்[326] என்று கூறுகிறான்.

தோழி தன்னை வற்புறுத்தியும் தலைவியை உடன் அழைத்துச் செல்லாமல் தனித்துப் பிரிந்து சென்ற தலைவன் வழியின் தீமையைக் கண்டு அவள் தன்னுடன் வந்திருந்தால் அவள் மிகவும் இரங்கத் தக்கவள்[327] என்று தன் நெஞ்சிடம் கூறி அமைதியுறுகிறான்.

சுரத்திடை மீளக் கருதிய நெஞ்சிடம், தலைவி நம்மை எண்ணி வருந்துமாறு சுரத்திடை நெடுந்தொலைவு வந்துவிட்ட பிறகு அவளை நினைப்பது சரியன்று[328] என்றும் தலைவி அறிவுறுத்தியும் பொருளின் பொருட்டுப் பிரிந்த தலைவன் மீண்டும் தலைவியிடம் செல்ல எண்ணாமல் அவள் மகிழுமாறு பொருளை ஈட்டிச் செல்ல என்னுடன் வா[329] என்றும் தலைவன் இடித்துரைக்கிறான்.

சுரத்திடை தலைவியை நினையும் நெஞ்சிடம் வறண்ட காட்டையும் மலை நாடுகளையும் கடந்து சென்றாலும் தலைவியின் அன்பு நிறைந்த குணங்கள் நினைவில் தோன்றி வருத்துவனவாகவும் உள்ளன[330] என்றும், இடைச்சுரத்தில் தான் அடைந்த வெம்மை தலைவியைத் தான் நினைக்குந்தோறும் குளிர்ந்தனவாய் உள்ளது[331] என்றும், தலைவியுடன் இன்புற்று வாழ்ந்த போது பொருளீட்டப் பிரிந்த உள்ளம் பின்னர் துன்புற்றதைக் கண்டு அவளிடம் நீ செல்லக்கருதின் செல்; அவளை முயங்கிய பின்னர்

எம்மை நினைப்பாய்[332] என்றும், நாம் பாலைவழியில் துன்புற்றிருக்கும் இந்த நேரத்தில் தலைவியின் நெற்றியில் பீர்க்கம் பூப்போல் பசலை உண்டாகி விட்டதோ என்றும் இரங்கியும் இடித்தும் வருந்தி உரைக்கிறான்.

வினைமேற் சென்ற தலைவன் கொடிய சுரத்திடை தன் நெஞ்சினைப் பார்த்து, தலைவி கொடிய சுரத்தில் வந்த நம் பிரிவை எண்ணி வருந்துவாள். ஆதலால் மேலும் செல்வதைக் கைவிடுக[333] என்றும், பொருளின் பொருட்டு இடைச்சுரத்து நெடுந்தொலைவு பிரிந்து வந்த பின்பு மேற்கொண்ட செயலை விலக்கினால் பிறரால் இகழப்படுவாய்; வினைமுடிந்த பிறகு அவளைப் பலமுறையும் தழுவிக் கொள்வோம்; ஆனால், என்னுடன் விரைந்து வா[334] என்றும், அழியும் பொருளை விரும்பி தலைவியின் துணையின்றிப் பிரிந்து வந்த நீ இப்போது வருந்துவது அறியாமையாகும்[335] என்றும், வேங்கடமலையைக் கடந்து வந்த பின்பும் தலைவியின் குணங்கள் நம்மை வந்து சேர்ந்து வருத்தின[336] என்றும், மலைவழியில் சென்று பொருளும் ஈட்டாமல் வறுமை உண்டாகும் என்ற அச்சத்தால் தலைவியின் வீட்டிலும் தங்காமல் செல்லுதல் தவிர்தல் ஆகிய இரண்டில் ஒன்றைச் செய்யாமல் வருந்துகிறாய்[337] என்றும், நம்மை எண்ணுவதால் பசலை பாய்ந்து வருந்தும் தலைவி இரங்கத் தக்கவளாவாள்[338] என்றும், நீ காட்டைக் கடக்க முடியாமல் திரும்பிச் செல்ல எண்ணினால் என் துன்ப நிலையை அங்குச் சென்று அவளுக்குச் சொல்வாயாக[339] என்றும், தலைவி நம் பிரிவைக் கேட்டுத் துன்புற்று கண்ணீர் வடித்து நும் செயல் நலம் பயப்பதாக எனப் பெருமூச்சுடன் கூறினாள்; அத்தகைய அவளை மறந்து உன்னுடன் தங்கியிருப்பது எனக்கு அரியதாக உள்ளது[340] என்றும், வருந்தியும் இடித்தும் ஏவியும் அறிவுறுத்தியும் உரைக்கிறான்.

### 4.2.7.5 பாசறைத் தலைவன் நெஞ்சிடம்

இத்துறையில் நற்றிணையில் ஒரு பாடலும், ஐங்குறுநூற்றில் 10 பாடல்களும், அகநானூற்றில் 6 பாடல்களும் என மொத்தம் 17 பாடல்கள்[341] உள்ளன.

குறிஞ்சித் திணையில் ஒரு பாடலும்[342] முல்லைத் திணையில் 16 பாடல்களும்[343] இடம் பெற்றுள்ளன.

பேயனார் 10 பாடல்களும்,[344] மதுரை மருதன் இளநாகனார், ஆவூர் மூலங்கிழார், மதுரை எழுத்தாளன், மதுரைத் தமிழ்க்கூத்தன், நாகன் தேவனார், மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார், வடம வண்ணக்கண் பேரிசாத்தனார், இடைக்காடனார் ஆகியோர்[345] முறையே ஒரு பாடலும் பாடியுள்ளனர்.

போர்ப் பாசறையிலிருக்கும் தலைவன் தலைவியின் தூதர் உரைத்த செய்தி கேட்டு, அவள் வருந்துமாறு பிரிந்த எனக்கு அவள் அனுப்பிய சொற்கள் கார்கால மழையுடன் சேர்ந்து துன்பத்தைத் தருவனவாயின. இத்தகைய என் துன்பத்தை அவள் அறிந்தால் நல்லது'[346] என்று இரங்கிக் கூறுகிறான்.

வேந்தன் தனது சினம் தணிவானாயின், மகனுக்குத் தாயானவள் விருந்தைப் பெற்று இன்பம் அடைவதற்கு உரியவள் ஆவாள்[347] என்றும், தான் வினைமுடித்துப் பிறைத் திங்கள் போன்ற நெற்றியையும், தோள்களையுமுடைய தலைவியைக் காண்போம்[348] என்றும் மகிழ்ந்து உரைக்கின்றான். மாலைப் பொழுதினை எண்ணும் தோறும் உருகுகின்ற மனத்திடம், புகழ் பெற்ற தலைவி தனித்து வருந்துமாறு பிரிந்து வந்த நெஞ்சே! என்னையும் விரைந்து இங்கு வரும்படி செய்து, இப்பொழுது வருந்துவது ஏன்?[349] என்று புலந்து உரைக்கிறான்.

போர் மேற்சென்ற தலைவன் மீண்டு வருவதாகக் கூறிய பருவ வரவின்கண், 'எம் தலைவி தனியாய் உள்ளாள். யாமோ இரவில் மன்னனின் பாசறையில் உள்ளோம் அவள் என்னாவாளோ நான் என்ன செய்வேன்[350] என்று தலைவியை நினைந்து வருந்தி உரைக்கின்றான். மேலும் தனக்கு மன்னன் தரும் சிறப்பையும் விடுத்து தலைவியின் பின் செல்வோம்; பசலை பாய்ந்த மேனியளாய் எத்தகைய துன்பத்தைத் தலைவி அடைவாளோ[351] என அவளுக்கு இரங்கிக் கூறுகிறான். தான் மன்னன் பாசறையில் துன்பமுற, இதனை அறியாத தலைவி, 'நமக்கு அருளாத தலைவர் அறமற்றவர் என நொந்து கொள்வாளோ[352] எனத் தன் நெஞ்சினை நோக்கிப் பெரிதும் இரங்கிக் கூறுகிறான்.

### 4.2.7.6 வினைமுற்றி மீளும் தலைவன் தன் நெஞ்சுக்கு

இத்துறையில் நற்றிணையில் ஒரு பாடலும், குறுந்தொகையில் ஒரு பாடலும், ஐங்குறுநூற்றில் 2 பாடல்களும், அகநானூற்றில் 3 பாடல்களும் என மொத்தம் 7 பாடல்கள் உள்ளன.[353]

முல்லைத் திணையிலும், மருதத் திணையிலும் முறையே ஒரு பாடலும்[354] பாலைத் திணையில் 5 பாடல்களும்[355] இடம் பெற்றுள்ளன.

ஓரேருழவனார், ஓரம்போகியார், ஓதலாந்தையார், மதுரைப் பேராலவாயார், கணக்காயனார் மகனார் நக்கீரனார், மதுரை அளக்கர் ஞாழலார் மகனார் மள்ளனார், பொருந்தில் இளங்கீரனார் ஆகியோர் முறையே ஒரு பாடலும்,[356] பெயர் தெரியாத புலவர் ஒரு பாடலும்[357] பாடியுள்ளனர்.

வினைமுற்றி மீளும் தலைவன், தான் எண்ணிச் செல்லும் செயல் முடிந்ததும் வருவதாகக் கூறியதை எண்ணிப் பார்த்து, தன் இல்லத்தின் சுவரில் வாழும் பல்லி தன் வரவைத் தலைவிக்கு மாலைப் பொழுதில் தெரிவிக்கும் போலும் எனத் தன் நெஞ்சிடம் கூறி மகிழ்வான்.[358] மேலும் தான் வினைமுடித்து மீள்வதைத் தன்னை எதிர்பார்த்திருக்கும் தலைவியிடம் அப்பல்லி கூறி அறிவுறுத்துமோ[359] என ஐயுற்றும் வினவுகிறான். மேலும், வழியிடை வருந்திய தன் நெஞ்சிடம் தலைவன் இனி நம் பெரிய மாளிகையில் தலைவியைப் பாராட்டி அணைந்து மகிழ்வாயாக என ஆறுதல் செய்கிறான்.[360]

4.2.7.7 **வாயில் நேர்ந்துழி நெஞ்சிடம்**

இத்துறையில் நற்றிணையில் ஒரு பாடலும், ஐங்குறுநூற்றில் 3 பாடல்களும் என மொத்தம் 4 பாடல்கள்[361] உள்ளன.

மருதத் திணையில் 3 பாடல்களும்[362] நெய்தல் திணையில் ஒரு பாடலும்[363] உள்ளன. ஓரம்போகியார் 2 பாடல்களும்,[364] மாங்குடி கிழார், அம்மூவனார் ஆகியோர் முறையே ஒரு பாடலும்[365] பாடியுள்ளனர்.

விருந்தினரை வாயிலாகப் பெற்றுத் தன் இல்லத்துள் புகுந்த தலைவன் அரும்பாட்டுடன் சமைத்திடும் தலைவி, தலைவனைக் கண்டு புன்முறுவலிக்கக் கண்டு இத்தகைய விருந்து எமக்கு அடிக்கடி வந்தால் அவள் என்மீது கொண்ட சினம் நீங்கி யாம் காணுமாறு புன்முறுவல் செய்வாள்[366] எனக்கூறி மகிழ்கிறான்.

மேலும் அவள் ஊடல் நீங்கி விருந்தோம்பியதைக் கண்ட தலைவன் அவளுடைய இல்வாழ்க்கைச் சிறப்பைக் கண்டு, வைகறைப் பொழுதில் மலரும் நெய்தல் மலர்போல் என் தலைவியின் கண்கள் அழகு மிக உடையன ஆயின[367] எனவும், அவள் பொய்கையில் மலர்ந்த ஆம்பல் மலரைவிடக் குளிர்ச்சியானவள்[368] எனவும், தான் அடைந்த நோய் நீங்கியதற்குரிய மருந்தான பருத்த தோள்களையுடையவள் ஆனாள்[369] எனவும், கூறித் தலைவியைப் பாராட்டுகிறான்.

கற்பு நிலையில் தலைவன் நெஞ்சிடம் கூறும் கூற்றுகள் நேரிட்டுக் கூறுவதாக மட்டுமே அமைகின்றன. பொருள் மேற்கொண்டும், மன்னனின் போர் வினை மேற்கொண்டும் பிரியும் தலைவன் தன் தலைவியின் நினைவாகவே உள்ளான். தலைவன் பொருள் வயிற் பிரிவில் நெஞ்சிடம் கூறுபவை பெரும்பாலும் பாலைத் திணையிலும் வினைமேற் சென்று பாசறையில் இருந்து கூறும் கூற்றுகள் பெரும்பாலும் முல்லைத் திணையிலும் அமைந்துள்ளன.

பொருள் வயிற் பிரியக் கருதும் நெஞ்சைத் தலைவியின் அருமையை எடுத்துக் கூறியும் இடித்துரைத்தும் பொருள்வயிற் பிரிவைத் தடுக்கிறான். தலைவியைப் பிரிந்த பின்னும் பொருள் ஈட்டி மீண்டு வரும் காலத்தும் தலைவியையே எண்ணி நிற்கிறான். இதனால் அவனது உள்ளம் பொருளால் பிரிவை மேற்கொள்வதைவிட, காதற் சிறப்பை விரும்புவதை அறியலாம். தலைவன் இதனை வலியுறுத்தியே தன் நெஞ்சிடம் மீண்டும் மீண்டும் கூறுவதைக் காணலாம்.

எந்த ஒரு செயலையும் உள்ளம் ஒன்றினால்தான் சரிவரச் செய்ய முடியும். இதனால் தலைவன், பொருட் பிரிவில் உள்ளம் ஒன்றாத நிலையில் பலவாறு புலம்புவதை அறிய முடிகிறது.

## 4.2.8 தலைவனின் பிற கூற்றுகள்

இக்கூற்றுகளாக நற்றிணையில் 2 பாடல்களும், குறுந்தொகையில் 3 பாடல்களும், ஐங்குறுநூறு, அகநானூறு ஆகியவற்றில் முறையே ஒரு பாடலும் கலித்தொகையில் 4 பாடல்களும் என மொத்தம் 11 பாடல்கள்[370] அமைந்துள்ளன.

குறிஞ்சித் திணையில் 7 பாடல்களும்,[371] மருதத் திணையில் 2 பாடல்களும்,[372] முல்லை, பாலை ஆகிய இரு திணைகளில் முறையே ஒரு பாடலும்[373] இடம் பெற்றுள்ளன.

கபிலர் 5 பாடல்களும்,[374] அம்மள்ளனார், பெருங்கௌசிகனார், பரணர், கோப்பெருஞ்சோழன், சிறைக்குடி ஆந்தையார், விற்றூற்று மூதெயினனார் ஆகியோர் முறையே ஒரு பாடலும்[375] பாடியுள்ளனர்.

### 4.2.8.1 உணர்ப்புவயின் வாரா ஊடற்கண்

தலைவி ஊடிய காலத்து அவ்வூடலைத் தான் தெளியச் செய்யவும், தெளியாத தலைவி பின்னும் ஊடினாள். அதைக் கண்ட தலைவன் 'இவள் இனி நமக்குப் பகைவர் போலும் உறவினளாக இருப்பாளோ? அதனால் நீ வருந்துவாய்' [376] எனத் தன் நெஞ்சுக்குக் கூறுவான் போலத் தலைவிக்கு உரைத்தான். மேலும் இத்தலைவியின் பின் இரந்து நிற்பதை விடாமல் இருப்பது வெட்கப்படத்தக்கது; நீ இறந்து படுவாய் போலும்[377] எனத் தன் நெஞ்சிடம் கூறுவானாய் தன் இரங்கத்தக்க நிலையைத் தலைவிக்கு உணர்த்தினான். முன்பு தலைவி தன்னிடம் நாணி நின்றவள், இன்று பலவாறு கூறித் தெளிவிக்கவும் தெளியாது ஊடல் கொள்கிறாள்; இவள் தமக்கு என்ன உறவினளோ[378] எனத் தன் நெஞ்சுக்கு உரைப்பான் போல் அவளுக்கு உணர்த்துகிறான்.

## 4.3 ஆய்வு முடிவுகள்

1. தலைவன் கூற்றுப் பாடல்கள், மிக அதிகமாக அகநானூற்றிலும், அடுத்து ஐங்குறுநூற்றிலும், அதற்கடுத்து நற்றிணையிலும், குறுந்தொகையிலும் மிகக் குறைவாகக் கலித்தொகையிலும் காணப்படுகின்றன.

2. திணைமுறையில் பாலைத்திணை முதல் இடம் பெறுகிறது.

3. குறிஞ்சித் திணையும், முல்லைத் திணையும் சம அளவில் உள்ளன.

4. தலைவன் பிறரிடம் கூறும் கூற்றுகளை விடத் தன் நெஞ்சிடம் கூறும் கூற்றுகள் மிக அதிக அளவில் இடம் பெறுகின்றன. காரணம் தன் ஆற்றாமைக்கு எவரும் வடிகாலாக இல்லாமையே ஆகும்.

5. தலைவன், வினை, பொருள் ஆகியவை பொருட்டுப் பிரியுமிடத்துக் கூறும் கூற்றுகள் மிக அதிக அளவில் பாலைத் திணையில் இடம் பெற்றுள்ளன.

6. போர் வினைமேற்கொண்டு தங்கியுள்ள பாசறைக் கூற்றுகள் அனைத்தும் முல்லைத் திணையில் இடம் பெற்றுள்ளன.

7. ஆனால் வினை முடித்து மீண்டு வருங்கால் தலைவன் தேர்ப்பாகனிடம் நிகழ்த்தும் கூற்றுகள் பெரும்பாலும் முல்லைத் திணையில் இடம் பெற்றுள்ளன.

8. பாடிய புலவர்களில் பேயனார், ஓதலாந்தையார் முறையே முதல் இரண்டு இடத்தைப் பெற்றுள்ளனர்.

9. புறத்திணைத் தலைவன் போர் வினைமேற்கொண்டு செல்லின் தலைவியை நினைத்திடமாட்டான். ஆனால் அகத்திணைத் தலைவன் போர்வினை மேற்செல்லினும் தலைவியின் நினைவாகவே உள்ளான். குறிப்பாக அன்றே வினை முடித்து மாலையே திரும்ப எண்ணுகிறான்.

10. தலைவன், தோழியிடம் இரந்து பின்னிற்கும் போதும், பாங்கனிடம் இடித்துரைக்கும் போதும், பாகனுடன் வினைமுற்றி மீளும்போதும், தலைவியிடம் உடன்போக்கு மேற்கொள்ளும் போதும் கூற்றுகள் நிகழ்த்துகிறான்.

11. ஆனால் அல்லகுறிப்பட்ட இடத்தும், பிரிவின் பொழுதும், இடைச்சுரத்தும், பாசறை இடத்தும் தன் நெஞ்சிடம் கூற்றுகள் நிகழ்த்துகிறான்.

12. நெஞ்சிடம் கூறும் கூற்றில் அவனது தலைவியைப் பற்றிய மனஉணர்வையும் கடமைக்கும் காதலுக்கும் இடையிலான போராட்டத்தையும் காணமுடிகிறது.

13. தோழியிடம் இரந்து பின் நிற்கும் கூற்றுகளில் அவனது காதலின் ஆழமும், அவன் தலைவி மீது கொண்ட உறவும் வெளிப்படுவதைக் காணலாம்.

14. தன் காம உணர்வை இடித்துரைக்கும் பாங்கனிடம் தலைவன் தன் தலைவி மீது கொண்ட காதலையும், விருப்பத்தையும் வெளிப்படுத்தும் நிலையை உணரலாம்.

15. உடன் போக்கிடை தன்னை நம்பிய தலைவியின் மன உணர்வை மதித்து, அவளுடைய அச்சம் நீக்கி, அவளது இசைவிற்கேற்றவாறு உரையாடிச் செல்வதைக் காணலாம்.

16. தலைவியைப் பிரிந்த காலம் முடிவுறும்போது தலைவியின் மனப்போராட்டம் போலன்றித் தன் மனம் தெளிந்த நிலையில், தலைவியைக் காணப் போகிறோம் என்ற ஒரே எண்ணத்துடன் தன் வேட்கையைத் தலைவி வேட்கையாகத் தேர்ப்பாகனிடம் உணர்த்துகிறான்.

17. மடலேற எண்ணம் கொண்டு கூறும் கூற்றுகளில் தலைவி மீதும் அவள் குடும்பத்தார் மீதும் கொண்ட மரியாதையும் அவர்களுக்குத் தன்னால் இழுக்கு ஏற்பட்டு விடக்கூடாது என்று எண்ணுவதும், ஆகிய தலைவனின் உயர்ந்த எண்ணங்கள் எண்ணிப் பார்க்கத் தக்கன.

18. தேர்ப்பாகனிடம் தலைவன் கூற்று நிகழ்த்திய வழி அவன் பிற உயிர்களிடத்தும் அன்பும் இரக்கமும் கொண்ட உறவு உடையவன் என்பதை அறியலாம்.

19. தலைவன் பரத்தையிற் பிரிந்ததாகத் தலைவி ஊடல் கொண்டாலும் தலைவன் நேரிடையாகப் பரத்தையிடம் கூற்று நிகழ்த்தியதற்குச் சான்றில்லை.

20. தலைவன்-தலைவி உறவு வெளிப்படுவது என்பது அவன் தலைவியிடம் நிகழ்த்தும் குறைந்த அளவிலான நேரிடை கூற்றுகள் வழி அல்ல.

களவிலும் கற்பிலும் தலைவன் தலைவி நினைவாகவே உள்ளான். அவன் உள்ளம் முழுவதும் நிறைந்திருப்பது தலைவி பற்றிய எண்ணங்களே ஆகும். தலைவன் தலைவியின் பேரழகை மனமுவந்து பாராட்டுகிறான். ஆனால் தலைவி அவனது எந்தக் கூற்றுக்கும் மறுமொழி உரைப்பது இல்லை.

தலைவன், தலைவியைக் களவிலும் கற்பிலும் பிரிய விரும்பாதவன். ஒருவேளை பிரிய நேரினும் அதன் பொருட்டுத் தன்னைப் பழித்துக் கொள்வது, போன்றவற்றைச் செய்கின்றான்.

தலைவி தனக்கு இயற்கையில் ஊழால் கிடைக்கப் பெற்றமையால் அவள் தாய், தந்தையரைப் பாராட்டுகிறான்.

தலைவியின் அழகு நலத்தைத் தலைவன் உள்ளுவதால் களவில் மலைவழியைக் கடக்கவும் கற்பில் கொடிய சுரத்தைக் கடக்கவும் முடிகிறது. உடன்போக்கில் தலைவி மென்மைக்குத் தலைவன் வருந்துதல் என்பது வழித்துன்பத்தை அவள் பொறுத்துக் கொள்வதைப் பாராட்டுவதாகும்.

பிரிவில் நெஞ்சிடம் கூறும் கூற்றின்வழி அவன் தலைவி மீது கொண்ட உறவின் மேன்மை அறியமுடிகிறது. பரத்தையின் மாட்டுப் பிரியினும் தலைவி நினைவால் மீண்டு வந்து இல்லறமாற்றித் தன் உறவை நிலைப்படுத்துகிறான்.

21. தலைவன் களவில் தோழியைத் தன் வாழ்வை இணைத்திடும் உறவுப் பாலமாகவே எண்ணுகிறான். அவள் மீது நம்பிக்கை கொண்டு தனக்குதவிடும் துணையாகக் கருதுகிறான். கற்பில் தோழி தலைவனைத் தலைவியுடன் இணைத்திடும் வாயிலாகவே விளங்குகிறாள்.

22. பாங்கன் தனக்கு உற்ற துணையாக இருப்பினும் தோழி போல் தனக்கு உதவிடும் துணையல்லன்.

23. பாகன், தலைவனது மன ஓட்டத்தைத் தன் தேரோட்டத்தில் காண்பித்து, அவனால் மகிழ்ந்து பாராட்டுதலைப் பெறுகிறவன் ஆவான்.

24. வினை மேற்கொண்ட பிரிவில் தலைவனுக்கும் தலைவிக்கும் இடையே தூதாய் வருகிறவன் பாணன். மேலும் கற்பில் சிறந்த வாயிலாகவும் வருகிறான்.

25. கண்டோர், தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்த பிரிவின்கண், தன் உளக் கருத்தைக் கூறி ஆற்றிக் கொள்ள வழியிடை உதவிடும் உறவினராகின்றனர்.

# அடிக்குறிப்புகள்

1. தொல். பொருள். களவு. 95
2. தொல். பொருள். களவு. இளம். உரை. பக். 166
3. Tamil Lexicon, vol. IV, Pa. 1788
4. கழகத் தமிழ் அகராதி, பக். 474
5. நற். 39, 155, குறு. 40, 137, 300, ஐங். 175, 293
6. நற். 39, குறு. 40, 300, ஐங். 293
7. நற். 155, ஐங். 175
8. குறு. 137
9. நற். 155, 39, குறு. 40, 137, 300, ஐங். 175, 293
10. நற். 39
11. நற். 155
12. குறள். 1081
13. குறு. 137
14. குறு. 40
15. குறு. 300
16. தொல். பொருள். களவு. 90
17. தொல். பொருள். களவு. 90, இளம். உரை. பக். 161
18. ஐங். 293
19. நற். 192
20. வ.சுப. மாணிக்கம், 'தமிழ்க்காதல்', ப-ள். 82-83
21. சரளா இராசகோபாலன், 'சங்க இலக்கியத்தில் தோழி' பக். 211
22. ஆ. இராமகிருட்டினன், அகத்திணை மாந்தர் ஓர் ஆய்வு' பக்.78
23. Arthur Schper heaven, The world as will and Idea, Metaphysics of the love Sexes Vol. III Pa. 337
24. Leta. S. Holling worth. The psychology of the Aolescent, Sex attraction Pa. 101
25. Christoper Cardwell, Illusion an Realing Pa. 164
26. Sigmund Frued civilization and its discontents, Pa. 27
27. நற். 9, 76, 202, 264, 362, ஐங். 361, 363, அகம். 99, 257
28. மேற்படி
29. நற். 9, 202, அகம். 99

30. ஐங். 361, 363
31. நற். 76, 264, 362, அகம். 257
32. நற். 9:7-9
33. நற். 76:2-5
34. நற். 202
35. நற். 264:6
36. நற். 362
37. ஐங். 361, 363, அகம். 99, 257
38. ஐங். 395, 396
39. ஐங். 395
40. ஐங். 396
41. நற். 75, 101, 146, 213, 349, 377, குறு. 17, 32, 173, 286, 337, ஐங். 176, 178, 185, 256
42. நற். 75, 146, 213, 377, குறு. 17, 32, 173, 286, 337, ஐங். 256
43. நற். 101, 349, ஐங். 176, 178, 185
44. ஐங். 176, 178, 185
45. நற். 75, 101, 146, 213, 349, 377, குறு. 17, 32, 173, 286, 337, ஐங். 256
46. நற். 75
47. நற். 185
48. நற். 101
49. ஐங். 176
50. ஐங். 298
51. ஐங். 178
52. நற். 349
53. ஆ. இராமகிருட்டினன், 'அகத்திணை மாந்தர் ஓர் ஆய்வு' பக். 170
54. அ.ச. ஞானசம்பந்தம், 'அகமும் புறமும்' அகம். பக். 20
55. வ.சுப. மாணிக்கம், 'தமிழ்க்காதல்', பக். 236
56. K.K. Pillai, "A Social History of Tamils" Vol.I Pa. 356
57. பொன். சௌரிராஜன்; 'மடல் ஊர்தலும் மடை மாற்றங்களும்' இருபதாவது கருத்தரங்கு ஆய்வுக் கோவை, தொகுதி - 4 ப-ள் 96-97
58. நற். 152, குறு. 14, 276, கலி. 138, 139, 140
59. குறு. 14, 276

60. நற். 152, கலி. 138, 139, 140
61. கலி. 138, 139, 140
62. நற். 152, குறு. 14, 276
63. நற். 152
64. குறு. 14
65. குறு. 17
66. குறு. 32
67. குறு. 173, 182
68. குறு. 276
69. நற். 377
70. தொல். பொருள். அகம். 52
71. தொல். பொருள். களவு. 99
72. கலி. 139
73. கலி. 140
74. கலி. 138
75. தொல். பொருள். களவு. 102, நச்சர் உரை பக். 21
76. தொல். பொருள். செய். 186, பேரா. உரை பக். 396
77. வ.சுப. மாணிக்கம், 'தமிழ்க் காதல்', பக். 53
78. நற். 95, குறு. 72, 95, 100, 119, 129, 136, 286, 291, ஐங். 172, 191, 255, அகம். 140, 390
79. நற். 95, குறு. 72, 95, 100, 119, 129, 136, 286, 291, ஐங். 255
80. ஐங். 172, 191, அகம். 140, 390
81. குறு. 95, 100, 291, ஐங். 255, 172, 191, அகம். 140, 390
82. நற். 95, குறு. 72, 119, 129, 136, 286
83. குறு. 129
84. குறு. 72
85. ஐங். 172
86. குறு. 119
87. நற். 95
88. குறு. 95
89. அகம். 140
90. அகம். 390
91. குறு. 291, ஐங். 255
92. குறு. 286

93. குறு. 100, ஐங்.191
94. குறு. 136
95. நற். 160, 201, குறு. 58, 132, 156, 184, 206, 272, 280, அகம். 130
96. நற். 160, 201, குறு. 58, 132, 156, 206, 272, 280
97. குறு. 184, அகம். 130
98. நற். 201, குறு. 50, 132, 156, 184, 206, 272, 280, அகம். 130
99. நற். 160
100. நற். 160:1-3; 9-10
101. குறு. 184
102. அகம். 130
103. குறு. 132
104. குறு. 272
105. குறு. 206
106. நற். 201
107. குறு. 58
108. குறு. 156
109. குறு. 280
110. குறள். 1101
111. வ.சுப. மாணிக்கம், 'தமிழ்க் காதல்', பக். 54
112. ஆ. இராமகிருட்டினன், 'அகத்திணை மாந்தர் - ஓர் ஆய்வு' பக். 169
113. தொல். பொருள். களவு. 11 நச்சர். உரை. பக்.29
114. உ.வே.சா. ஐங்குறுநூறு மூலமும் பழையவுரையும், - 175. பக்.77
115. ஆ. இராமகிருட்டினன், 'அகத்திணை மாந்தர் - ஓர் ஆய்வு' பள். 169-170
116. பின்னிணைப்புக் காண்க : தலைவன் கூற்றுகள் - தலைவன் நெஞ்சிடம் கூறும் கூற்றுகள்
117. நற். 77, 140, 190, 265, குறு. 29, 165, 182, 199
118. மேற்படி
119. நற். 265, குறு. 165, 199
120. நற். 77, 140 குறு. 29, 182
121. நற். 190
122. குறு. 199
123. நற். 77
124. நற். 140: 7-9

125. நற். 190:9
126. குறு. 165
127. குறு. 182
128. நற். 265:9
129. குறு. 29
130. நற். 356
131. ஐங். 259, 281, 288, 174
132. குறு. 174
133. ஐங். 259
134. நற். 8, குறு. 62, 70, 116, 142, 312, 120, ஐங். 171, 197, 299, அகம். 142, 152, 162, 198, 208, 230, 262
135. நற். 8 குறு. 62, 70, 116, 142, 312, 120, ஐங். 299, அகம். 142, 152, 162, 198, 208, 262
136. ஐங். 171, 197, அகம். 230
137. குறு. 120, அகம். 142, 152, 162, 198, 208, 262
138. குறு. 142, 312 ஐங். 299
139. ஐங். 171, 197
140. குறு. 62, 70, 116, அகம். 230
141. நற். 8
142. நற். 8
143. அகம். 230
144. குறு. 120, ஐங். 171
145. அகம். 142, 208, 262
146. அகம். 162, 198
147. குறு. 62
148. குறு. 70
149. குறு. 116, அகம். 152
150. ஐங். 197
151. குறு. 142
152. ஐங். 299
153. குறு. 312
154. குறு. 120, 128, அகம். 62, 126, 212, 258, 280, 322, 338, 342, 372
155. குறு. 120, அகம். 62, 212, 258, 322, 338, 342, 372

156. குறு. 128, அகம். 280
157. அகம். 126
158. குறு. 120, 128, அகம். 62, 212, 258, 322, 372
159. அகம். 338, 342
160. அகம். 126, 280
161. குறு. 128
162. அகம். 126
163. அகம். 280
164. அகம். 322
165. அகம். 338
166. அகம். 342
167. நற். 384
168. நற். 6, 204, 209, 80, 349
169. நற். 209
170. நற். 204
171. நற். 349
172. நற். 80:8-9
173. நற். 140
174. நற். 247
175. குறள். 1102
176. நற். 6
177. நற். 162, 166, 262, 256, ஐங். 426, 430, அகம். 75
178. நற். 162, 166, 262, 256 அகம். 75
179. ஐங். 426, 430
180. மேற்படி
181. நற். 262, 256 அகம். 75
182. நற். 162, 166
183. நற். 162
184. அகம் 75
185. நற். 262
186. நற். 256
187. ஐங். 430
188. நற். 166
189. ஐங். 426

190. குறு. 270, ஐங். 355, 356, 359, 360, 411-420, 491-495, அகம். 29, 39
191. குறு. 270 ஐங். 411-420, 491-495
192. ஐங். 355, 356, 359, 360 அகம். 29, 39
193. ஐங். 411-420, 491-495
194. ஐங். 355, 356, 359, 360
195. குறு. 270, அகம். 29, 39
196. ஐங். 411-420
197. ஐங். 491-495
198. அகம். 29
199. அகம். 39
200. ஐங். 355
201. ஐங். 356
202. ஐங். 359
203. ஐங். 360
204. கலி. 92
205. குறு. 209
206. ஐங். 324, 325, குறு. 99
207. ஐங். 324
208. ஐங். 325
209. குறு. 99
210. ஐங். 72-74, அகம். 86
211. அகம். 86
212. ஐங். 72-74
213. பின்னிணைப்பு அட்டவடண 'அ' காண்க : தலைவன் தேர்ப்பாகனிடம் கூறும் கூற்றுகள்
214. நற். 21, 42, 59, 81, 142, 161, 221, 242, 321, 371, குறு. 162, 233, 323, 400, அகம். 34, 44, 54, 64, 94, 114, 124, 134, 144, 154, 204, 224, 234, 244, 254, 274, 284, 334, 344, 374, அகம். 422, 425, 481-490
215. குறு. 189, 235, 237, 250, அகம். 9
216. நற். 106
217. குறு. 400, ஐங். 422, 425, 481-490, அகம். 234
218. நற். 142, 221, அகம். 274, 284, 374
219. நற். 321, அகம். 144, 244, 344

220. அகம். 124, 254
221. நற். 21, 42, 59, 81, 106, 242, 371, குறு. 162, 189, 233, 235, 237, 250, 323, அகம். 9, 34, 44, 54, 64, 94, 134, 154, 204, 224, 334
222. நற். 161, அகம். 114
223. குறு. 189
224. குறு. 235
225. குறு. 233
226. நம்பி. அகத். 36, பக். 27
227. நற். 106
228. நற். 42
229. நற். 321, ஐங். 487, 488
230. ஐங். 487, 489
231. அகம். 234
232. அகம். 224
233. அகம். 124
234. அகம். 94, 274, 284
235. அகம். 284
236. நற். 59
237. குறு. 400
238. ஐங். 490
239. குறு. 250, அகம். 254
240. அகம். 64
241. ஐங். 422
242. ஐங். 425, 485
243. நற். 371
244. அகம். 144
245. அகம். 244
246. அகம். 54
247. நற். 21, ஐங். 481
248. ஐங். 483
249. ஐங். 484
250. அகம். 334, 344
251. நற். 142, 221

252. நற். 81

253. ஐங். 482, அகம். 374

254. நற். 161

255. நற். 221

256. நற். 242

257. அகம். 34

258. அகம். 44

259. ஐங். 485, அகம். 204

260. ஐங். 486

261. அகம். 154

262. குறு. 237

263. குறு. 323

264. அகம். 9

265. அகம். 134

266. குறு. 400

267. அகம். 254

268. நற். 250, 370, ஐங். 477-479

269. ஐங். 477

270. ஐங். 478, 479

271. நற். 250, 370

272. நற். 374

273. ஐங். 328, 329

274. மேற்படி

275. நற். 3, 16, 52, 62, 126, 137, 141, 205, 298, 308, 312, 366, குறு. 63, 71, 101, 151, 168, 256, 267, 274, 347, 376, அகம். 3, 5, 43, 51, 77, 131, 149, 167, 191, 193, 199, 225, 245, 327, 335, 337, 353, 377, 379

276. நற். மேற்படி, குறு. 63, 71, 151, 168, 256, 267, 274, 347, அகம். மேற்படி

277. குறு. 101, 376

278. நற். 205, அகம். 77, 131, 193, 245

279. நற். 308, அகம். 3, 225, 5, 337, 379

280. நற். 3, 62, 16 குறு. 168, நற். 126, குறு. 256

281. நற். 52, 137, 141, 298, 312, 366, குறு. 63, 71, 101, 151, 267, 274, 347, 376, அகம். 43, 51, 149, 167, 191, 199, 327, 335, 353, 377.

282. குறள். 247
283. வ.சுப. மாணிக்கம், 'தமிழ்க் காதல்', பக். 93
284. கு. மோகனராசு 'திருவள்ளுவரின் குறிக்கோளியலும் உலகப் பொதுமையியலும்' பக். 5
285. நற். 3
286. நற். 62
287. அகம். 3
288. அகம். 337
289. நற். 126, குறு. 267, அகம். 353
290. அகம். 379
291. நற். 16, அகம். 199
292. பட்டி. 118-120
293. குறு. 63
294. குறு. 71, 376
295. நற். 366, அகம். 43
296. அகம். 51, 191
297. அகம். 131
298. அகம். 167
299. அகம். 225
300. அகம். 245
301. அகம். 377
302. குறு. 347, அகம். 335
303. குறு. 151, 168
304. குறு. 256
305. அகம். 193
306. குறு. 274
307. நற். 52
308. நற். 137
309. நற். 205
310. அகம். 5
311. அகம். 77, 149
312. அகம். 191
313. நற். 298

314. நற். 103, 105, 113, 157, 284, 346, 352, குறு. 56, ஐங். 321-323, 326, 327, 330, அகம். 19, 21, 33, 41, 47, 57, 79, 83, 109, 123, 169, 181, 239, 279, 287, 289, 291, 297, 299, 339, 343, 361, 365, 371, 373, 381.

315. மேற்படி

316. நற். 346, அகம். 239, 289, 299, 361, 371, ஐங். 321-323, 326, 327, 330

317. நற். 103, அகம். 297, 343, 365

318. அகம். 79, 287

319. நற். 105, 113, 157, 284, 352, குறு. 56, அகம். 19, 21, 33, 41, 47, 57, 83, 109, 123, 169, 181, 279, 291, 339, 373, 381

320. நற். 103

321. நற். 113

322. நற். 284

323. நற். 346 அகம். 343

324. நற். 352

325. ஐங். 195

326. நற். 157, அகம். 41

327. குறு. 56

328. நற். 105

329. அகம். 21

330. ஐங். 321, 323, 326

331. ஐங். 322, 327

332. அகம். 19

333. ஐங். 330

334. அகம். 33, 47

335. அகம். 79, 291, 361

336. அகம். 83

337. அகம். 123

338. அகம். 169, 287

339. அகம். 181

340. அகம். 299

341. நற். 341, ஐங். 441-450, அகம். 24, 84, 164, 174, 214, 304

342. நற். 341

343. ஐங். 441-450, அகம். 24, 84, 164, 174, 214, 304

344. ஐங். 441-450

345. நற். 341, அகம். 24, 84, 164, 174, 214, 304
346. ஐங். 441
347. ஐங். 442
348. ஐங். 443, 444
349. ஐங். 445
350. அகம். 24, 84, 164
351. அகம். 174
352. அகம். 304
353. நற். 169, குறு. 131, ஐங். 94, 365, அகம். 87, 93, 351
354. நற். 169 ஐங். 94
355. குறு. 131, ஐங். 365, அகம். 87, 93, 351
356. குறு. 131, ஐங். 94, 365, அகம். 87, 93, 351
357. நற். 169
358. நற். 169
359. அகம். 351
360. அகம். 87, 93
361. நற். 120, ஐங். 97, 99, 188
362. நற். 120, ஐங். 97, 99
363. ஐங். 188
364. ஐங். 97, 99
365. நற். 120, ஐங். 188
366. நற். 120
367. ஐங். 188
368. ஐங். 97
369. ஐங். 99
370. நற். 82, 139, குறு. 19, 147, 222, ஐங். 291, அகம். 136, கலி. 56-59
371. நற். 82, குறு. 222, ஐங். 291, கலி. 56-59
372. குறு. 19, அகம். 136
373. நற். 139, குறு. 147
374. ஐங். 291, கலி. 56-59
375. நற். 82, 139, குறு. 19, 147, 222, அகம். 136
376. குறு. 19
377. அகம். 126
378. அகம். 136

# 5. தோழி கூற்றுவழி உறவுகள்

| | |
|---|---|
| 5.0 | முன்னுரை |
| 5.1 | களவு நெறி |
| 5.1.1 | தலைவியிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு |
| 5.1.1.1 | குறை நயப்பித்தல் |
| 5.1.1.2 | வரைவு கடாதல் |
| 5.1.1.2.1 | சிறைப்புறமாக வரைவு கடாயது |
| 5.1.1.2.1.1 | அலர் அச்சம் தோன்றச் சொல்லி வரைவு கடாயது |
| 5.1.1.2.1.2 | பகற்குறியில் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது |
| 5.1.1.2.1.3 | இரவுக் குறியில் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது |
| 5.1.1.2.1.4 | இற்செறிப்பு அறிவுறுத்தியமை |
| 5.1.1.2.1.5 | தலைவன் இடையீடிட்டு வந்துழி |
| 5.1.1.2.1.6 | வரைவு நீட்டிக்குமிடத்து |
| 5.1.1.2.1.7 | தலைவன் வரவுணர்ந்து |
| 5.1.1.2.1.8 | இயற்பழித்து |
| 5.1.1.2.1.9 | தலைவிக்கு உரைத்தல் நிலையில் |
| 5.1.1.2.2 | வெறியை முன் நிறுத்தி வரைவு கடாதல் |
| 5.1.1.3 | அறத்தொடு நிற்றல் |
| 5.1.1.4 | உடன் போக்கு வலித்தல் |
| 5.1.1.5 | வரைவிடை ஆற்றாத தலைவியை ஆற்றுவித்தல் |
| 5.1.1.6 | தலைவனின் வரைவு மலிதல் |
| 5.1.2 | தலைவனிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு |
| 5.1.2.1 | குறை மறுத்தல் |
| 5.1.2.2 | குறை நயப்பித்தல் |
| 5.1.2.3 | சேட்படுத்தல் |

5.1.4 தமரிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

5.1.5 கட்டுவிச்சியிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

5.1.6 பிறரிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

5.1.6.1 உழவரிடம்

5.1.7 தன்னுள் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

5.1.8 தோழி பிற பொருட்களிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

5.2 கற்புநெறி

5.2.1 தலைவியிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

5.2.1.1 உடன்போய் வரைந்து மீண்ட இடத்து

5.2.1.2 இல்வாழ்வு கண்டு மகிழ்ந்து

5.2.1.3 தலைவனைச் செலவழுங்குவித்தல் இடத்து

5.2.1.4 செலவுக் குறிப்பறிந்து வேறுபட்ட தலைவியை ஆற்றுவித்தல்

5.2.1.5 பிரிவிடை ஆற்றாத தலைவியை ஆற்றுவித்தல்

5.2.1.6 பருவங் கண்டு அழிந்த தலைவியை ஆற்றுவித்தல்

5.2.1.7 தலைவன் வரவு மலிதல்

5.2.1.8 தலைவனுக்கு வாயில் நேருமிடத்து

5.2.2 தலைவனிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

5.2.2.1 வதுவை கண்டு மகிழ்ந்து

5.2.2.2 இல்வாழ்வு கண்டு மகிழ்ந்து

5.2.2.3 செலவழுங்குவிக்கும் இடத்து

5.2.2.4 செலவு உடன்படல்

5.2.2.5 வினை முற்றி வந்த தலைவனிடம்

5.2.2.6 தலைவனுக்கு வாயில் மறுத்தல்

5.2.2.7 தலைவனுக்கு வாயில் நேர்தல்

5.2.2.8 தலைவனின் புறத்தொழுக்கம் பற்றிக் கூறுமிடத்து

5.2.3 செவிலியிடத்து நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

# 5. தோழி கூற்றுவழி உறவுகள்

5.0 சங்க இலக்கிய அக மாந்தர்களில் குறிப்பிடத்தக்க முக்கிய இடத்தைப் பெற்றிருப்பவள் தோழி ஆவாள். இத்தோழி இல்லையேல் சங்க இலக்கிய அக மாந்தர் வாழ்வும், அவர்தம் உறவும் செம்மையாக அமைந்திருக்காது எனலாம். குறிப்பாகத் தலைவன் தலைவியின் களவு, கற்பு வாழ்வு தங்கு தடையின்றி செம்மாந்த நிலையில் அமைந்து செல்வதற்கு இப்பாத்திரம் முக்கிய காரணம் ஆகும். இப்பாத்திரத்தின் மூலம் பிற அக மாந்தர் பாத்திரங்களும் பெரிதும் விளக்கம் பெறுகின்றன. சுருங்கக் கூறின் சங்க இலக்கியம், அது காட்டும் சமுதாயம், சங்ககால மக்களின் வாழ்வியல் முறை ஆகியவற்றில் தோழியே பெரும்பங்கு வகிக்கிறாள். அந்த அளவிற்குத் தோழியின் கூற்றுகள் சங்க இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளன.

சங்க இலக்கியத்தில் தோழியின் பிறப்பு, வளர்ப்பு, குடும்ப வாழ்க்கை முறை என்று எந்தக் குறிப்பும் காணப்படவில்லை. ஆனால், தொல்காப்பியர்,

*"தோழிதானே செவிலி மகளே"* [1]

என்று கூறும் ஒரு குறிப்பால் தோழி செவிலி மகள் என்பது அறியப்படுகிறது.

தோழியின் கூற்றுகளும் அவளைப் பற்றிய செய்தியாகவோ, அவள் வாழ்க்கைக்குரிய உணர்வுகளை வெளிப்படுத்துவதாகவோ அமையவில்லை. மாறாகத் தலைவன், தலைவி, செவிலி, தமர் ஆகியவர்களைப் பற்றியதாகவும், அவர்களுடைய மன உணர்வுகளை வெளிப்படுத்துவதாகவும், அவர்களின் மனப்போராட்டங்களுக்குத் தீர்வு காண்பதாகவும் அமைகின்றன. ஆகவே தோழி புலவரால் படைக்கப்பட்ட அப்புலவர்தம் 'உள்ளம்' எனலாம். இவ்வாறு கூறக் காரணம், களவில் குறி அமைத்தல், மறுத்தல், உடன்போக்கு அமைத்தல், வரைவு கடாதல் போன்ற துறைகளிலும் கற்பில் தலைவன் செலவை அழுங்கச் செய்தல், தலைவனுக்கு வாயில் மறுத்தல், நேர்தல் போன்ற துறைகளிலும் பிறரை வினவாது தானே முடிவெடுத்துச் செயல்படுகிறாள் என்பதாகும்.

பிற அக மாந்தர் உணர்வை அறிந்து, செயல்படக் கூடிய உளவியல் அறிந்த அறிஞையாகவும் தோழி காணப்படுகிறாள். அதனால் தலைவன், தலைவி, செவிலி, தமர் ஆகியோர் இவள் பேச்சை ஏற்றுக்கொள்ள வேண்டிய சூழல் ஏற்படுகிறது.

இத்தோழியின் இன்றியமையாமை குறித்து,

*''தோழியின்றிக் காதலர்களின் களவொழுக்கம் நீளாது என்பதும் ஐந்திணை இலக்கியப் படைப்புக்குத் தோழி என்னும் ஆள் இன்றியமையாதவள் என்பதும், தோழியிற் புணர்ச்சிக்குரிய துறைகளே புலவர்களின் நெஞ்சைக் கவர்ந்தன என்பதும் பெறலாம்''* [2]

என்றுரைக்கிறார் வ.சுப. மாணிக்கம்.

தோழி, தலைவன் தலைவியின் களவு வாழ்விற்குத் துணையாகவும் வழிகாட்டியாகவும் விளங்குகிறாள். கற்பு வாழ்வில் இல்வாழ்வு சிறக்கவும் பலரும் போற்றும் வண்ணம் அவர்தம் இல்வாழ்வு அமையவும் துணை புரிகிறாள். தோழியின்றேல் தலைவியில்லை. தலைவி தலைவனிடம் பேச வேண்டியவற்றைத் தோழியே தலைவியாக இருந்து அவள் உணர்வுகளைத் தன் உணர்வாக வெளிப்படுத்துகிறாள். அதனால்தான், தலைவி தலைவனிடம் பேசும் கூற்றுகள் மிக மிகக் குறைவாகக் காணப்படுகின்றன. அதிலும் குறிப்பாகக் களவில், அகநானூற்றில் இரண்டே பாடல்களில் தலைவி தலைவனுடன் பேசுவதாகக் காணப்படுகிறது.[3] கற்பிலும் தலைவனின் பொருள்வயிற் பிரிவில் செலவழுங்குவித்தல் கூற்றுகள் தோழியின் மூலமே நடைபெறுகின்றன. இத்தகைய காரணங்களால் தோழியும் தலைவியும் 'ஈருடல் ஓருயிர்' போல விளங்குவதை உணரலாம். தோழி, தலைவி இருவருமே தத்தமக்குள் தோழி, அன்னை, அன்னாய் என்று அழைத்துக் கொள்வதால் அவர்களது நெருக்கமும் நட்புரிமையும் தெற்றெனப் புலனாகின்றன. இதனால் தோழி தலைவிக்குப் பல நிலைகளில் உதவியும் அதற்கும் மேலாகத் தொண்டும் செய்கிறாள் எனலாம். இதற்கு அரணாக ஆ. சிங்காரவேலு அவர்கள்,

*''தோழி செவிலிக்கு மகளாய், நன்மையுந் தீமையும் ஆய்தலுடன் தலைமகளுக்கு உசாத்துணையாய், அவளது வருத்தம் தீர்த்தற்குரிய அன்பு பொருந்திய துணைவியாம்''* [4]

என்று கூறும் கருத்து அமைகிறது.

இவளது சேவையினைப் பற்றிக் கூறும் நா. செயராமன்,

*''அரிய நட்புடையவராய், அன்னையாய், அமைச்சராய் விளங்கும் தோழி தலைவியின் வாழ்வு வளம் பெறச் செய்யும் சேவை பெரிது; பெரிது''* [5]

என்று புகழ்ந்துரைக்கிறார்.

'தோழி' என்னும் சொல்லுக்கு, சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் அகராதி - தோழி A Lady's maid; பாங்கி - Heroine's Confidante (தலைவியின் நம்பிக்கைக்குரியவளாகிய பாங்கி) எனக் கூறுவது கருதத்தக்கது. மேலும் தோழி, 'தோழிச்சி' (''தோழரெல்லாந் தோழிச்சியாக'' பெருங். மகத. 22,39) என அழைக்கப்படுவதும் தெரிகிறது.[6]

'தோழி' என்னும் சொல் குறித்து சொல்லாராய்ச்சி நிகழ்த்தும் சரளா இராசகோபாலன் தரும் கருத்துகள் இங்கு ஒப்பு நோக்கத்தக்கன.

*''ஒரே பொருளைச் சுட்டப் பல சொற்கள் பிறந்தாலும், அடிப்படையில் அவற்றினுள், சிறிதளவேனும் வேற்றுமை உண்டு என்பதை அறிவுடையோர் உணர்வார். தலைவியுடன் சிறப்போடு இருந்த துணைப்பாத்திரத்தைச் சுட்ட தோழி, இகுளை, பாங்கி, சிலதி, இணங்கி, துணைவி, சேடி, சகி என்ற சொற்கள் பல்வேறு கால நிலையில் தோன்றி வழக்காற்றிலிருந்தன.*

*இவற்றில் தோழி என்ற சொல்லே பழமைச் சிறப்புடையது. தொல்காப்பியம், இறையனார் அகப்பொருள், வீரசோழியம் முதலிய இலக்கண நூல்களிலும், சங்க இலக்கியங்களிலும் பயின்று வந்த பெருமையுடையது. ஆனால் இச்சொல் காலப்போக்கில் தன் தலைமையையும் ஆட்சிப் பண்பையும் இழந்து கைம்மை நோன்பேற்ற சொல்லாகிவிட்டது.*

*தோழி என்ற சொல் தோன்றப் பல காரணங்கள் கூறப்படுகின்றன.*

1. *கலித்தொகையில் தொழீஇஇ என்று அளபெடுத்து வருமிடங்களில் உரையாசிரியர் 'காண்டற்றொழிலை உடையவள்' என்று கூறுகிறார்.*
2. *தொழுது நிற்றலை யுடையவள் தோழி என்று சுன்னாகம் குமாரசாமிப் புலவர் கூறுகிறார்.*
3. *தோளை வீசி ஆடும் தோளி என்ற வரிக்கூத்துக்குரிய பெண்டிருள் சிறந்தோள் தோழி ஆவாள் என்ற கருத்துக்கும் இடமுண்டு.*
4. *தலைவியைச் சுற்றியுள்ள தொழுதியாம் ஆயக் கூட்டத்தின் முதல்வியைத் தோழி எனலும் உண்டு.*
5. *தொழில் செய்வோர் தொழுவர் எனப்படுவர். தலைவியின் ஏவல் தொழிலைச் செய்வோருள் முதன்மை பெற்றவள் தோழி எனப்படுவாள்.*
6. *தோள் போன்றவள் தோளி. இது பின்னர் தோழி என்று மருவியது''* [7]

இவ்வாய்வில் தோழி களவில் தலைவி, தலைவன், செவிலி, தமா், கட்டுவிச்சி, உழவா், ஆகியோருடனும் கற்பில் தலைவி, தலைவன், செவிலி, பாணன், விறலி, வாயில்கள், பாங்காயினாா் அறிவா், குயவன் ஆகியோருடனும் தனக்குள்ளும் கூற்று நிகழ்த்தும் நிலைகளில் ஆராயப்படுகின்றன.

## 5.1 களவு நெறி

### 5.1.1 தலைவியிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

களவில் தோழி, தலைவன் தலைவியின் காதல் உறவுக்குப் பாலமாகத் திகழ்பவள் ஆவாள். தலைவன் தலைவியா் களவொழுக்கம் கற்பாக மலர, தலைவியின் தமா்க்கு அறத்தொடு நின்று அறிவுறுத்தி நிற்பவள் தோழி. தலைவியின் தமா் திருமணத்திற்கு உடன்படாதபோது தலைவனுடன் அவளை உடன்போக்குக்கு உட்படுத்தி மணக்கச் செய்பவளும் இத்தோழியே என்பது ஒருதலை.

தலைவியைப் பெற்றவள் நற்றாய் என்றும் வளா்த்தவள் செவிலித்தாய் என்றும் கூறுவது போல, அத்தலைவியின் செவ்விய இல்லற இன்ப வாழ்விற்குரிய நல்லெண்ணத்தை நோற்ற நம்பிக்கைக்குரிய நலத்தாய் தோழி எனலாம்.

#### 5.1.1.1 குறை நயப்பித்தல்

இத்துறை தோழி தலைவனது குறையை ஏற்று வந்து தலைவியிடம் கூறுவது. இதில் நற்றிணையில் 5 பாடல்கள், குறுந்தொகையில் 6 பாடல்கள், ஐங்குறுநூற்றிலும், கலித்தொகையிலும் முறையே 3 பாடல்கள், அகநானூற்றில் 8 பாடல்கள் என 25 பாடல்கள் உள்ளன.[8]

குறிஞ்சித் திணையில் 17 பாடல்களும்,[9] மருதத் திணையில் ஒரு பாடலும்,[10] நெய்தல் திணையில் 7 பாடல்களும்[11] இடம் பெற்றுள்ளன.

கபிலா் 8 பாடல்களும்,[12] பரணா் 2 பாடல்களும்,[13] பேரிசாத்தனாா், குண்டுகட்பாலியாதனாா், அல்லங்கீரனாா், விட்ட குதிரையாா், வருமுலையாரிடத்தி, நெய்தற்காா்க்கியன், அறிவுடைநம்பி, அண்டா் மகன் குறுவழுதி, நல்வெள்ளியாா், கருவூா்க் கண்ணம்பாளனாா், செல்லூா் கிழாா் மகனாா் பெரும்பூதங் கொற்றனாா், வடம வண்ணக்கண் பேரிசாத்தனாா், உலோச்சனாா், மதுரை மருதன் இளநாகனாா், மோசிகீரனாா், ஓரம்போகியாா் ஆகிய 15 புலவா்களும்[14] முறையே ஒவ்வொரு பாடலும் பாடியுள்ளனா்.

தோழி தலைவியிடம், தலைவன் நேற்று தன் குறையைச் சொல்ல இடம் பெறாமல் சென்றான்; அவன் சென்ற வருத்தத்தை உன்னிடம் சொல்ல வரவில்லை; அவனைக் கண்டு கழலும் வளைகளைச் செறித்துக் கொண்ட எனது பண்பில் செயலே நினைவுக்கு வருகிறது[15] என்று தலைவன் விருப்பத்தைக் குறிப்பால் கூறுகிறாள். இதில் தலைவிக்கு உரிமையுடையவனாகிய தலைவன் அழகு, தன்னெஞ்சைக் கவர்ந்தது என்பது தனக்குப் பண்பற்ற செயல் என்பதுடன், தலைவியைத் தலைவன் உறவுக்கு உட்படுத்தச் செய்யும் முயற்சியாக அவன் பேரழகை உணர்த்துகிறாள் என்பதும் குறிப்பிடத்தக்கது.

> *"அம் மலைகிழவோன் நம் நயந்து என்றும்*
> *வருந்தினன் என்பது ஓர் வாய்ச்சொல் தேறாய்*
> *நீயும் கண்டு, நுமரொடும் எண்ணி*
> *அறிவு அறிந்து அளவல் வேண்டும் மறுத்தாற்கு*
> *அரிய வாழி தோழி"* [16]

என்று தலைவன் விருப்பத்தை தலைவி ஏற்க வேண்டும் என வற்புறுத்துகிறாள்.

> *.................................... யாரையோ, என்*
> *அரிது புணர் இன் உயிர் வவ்விய நீ?*
> *...................................................................*
> *தான் நம் அணங்குதல் அறியான் நம்மின்*
> *தான் அணங்குற்றமை கூறிக் கானல்*
> *சுரும்பு இமிர் சுடர் நுதல் நோக்கி*
> *பெருங் கடற் சேர்ப்பன் தொழுது நின்றதுவே"* [17]

என்று தலைவனது குறையை முடிக்க எண்ணித் தலைவியிடம் அவனுடைய வேண்டுதலைத் தெரிவிக்கிறாள்.

தலைவன் இன்று தழை உடையைத் தர, அதனை உடுத்தினால் அன்னை சினம் கொள்வாள் என்றும் உடையைத் தலைவனிடம திருப்பித் தந்தால் அவன் துன்பம் அடைவான்[18] என்றும் இருவேறு அச்சத்துடன் தோழி என்ன செய்வதென்று புரியாது தடுமாறி உரைக்கின்றாள்

தோழி தலைவியிடம், நம் மாண்புடைய நல்ல அழகினை விரும்பி அது கிடைக்காமல் மெலிவடைகின்றான்[19] என்றும் தலைவன் பலநாள் வந்து பல பல சொல்லி தோழி நெஞ்சை இரங்கச் செய்தவன்; அவன் இப்போது எங்குள்ளானோ, அவன் பொருட்டு என் நெஞ்சு கலங்குகிறது[20] என்றும் தலைவன் தேர் நாம் காணும்படி வந்து நாம் நாணும்படி மீண்டு சென்றது, காமம் இரக்கத்திற்குரியது; அதனால் யான் வருந்துகின்றேன்[21] என்றும்,

தலைவன் துணிவற்றவன்; யான் அவனை என் அறிவின்மையால் சேட்படுத்தியதனால் இங்கு வாராமல் விட்டானா? இவ்வாறு அவன் நோகுமாறு செய்த ஒன்றினை உடையேன்[22] என்றும் தலைவன் நம் தெருவில் வந்து நமக்கு இனியவை கூறி, நாளும் தான் நினைத்தது கைகூடாததால் ஒளியிழந்த அவனுடைய துன்பத்தைக் காட்டும் பார்வையை நீ நினைத்துப் பார்க்க வேண்டும்; அவன் இவ்வாறு நீண்ட நேரம் என் பின் நிற்பது, நம்மைக் கண்டு இனிய சொற்களைக் கூறுவதைத் தவிர வேறு ஒன்றையும் நினைத்து அல்ல[23] என்றும், தலைவன் குவளை மலர்மாலை தந்து, நம்முடன் கிளிகளை ஓட்டியும் மாலையில் தன் மணவிருப்பத்தை வெளிப்படக் கூறமுடியாது வருந்தி குறைவுற்றான்[24] என்றும் தலைவன் தன் அன்பை வெளிப்படுத்த முடியாது வருந்தி மெலிவுற்றுக் குறிப்பால் உணர்த்தினமையைத் தலைவி புரிந்து கொண்டு இரங்குமாறு, தோழி மென்மையாக உரைக்கின்றாள். இங்குத் தோழியின் இரக்க குணமும் பிறர் பொருட்டு உதவிடும் பண்பும் வெளிப்படுகின்றன.

தோழி தலைவியிடம், என் நெஞ்சானது, பலமுறை நம்மைப் பணிந்து துன்பத்துடன் சென்றவனைத் தடுத்தற்குப் பின்சென்றது; அவ்வாறு சென்ற நெஞ்சம் அவனை அடைந்ததோ அன்றி என் காமத்தைச் சொல்லுவதற்கு நாணம் கொண்டதோ[25] என்று தான் அவனைக் காதலிப்பதைப் போல தலைவனது காதல் உள்ளத்தை வெளிப்படுத்தி உரைக்கின்றாள்.

தலைவன் நமக்குத் துன்பம் செய்யினும் அது குற்றம் ஆகாது[26] என்றும் அவனை உன்னுடன் சேர்த்து உன் நலத்தை மீட்பேன்[27] என்றும் தலைவிக்கு அறிவுறுத்தி உறுதி அளிக்கிறாள்.

*"மருளி மட நோக்கின் நின் தோழி என்னை*
*அருளியல் வேண்டுவல் யான்"* [28]

என்று தலைவன் தானே தலைவியின் அருள் வேண்டி நிற்பதைக் கூறி, தலைவியிடம் குறை நயக்கிறாள் தோழி.

தன்னிடம் தலைவியின் மீதான தன் காதலைக் கூறி, அவளைத் தனக்குரியளாக ஆக்கிட வேண்டுகின்ற தலைவனின் குறை நயப்பித்தலை நிறைவுறுத்த தோழி தன்னையே தலைவியாக்கிக் கொண்டு தலைவியின் உணர்வுகளைக் கூர்மையாக்குகிறாள்.

தலைவன் அழகு, தனக்கே அவன்மீது மயக்கத்தை உண்டாக்கியதென்றும், தம்மால் அவனும் அவனால் தாமும் துன்புறும் உண்மை நிலையை உணர்த்தியும், குறை நயந்தவனைக் கடிந்துரைத்து சேட்படுத்தியமையைக் குறிப்பிட்டுக் காட்டியும், தன் உள்ளக்

காதலை வெளிப்படுத்த முடியாமல் அவன் தவித்ததைச் சுட்டியுரைத்தும் அவன்மீது கழிவிரக்கம் உண்டாகுமாறு உரைநிகழ்த்துகிறாள் தோழி.

மேலும் தன் காதலைத் தலைவனுக் குணர்த்த தன் நெஞ்சம் தலைவன்பின் சென்றதையும், தலைவனுடன் தலைவி உறவானால் இழந்த அவள் அழகு நலம் மீட்டும் உருவாகும் என நம்பிக்கை ஊட்டியும், தலைவியின் அருள்வேண்டி நிற்கும் தலைவனின் பணிவை உணர்த்தியும் தலைவியின் நலம் விழையும் தோழியின் செயல்பாடுகள் பெண்மைக்குப் பெண்மை துணைநிற்கும் பெருமையைப் புலப்படுத்துகின்றன.

5.1.1.2 **வரைவு கடாதல்**

களவுப் புணர்ச்சியில் ஊரலர் எழுதல், தாயின் இற்செறிப்பு, தலைவியின் ஆற்றாமை, தலைவனது ஆற்றாமை ஆகியவற்றால் துன்புறும் தலைவியின் சூழ்நிலையைக் காரணங்காட்டி, தலைவன் அவளை விரைந்து மணந்து கொள்ளுமாறு தோழி வேண்டுவது வரைவு கடாதல் எனப்படும்.

தன்னேரில்லாத் தலைவனின் நாடு, ஊர், இல், குடி, பிறப்பு, சிறப்பு ஆகியவற்றின் பெருமைகளைக் கூறி, இத்தகைய பெருமைகளை அழியாமல் காத்து நிலைநிறுத்தத் தலைவன் தலைவியை விரைந்து மணம்முடிக்க வேண்டுமென வரைந்து கொள்ள வேண்டியதன் கடமையைச் சுட்டிக் காட்டுவதும் இதனுள் அடங்கும்.

*5.1.1.2.1 சிறைப்புறமாக வரைவு கடாயது*

தலைவன் சிறைப்புறமாக வந்திருக்க, தோழி அவன் கேட்கும் வண்ணம் தலைவிக்கு கூறி வரைவு கடாயது.

*5.1.1.2.1.1 அலர் அச்சம் தோன்றச் சொல்லி வரைவு கடாயது*

இத்துறையில் நற்றிணையில் 5 பாடல்களும், குறந்தொகையில் ஒரு பாடலும் என 6 பாடல்கள்[29] உள்ளன.

குறிஞ்சித் திணையில் ஒரு பாடலும்,[30] நெய்தல் திணையில் 5 பாடல்களும்[31] வந்துள்ளன.

அம்மூவனார் 2 பாடல்களும்,[32] உலோச்சனார், கதப்பிள்ளையார், மதுரைக் கொல்லன் வெண்ணாகனார், நெய்நம்பிகுட்டுவன் ஆகிய 4 புலவர்கள்[33] முறையே ஒரு பாடலும் பாடியுள்ளனர்.

தலைவன் சிறைப்புறமிருக்கத் தோழி தலைவியிடம், ஊரில் தோன்றிய அலரை அன்னை அறிந்துகொண்டால் இங்கே வாழும் இன்பவாழ்க்கை நமக்கு அரிய ஆகும்[34] என்றும் இவ்வூர் அலர் தூற்றுவதைத் தவிர பிறிதொன்றும் அறிந்ததில்லை[35] என்றும் தலைவன் குறியிடம் வந்தபோதும் நின் அழகிய நெற்றி பிறர் அலர் கூறுவதால் இவ்வாறாயிற்று[36] என்றும் அலரின் அச்சத்தைக் கூறுவதன் வாயிலாகத் தலைவனை விரைவில் மணக்கத் தூண்டுகிறாள். மேலும் இவ்வூர் அறன் இல்லாது அலர் தூற்றியதால் அன்னை அருங்காப்புச் செய்தாள்[37] என்று அறிவுறுத்துகிறாள்.

### *5.1.1.2.1.2 பகற்குறியில் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது*

பகற்குறியிடத்து வந்து தலைவன் சிறைப்புறமாக இருக்க, தோழி தலைவியிடம் கூறும் கூற்றுகள் குறுந்தொகையில் ஒரு பாடலும், அகநானூற்றில் 5 பாடல்களும் என 6 பாடல்களில்[38] உள்ளன.

குறிஞ்சித் திணை, நெய்தல் திணை ஆகியவற்றில் முறையே 3 பாடல்கள்[39] காணப்படுகின்றன.

மதுரை மருதன் இளநாகனார் 2 பாடல்களும்,[40] அஞ்சில் ஆந்தை, உலோச்சனார், அம்மூவனார், மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார் ஆகிய 4 புலவர்கள்[41] முறையே ஒரு பாடலும் பாடியுள்ளனர்.

பகற்குறிக்கண் தலைவன் சிறைப்புறமாக இருக்க, தோழி தலைவியிடம், தலைவன் அணிமையிலிருந்து போகாத காரணத்தினால் தாய், நம்மை இற்செறித்துக் காவல் செய்யும்படி ஆயிற்று[42] என்றும் ஊரலரால் நம்தாய் துறையிடத்து இரவு பகல் பாராது தேர் ஒன்று உண்டு என எண்ணி வீட்டில் காவலை ஏற்படுத்தினாள்[43] என்றும் நம் தாய் தினைப்புனக் காவலுக்கு நம்மைப் போக்காது, உறுப்பு நலன்களையும் கூந்தலையும் பலமுறை நோக்குகிறாள்[44] என்றும் நின் மேனி வேறுபாட்டின் காரணத்தைத் தாய் கேட்பின் யான் என் செய்வேன்[45] என்றும் அன்னை அறிந்து கவனமாகப் பாதுகாப்பதைக் கூறி வரைவு கடாவுகின்றாள்.

### *5.1.1.2.1.3 இரவுக் குறியில் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது*

தலைவன் இரவுக் குறியில் சிறைப்புறமாக வந்திருக்கத் தலைவி தோழியிடம் கூறுவதாக நற்றிணையில் 5 பாடல்களும், குறுந்தொகையில் 4 பாடல்களும், அகநானூற்றில் 8 பாடல்களும், கலித்தொகையில் ஒரு பாடலும் என மொத்தம் 18 பாடல்கள்[46] உள்ளன.

குறிஞ்சித் திணையில் 16 பாடல்களும்[47] நெய்தல் திணையில் 2 பாடல்களும்[48] இருக்கின்றன.

கபிலர் 4 பாடல்களும்,[49] சீத்தலைச் சாத்தனார், நம்பிகுட்டுவன், இளநாகனார், நல்லாவூர் கிழார், சேந்தன் பூதனார், கொல்லன் அழிசி, பரணர், விற்றூற்று மூதெயினனார், ஊட்டியார், ஈழத்துப் பூதன் தேவனார், வீரை வெளியன் தித்தனார், தொல்கபிலர், வெள்ளிவீதியார் ஆகிய 13 புலவர்கள்[50] முறையே ஒரு பாடலும் பெயர் தெரியாத புலவர் ஒருவர்[51] ஒரு பாடலும் பாடியுள்ளனர்.

இரவுக் குறி வந்த தலைவன் சிறைப்புறமிருக்கத் தோழி தலைவியிடம், தலைவனது நட்பு நெருக்கம் இல்லாத போதும், நம் அறன் இல் அன்னை அவனது நட்பு நெருங்கியதாக எண்ணி அவன் யார் என வினவுகிறாள்[52]; பெரிய துன்பத்தால் ஏற்பட்ட நெஞ்சக் கொதிப்பானது நீர் பெய்த நெருப்பு போலத் தணியும்படி இன்று அத்தலைவர் வாராரானால் நன்று[53] என்று கூறி, இரவுக் குறி வருவதைத் தவிர்ப்பதன் வாயிலாக விரைவில் மணக்க வலியுறுத்துகிறாள்.

தோழி, தலைவி தலைவன் களவுக் காதல் கற்பாக மலர்தற்பொருட்டு, இரவுக்குறியால் தமக்கு ஏற்படும் துன்பத்தை, தாங்கள் தலைவன் வரவுக்காக இரவுக்குறியிடத்து நின்றிருந்தபோது பெண்டிரைக் கண்டால் தன் காமஉணர்வை வெளிப்படுத்துகின்ற குட்டநோய் கொண்ட பார்ப்பனன் ஒருவன் தம்மிடம் நெருங்கித் தன் காமத்தை உரைத்து, பேய் என்றும் வசைமொழிந்தான்[54] எனக் கற்பனையாகக் கூறுகிறாள்.

இவ்வாறு பொய்யாகப் புனைந்துரைத்தேனும் தலைவனின் இரவுக்குறியைத் தவிர்த்து திருமணத்தை முற்றுவிக்க முயலும் தோழியை,

> *''அறிவுசான்ற அக்காலப் பெண்ணுலகிற்கு எடுத்துக்காட்டாகத் திகழ்கிறாள்''* [55]

என்பார் புலவர் குழந்தை.

ஒருநாள் நகைமுகத்துடன் தலைவன் விருந்தினனாக வந்ததைக் கண்ட தாய், பகை கொண்ட போர்க்களத்தின் அருகில் உள்ள ஊரினரைப் போலப் பலநாளும் துயிலவில்லை; எனவே அத்தாய் பெண் கொலை செய்த நன்னன் போல நீங்கமுடியா நரகத்திற்குச் சென்று துன்புறுவாளாக[56] என்று அன்னையின் செயலுக்காக அவளைக் கடிந்துரைக்கின்றாள்.

இதற்கு மாறாக,

> *''இல்வந்து நின்றோற் கண்டனள், அன்னை*
> *வல்லே என்முகம் நோக்கி*
> *நல்லை மன்என நகூஉப் பெயர்ந்தோளே''* [57] என்றும்

"........................................... நாடற்கு
இன்தீம் பலவின் ஏர்கெழு செல்வத்து
எந்தையும் எதிர்ந்தனன் கொடையே அலர்வாய்
அம்பல் ஊரும் அவனொடு மொழியும்
சாய் இறைத் திரண்ட தோள் பாராட்டி
யாயும் அவனே என்னும் யாமும்
வல்லே வருக வரைந்த நாள்என
நல் இறை மெல்விரல் கூப்பி
இல் உறை கடவுட்கு ஆக்குதும் பலியே" [58]

என்றும் வரும் கூற்றுகளால் அன்னை, தந்தை ஆகியோர் திருமணத்திற்கு உடன்பட்டனர் என்பதை மகிழ்வுடன் கூறித் தலைவனை விரைவில் திருமணம் செய்ய விரைவுபடுத்துகிறாள்.

சான்றோர் மற்றவர் துன்பத்தைப் போக்க முயல்வர்; எனவே, நமர் ஏற்படுத்தும் வெறியாட்டை நீ தலைவனைக் காணும்போது அவனுக்குச் சொல்வாயாக[59] என்று கூறுவதன் வாயிலாகச் சான்றோனாய்த் தலைவன் விளங்க வேண்டும் என்றும் தலைவி துணிந்து செயலாற்ற வேண்டும் என்றும் தோழி எண்ணுகிறாள்.

*5.1.1.2.1.4 இற்செறிப்பு அறிவுறுத்தியமை*

இத்துறையில் நற்றிணையில் 10 பாடல்களும், குறுந்தொகையில் ஒரு பாடலும் என 11 பாடல்கள்[60] உள்ளன.

குறிஞ்சித் திணையில் 6 பாடல்களும்,[61] நெய்தல் திணையில் 5 பாடல்களும்[62] இடம் பெற்றுள்ளன.

உலோச்சனார் 2 பாடல்களும்,[63] குடவாயிற் கீரத்தனார், பிரான் சாத்தனார், பெருங்குன்றூர் கிழார், மதுரை மருதன் இளநாகனார், கபிலர், ஒரோடகத்துக் கந்தரத்தனார், தங்கால் பொற்கொல்லன் வெண்ணாகனார், வடம வண்ணக்கண் பேரிசாத்தன் ஆகிய 8 புலவர்கள்[64] முறையே ஒவ்வொரு பாடலும் பெயர் தெரியாத புலவர் ஒருவர்[65] ஒரு பாடலும் பாடியுள்ளனர்.

தலைவன் சிறைப்புறமாக இருக்க, தோழி தலைவியிடம், நீயும் நானும் நேற்று சோலையில் விளையாடியது தவிர மறைத்து ஒன்றும் செய்ததில்லை; அது வெளியாகி பிறர் அறிந்ததுமில்லை; ஆனால், அன்னை நம்மை நோக்கி, நெய்தல் மலரைப் பறித்துச் சூடுக என்று கூறாதவள் ஆனாள்[66] என்று கூறியதன் வாயிலாக அன்னை தலைவியின் களவை, அலர் எழாதபோதும் எவ்வாறோ உணர்ந்து சினம் கொண்டு இல்லிலே

செறித்தமையும், அவ்வாறு மகளைப் பாதுகாப்பது ஒரு அன்னையின் கடமை என்பதையும் உணர முடிகிறது.

இளம்பெண்கள், விளையாடும் ஆயத்துடன் ஓரை ஆடாமல், இல்லில் செறிக்கப்பட்டிருத்தல் அறமும் இல்லை; அதனால், ஆக்கமும் தேயும் என்று யாராவது விரைந்து அன்னையிடம் வணங்கிச் சொல்லுவாரைப் பெற்றால் நல்லது விளையும்; மேலும் தலைவன் மலையிலிருந்து விழும் மழைநீரில், மகிழுமாறு நீராட அன்னை செல்க என்று நம்மை விடுவாளோ[67] என்று இற்செறிப்பை உணர்த்துவதுடன், அது அறமற்றது என்றும் கடிந்துரைக்கிறாள்.

தேர் ஒன்று இரவில் வந்தது என்று இவ்வூரில் அலர் எழ அப்போது அன்னை பலர் இருக்கவும் என்னை மட்டுமே நோக்கினாள்; எனவே யான் நாளை கழிமுள்ளிப் பூவைப் பறிக்கவில்லையானால், என் அழகு இருப்பதரிது; அதனினும் தலைவன் வறிதாகத் திரும்பிப் போவது பெரும் துன்பமாகும்[68] என்று இற்செறிப்பு செய்யப்பட்டுள்ளதைத் தலைவியிடம் கூறுவாள் போல் தலைவனுக்குக் கூறுகிறாள்.

தினை முற்றியதால் அறுவடைப் பருவம் வந்தது. கானவர் 'இல்லம் செல்க' என்று கூறி அறுவடை செய்தனர். இனி யாங்ஙனம் தினைப்புனம் காவல் நடைபெறும்[69] என்று கூறுவதன் மூலம் இற்செறிப்பு உணர்த்துகிறாள் தோழி.

*5.1.1.2.1.5 தலைவன் இடையீடிட்டு வந்துழி*

தலைவன் இடையீடிட்டு வந்து சிறைப்புறமாக இருந்தபோது தோழி, தலைவியிடம், கூறுவதாக கூறுகிறாள் : ஐங்குறுநூற்றுக் குறிஞ்சித் திணையில் வரும் கபிலர் பாடல் ஒன்றில், நீ இங்கு அழுமாறு தலைவன் வாராமல் நீட்டிப்பானானால் அவன் குறைநயப்பித்ததைத் தெளியாது உன்னுடன் அவனைக் கூட்டுவித்த யான் என் மடமைத் தன்மையால் நினக்கு துணையாவதை இழப்பேன்[70] என்று தோழி தன் அறியாமையை எண்ணி வருந்தி உரைக்கிறாள்; தான் மனதால் ஆராய்ந்தறியாது தவறிழைத்து விட்டோமோ? என்று வருந்துவது போலத் தலைவனை இடித்துரைக்கிறாள்.

*5.1.1.2.1.6 வரைவு நீட்டிக்குமிடத்து*

இத்துறையில், நற்றிணை குறிஞ்சித் திணையில் நல்வேட்டனார், அஞ்சில் ஆந்தையார் முறையே ஒவ்வொரு பாடலும், குறுந்தொகை குறிஞ்சித் திணையில் மதுரை மருதன் கிழார் மகன் இளம் போத்தனி ஒரு பாடலும், ஐங்குறுநூற்று குறிஞ்சித் திணையில் கபிலன் 2 பாடலும் என மொத்தம் 5 பாடல்கள்[71] உள்ளன.

வரைவு நீட்டித்துத் தலைவன் சிறைப்புறமாக வந்திருந்தபோது, காட்டாற்றில் வரும் இனிய புதிய நீர் இவள் நோய்க்கு மருந்தாகும்; அதனைக் கண்ணாரக் கண்டு தண் என உண்டு வெறுக்காது நீராடின் இவள் நோய் தீர்ந்துவிடுவாள்; எனவே இவளை அங்கு அழைத்துச் செல்க என்று அன்னை கூறியது யாது கருதியோ[72] என்று தோழி தலைவியிடம் கூறுவதன் வாயிலாகத் தலைவனை வரைந்திடத் தூண்டுகிறாள்.

நின் துன்பம் நீங்குமாறு, நீ விரும்பிக் கூறத் தகுவதை நீயே கூறினால் என்ன?[73] என்று தோழி தலைவியிடம் வினவுவதன் வாயிலாகத் தலைவன் தன்னை மணந்து கொள்ள வேண்டுமென்று தலைவியே வெளிப்படையாகக் கேட்க வேண்டும் எனத் தோழி உணர்த்துகிறாள்.

### *5.1.1.2.1.7 தலைவன் வரவுணர்ந்து*

இத்துறையில் நற்றிணை குறிஞ்சித் திணையில் சிறுமோலிகனார், நல் வணங்கனார், கபிலர் ஆகியோர்[74] முறையே ஒவ்வொரு பாடல் பாடியுள்ளனர்.

தோழி தலைவியிடம், நேற்றிரவு என் துயரின் எல்லையை அறிந்தவள் போல அன்னை என்னிடம் வந்து, 'என் மகளே இன்னும் உறங்கவில்லையா?' என்று கேட்டாள். அப்போது, தலைவன் வரவை நினைந்தோர்க்குக் கண் உறக்கமும் ஏற்படுமா? என்று யான் சொல்லும் சொல் வெளிப்படாமல் என் நெஞ்சிற்குள்ளே சொல்லிக்கொண்டேன்[75] என்றுரைத்தாள். இக்கூற்றால், தலைவியின் மன உணர்வு வெளிப்படுவதுடன் தாய் இரவு பகல் என்று பாராது தன் மகளையே கண்காணிக்கும் செயலை அறியமுடிகிறது. மேலும் மகள் தன் காதலைத் தாயிடம் கூறாது அமைதிகாக்கும் பண்பாட்டு நாகரிகமும் இதனால் புலனாகின்றது.

### *5.1.1.2.1.8 இயற்பழித்து*

நற்றிணை குறிஞ்சித் திணையில் கிள்ளிமங்கலம் கிழார் மகனார் சோகோவனார் பாடல் ஒன்றில், அன்னையின் காவல் நீங்கி, பகலில் பலரும் காண, ஊர்ப்பொது மன்றம் சென்று, தலைவன் ஊர் எங்கே என்று வாய்விட்டுக் கேட்டு, மாமலை நாடனை அணுகி, 'நீ சான்றோய் அல்லை' என்று கூறி வருவதற்காகச் செல்வோமா?[76] என்று தலைவன் சிறைப்புறமிருக்க, தோழி தலைவியிடம் வினவுகிறாள்.

இக்கூற்றால் தலைவன் தலைவியைப் பலரும் அறிய மணந்து, தான் சான்றோன் என நிறுவ வேண்டுமென்பதும், தோழிக்கும் தலைவிக்குமுள்ள துணிவு தலைவனுக்கு வரவேண்டும் என்பதும் தலைவனுக்கு அறிவுறுத்தப்படுகின்றன. இவ்வாறு தலைவனுக்குக் கூறக்கூடிய ஆற்றலும் உளத்துணிவும் தோழிக்கு மட்டுமே உளதாகும்.

*5.1.1.2.1.9 தலைவிக்கு உரைத்தல் நிலையில்*

இத்துறையில் நற்றிணையில் 20 பாடல்களும், குறுந்தொகையில் 4 பாடல்களும், அகநானூற்றில் 6 பாடல்களும், ஐங்குறுநூற்றில் ஒரு பாடலும் என 31 பாடல்கள்[77] உள்ளன.

குறிஞ்சித் திணையில் 17 பாடல்களும்,[78] நெய்தல் திணையில் 4 பாடல்களும்[79] உள்ளன. உலோச்சனார் 3 பாடல்களும்,[80] வடம வண்ணக்கன் பேரிசாத்தனார், கபிலர் முறையே 2 பாடல்களும்,[81] இளம்போதியார், நல்லந்துவனார், கோகுள முற்றனார், செங்கண்ணனார், காஞ்சிப் புலவனார், கொள்ளம் பத்தனார், ஐயூர் முடவனார், முடத்திருமாறனார், இளநாகனார், குன்றியனார், இளவெயினனார், மதுரை அளக்கர் ஞாழர் மகனார் மள்ளனார், சீத்தலைச் சாத்தனார், மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார், தொல்கபிலர், நெய்தல் கார்க்கியர், சிறைப்புறம் ஒதஞானி, கருவூர்ச் சேரமான் சாத்தன், பாண்டியன் அறிவுடை நம்பி, வெறிபாடிய காமக் கண்ணியார், தங்காற் பொற்கொல்லனார், அண்டர் மகன் குறுவழுதியார், மதுரை மருதன் இளநாகனார் ஆகிய 23 புலவர்கள்[82] முறையே ஒவ்வொரு பாடலும் பெயர் தெரியாத புலவர் ஒரு பாடலும்[83] பாடியுள்ளனர்.

தலைவன் சிறைப்புறமாக இருக்கத் தலைவிக்குச் சொல்லும் தோழி, யான் முன்பு தாய்க்கு அஞ்சினேன். ஆனால் இப்பொழுது, தலைவன் அலர் வந்துவிடுமோ என்று கூறுவதால், அவன் நட்பு சிறிது சிறிதாகக் குறைந்து இல்லையாகிவிடுமோ என்று அஞ்சுகிறேன்[84] என்கிறாள்.

மேலும் நீ உருகித் தேய்வது கண்டு அஞ்சுகிறேன்[85] என்றும் தலைவன் வருவானா, அது உண்மையா? இல்லையா? என்று ஆராய்ந்து கொண்டு பொருத்தமில்லா முகத்தினளாகத் தாய் இருக்கிறாள்[86] என்றும் தோழி உரைக்கிறாள்.

தாய் மகளைப் பார்த்து, கிளி கடியாமல் எங்குச் சென்றாய் என்று வினவினாள்; அதற்குத் தலைவி, 'அருவி வீழும் மலை நாடனை அறியேன், யான் அவனைக் காணவுமில்லை; யான் மலர் கொய்து சுனை பாய்ந்து ஆடேன் என்று கூறினாள்; அது கேட்ட அன்னை தலை கவிழ்ந்தாள். இவ்வாறு பொய் கூறத்தெரியாத தலைவி என் ஆவாளோ[87] என்றும் கூறுகின்ற தோழி தலைவியை வரைந்து கொள்ளுமாறு தலைவனைத் தூண்டுகிறாள்.

தலைவியின் தந்தை தினைப்புனம் காக்கச் செல்க என்றுரைத்தார்; தாய், 'இனி நல்ல நாளை அறிவுறுத்தும் வேங்கையும் மலர்க' என்று கூறி என் முகம் நோக்கினாள். இதனால் தினைப்புனம் காக்கச் செல்லட்டும் என்றோ அல்லது இல்லத்தில் செறிப்பேன் என்றோ

அன்னை எண்ணுவது யாதென்று அறியமுடியவில்லை. அன்னை தலைவனோடு கொண்ட நட்பை அறிந்தாளோ?[88] என்றும் தோழி ஐயுற்று உரைக்கிறாள்.

உன் நிலையை நீ உணருகின்றாயில்லை. தலைவன் உன்னைத் தழுவிய குறிகண்டு அன்னை மயக்கம் அடைகிறாள்; எனினும் ஐயமின்றி உன்னை இறுகத் தழுவுகின்றாள்[89] என்று தோழி தலைவியிடம் அன்னையின் கண்காணிப்பை உணர்த்துகிறாள்.

இவ்வாறு அன்னை தலைவியின் காதலுறவை ஐயுற்றுக் கண்காணிக்கின்றாள் என்பதைத் தோழி தலைவனுக்கு அறிவுறுத்தி வரைவுக்கு விரைவு படுத்துகிறாள்; மேலும் நம்முடைய துன்பத்தை அறிந்த தாய், என்னைத் தழுவித் தலைவி நிறம் மாறியது எதனால் என்றாள்; சுனையாடியதால் என்றேன்; அதற்கு அவள், நாளை இவளோடு மலருள்ள தெளிந்த நீரில் நீராடினால் பெண்கள் தம் நிறம் என்ன ஆகுமோ? என்று வினவினாள்[90] என்று தலையிடம் தோழி கூறுகிறாள்.

தோழி தலைவியிடம், நீ தலைவனை அடைய விரும்பி, கிளி கடிதலைச் செய்யாயாயின், அன்னை உனக்குக் கிளி கடிதல் தெரியாதென எண்ணி பிறரைக் கொணர்ந்து கிளி கடிதலைச் செய்வாள். அதனால் தலைவனை நீ அடைவது அரிதாகி விடும்[91] என்றுரைப்பதனால் தலைவியைக் காணமுடியாதென்பதைத் தலைவனுக்கு உணர்த்தி வரைவை ஏற்படுத்தச் செய்கிறாள்.

### *5.1.1.2.2 வெறியை முன் நிறுத்தி வரைவு கடாதல்*

இத்துறையில் நற்றிணையில் 6 பாடல்களும் குறுந்தொகையிலும் அகநானூற்றிலும் முறையே 3 பாடல்களும் ஐங்குறுநூற்றில் 2 பாடல்களும் என மொத்தம் 14 பாடல்கள்[92] உள்ளன.

குறிஞ்சித்திணையில் 13 பாடல்களும்[93] நெய்தல் திணையில் ஒரு பாடலும்[94] உள்ளன.

கபிலர் 3 பாடல்களும்,[95] நல்வெள்ளியார், வெறிபாடிய காமக்கண்ணியார், நல்லூர்ச்சிறுமேதாவியார், குளம்பனார், மதுரைப் பாலாசிரியன் சேந்தன் கொற்றனார், தீனமதிநாகன், பெருஞ்சாத்தன், கொடிமங்கலத்து வாதுளி நற்சேந்தனார், பேரிசாத்தனார், மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார் ஆகிய 10 புலவர்கள்[96] முறையே ஒவ்வொரு பாடலும், பெயர் தெரியாத புலவர் ஒரு பாடலும்[97] பாடியுள்ளனர்.

தலைவன் சிறைப்புறத்தானாக இருக்கத் தோழி தலைவிக்குக் கூறுவாளாய், முருகன் வெறியாடுகிறான் எனத் தவறாக உணர்ந்த நம் அன்னையிடம்,

*"கண்ணினும் கனவினும் காட்டி, இந்நோய்*
*என்னினும் வாராது மணியின் தோன்றும்*
*அம்மலை கிழவோன் செய்தனன் இது எனின்*
*.....................................................................*
*நெடு வேட்கு ஏதம் உடைத்தோ?"* [98]

என்று வினவும் வழி வரைவை உணர்த்துகிறாள்.

நம் அன்னை பசலை நோய் கண்டு, செம்முதுபெண்டான கட்டுவிச்சியை அழைத்து, முறத்தில் நெல்லிட்டு, முற்றத்தின்முன் தலைவியை நிறுத்திக் கட்டுக்குறி கேட்கிறாள். அவ்வாறாயின் தினைப்புனக் காவல் சென்ற இடத்து இந்நோயை நெடுவேள் அணங்கியது என்று குறி சொல்லும் போலும்[99] என்று வெறியெடுத்தலை அறிவுறுத்தித் தலைவனை மணந்து கொள்ளுமாறு தூண்டும் நிலையில் தலைவியிடம் கூறுகிறாள்.

நம் அன்னை எடுக்கும் வெறியினைக் காணும் பொருட்டு சிறிது நேரம் நம் தலைவன் இங்கு விரைந்து வருவானாக[100] என்றும், அன்னை வெறியால் முருகன் என்று அறிந்து கொண்டால், அதனால் வரைவு மிக அருகில் நிகழ்வது உறுதி நீ ஆற்றாதிருத்தல் நன்றன்று[101] என்றும் நம் தலைவன் கையில் வேலுடன் இரவில் வர, அவனைக் கண்ட தாய் முருகக் கடவுளே என எண்ணித் துதிக்கின்றாள். இனி நம் தலைவனுடைய நட்பு என்ன நிலையதோ[102] என்று (கற்பனையாக) வேலன் தலைவனின் குன்றத்தைப் பாடாமல் ஒழிவானாயின் அதனால் அவ்வெறி என்ன பயனைச் செய்யும்[103] என்று தோழி தலைவியிடம் வெறியைப் பற்றிக் கூறுவாளாய்த் தலைவனை வரைவு வேண்டி விரைவுபடுத்துகிறாள்.

அன்னை நிகழ்த்தும் வெறியாட்டினால் தலைவி காதல் கொண்டுள்ள தலைவன் பற்றிய செய்தி வெளிப்படாமல் போனால் தம் கற்பொழுக்கத்திற்குக் களங்கம் உண்டாகும் என்ற அச்சத்தை உடைய தோழி, அதைத் தலைவனுக்கும் உணர்த்தி கற்பு வாழ்வுக்கு வழிகோலுகிறாள் எனலாம். களவுக்குக் கைகொடுத்துக் கற்புக்குத் துணைநின்று தலைவியின் வாழ்வுச் சகடத்தின் அச்சாணி எனத் தோழி நிற்கிறாள்.[104]

### 5.1.1.3 அறத்தொடு நிற்றல்

தலைவி தன் களவை தான் அறத்தொடு நின்று கூறாத பொழுது தோழியே சில அணுகு முறைகளின் வழி தலைவியின் களவை அறிய முயல்கிறாள்.

இத்துறையில் நற்றிணையில் ஒரு பாடலும், குறுந்தொகையில் 5 பாடல்களும், ஐங்குறுநூற்றில் 4 பாடல்களும், கலித்தொகையில் ஒரு பாடலும் என குறிஞ்சித் திணையில் அமைந்த 11 பாடல்கள்[105] இடம்பெற்றுள்ளன.

இவற்றில் கபிலர் 6 பாடல்களும்,[106] பரணர், உழுந்தினைப் புலவன், உறையூர்ப் பல்காயனார் ஆகியோர் முறையே ஒரு பாடலும்,[107] பெயர் தெரியாத புலவர் இருவர் முறையே ஒரு பாடலும்[108] பாடியுள்ளனர்.

*''மறைத்தற் காலையோ அன்றே*
*திறப்பல் வாழி வேண்டு அன்னை நம் கதவே''* [109]

இது தம் களவொழுக்கத்தை மறைக்காமல் மனம் திறந்து தாயிடம் சொல்லப் போவதைத் தலைவி வெறுப்பின்றி விரும்பவேண்டும் எனத் தோழி கூறுவதாகும்.

எந்தையும் யாயும் அறியும்படி நம் களவை வெளிப்படுத்த தலைவன் நம்மிடை வந்து வரைவினை இரப்ப, இவ்வூரும் நம்முடன் ஒன்றுபட்டது[110] என்றும் நீ எம்முடைய இல்லத்திற்குத் தலைவியாக வருவாய் என்று கூறிய தலைவன் இன்று எவ்விடத்து உள்ளான்[111] என்றும் தோழி தன் உள்ள மகிழ்வுடன் கூறுகிறாள். தலைவன் வரைவு வேண்டிவிடத் தமர் மறுத்துக் கூறும்பொழுது அவர் கேட்கும்படி தலைவியிடம் தோழி, தலைவன் நம்மூரில் வந்து நம் உறவினரிடையே வேண்டிய குறை பெறாது மீள்வானாயின் நம் உயிர் நிலைபெறுவது எவ்வாறு[112] என்று கூறி அறத்தொடு நிற்கிறாள்.

வேலனை வினவும் செவிலி கேட்குமாறு தலைவியிடம் தோழி, வேலன், நாடனுடன் நாம் கொண்ட நட்பை அறிவானோ அறியானோ [113] என்று வினவும் நிலையில் அறத்தொடு நிற்கிறாள்.

காப்பு மிகுதியிடத்து ஆற்றாத தோழி தலைவியிடம்,

*''ஒல்லை ஆயினும், கொல்வை ஆயினும்*
*நீஅளந்து அறிவை நின் புரைமை வாய்போல்*
*பொய்ம் மொழி கூறல்; அஃது எவனோ*
*நெஞ்சம் நன்றே நின்வயி னானே''* [114]

இது அறத்தொடு நிற்கும் தோழியின் செயலுக்குத் தலைவி சினந்தாலும், மெய் கூறினால் மட்டுமே பயன்விளையும் என்பதால் தலைவியின் காதல் உறவை வெளிப்படுத்தப் போவதாகத் தோழி உரைப்பது ஆகும். தன் கூற்றால் தலைவிக்கு நன்மையே உண்டாகும் என்னும் தோழியின் நன்னோக்கம் தெளிவாகின்றது.

தலைவியின் காதல் நோய் மிகுதல் கண்டு, நம் களவைத் துணிந்து தாய்க்குத் தெரிவிப்பின் என்ன குற்றம் ஏற்படும்[115] என்று தோழி வினவுதல் தலைவிக்கு உதவி செய்ய எண்ணுகின்ற அவளின் கரவற்ற நல்லுள்ளத்தைக் காட்டுகின்றது.

நம் துன்பத்திற்குக் காரணம் வெறியென எண்ணி அன்னை துயர் கொண்டாள். அவள் நம் காதலை அறியாது இருத்தல் நன்றன்று. எனவே அதனை அறியச் செய்தல் வேண்டும்[116] எனக் கூறும் தோழியின் கூற்று தாயின் துன்பத்தைக் கண்டு ஆற்றாத அவளுடைய பண்பைப் புலப்படுத்துகின்றது.

இவ்வாறு தோழி தலைவியின் களவைத் தானாகவே அறிந்து பிறருக்கு அறிவிக்க எண்ணித் தலைவன் தலைவியரது களவு கற்பாக மலர்ந்து நலம் பயக்கும் வகையில் தலைவியிடம் கூற்று நிகழ்த்துவதால் அவளது அறிவும் அறச் செயலும் நன்கு விளங்குகிறது.

இக்கருத்துக்கு அரண் சேர்க்கும் வகையில் கா. கோவிந்தன் அவர்களின்,

> *''அறிவே உருவாய் வந்து அறமே வழங்கும் உள்ளம் கொண்டு விளங்கும் தோழிபால், சொல்லாற்றல் அளவின்றி அமைந்திருந்தது''* [117]

என்ற கூற்றும் அமைகிறது.

### 5.1.1.4 உடன் போக்கு வலித்தல்

களவு வாழ்வில் ஏற்படும் ஊரலர், அன்னையால் ஏற்படும் அச்சம் இவற்றால் தோழி தலைவன் தலைவியரிடையே உடன்போக்கை ஊக்குவிக்க முயலுகிறாள்.

இத்துறையில் நற்றிணையில் ஒரு பாடலும், குறுந்தொகையில் 5 பாடல்களும், ஐங்குறுநூற்றிலும், அகநானூற்றிலும் முறையே 3 பாடல்களும் என 12 பாடல்கள்[118] உள்ளன.

குறிஞ்சித் திணையில் 3 பாடல்களும்,[119] நெய்தல் திணையில் 2 பாடல்களும்,[120] பாலைத் திணையில் 7 பாடல்களும்[121] இடம்பெற்றுள்ளன.

கபிலர் 2 பாடல்களும்,[122] உலோச்சனார், தங்கால் முடக்கொற்றனார், பாலை பாடிய பெருங்கடுங்கோ, ஈழத்துப் பூதன் தேவன், குடவாயிற்கீரத்தனார், படுமரத்து மோசிகீரன், அம்மூவனார், மாமூலனார், கயமனார், காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார், ஆகிய 10 புலவர்கள்[123] முறையே ஒவ்வொரு பாடலும் பாடியுள்ளனர்.

தோழி தலைவியிடம், இதுவரை நம் தலைவன் பாலை வழியில் பெண்டிர் செல்லக்கூடாது என்று தடுத்து வந்தார்; ஆனால், இப்போது உடன்போக்கே அவரை ஏற்றுக்கொண்டது; இதனால் நம் அன்னையின் வாயிலிருந்தும் ஊர்ப்பெண்டிரின் பழியினின்றும் தப்பலாம்[124] என்று தலைவன் உடன்போக்கு மேற்கொண்டதை மகிழ்ந்துரைக்கிறாள்.

தோழி தலைவியைத் தலைவனுடன் உடன்போக்கு செல்லுமாறு வலித்துக் கூறுமிடத்து,

> *"நடுநாள் வரூஉம் இயல் தேர்க் கொண்கனோடு*
> *செலவு அயர்ந்திசினால், யானே*
> *அலர் சுமந்து ஒழிக இவ்வழுங்கல் ஊரே"* [125]

என்று ஊர்அலர் கூறுவதைப் பற்றிக் கவலைப்படாமல் தலைவியின் நலனையே கருத்தில் கொண்டு துணிந்து செலவினை மேற்கொள்ளச் செய்கிறாள்.

தோழி தலைவியிடம், நீ மலைநாட்டுத் தலைவனுடன் போகும் திறத்தை நினைப்பாயாக[126] என்றும் மேல்காற்று வீசும் பாலை நிலத்தில் செல்வோமாக[127] என்றும், நீ உடன்போக இசைந்ததால் அதை என்வழி அறிந்த தலைவன் குறியிடத்து வந்து நின்றான். ஆனால், நீயோ இன்றைய பொழுது கழிந்து செல்லலாம் என்றாய்; யானோ நெருப்பில் விழுந்த தளிர்போல நடுங்கி செய்வதற்கு உரியது எதுவுமில்லாதவளானேன்[128] என்றும் உடன்போக்கை விரைந்து மேற்கொள்ளுமாறு வற்புறுத்தி உரைக்கிறாள்.

தோழி, தலைவன் நின்னை இப்பொழுதே உடன் அழைத்துக் கொண்டு போக வந்தனன்; எனவே உறக்கம் நீங்கி, பசலைக் கேடடைய தெளிவாயாக[129] என்றும் இனி யாம் நின்னைப் பிரியோம் என்று கூறி, தலைவனுடன் போவதற்குப் புறப்படுவோமா கூறுக[130] என்றும் தலைவன் நின்னை அழைத்துச் செல்லத் துணிந்தமையால், நீ நாணாமல் அதற்கு உடன்பட்டு எழுவாயாக[131] என்றும் தலைவனுடன் தலைவியை உடன் போகுமாறு கட்டாயப்படுத்துகிறாள்.

தலைவன் தலைவி மேற்கொள்ளும் உடன்போக்கு என்னும் அறக்கழிவு தேவையான தாக உள்ளது. இது நிகழவில்லையாயின் களவாகிய காதல் வாழ்வு அறக்கேடாகி பெரும்பழி உண்டாக்கும். எனவே சங்க இலக்கியத் தலைவன் தலைவியர்க்கு அவர்தம் கற்பறம் செழித்தோங்க உடன்போக்காகிய கைப்பு மருந்து உதவியாக அமைந்தது எனலாம்.

இவ்வாறு தோழி, சமுதாயக் கட்டுப்பாட்டை மீறி, தலைவன் தலைவியின் மனப் போராட்டத்தை ஒருநிலைப்படுத்தி, உடன்போக்கிற்கு இசையச் செய்கிறாள். இதனால் தோழி, அவர்தம் காதல் உறவு வலுவடைய உறுதுணையாக விளங்குகிறாள் எனலாம்.

இங்கு ந. சுப்பு ரெட்டியார்,

> ***"தலைவன் தலைவியரிடையே அரும்பும் காதல் மலர்ந்து காய்த்துக் கனிதற்குத் தோழி உறுதுணையாகிறாள்"*** [132]

என்று கூறுவதும் நோக்கத்தக்கது.

### 5.1.1.5 வரைவிடை ஆற்றாத தலைவியை ஆற்றுவித்தல்

தலைவன் வரைதல் பொருட்டு, தலைவியைப் பிரிந்து பொருள் ஈட்டச் செல்கிறான். அதனால், தலைவி அப்பிரிவை ஆற்றாதாகிறாள். அப்பொழுது தலைவியைத் தோழி அவன் பிரிவை ஆற்றுமாறு கூறுகிறாள்.

இத்துறையில் நற்றிணையில் 7 பாடல்களும் குறுந்தொகையில் 11 பாடல்களும், ஐங்குறுநூற்றில் 3 பாடல்களும், கலித்தொகையில் ஒரு பாடலும் என மொத்தம் 22 பாடல்கள்[133] உள்ளன.

குறிஞ்சித் திணையில் 13 பாடல்களும்,[134] மருதத் திணையில் ஒரு பாடலும்,[135] நெய்தல் திணையில் 6 பாடல்களும்,[136] பாலைத் திணையில் 2 பாடல்களும்[137] இடம் பெற்றுள்ளன.

கபிலர் 3 பாடல்களும்,[138] நல்வெள்ளியார், நக்கீரர், தொல்கபிலர், மதுரை எழுத்தாளன் சேந்தன் பூதன், குன்றியனார், மதுரைக் கணக்காயன் மகன் நக்கீரன், கூடலூர் கிழார், சேந்தம் பூதன், கருவூர்க் கதப்பிள்ளை, மிளைவேள் தித்தன், பெருந்தோட் குறுஞ்சாத்தன், பரணர், மதுரை மருதன் இளநாகன், மதுரைக் கொல்லன் புல்லன் நல்லந்துவனார் ஆகிய 15 புலவர்கள்[139] முறையே ஒரு பாடலும் பெயர் தெரியாத 4 புலவர்கள்[140] முறையே ஒரு பாடலும் பாடியுள்ளனர்.

தலைவனிடம் உன் நிலையை யான் எடுத்துச் சொன்னேன்; இக்களவொழுக்கம் மேலும் நீட்டிக்கா வண்ணம் அவன் நாணம் அடைந்தான்; அவன் உன்னை வரைந்து கொள்ளும் நல்நெஞ்சம் உடையவன்[141] என்று கூறித் தோழி தலைவியை ஆற்றுவிக்கிறாள்.

தலைவன் மீது தலைவி கொண்ட நட்பானது உலகம் கீழ்மேல் ஆனாலும், நீரும் தீயும் உதவாமல் தீமை அளித்தாலும் கடலின் ஆழம் அறியப்படினும் கெடாது என்பதை,

> *“நிலம் புடைபெயரினும் நீர் திரிந்து பிறழினும்*
> *இலங்கு திரைப் பெருங் கடற்கு எல்லை தோன்றினும்*
> *வெல் வாய்ப் பெண்டிர் கௌவை அஞ்சிக்*
> *கேடு எவன் உடைத்தோ தோழி*
> ...........................................................................
> *ஓங்கு மலை நாடனொடு அமைந்த நம் தொடர்பே”* [142]

என்று கூறி ஆற்றுவிக்கிறாள்.

தலைவன் பிரிந்த அண்மையிலேயே நின் நெற்றி பசலை கொள்வதேன்[143] என்றும், நின் நலம் கெடுதலைத் தலைவன் அறியாதவனா? அவன் விரைந்து வருவான்[144] என்றும்,

நின் அழகைக் கவர்ந்து கொண்ட அன்பற்ற தலைவன் இப்போது வந்துள்ளான் காண்பாயாக[145] என்றும் ஆறுதல் மொழி கூறுகிறாள்.

தலைவன் தலைவிமேல் கொண்ட அன்பின் ஆழத்தை விளக்கும் தோழி, தலைவியின் நலனில் தலைவன் அக்கறை உடையவன் என்பதைத் தெளிவுறுத்துவதன் வாயிலாக வரைவு நீட்டித்தவிடத்து ஏற்படும் அவள் துன்பத்தைப் போக்குகிறாள்.

5.1.1.6 **தலைவனின் வரைவு மலிதல்**

இது தலைவன் தலைவியை மணந்து கொள்ளும் பொருட்டு வருவதைத் தோழி தலைவியிடம் கூறல் ஆகும்.

இத்துறையில் நற்றிணையிலும் குறுந்தொகையிலும் கலித்தொகையிலும் முறையே 7 பாடல்களும், ஐங்குறுநூற்றில் 5 பாடல்களும், அகநானூற்றில் 4 பாடல்களும் என 30 பாடல்கள்[146] உள்ளன.

குறிஞ்சித் திணையில் 16 பாடல்களும்,[147] முல்லைத் திணையில் 2 பாடல்களும்,[148] மருதத் திணையில் ஒரு பாடலும்,[149] நெய்தல் திணையில் 11 பாடல்களும்[150] இடம்பெற்றுள்ளன.

கபிலர் 9 பாடல்களும்,[151] அம்மூவனார் 3 பாடல்களும்,[152] நல்லுருத்திரன் 2 பாடல்களும்,[153] கீரங்கீரனார், பிசிராந்தையார், உலோச்சனார், கோவூர்கிழார், கொல்லிக் கண்ணன், குன்றியனார், பனம்பாரனார், வெள்ளி வீதியார், காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணன், வேட்டகண்ணன், மதுரைத் தமிழ்க் கூத்தனார், கடுவன் மள்ளனார், குமுழிஞாழலார் நப்பசலையார், பரணர் ஆகிய 13 புலவர்கள்[154] முறையே ஒரு பாடலும், பெயர் தெரியாத 3 புலவர்கள்[155] முறையே ஒரு பாடலும் பாடியுள்ளனர்.

தலைவன் வரைவிற்கான முயற்சியை மேற்கொண்ட காலத்தில், அவன் விரைந்து வந்து மணக்கவில்லை என்று கவலைகொண்ட தலைவியிடம் தோழி, யானும் விரும்பினேன், நம் தாயும் அவன் மீது விருப்பங்கொண்டாள். நம் தந்தையும் அவனுக்கே உன்னை மணம் செய்து கொடுக்க விரும்பினார். ஊராரும் அவனோடு உன்னைச் சேர்த்தே அலர் தூற்றுவர்[156] என்று அனைவரும் தலைவனை விரும்புவதால் விரைவில் தலைவன் வரைந்து கொள்ள வருவான் என்று மகிழ்ந்து உரைக்கிறாள்.

தலைவன் தமரோடு வந்தபோது, நம்மவர் உடன்படுவாரோ என அஞ்சிய தலைவிக்குத் தோழி, நீ உரிமை உடையவள் என்பதனை உடன்பட்டு நம்மவர் கூறினர்.

அதனை அறிந்து யான் மகிழ்ந்தேன்[157] என்று கூறுவதில் தமர் தலைவன் தலைவி உறவை விரும்பிய நல்லுள்ளம் வெளிப்படுகிறது.

மேலும் மகட்கொடை கேட்டு வந்த தலைவன் வேண்டுகோளைத் தமர் ஏற்றனர்[158] என்று கூறுவதால் தமரின் அன்புறவு புலனாகிறது.

தமர் தலைவனை ஏற்றுக் கொண்டதால் வரைவு மலிவு ஏற்பட்டதை அறிந்து மகிழ்ந்த தலைவியை நோக்கி தோழி, உன் வருத்தம் தாங்காது யான் மெல்ல அறத்தொடு நின்றேன் அல்லவா[159] என்று தான் காரணமானதைக் கூறித் தன் அன்புறவை வெளிப்படுத்துகிறாள்.

தலைவன் சான்றோரைத் தலைவியின் தமரிடம் மணம் பேசி வர அனுப்ப தமர் மறுப்பாரோ என அஞ்சிய தலைவியை நோக்கித் தோழி நம் ஊரில் பிரிந்தாரைச் சேர்த்து வைக்கும் சான்றோர் இருந்தனர்[160] என்று கூறுவதன் வாயிலாக வரைவை உணர்த்துவதுடன், சான்றோர் தலைவன் தலைவி மீது கொண்ட உறவையும் வெளிப்படுத்துகிறது.

தோழி, தலைவன் வரைவுக்குரிய முயற்சிகளை மேற்கொண்டவிடத்து, அவள் குற்றேவல் மகனிடம் நலமா? என்று வினவ, அவனும் நலமே என்று கூறுகிறான். அவனை அன்பு பாராட்டி அவள் உணவளித்தாள்.[161] இதனால் ஏவலர்க்கும் அன்புகாட்டும் தோழியின் மனிதநேய உறவு புலப்படுத்துகிறது.

தலைவியின் சுற்றத்தார்க்கு வேண்டியதைக் கொடுத்துத் தலைவன் வரைவு மேற்கொண்டான். தலைவன் தலைவியை அடைய தன் நாட்டையே தந்தான்[162] என்று தோழி தலைவியிடம் கூறுவது, தலைவியை எவ்வாறேனும் பெறவேண்டும் என்னும் தலைவனது காதல் உறவைத் தெளிவாக வெளிப்படுத்துகிறது.

தோழி தலைவியிடம், தான் தமர்க்கு அறத்தொடு நின்றபோது அவர்கள் சினந்து, ஒரு முகூர்த்தநேரம் அளவும் மனம் கொதித்துப் பின் தணிந்து திருமணத்திற்கு இசைவளித்ததை,

> *''அறத்தொடு நின்றேனைக் கண்டு, திறப்பட,*
> *என்னையர்க்கு உய்த்து உரைத்தாள் யாய்*
> *அவரும் தெரிகணை நோக்கி சிலைநோக்கி கண்சேர்ந்து*
> *ஒருபகல் எல்லாம் உருத்து எழுந்து ஆறி*
> *இருவர்கண் குற்றமும் இல்லையால் என்று*
> *தெருமந்து சாய்த்தார் தலை''* [163]

எனக் கூறுகிறாள்.

தோழியும் தலைவியும் தலைவனின் மலையை இயற்படவும் இயற்பழித்தும் பாடுகின்றனர். அதனைக் கேட்ட தலைவன் மகிழ்ந்து அவளை மணக்க வந்தான்[164] என்று தோழி தலைவிக்குக் கூறுகிறாள். மேலும்,

> *"............................................ நம் வள்ளையுள்*
> *ஒன்றி நாம் பாட மறைநின்று கேட்டு அருளி*
> *மென் தோட் கிழவனும் வந்தனன் நுந்தையும்*
> *மன்றல் வேங்கைக் கீழ் இருந்து*
> *மணம் நயந்தனன் அம் மலைகிழவோற்கே"* [165]

என்று தந்தை வரைவிற்குடன்பட்டதைக் கூறுகிறாள்.

தலைவி தோழியிடம் தலைவன் மாலை தந்து கொண்ட களவொழுக்கத்தைக் கூறி, அதனால் ஏற்படும் விளைவைத் தோழியிடம் கேட்டாள். அப்போது தோழி தலைவியை நகைத்து,

> *"............................................. அவன்*
> *கண்ணி தந்திட்டது எனக்கேட்டு, திண்ணிதா*
> *தெய்வ மால் காட்டிற்று இவட்கு என நின்னைஅப்*
> *பொய்இல் பொதுவற்கு அடைசூழ்ந்தார் தந்தையோடு*
> *ஐயன்மார் எல்லாம் ஒருங்கு"* [166]

என்று மகிழ்வுடன் வரைவுச் செய்தியைக் கூறுகிறாள்.

மேலும் தலைவன் தந்த மாலையைத் தலைவி சூடிக்கொள்ள, செவிலி எண்ணெய் தடவ தலைவி கூந்தலை விரித்தபோது மாலை கீழே விழுந்தது. அதனால் தலைவி அஞ்சி நடுங்கியபோது தோழி,

> *"அஞ்சல் - அவன் கண்ணி நீ புனைந்தாய் ஆயின் நமரும்*
> *அவன்கண் அடைசூழ்ந்தார் நின்னை"* [167]

என்று சுற்றம் விரும்பிய மணச் செய்தியைக் கூறுகிறாள்.

தலைவன் தலைவியைத் தமரின் இசைவுடன் மணக்க உள்ளான் என்பதையும், அதன் பொருட்டுத் தான் அறத்தொடு நின்ற நிலைமைகளையும், அது கேட்டு எழுந்த அவர்தம் சினம் மகளின் நல்வாழ்வு கருதி தணிந்தமையையும் உயிரொத்த தோழி தலைவிக்கு உணர்த்தித் தேற்றுகிறாள்.

### 5.1.2 தலைவனிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

தலைவன் தோழியிடம் குறைவேண்டிய இடத்தும் தலைவியை விரைந்து திருமணம் செய்து கொள்ள தலைவனிடம் அறிவுறுத்துமிடத்தும் உடன்போக்கு நிகழ்த்துமிடத்தும்

தோழி தலைவனிடம் கூற்று நிகழ்த்துகிறாள். இவற்றுள் திருமணத் தொடர்பான வரைவு கடாதல் நிலையில் அதிகமான கூற்றுகளைத் தோழி நிகழ்த்துகிறாள்.

#### 5.1.2.1 குறை மறுத்தல்

தலைவன் தோழியின் பின் சென்று தான் கொண்டு வந்த கையுறையை ஏற்றுக் கொள்ளுமாறு கூறுகிறான். அப்பொழுது தோழி குறை மறுத்துக் கூறும் கூற்றாகக் குறுந்தொகை குறிஞ்சித் திணையில் திப்புத்தோளாரின் ஒரு பாடலும், ஐங்குறுநூற்று நெய்தல் திணையில் அம்மூவனாரின் 3 பாடல்களும் என 4 பாடல்களில்[168] காணப்படுகினறன.

தலைவன் தோழியிடம், இவள் என்னை வருத்துவதற்கு யான் செய்த தவறு என்ன என்று வினவிய போது தோழி, இவளைக் கண்டவர் தவறு செய்திலராயினும் நடுக்கமுற்று வருந்துவர்[169] என்று நகையாடிக் கூறுகிறாள்.

தோழி, தலைவன் கையுறையாகக் கொண்டுவந்த செங்காந்தள் பூவை, இவை எம் மலையிலும் உடையது[170] என்றும் 'தழையை யாங்கள் ஏற்றுக் கொண்டால் நொதுமலாரும் கொள்ளார்'[171] என்றும் ஏற்க மறுத்துக் கூறுகிறாள். மேலும் தலைவன் குறையை மறுத்துப் பின் குறை வேண்டியவிடத்து வரைந்து கொள்வாயாக[172] என்று களவைக் கற்பாக ஆக்கக் கூறுகிறாள்.

#### 5.1.2.2 குறை நயப்பித்தல்

தலைவனின் குறையை ஏற்றுக் கொண்ட தோழி, தலைவி குறிப்பறிந்து தலைவனிடம் குறை நயக்கும் நிலையில் கூறும் கூற்றுகள் அகநானூற்று நெய்தல் திணையில் உலோச்சனார், நக்கீரனார் ஆகியோர்[173] முறையே பாடிய ஒரு பாடலில் காணப்படுகின்றன.

தலைவி குறிப்பறிந்த தோழி, இரவிலும் எம் ஊரில் தங்கினால் எம்மால் முடிந்த அளவு பேணுவோம். உம் கருத்து யாது?[174] என வினவும் நிலையிலும் தலைவி உன்னை எண்ணிக் கலங்குவாள் எனவே நாளை வருக என ஏவும் நிலையிலும் தலைவனிடம் அவன் குறையை ஏற்று[175] உதவும் எண்ணத்தில் கூறுகிறாள்.

இக்கூற்றுகளால், தலைவன் தலைவி ஆகிய இருவரின் விருப்பச் செய்தியைத் தெரிவிக்கும் ஊடகமாகத் தோழி செயல்படுகிறாள் எனலாம்.

மேலும், தோழி தலைவி குறிப்பறிந்து செயல்படுபவள் என்பதை ச.வே. சுப்பிரமணியன்,

*"அவளை முழுமையாக உணர்ந்து அறிந்தவள் தோழி"* [176]

என்று குறிப்பிடுவதிலிருந்து அறியலாம்.

5.1.2.3 **சேட்படுத்தல்**

சேட்படுத்தலாகத் தோழி கூறும் கூற்றுகள் நற்றிணை நெய்தல் திணையில் பெயர் தெரியாத புலவரின் ஒரு பாடலும், குறிஞ்சித் திணையில் குடவாயிற்கீரத்தனாரின் ஒரு பாடலும், ஐங்குறுநூற்று மருதத் திணையில் ஓரம்போகியாரின் ஒரு பாடலும் என 3 பாடல்களில்[177] காணப்படுகின்றன.

தலைவன் தலைவியிடம் குறைவேண்டியவிடத்து தோழி,

*"இவளே, கானல் நண்ணிய காமர் சிறுகுடி,*
*நீலநிறப் பெருங்கடல் கலங்க உள்புக்கு*
*மீன் எறி பரதவர் மகளே நீயே*
*நெடுங் கொடி நுடங்கும் நியம மூதூர்க்*
*கடுந் தேர்ச் செல்வன் காதல் மகனே"* [178]

என்று தலைவனின் குடிப்பெருமை, தலைவியின் குடிச் சிறுமை கூறியும் தலைவி தேன் கலந்த பாலைக் கையில் வைத்திருந்த போது அதனைக் குரங்கு பிடுங்கியது கண்டு வருந்தி யழுதாள்[179] என்று அவளது இளமையின் அறியாமை[180] கூறியும் இவள் இளையள் என்பதை உள்ளுறையால் உணர்த்தி தலைவனைச் சேய்மைப்படுத்துகிறாள். இவை தலைவன் தலைவி மீது கொண்ட அன்பின் ஆழமறிய தோழி மேற்கொண்ட செயல்களாகும்.

5.1.2.4 **குறிநேர்தல்**

பகல்குறி, இரவுக்குறி ஆகிய இரண்டினையும் தோழி நேர்ந்து தலைவனுக்குக் கூறும் கூற்றுகள் நற்றிணை நெய்தல் திணையில் வடம வண்ணக்கண் பேரிசாத்தனார், உலோச்சனார் ஆகியோர் முறையே பாடிய ஒரு பாடலிலும், குறுந்தொகை மருதத் திணையில் மாதீர்த்தனின் ஒரு பாடலிலும், அகநானூறு குறிஞ்சித் திணையில் வடம வண்ணக்கன் பேரிசாத்தனாரின் ஒரு பாடலிலும் என மொத்தம் 4 பாடல்களில்[181] காணப்படுகின்றன.

பகற்குறி நேர்ந்த தோழி தலைவனிடம், பொய்கைக்கு அருகிலுள்ள காட்டாற்றின் கரையிலுள்ள சோலைக்கு யாம் கூந்தலுக்கு எருமண் எடுக்கச் செல்வோம்[182] என்றும் தலைவன் கேட்குமாறு தனக்குத்தானே,

*"......................................... ஐ தேய்கு*
*அயவெள் அருவி சூடிய உயர் வரைக்*

*கூஉம் கணஃது எம்ஊர் என*
*ஆங்கு அதை அறிவுறல் மறந்திசின் யானே"* [183]

என்றும் கூறி குறிபெயர்ந்திட்ட இடத்தைக் கூறுகிறாள்.

இரவுக்குறி நேர்ந்த தோழி, சிறுகுடிப்பாக்கத்தில் புன்னை மரப்பூவின் தேனெடுக்க வண்டினங்கள் முரலுவதால் நின் தேரின் மணி ஓசை பிறர் அறிய முடியாது. வரும் வழியும் இதுவே; மறவாது அங்கு வருக[184] என்றும் தமர் அறியாச் சேரியாக இருப்பதால் பிறர் பிறரை அறியாத எம்மூர் வரினும் தவறில்லை[185] என்றும் குறியிடம் கூறுகிறாள்.

தோழி பகல், இரவு ஆகிய குறியிடங்களைக் கூறுவதை உற்று நோக்குங்கால் தலைவன் தலைவியை இடையூறின்றிக் கூட்டுவிக்கும் அவளின் அறிவுத்திறன் புலப்படுகிறது.

### 5.1.2.5 **வரைவு கடாதல்**

தோழி, தலைவனிடம் அப்பொழுதுள்ள சூழலை விளக்கி மணம் புரிந்து கொள்ளுமாறு வேண்டுவது வரைவு கடாதல் எனப்படும்.

இதுவரை, தலைவன் தலைவியினது உறவு களவு அளவில் இருக்க, அது மேலும் சிறப்படைய, கற்பாக மலர்ந்து மாற வேண்டும் என்று தோழி முடிவெடுத்து அதற்கான ஏற்பாட்டை மேற்கொள்கிறாள். அவ்வாறு செய்யும்போது தலைவன் சிறைப்புறமிருக்க, தலைவியிடம் கூறுவது போலவும் நேரடியாகத் தலைவனிடம் கூறுவதுபோலவும் கூற்றுகள் நிகழ்கின்றன.

#### *5.1.2.5.1 குறியடிப்படையில் வரைவு கடாதல்*

##### *5.1.2.5.1.1 குறிவந்து நீங்கும் தலைவனிடம் வரைவு கடாதல்*

பகற்குறி, இரவுக்குறி ஆகியவற்றில் வந்து நீங்கும் தலைவனிடம் வரைவு கடாதல் துறையில் நற்றிணையில் 6 பாடல்களும், குறுந்தொகையில் ஒரு பாடலும், ஐங்குறுநூற்றில் 4 பாடல்களும் கலித்தொகையில் 2 பாடல்களும் அகநானூற்றில் 10 பாடல்களும் என 23 பாடல்கள்[186] உள்ளன.

குறிஞ்சித்திணையில் 6 பாடல்களும்,[187] நெய்தல் திணையில் 17 பாடல்களும்[188] உள்ளன.

அம்மூவனார் 4 பாடல்களும்,[189] கபிலர், உலோச்சனார் ஆகியோர் முறையே 3 பாடல்களும்,[190] மதுரை மருதன் இளநாகனார் 2 பாடலும்,[191] நக்கண்ணையார்,

பேரிசாத்தனார், மதுரைச் சுள்ளம்போதனார், தொல்கபிலர், வடமவண்ணக்கண் பேரிச்சாத்தன், நல்லந்துவன், மதுரைப் பாலாசிரியர் நற்றமனார், குறுவழுதியார், ஆலூர்கிழார் மகனார் கண்ணனார், சாகலாசனார், சேந்தங் கண்ணனார் ஆகியோர்[192] முறையே ஒவ்வொரு பாடலும் பாடியுள்ளனர்.

பகற்குறியிடத்து வந்து நீங்கும் தலைவனிடம் தோழி, இவள் நீ திரும்பி வரும் சிலநாள் அளவும் வாழாள். அதனை நீ நன்கு அறிந்துகொண்டு செல்வாயாக[193] என்றும், நீ யாம் வாழும் ஊரில் இன்று இரவில் தங்கினால் என்ன[194] என்றும், குரவைக் கூத்தினைக் கண்டு மகிழ்ந்து செல்க[195] என்றும், உன்னுடன் விளையாடியபோது இவள் சிலம்புகள் உடைந்தன. அவற்றை இணைத்துச் சந்து ஊதிக் கூட்ட மணலைக் கொண்டுவந்து தந்து செல்க[196] என்றும் கூறுகிறாள். மேலும்,

> *"................................... சிறுகுடி*
> *நல்கூர்ந்தார் செல்வ மகள்"* [197]

தலைவி ஆவாள்; எனவே உன்னைப் பிரிந்து வருந்துவதற்கு ஆற்றாள் என்றும் அலர் ஏற்பட்டதால் நினைவு வருந்துமாறு நீ செல்வது கொடியதாகும்[198] என்றும், இத்துறையில் தேரொன்று பலமுறை வருகிறது செல்லாதீர் எனக் கூறி தாய் இல்லிடைப் படுத்தினாள்[199] என்றும் இவள் துறை நோக்கி தன் நலம் கெட உறக்கமின்றி வருந்துவாள்; ஆனால், நீ இரவிலும் உம் ஊர் செல்ல எண்ணுகின்றீர்; யான் அதற்கு வருந்துகின்றேன்[200] என்றும், நீ எம் தலைவியுடன் எம் இல்லத்துக்கு வந்தால் எம்மவர் அன்புடன் வரவேற்று நல்விருந்து அளிப்பர்[201] என்றும், தலைவியின் நிலை, ஊரிடை எழுந்த அலர், தாயின் இற்செறிப்பு, இல்லத்தார் போற்றும் அன்பு ஆகியவற்றைக் குறிப்பாகவும் நேரடியாகவும் எடுத்துக்கூறி வரைவு கடாவுகின்றாள்.

இரவுக்குறியில் வந்து நீங்கும் தலைவனிடம் தோழி, நீ வரும் வழி விலங்குகள் திரியும் காடு[202] அதனை எண்ணி எம்மைப் போல் துன்பம் அடைவார் உள்ளரோ[203] என்றும் நாளை யாம் தினைப்புனக்காவல் மேற்கொள்வோம்[204] என்றும் தொண்டிப் பட்டினம் போன்ற அவளழகு அவளிடம் இருக்கவும்[205] தோள் எழில் சிதையாமல் இருக்கவும்[206] நீ வரும் வழி எண்ணிப் பகற்குறி வா என்றும் அவளது அழகு நீங்காதிருக்க வரைதல் வேண்டும் என்றும் கட்டாயப்படுத்துகிறாள்.

*5.1.2.5.1.2 குறியில் நிறுத்தி வரைவு கடாதல்*

பகற்குறி இரவுக்குறி ஆகியவற்றில் நிறுத்தி தலைமகனை வரைவு கடாவுதலாகக் கூறும் கூற்றுகள் நற்றிணை, குறுந்தொகை ஆகியவற்றில் முறையே 2 பாடல்களும்,

ஐங்குறுநூற்றில் ஒரு பாடலும் அகநானூற்றில் 10 பாடல்களும் என 15 பாடல்கள்[207] உள்ளன.

குறிஞ்சித் திணையில் 6 பாடல்களும்,[208] முல்லைத் திணை, மருதத் திணை ஆகியவற்றில் முறையே ஒரு பாடலும்,[209] நெய்தல் திணையில் 7 பாடல்களும்[210] உள்ளன.

கபிலர் 3 பாடல்களும்,[211] நக்கீரர் 2 பாடல்களும்,[212] மதுரை மருதன் இளநாகனார், பொன்னாகன், முடங்கிக் கிடந்த நெடுஞ்சேரலாதன், தாயங்கண்ணனார், ஆவூர் மூலங்கிழார், மதுரைப் பாலாசிரியர் நப்பாலனார், விற்றூற்று மூதெயினனார், மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார், நண்பலூர்ச் சிறுமேதாவியார் ஆகியோர்[213] முறையே ஒரு பாடலும் பெயர் தெரியாத புலவர் ஒரு பாடலும்[214] பாடியுள்ளனர்.

பகற்குறி வந்த தலைவனிடம் தோழி தினை முற்றியதால் அறுவடை செய்தனர்; எனவே யாம் இல்லில் இருப்போம்[215] என்றும், யாய், வெறியாட்டு எடுத்தும் தலைவி நோய் தீராது அவள் அழுமாறு தலைவிக்குப் பசலை நோய் உண்டானதற்குக் காரணம் நின்னுடன் யாம் கொண்ட தொடர்பே[216] என்றும் நீ அன்பற்றவன் என்பதை முன்னமே அறிந்திருப்பின் இவளை நின் கூட்டத்திற்கு இசைந்திருக்க மாட்டேன்[217] என்றும் தந்தையின் காவல் வலியது ஆதலால் நீ சென்று வருக[218] என்றும் நீ கூறிய சூளும் பொய்யோ[219] என்றும் தலைவியின் இற்செறிப்பு, தந்தையின் காவல், தாயின் நிலை, தலைவனது சூள் ஆகியவற்றைக் காட்டியும் இடித்தும் கூறுகிறாள்.

*5.1.2.5.1.3 குறி மாற்றி வரைவு கடாதல்*

குறிமாற்றி வரைவு காடவுதலில் நற்றிணையில் ஒரு பாடலும் குறுந்தொகையில் 3 பாடல்களும், அகநானூற்றில் 8 பாடல்களும் கலித்தொகையில் ஒரு பாடலும் என 13 பாடல்கள்[220] காணப்படுகின்றன.

குறிஞ்சித் திணையில் 9 பாடல்களும்,[221] நெய்தல் திணையில் 4 பாடல்களும்[222] உள்ளன.

கபிலர் 5 பாடல்களும்,[223] முதுவெங்கண்ணனார், குட்டுவன் கண்ணன், அண்டர் மகன் குறுவழுதி, மருங்கூர்கிழார் பெருங்கண்ணனார், பரணர், எழூஉப்பன்றி நாகன் குமரன், பிசிராந்தையார், மதுரைக் கண்ணத்தனார் ஆகிய 8 புலவர்களும்[224] முறையே ஒரு பாடலும் பாடியுள்ளனர்.

பகற்குறி வந்த தலைவனைத் தோழி மறுக்க தலைவன் இரவுக்குறி வேண்ட, அதையும் மறுத்து தோழி தலைவனிடம்,

> *"யாயே கண்ணினும் கடுங் காதலளே*
> *எந்தையும் நிலன் உறப் பெறாஅன் சீறடி சிவப்ப*
> *எவன் இல குறுமகள் இயங்குதி என்னும்*
> *யாமே பிரிவு இன்று இயைந்த துவரா நட்பின்*
> *இருதலைப் புள்ளின் ஓர் உயிரம்மே"* [225]

என்று தாய், தந்தையரின் காப்புச் செயலையும், இருதலைப் பறவையாக உள்ள தம் நிலையை எடுத்துக் கூறி வரைய வேண்டுகிறாள்.

மேலும் தோழி, என் தந்தையும், தான் பிடித்த மீன் கூட்டங்களை என் தமையர்க்குக் காட்ட இரவில் வீட்டுக்கு வருவார்; என் அன்னையும் ஆயத்தாருடன் தெய்வம் தொழ விழாக் கொண்டாடுவாள். நீ தலைவியைக் காண புன்னைச் சோலையில் பகற்பொழுது வருவாயாக[226] என இரவுக்குறியை மாற்றி பகலில் இடையீடில்லா ஏற்ற பொழுதையும் இடத்தையும் சுட்டிக்காட்டி வரைவு கடாவுகிறாள்.

இவ்வாறு பகலில் வருவானை இரவில் வா என்றும் இரவில் வருவானைப் பகலில் வா என்றும் ஏதுகாட்டிக் கூறுவது தோழி காதலர் மீது கொண்ட அன்பை வெளிப்படுத்துவதுடன் அவர்கள் களவைப் பிறர் அறிந்து வீணாக்கா வண்ணம் பாதுகாக்கும் முறையைக் கண்ணும் கருத்துமாக இருந்து செயல்படுத்துவதையும் உணர்த்துவதாகும்.

### *5.1.2.5.1.4 குறியை மறுத்து வரைவு கடாதல்*

இத்துறையில் நற்றிணையில் 5 பாடல்களும், குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு ஆகியவற்றில் முறையே 4 பாடல்களும், கலித்தொகையில் ஒரு பாடலும் என மொத்தம் 18 பாடல்கள்[227] உள்ளன.

குறிஞ்சித் திணையில் 15 பாடல்களும்,[228] மருதத் திணை, நெய்தல் திணை, பாலைத் திணை ஆகியவற்றில்[229] முறையே ஒரு பாடலும் காணப்படுகின்றன.

கபிலர் 6 பாடல்களும்,[230] கண்ணங்கொற்றனார், உலோச்சனார், நல்வேட்டனார், கடுந்தோட் கரவீரன், இருந்தையூர்க் கொற்றன் புலவன், தலைமகன் குன்றியன், ஓரம்போகியார், ஓதலாந்தையார், கோட்டம்பலத்துத் துஞ்சிய சேரமான், பொதும்பில் கிழான் வெண்கண்ணனார் ஆகிய 9 புலவர்கள்[231] முறையே ஒரு பாடலும், பெயர் தெரியாத புலவர் இருவர்[232] முறையே ஒவ்வொரு பாடலும் பாடியுள்ளனர்.

இரவுக்குறி வேண்டிய தலைவனிடம் தோழி, காமமானது நீங்குவதாக இருப்பினும் உம்மிடத்தில் யாம் கொண்ட நட்பும் அழியுமோ அழியாது[233] என்றும்,

> "..........................................................
> *விலங்கு ஓரார் மெய் ஓர்ப்பின் இவள் வாழாள் இவள் அன்று*
> *புலம் புகழ் ஒருவ யானும் வாழேன்*
> *அதனால் பொதி அவிழ் வைகறை வந்து நீ குறைகூறி*
> *வதுவை அயர்தல் வேண்டுவல் ஆங்கு*
> *புதுவை போலும் நின் வரவும் இவள்*
> *வதுவை நாண் ஒடுக்கமும் காண்குவல் யானே"* [234]

என்றும் இவள் தந்தையின் கை வேலுக்கு அஞ்சமாட்டாயோ[235] என்றும் இன்று முதல் இரவில் வாராதே. ஒருவேளை வருவாயாயின் எம்துன்பம் நீங்க நின்னுடைய ஊருக்குச் சென்றபின் அதனை அறிவித்தற்பொருட்டு ஊதுகொம்பை ஊதுவாயாக[236] என்றும், தன் உள்ளக் கருத்தை வெளிப்படையாகக் கூறி குறியை மறுத்து வரைவு கடாவுகின்றாள்.

தோழி குறிமறுப்பில் தன் தோழியின் வதுவை காண ஆவல் கொண்டிருப்பவள் என்பதுடன் அவளின்றி தான் இல்லை என்ற உயிரொத்த உணர்வும் அன்பும் கொண்டவள் என்பதும் புலப்படுகின்றன. இதையே,

> *"தலைவியும் தோழியும் ஒட்டிப் பிறந்த கவைமகள்"* [237]

என்பர் செ. வெங்கட்ராம ஐயர்.

### *5.1.2.5.2 வரையாது வந்தொழுகும் தலைவனிடம் வரைவு கடாதல்*

இக்கூற்றாக நற்றிணையில் 6 பாடல்களும், குறுந்தொகையில் 3 பாடல்களும், ஐங்குறுநூற்றில் 9 பாடல்களும், கலித்தொகையில் 4 பாடல்களும், அகநானூற்றில் 2 பாடல்களும் என மொத்தம் 24 பாடல்கள்[238] காணப்படுகின்றன.

குறிஞ்சித் திணையில் 17 பாடல்களும்,[239] மருதத் திணையில் ஒரு பாடலும்,[240] நெய்தல் திணையில் 6 பாடல்களும்[241] உள்ளன.

கபிலர் 11 பாடல்களும்,[242] அம்மூவனார், நல்லந்துவன் ஆகியோர் முறையே 2 பாடல்களும்,[243] உக்கிரப்பெருவழுதி, தேவனார், பொதும்பில் கிழார் மகன் வெண்கண்ணனார், கோப்பெருஞ்சோழன், கண்ணன், நெய்தற்சாய்த்துய்த்த ஆவூர்கிழார், ஆகிய 7 புலவர்கள்[244] முறையே ஒரு பாடலும், பெயர் தெரியாத புலவர்கள்[245] இருவர் முறையே ஒவ்வொரு பாடலும் பாடி உள்ளனர்.

வரையாது தலைவியிடம் இரவுக்குறி வந்தொழுகும் தலைவனிடம் தோழி, 'நீ இரவில் வருவது கொடியது; அவற்றினும் உம்மை எதிர்பார்த்து தூங்காத என் கண்களிலும், என்னிடம் அன்பற்று நின்னிடம் உள்ள என் நெஞ்சமும் கொடியது'[246] என்றும், 'தலைவியின் நெற்றி பசலை பாயுமாறு அவள் தொடர்பை நீ எவ்வாறு விட்டாய்? அதற்காக யான் வருத்தப்படுகிறேன்'[247] என்றும், 'அவள் அழாதவாறு நீ அருளாமல் இருப்பது கொடியது'[248] என்றும் கூறி தலைவியை விரைந்து வரைந்து கொள்ள ஆர்வப்படுத்துகிறாள்.

தலைவன் மீதான தலைவியின் காதலை அவனுக்குப் புலப்படுத்தும் தோழி,

*''நல்காய் ஆயினும், நயன் இல செய்யினும்,*
*நின் வழிப்படூஉம் என் தோழி நல் நுதல்*
*விருந்து இறைகூடிய பசலைக்கு*
*மருந்து பிறிது இன்மை நற்கு அறிந்தனை சென்மே''* [249]

எனவும்,

எம் தலைவி இறக்காமல், அவளைக் காக்கும் மருந்து உன்னைத் தவிர பிறிதொன்று இருக்குமேயானால் பிரிந்து செல்க, அத்தகையப் பிற இல்லையாயின் அவளைப் பிரிந்து போக வேண்டாம்[250] எனவும்,தலைவியின் அரிய துயர் தீர்க்கும் மருந்தாய் நீ விரைந்து செல்வாய்[251] எனவும் உரைக்கிறாள். தலைவன் அன்புடையனாயினும் அன்பற்றவனாயினும் தலைவியின் பசலை நோய்க்கு அவன் அவளிடம் காட்டும் அன்பொன்றே மருந்தாக அமையும் என்பது அவள் துன்பத்தைப் போக்க அவனால் மட்டுமே இயலும்; அன்றிப் பிற உறவால் அல்ல என்பதைக் காட்டுகிறது.

இங்குக் காணப்படும் நோயும் மருந்தும் வேறுபட்ட நிலையில்

*''பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை*
*தன்நோய்க்குத் தானே மருந்து''* [252]

என வரும் குறட்பா ஒப்பிட்டுக் காணத்தக்கது.

இக்குறளில் மேற்கண்ட கூற்றுக்கு மாறாக, தலைவன் காதல் நோயாளனாகவும், அவன் நோய்க்கு மருந்து தலைவியாகவும் கூறப்பட்டுள்ளமை காணலாம். இதனால் அன்புப் பிணைப்பால் உண்டாகும் காதல் நோய் தலைவன் தலைவி இருவர்க்கும் பொதுவானது என்பதும் இவ்விருவர் நோய்க்கும் ஒருவர்க்கு மற்றவர் மருந்தென்பதும் புலனாகக் காணலாம்.

தலைவன் அன்புடையவனாயின் தலைவியை மணம் செய்து கொண்டிருப்பான். தோழி தலைவியின் அறிவு வழிச் செயல்படுபவள்; ஆயினும் தலைவி, தான் தலைவன்மீது

கொண்டுள்ள அளவற்ற காதலைத் தன் தோழியிடம் சொல்லுவதற்கு நாணப்படுகின்றவள் ஆவாள். அத்தகையவளைத் தலைவன் மணந்து கொள்வானாயின் அது ஒரு நல்லறச் செயலாகும் எனத் தோழி தலைவனை வரைந்து கொள்ள முடுக்குகிறாள்.[253]

தலைவியின் பெருங்காதல் குறித்துப் பேசும் தோழி,

*"............................................ இவள்*
*உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே"* [254]

என்கிறாள். தலைவியின் சிறிய உயிரைக் காட்டிலும் தலைவனிடம் அவள் கொண்டுள்ள காதல் மிகப் பெரியதென்பதை அவன் உணரச் செய்கிறாள் தோழி.

தலைவனிடம் தோழி, நீ தெய்வ மகளிரைச் சுட்டிச் சொன்ன சூளானது என்னைத் துன்புறுத்துகிறது[255] என்றும் அறவுணர்ச்சி இல்லாத தாய் எம்மைத் தழுவுவதால், நின் குறிப்பறிந்து இரவுக்குறியில் வர இயலாதவராயினோம்[256] என்றும் நீ தலைவியை மணந்து கொள்ளும்பொழுது யாம் அயலார் போலிருந்து இவளது நாணமாகிய ஒடுக்கத்தைக் காண்போம்[257] என்றும், 'நல்லமலை நாடனுடைய மனைவி' எனப் போற்றுமாறு தலைவியை மணந்து செல்வாய்[258] என்றும் கூறுகிறாள்.

தனக்கு வருத்தம் உண்டானபோது உதவி செய்வார்க்கு வருத்தம் ஏற்பட, அவர்க்கு உதவி செய்யாதவன், தனக்குக் கல்வி கற்பித்தவன் தன்னிடமிருந்து ஒன்றும் பெறாமல் வருந்த அவனுக்கு உதவாதவன் பெற்ற கல்வி நாள்தோறும் தேய்வதைப் போல் தேய்வான். அதுமட்டுமன்றி அச்செய்ந்நன்றி கொன்றமை அவன் உடலை ஒழித்து உயிர் சென்றவிடத்தும் அனுபவிக்கச் செய்யும். ஆகவே சூளுரைப்பார் அதைப் பொய்த்தால் முயற்சியில்லாதவன் பெற்ற செல்வம் தேய்வதைப் போலத் தாமாக அழிவர். மேலும் சூள் பொய்த்த தீவினை மறுபிறவியிலும் தொடர்ந்து துன்புறுத்தும். செய்ந்நன்றி கொல்வது என்பது சூளுரைவைப் பொய்க்கும் தன்மையுடையது. எனவே தலைவியை மணந்து கொள்வேன் என முன்னர் கூறிய சூளுரை பொய்க்காமல் விரைந்து மணப்பாயாக[259] எனவும் தோழி தலைவனுக்கு அறவுரை கூறி விரைவுபடுத்துகிறாள்.

இவ்வாறு தலைவி மீது கொண்ட அன்பால், அவளது நிலையைத் தலைவனுக்குச் சுட்டி உரைப்பதுடன் அறிவுரையும் வழங்குகிறாள். இதனாலேயே ஔவை சு. துரைசாமிப் பிள்ளை, தோழியை,

*"அன்பும் அறிவும் அறமும் முறையே உள்ளம் உரை செயல்களாகத் திரண்டு பெண்ணுருக் கொண்டு வந்தாற்போலும் பெருமையுடையவள் என்றால் சாலும்"* [260]

என்று தோழியின் பெருமையை எடுத்துரைக்கிறார்.

### *5.1.2.5.3 தலைவியின் ஆற்றாமை கூறி வரைவு கடாதல்*

இத்துறைக் கூற்றுகளாக நற்றிணை, ஐங்குறுநூறு ஆகியவற்றுள் முறையே 2 பாடல்களும், கலித்தொகையில் 8 பாடல்களும், அகநானூற்றில் ஒரு பாடலும் என மொத்தம் 13 பாடல்கள்[261] உள்ளன.

குறிஞ்சித்திணையில் 6 பாடல்களும்,[262] நெய்தல் திணையில் 7 பாடல்களும்[263] இடம் பெற்றுள்ளன.

கபிலர் 4 பாடல்களும்,[264] நல்லந்துவன் 6 பாடல்களும்,[265] கணக்காயனார், கண்ணம்புல்லனார், மதுரை நக்கீரனார் ஆகியோர்[266] முறையே ஒரு பாடலும் பாடியுள்ளனர்.

அன்னை பழமையாய்க் காத்துவந்த அழகு, புதியதாய்க் கண்ட தலைவன் மேல் தான் கொண்ட காதலால் அழிந்தது[267] என்றும், நெற்றி, மேனி ஆகிய உறுப்புகள் பசலை நோயினின்றும் நீங்கி மீண்டும் முன்னைய அழகைப் பெற விரைவில் மணப்பாயாக[268] என்றும் தோழி தலைவியின் ஆற்றாமையைக் கூறி விரைந்து மணக்குமாறு தலைவனை வேண்டுகிறாள்.

தலைவியை வரைந்து கொண்டு அவளது பித்தத்தைப் போக்குவாயாக. அப்போது நுகர்ந்தவரின் நெஞ்சம் அழிந்து கெடுமாறு கைவிடுவாயாயின், அது வருந்திய வருத்தம் நீக்கும் மருந்தின் திறத்தை அறிந்த ஒருவன் அம்மருந்தை அறியேன் என்று வஞ்சகமாக அம்மருந்தின் செயலைக் கெடுப்பதை விடக் கொடியதாகும்[269] என்று தலைவியின் ஆற்றாமையை எடுத்துக்காட்டி வரைவு கடாவுகின்றாள்.

### *5.1.2.5.4 தலைவனின் ஆற்றாமையைச் சுட்டி வரைவு கடாதல்*

இத்துறையில் நற்றிணை குறிஞ்சித் திணையில் வண்ணக்கன் சேரிக்குமரங் குமரனார், கோளியூர்க் கிழார் மகனார் செழியனார் ஆகியோர் முறையே ஒரு பாடலும், கபிலர் 2 பாடல்களும் என மொத்தம் 4 பாடல்கள்[270] பாடியுள்ளனர்.

தலைவியைக் காணாமல் இருப்பதால் ஏற்படும் ஆற்றாமையால் விலங்குகள் உலவும் சிறிய வழியில் நடுஇரவில் தலைவன் வருவதற்காகத் தான் வருந்துவதாகக்[271] கூறும் தோழி அத்துன்பம் நீங்கித் தலைவியை விரைந்து மணம் முடிக்குமாறு வேண்டுகிறாள்.

### *5.1.2.5.5 தலைவியின் செறிப்பு அறிவுறீஇ வரைவு கடாதல்*

இத்துறையில் நற்றிணையில் 6 பாடல்களும், குறுந்தொகையில் 3 பாடல்களும், அகநானூறு, கலித்தொகை ஆகியவற்றில் முறையே ஒரு பாடலும் என மொத்தம் 11 பாடல்கள்[272] உள்ளன.

குறிஞ்சித் திணையில் 4 பாடல்களும்,[273] நெய்தல் திணையில் 7 பாடல்களும்[274] காணப்படுகின்றன.

கபிலர் 2 பாடல்களும்,[275] பொதும்பில்கிழார், நக்கீரர், ஔவையார், உலோச்சனார், குடவாயிற்கீரத்தனார், அம்மூவன், கலைமகன், காவிரிப்பூம்பட்டினத்துக் கந்தரத்தனார், நல்லந்துவன் ஆகியோர்[276] முறையே ஒரு பாடலும் பாடியுள்ளனர்.

தனித்திருந்து தலைவியை எண்ணி வருந்துகிறாய்; ஆனால், அவளோ அரிய இற்செறிப்பில் வைக்கப்பட்டிருக்கிறாள்.[277] தலைவியின் நாற்றம், நுதல் ஆகியவற்றின் மாறுபாடு அறிந்தும், கைவளையல் நெகிழக் கண்டும் அவளை இற்செறிப்புச் செய்திருக்கிறாள்[278] அன்னை.

ஊர் அலரால் இற்செறிக்கப்பட்டுள்ள எம் தலைவி அங்கிருந்தே முதுமை அடையட்டும். அதற்குக் காரணமானவனாகிய நீ நெடுங்காலம் வாழ்வாயாக.[279] நீ தலைவியைக் காணத் துன்புற்று வருகிறாய்; தலைவி நின் அறியாமையால் வருந்துகிறாள்; யான் என் மனதில் நஞ்சுண்ட இரட்டைப் பிள்ளைகளின் தாய் இருவர் திறத்தும் அஞ்சுவது போல் அஞ்சுகிறேன்.[280] எம் தலைவி தன் தோழியருடன் விளையாடினாலும் அவள் தாய் வீணே சினம் கொள்வாள். அத்தகைய தாய் நீ அடிக்கடி தலைவியைக் காண வருவதைக் கண்டால் தலைவியை மிகுந்த காவலில் வைத்துப் பாதுகாப்பாள். அதனால் நீ அடிக்கடித் தலைவியைக் காண வருவதைக் கைவிடுவாயாக[281] என்றெல்லாம் பலவாறு தலைவியின் இற்செறிப்பைக் கூறும் தோழி தலைவியை விரைந்து மணக்குமாறு தலைவனிடம் கூறுகிறாள்.

### *5.1.2.5.6 பிற நிலைகளில் வரைவு கடாதல்*

இத்துறையில் நற்றிணையில் 9 பாடல்களும், ஐங்குறுநூற்றில் 6 பாடல்களும், கலித்தொகை, அகநானூறு ஆகியவற்றில் முறையே ஒரு பாடலும் என மொத்தம் 17 பாடல்கள்[282] இடம் பெற்றுள்ளன.

குறிஞ்சித் திணையில் 12 பாடல்களும்,[283] நெய்தல் திணையில் 5 பாடல்களும்[284] உள்ளன.

கபிலர் 6 பாடல்களும்,[285] அறிவுடைநம்பி, பெருவழுதி, மலையனார், மதுரைப் பூவண்டி நாகன் வேட்டனார், மதுரை மருதனிள நாகனார், அம்மூவனார், நல்லந்துவனார்,

உலோச்சனார் ஆகியோர்[286] முறையே ஒரு பாடலும், பெயர் தெரியாத புலவர்கள்[287] 2 பாடல்களும் பாடி உள்ளனர்.

''நீ தலைவியோடு புணர்ந்ததால் உண்டான நாற்றத்தினால், தாய் ஐயுற்றுத் தலைவியை வினவினாள்; தலைவி பதில்கூறத் தெரியாமல் என்னை நோக்கினாள்; நானோ, அடுப்பில் எரியும் சந்தனக்கட்டையின் மணம் பரவி அவ்வாறு மணக்கின்றது எனக்கூறித் தலைவியைத் தாயிடமிருந்து காப்பாற்றினேன்;[288] தலைவியுடன் நீ கொண்டுள்ள நட்பை அவள் தாய் அறிவாளாயின் அதை எண்ணிக் கண்ணீர் விட்டு இறப்பினும் இறப்பாள்;[289] நீ என்னிடம் கண்ணோட்டம் செய்தாகிலும், அவளுக்கு அன்பு காட்ட வேண்டும். ஏனெனில் அவள் உன் கண்ணோட்டமன்றி பிறிதொன்றும் இல்லாதவள்;[290] நாம் இவ்வூரிலிருந்து அலர் போன்ற துன்பத்தை அடையாமல் நம்மூர்க்குச் செல்ல எழுவோமா;[291] தீமை செய்வதில் நீ வல்லமை உடையவன் அல்லன் எனினும் பொய்யுரைப்பதில் வல்லமையுடையவனாய் உள்ளாய்;[292] எனப் பலவாறு எடுத்துரைக்கும் தோழி, தலைவியின் துன்பம் தீரத் தலைவனை மணந்து கொள்ள விரைவு படுத்துகின்றாள்.

தோழி தலைவனை வரைவுகடாதல் துறையில் தலைவனின் அருளையே பெரிதும் வேண்டுகிறாள் என்றாலும் அவனைக் கடிந்துரைக்கும் பகுதிகளும் உள்ளன.

தோழி வரைவுகடாதலில் நடந்து கொள்ளும் முறையை உளங்கொண்டே இரா. தண்டாயுதம்,

> *''உயர்த்திக் கூறவேண்டிய நேரத்தில் உயர்த்திக் கூறி, இடித்துக்காட்ட வேண்டிய நேரத்தில் இடித்துக் காட்டி, அறிவுரை நல்க வேண்டிய நேரத்தில் அறிவுரை நல்கி, அகவுலக ஆட்சியின் மதிநலம் சான்ற அமைச்சராகத் தோழி விளங்குகிறாள்''* [293]

என்று கூறுகிறார் எனலாம்.

வரைவு கடாதல் குறிஞ்சித் திணையில் அதிக அளவிலும், அதையடுத்து நெய்தல் திணையிலும் காணப்படுகின்றன.

'வரைவு கடாதல்' தலைவனை நன்னெறிப்படுத்தும் வழிமுறையாகும். வரைவின் பொருட்டுத் தலைவனை விரைவுபடுத்தவில்லையாயின் அவனுக்குக் கற்பறத்தின் இன்றியமையாமையும், அதன் உடனடித் தேவையும் புலனாகாது போய்விடும்.

5.1.2.6 **உடன் போக்கு**

### *5.1.2.6.1 உடன் போக்கிற்கு அஞ்சி உரைத்தல்*

நற்றிணை பாலைத் திணையில் கயமனாரின் பாடல் ஒன்றில் தோழி தலைவனிடம், தலைவி நின்னுடன் மேற்கொள்ளும் உடன்போக்கின் பொருட்டுத் தன்னைவிட்டு, நீக்கும் சிலம்பு, வரிப்பந்து ஆகியவற்றை ஆயர் காணின் தன்னை நினைந்து வருந்துவர் என எண்ணி உடன்போக்கு செல்லத் தயங்கிக் கண்ணீர் சொரிந்தாள்[294] எனக் கூறி உடன்போக்குக்கு அஞ்சுகிறாள்.

### *5.1.2.6.2 தலைவியின் உடன்போக்குணர்த்தல்*

தலைவன் தலைவியை அவளுடைய உறவினர் அறியாவண்ணம் அழைத்துப் போக எண்ணியதனைத் தோழியிடம் கூறினான். தோழி தலைவிக்கு அதனைக் கூறி அவள் உடன்பாட்டினைக் குறிப்பாலறிந்து வந்து தலைவனிடம் கூறுவதாக அகநானூற்றுப் பாலைத் திணையின் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் பாடல் ஒன்றில், ''தலைவி தன் நெஞ்சிலுள்ள துன்பம் தீருதல் பொருட்டு நின்னுடன் வரத்துணிந்தாள். சுரத்தைக் கடந்து சிற்றூரில் மாலை உனக்குத் துணையாகி காலையில் மணமனை போன்ற காட்டில் நின்னுடன் வருவாள்'' [295] என்று தலைவியின் உடன்போக்கை மகிழ்ந்து உரைக்கின்றாள்.

### *5.1.2.6.3 உடன் போக்கு வலித்தல்*

அகநானூற்றுப் பாலைத் திணையில் மதுரை மருதனிள நாகனாரின் பாடல் ஒன்றில் உடன்போக்கு அனுப்பத் துணிந்த தோழி தலைவனிடம் பாலை வழிகள் செல்வதற்கு ஏற்றவண்ணம் வானம் மழைபொழிந்து கானம் தம்பலப்பூச்சியின் அழகுபெற்று இனிமையாக உள்ளன எனக் கூறுகிறாள். இதனால் தலைவனுடன் தலைவி உடன்போக்கு மேற்கொண்டு மணந்து வாழத் தோழி பெரிதும் விரும்புகிறாள்[296] என்பது தெளிவாகின்றது.

### *5.1.2.6.4 உடன்போக்கும் தோழி தலைவனிடம் கூறல்*

நற்றிணை பாலைத் திணையில் பெயர் தெரியாத புலவரின் ஒரு பாடலும், குறுந்தொகை குறிஞ்சித் திணையில் ஒரு பாடலும், பாலைத்திணையில் ஔவையாரின் ஒரு பாடலும் ஐங்குறுநூறு பாலைத் திணையில் ஓதலாந்தையாரின் ஒரு பாடலும் என மொத்தம் 4 பாடல்கள்[297] உள்ளன.

தலைவியின் மேனி தளர்ந்தும், கூந்தல் நரைத்தும் காணப்படும் முதுமையிலும் இவளைக் கைவிடாது காப்பாயாக[298] என்றும், இவள் நின்னையன்றி வேறு பற்றுக்கோடு இல்லாதவள்; ஆகையால் இவளின் முதுமைக் காலத்திலும் நின்னோடு விருப்பம் மிகக்

கொண்டு கருத்து மாறுபடினும் இவளுடைய பிணக்கம் நீக்கிப் பாதுகாப்பாயாக[299] என்றும், தலைவிக்கு உன் உடன்போக்கு குறிப்பை விளங்க உரைத்து உடன்படுமாறு இரந்து கூறி யான் வரும்வரை விரையாமல் நிற்பாய்[300] என்றும், தலைவி நும்மோடு வரின அவளுக்குப் பாலைநிலமும் இனிதே ஆகும். நும்மோடு வாராளாயின் வீடும் இன்னாதது ஆகும்[301] என்றும் கூறி தலைவியைத் தலைவனுடன் உடன்போக்குக்கு உட்படுத்துவாள் தோழி.

இவ்வாறு தோழி முதலில் தலைவியின் நிலைக்காக உடன்போக்கிற்கு அஞ்சினாலும், தலைவியின் உடன்பாட்டுடன் உடன்போக்கை ஏற்றுக்கொள்கிறாள். மேலும் உடன்போக்கில் தலைவனிடம் தலைவியைக் காக்க வேண்டிய கடமையைக் கூறுகிறாள். சமுதாயக்கட்டை உடைத்தெறிந்து நடந்தாலும் பண்பு மீறாது விளங்குகிறாள் அதனாலேயே,

*''பண்பின் நிலைக்களனாக விளங்கும் தோழியின் திறம் பெரிது''* [302]

என்று வியந்துரைக்கிறார் த. சாம்பசிவன் அவர்கள்.

#### 5.1.2.7 **வரைவிடை தலைவன் பிரியுமிடத்து**

இது வரைவை முன்னிட்டு தலைவன் பிரிய எண்ணுமிடத்துத் தோழி தலைவனிடம் தலைவியின் நிலையைக் கூறுவது ஆகும்.

இத்துறையில் நற்றிணையில் 3 பாடல்களும், குறுந்தொகையில் 5 பாடல்களும், ஐங்குறுநூற்றில் 4 பாடல்களும், அகநானூற்றில் ஒரு பாடலும் என மொத்தம் 13 பாடல்கள்[303] உள்ளன.

குறிஞ்சித் திணையில் 6 பாடல்களும்,[304] மருதத் திணையில் ஒரு பாடலும்,[305] நெய்தல் திணையில் 4 பாடல்களும்,[306] பாலைத் திணையில் 2 பாடல்களும்[307] காணப்படுகின்றன.

கபிலர் 5 பாடல்களும்,[308] பேரிசாத்தனார், நம்பிகுட்டுவனார், பாலை பாடிய பெருங்கடுங்கோ, நரிவெரூஉத் தலையார், மதுரை நல்வெள்ளி, அம்மூவனார், ஓரம்போகியார், பெயர் தெரியாத புலவர் ஒருவர் ஆகியோர் முறையே ஒரு பாடலும்[309] பாடியுள்ளனர்.

வரைவு இடைவைத்துப் பொருள்வயிற் பிரியும் தலைவனிடம் தோழி, காட்டு வழியில் இவளோடு செல்வது நன்று; அவ்வாறன்றி அன்பில்லாது செல்வீராயின் இவள் அழுவாள்; மேலும் மாலைக் காலத்தில் இவளது அவலம் பெரிதாகும். அப்போது அவளைக் காப்பது என் பொறுப்பு அன்று[310] என்று தன்நிலையை எடுத்துக் கூறுகிறாள்.

தலைவியைப் பிரிந்து தனியே செல்ல விரும்பிய தலைவனிடம், பாலை வழி துன்பமுடையது என்று தனித்துச் செல்ல கருதுவானாயின், தலைவரைப் பிரிந்து தனிமை கொண்ட மகளிருக்கு வீடுகள் மட்டும் இனிமை தருமா?[311] என்றும் நீ நுகர்ந்த எம் பெண்மை நலத்தை மீண்டும் எங்களிடம் தந்து செல்வாயாக[312] என்றும்

*"தாய் உடன்று அலைக்கும் காலையும் வாய்விட்டு*
*அன்னாய் என்னும் குழவி போல*
*இன்னா செயினும் இனிது தலையளிப்பினும்*
*நின் வரைப்பினள் என் தோழி*
*தன்உறு விழுமம் களைஞரோ இலளே"* [313]

என்றும் தலைவியின் நிலையைக் கூறி விரைந்து வருமாறு வலியுறுத்துகிறாள்.

சிலகாலம் பிரிந்து சென்று திரும்பி வந்து மணந்து கொள்ள வேண்டும் என்ற தலைவனிடம், நீ பிரியினும் நின்பால் கொண்ட இம்மடந்தையின் நட்பு பிரிவு என்று எண்ணும் இயல்புடையதன்று என்பதை அறிக[314] என்று தலைவியின் பிரிவறியா நட்பைத் தோழி உணர்த்துகிறாள்.

வரைந்து கொள்ளும் வரை தலைவியை ஆற்றுவிக்குமாறு தலைவன் தோழியிடம் கூற அதற்குத் தோழி, சான்றோர் அறமற்றவற்றையும் தம் கேள்வியால் வெல்வர். நும் போன்றோர் இடத்து பொய்யுடன் கூடியவை தோன்றின் இவ்வுலகத்தில் மெய் என்பது எங்குள்ளது?[315] என்று தலைவனிடத்துச் சூள் மொழியை இகழ்ந்துரைக்கின்றாள்.

யாம் செய்த நன்றியை மறந்து நீட்டிப்பினும், தலைவியின் கூந்தல் தலைவருக்கே உரிமை உடையன[316] என்று தோழி சொல்வதன் மூலம் ஒரு பெண் மனதால் விரும்பிய ஆடவனை அன்றி வேறு யாரையும் விரும்பாள் என்பது குறிப்பாகச் சுட்டப்படுகிறது.

வரைவிடை வைத்துத் தலைவன் பிரிந்து வரும்வரை தலைவி வேறு யாரையும் விரும்பாது ஆற்றியிருப்பாள் என்பதைத் தோழி கூறுவதன் வாயிலாக ஒரு பெண், தான் மனதில் வரித்த ஒரு ஆடவனையன்றி வேறு ஆடவனை நினையாள் என்பது விளங்குகிறது. மேலும் சமுதாயத்தில் ஒரு பெண் களவு வாழ்வில் நடந்து கொண்ட ஒழுக்க முறையும் தெற்றெனப் புலப்படுகிறது.

### 5.1.3 செவிலியிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

தலைவன் சிறைப்புறமிருக்க தோழி செவிலிக்குக் கூறுவாளாய் ஐங்குறுநூற்று மருதத் திணையில் ஓரம்போகியாரின் ஒரு பாடலும், அகநானூற்று குறிஞ்சித் திணையில் கபிலரின் ஒரு பாடலும் என மொத்தம் 2 பாடல்கள்[317] உள்ளன.

தலைவிக்குத் தலைவனுடன் உண்டான புணர்ச்சியால் அவளுக்குப் புதிய நறுமணம் ஏற்பட அதையறிந்த செவிலி, 'இது எதனால் உண்டாயிற்று?' என்று வினவுகிறாள், அதற்குத் தோழி, வண்டினம் பல மலர்களிலுள்ள தேனை மிகுதியாக உண்டு புதுமணம் விரும்பி இவள் கூந்தலில் மொய்க்கின்றன[318] என்கிறாள்.

தலைவன் வரைவு கொள்ளும் கருத்தின்றி பகல்குறி இரவுக்குறி இரண்டிலும் வந்து போகின்றான். அப்போது தோழி, செவிலியிடம் தாயே! இவள் இரவில் தனியே தோட்டத்துக்குச் சென்று வருகிறாள் என வருந்தாதே! இரவில் நீ கண்டது இவள் வடிவில் வந்ததொரு தெய்வம் அல்லது நனவு போன்ற கனவாகும். இவள் இரவில் செல்ல அஞ்சுவதுடன் நம் தந்தையும் இல்லில் உள்ளார்[319] என்றுரைக்கிறாள்.

இக்கூற்றுகள், தாய் தன் மகளைக் கண்ணும் கருத்துமாக வளர்ப்பதையும் தன் மகளின் ஒவ்வொரு செயலையும் கவனிக்க வேண்டியது ஒரு தாயின் கடமை என்பதையும் புலப்படுத்துகின்றன. பருவமடைந்த மகளிடம் ஒரு தாய் கொண்டுள்ள கண்டிப்புறவு வெளிப்படுகிறது. மேலும் இக்கூற்றைச் சிறைப்புறமாக உள்ள தலைவன் கேட்பதால், அவன் தலைவியை விரைவில் மணந்து கொள்ள வேண்டும் என்பதைத் தோழி வலியுறுத்துகிறாள்.

### 5.1.3.1 செவிலிக்கு அறத்தொடு நிற்றல்

> *''களவையும் காந்தருவதத்தையும் இனங்கண்டு அறியக்கூடிய துறையொன்று களவியற் பகுதிக்குரியதாய் உள்ளது. அந்தத் துறைதான் 'அறத்தொடு நிற்றல்''' [320]*

என்று ம.ரா.போ. குருசாமி கூறுகிறார்.

> ***''அறத்தொடு நிற்றல் துறைப் பாடல்கள் தலைவி தனது காதலைத் தானே வெளியிடாத நாணத்தை வலியுறுத்துகின்றன. பெண்மையினை மாசுபடாமல் மிகப் பத்திரமாகப் பாதுகாக்கும் முயற்சியை நோக்கும்போது சரக்கு வண்டிகளில் கண்ணாடிப் பார்சலுக்கு வெளியே "Glass - Handle with Care' என்று எழுதப்பட்டிருப்பது நினைவுக்கு வருகிறது''*** [321]

என்று நா. செயராமன் கூறுகிறார்.

தொல்காப்பியர்,

> ''அறத்தொடு நிற்குங் காலத் தன்றி
> அறத்தியல் மரபிலள் தோழி என்ப'' [322]

என்கிறார். மேலும்,

"ஐயச் செய்கை தாய்க்கெதிர் மறுத்துப்
பொய்யென மாற்றி மெய்வழிக் கொடுப்பினும்
அவள்விலங் குறினுங் களம்பெறக் காட்டினும்
பிறன்வரை வாயினும் அவன்வரைவு மறுப்பினும்
முன்னிலை அறமெனப் படுதலென் றிருவகைப்
புரைதீர் கிளவி, தாயிடைப் புகுப்பினும்" [323]

என்றும் கூறுகிறார்.

*"அறமென்பது தக்கது; தக்கதனைச் சொல்லி நிற்றல் தோழிக்கும் உரித்தென்றவாறு; அல்லதூஉம் பெண்டிர்க்கு அறமென்பது கற்பு, கற்பின் தலை நிற்றல் என்பது"* [324]

என இறையனாரகப் பொருள் உரை பகர்கிறது.

தோழி தலைவியின் பெற்றோர்க்கு அறத்தோடு நிற்றல் பற்றி வ.சுப. மாணிக்கம் அவர்கள்,

*"பெற்றோர்க்கு அறிவித்தல் தோழியின் நோக்கம் இல்லை. தலைவி ஏற்கனவே கற்பு நெறிப்பட்டுவிட்டாள் என்பதனை முதன்மையாக வலியுறுத்துவதே அவள் நோக்கம்"* [325]

என்கிறார்.

*"அறத்தொடு நிற்றல் என்பது தானும் தன் தலைவியும் இதுகாறும் அறத்தொடு பொருந்தவே நடந்திருப்பதாகத் தோழி காட்டி நிற்றல் என்று பொருள்படும். அறம் என்பதை இங்கு முறை, தக்கது என்று கொள்ளல் வேண்டும்"* [326]

என்கிறார் இளவழகனார்.

தொல்காப்பியம் அறத்தொடு நிற்றலை, 'புரைதீர் கிளவி' [327] என்றும் இறையனார் களவியல் உரை, 'மாறுகோளில்லா மொழி' [328] என்றும் கூறுகின்றன.

இறையனார் களவியலுரை,

*"எற்றினொடு மாறுகொள்ளாமையோவெனின், தாயறிவினொடு மாறுகொள்ளாமையும், தலைமகள் பெருமையொடு மாறுகொள்ளாமையும் நாணினொடு மாறுகொள்ளாமையும் உலகினொடு மாறுகொள்ளாமையும் எனக் கொள்க"* [329]

என்று கூறுகிறது.

தோழி அறத்தொடு நிற்றல் பற்றிக் கூறுமிடத்து, க. இரத்தினம் அவர்கள்,

> *"தோழி தன்னுடைய அறிவுத்திறன் முழுவதையும் பயன்படுத்திச் செயற்படுவதற்குரிய பருவம் இது. அறத்தொடு நிற்றல் பயன்தருமா, உடன்போக்கே வேண்டப்படுவதா எனத் தலைவியின் தாய் தந்தையர் மனப்பாங்கையும் தலைவன் எண்ணத்தையும் பிறவற்றையும் செவ்வனே சீர்தூக்கிப் பார்க்கும் திறன் தோழிக்கு வேண்டப்படுவது இந் நிலையிலேயே"* [330]

என்றுரைக்கிறார்.

> *"அறத்தொடு நிற்றல் என்னும் துறையால் தோழியின் பேச்சாற்றலும் அதனைப் புலப்படுத்தும் புலவர்களின் கற்பனைத் திறமும் சொல்வளமும் அற்புதமாகப் பொலிவதைச் சங்க இலக்கியம் காட்டுகிறது"* [331]

என்பார் ம.ரா.போ. குருசாமி அவர்கள்.

அறத்தொடு நிற்றல் மிகவும் நுட்பமானதாகவும், கேட்பவர் மனங்கொள்ளுமாறும், காதல் வயப்பட்டவர் மனம் பாதிக்காதவாறும், சொல்பவர் திறம்பட கையாளப்படும் துறையாகும். இதனால் ஏற்படும் நிலை குறித்து கலித்தொகை,

> *"அறத்தொடு நின்றேனைக் கண்டு திறப்பட*
> *என்னையர்க் குய்த்துரைத்தாள் யாய்*
> *அவருந் தெரிகணை நோக்கிச் சிலைநோக்கி கண்சேர்ந்*
> *தொருபக லெல்லாம் உருத்தெழுந்தாறி*
> *இருவர்கட் குற்றமும் இல்லையால் என்று*
> *தெருமந்து சாய்த்தார் தலை"* [332]

என்று கூறுகிறது.

இத்துறையின் சிறப்பால் ஆரிய அரசன் பிரகதத்தனுக்குத் தமிழ்மொழியின் சிறப்பினை உணர்த்த கபிலர், 'குறிஞ்சிப்பாட்டு' என்னும் நீண்ட செய்யுளை அறத்தொடு நிற்றல்துறையில் தோழி கூற்றாகவே அமைத்துப் பாடியுள்ளார். இப்பாட்டில் தோழி தன் சொல்லாற்றல் மூலமாக தலைவியே தன் காதலைக் கூறுமாறு செய்கிறாள்.

தோழிக்குப் பதிலளிக்கும் தலைவி கூறியதாகக் கூறும் தோழி கூற்றில், பெற்றோர் தம் மகளை ஒருவனுக்கு மணம் முடித்தால் ஏற்படும் நன்மை, அவன் குடிப்பெருமை ஆகியவற்றைத் தம் குடும்பத்தோடு எண்ணிப்பார்ப்பர். ஆனால் நாம் அவ்வாறு எண்ணாமல் தாமாகவே களவு மணத்தை ஏற்படுத்திக் கொண்டோம்.[333] தன்னைப் பிறர்க்குக் கொடுக்க

வேண்டும் என்றெண்ணும் நம் பெற்றோரின் விருப்பமும் நம் அறியாமையும் கெடுமாறு நாமாக மணந்து கொண்ட மணம் என அறிவுறுத்தினால் ஏதேனும் பழி உண்டாகுமோ[334] எனத் தலைவி தோழியிடம் கேட்கிறாள்.

இவ்வாறு களவு மணம், கற்பு மணம் ஆகிய இரண்டின் வேறுபாட்டையும் தலைவியும் தானும் உணர்ந்தமையைச் செவிலிக்குக் கூறுகிறாள்.

தலைவி தலைவன் மீது கொண்ட காதலை அறத்தொடு நின்று கூறும் தோழி செவிலியிடம்,

*''அன்னாய் வாழி வேண்டு அன்னை*
*செப்பல் ஆன்றிசின் சினவாதீமோ''* [335]

என்று செவிலித்தாயைக் கோபம் கொள்ளாதவாறு தணித்துப் பலமுறை அழைக்கின்றாள்.

மேலும்,

*''இகல் மீக் கடவும் இருபெரு வேந்தர்*
*வினையிடை நின்ற சான்றோர் போல்*
*இருபேர் அச்சமொடு யானும் ஆற்றல்''* [336]

என்று களவு கொண்ட தலைவி, நோயை வெளிப்படுத்தாவிடின் அவள் என் ஆவாளோ என அஞ்சியும், வெளிப்படுத்தின் செவிலித்தாய் சினம் கொள்வாளோ என அஞ்சியும் அலைக்கழிக்கும் மனத்தினளாக உள்ள தன் நிலையைக் கூறுகிறாள்.

தோழி அறத்தொடு நிற்கும் நிலையைக் குறிப்பிடும் தொல்காப்பியர்,

*''எளித்தல் ஏத்தல் வேட்கை யுரைத்தல்*
*கூறுதல் உசாவுதல் ஏதீடு தலைப்பாடு*
*உண்மை செப்புங் கிளவியோடு தொகைஇய*
*ஏழு வகைய என்மனார் புலவர்''* [337]

என்று உரைக்கின்றார்.

இதற்கு உரைகாணும் இளம்பூரணர்,

***''எளித்தல் என்பது, தலைவன் நம்மாட்டு எளியன் என்று கூறுதல். ஏத்தல் என்பது தலைவனை உயர்த்திக்கூறல். வேட்கை உரைத்தல் என்பது, தலைவன் மாட்டுத் தலைவி வேட்கையும் தலைவி மாட்டுத் தலைவன் வேட்கையும் கூறுதல். கூறுதல் என்பது தலைவியைத் தலைவற்குக் கொடுக்க வேண்டும் என்பதுபடக் கூறுதல். உசாவுதல் என்பது வெறியாட்டுங் கழங்கும் இட்டுரைத்துழி வேலனோடாதல், பிறரோடாதல்***

*தோழி உசாவுதல்; ஏதீடு தலைப்பாடு என்பது யாதானுமோர் ஏதுவை இடையிட்டுக் கொண்டு தலைப்பட்டமை கூறுதல். உண்மை செப்புங் கிளவி என்பது பட்டாங்கு கூறுதல். இவ்வகை யெல்லாம் தத்தங் குடிமைக் கேற்றவழிக் கொள்க.''* [338]

என்று கூறுவதிலிருந்து தோழி குடியின் நிலைக்கேற்ப எடுத்துக்கூறி அறத்தொடு நிற்பாள் என்பது புலனாகிறது.

தலைவியின் நிலை கண்டு அவளுக்குண்டான நோய் அறிதலுக்காகச் செவிலித்தாய் வெறியாட்டு எடுக்கும்பொழுதும், உடல் மெலிவு கண்டு வெறி எடுக்க நினைக்கும் பொழுதும், நொதுமலர் வரைவின் போதும், வரைவு எதிர் கொள்ளாமல் தமர் மறுத்த போதும், காப்பு மிகுதிக்கண் தலைவி நிலை கண்டு செவிலி கேட்கும் போதும் தோழியானவள் முன்னிலை, அறனெனப்படுதல் என்னும் இரு வகையாலும் தாய்க்கு அறத்தொடு நின்று கூறும் கூற்றுகள் நிகழ்கின்றன. தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்பதாக 23 பாடல்கள்[339] உள்ளன.

### *5.1.3.1.1 தலைவியின் வேறுபாடு கண்டு செவிலி வினவிய இடத்து*

இதில் நற்றிணை குறிஞ்சித் திணையில் மதுரைக் கண்ணத்தனார் பாடிய ஒரு பாடலும், குறுந்தொகை பேரிசாத்தன் குறிஞ்சித் திணையில் பாடிய ஒரு பாடலும் ஐங்குறுநூற்று பாலைத் திணையில் ஓதலாந்தையார் பாடிய ஒரு பாடலும் என 3 பாடல்கள் உள்ளன.[340]

தலைவியின் களவொழுக்கத்தில் மேனி வேறுபட்டதால், செவிலித்தாய் இது எதனால் ஏற்பட்டது என வினவிய போது இது தளிரும் மலர்க்கொத்துகளும் கொண்ட கோங்கின் பூவைத் தந்ததால் ஏற்பட்டது; மற்றவரால் எத்துணையும் அறியப்படாதது என்றும்,[341] காப்பு மிகுதியிடத்து செவிலி இவ்வேறுபாடு எதனால் உண்டாயிற்று என வினவியபோது, சுனையில் பூத்த நீலப் பூவைத் தந்ததால் ஏற்பட்டது[342] என்றும், தலைவிக்கு ஏற்பட்ட வேறுபாட்டிற்குப் பூவினை ஏதீடாகக் காட்டி முன்னிலை மொழியாக உரைக்கின்றாள். மேலும் தலைவி, தலைவனின் பெருமையும் அவளால் சுட்டப்படுகிறது.

தோழி, செவிலித்தாயின் அருகில் சென்று, என் தோழி இளமை தீர்ந்தாள் என்று அரிய காவலில் வைத்தனை, எனினும் அவள் பசந்து போனாள் என்பதனை நீ உணரவில்லை.

*''............................................ பல்நாள்*
*எவ்வ நெஞ்சமொடு தெய்வம் பேணி*

*வருந்தல் வாழி - வேண்டு அன்னை!*

*.........................................................*

*சிறு திணை வியன் புனம் காப்பின்*

*பெறுகுவள் மன்னோ என்தோழி தன் நலனே.'' [343]*

என்று தலைவிக்கு ஆதரவாக அவளது களவைச் செவிலிக்கு வெளிப்படுத்தி உரைக்கின்றாள். மேலும் தலைவியின் நிலைகுறித்து வருந்தி தெய்வத்தை வணங்கும் செவிலித்தாயின் அன்புறவும் வெளிப்படுகிறது.

### *5.1.3.1.2 செவிலி வெறியாட்டு நிகழ்த்திய இடத்து*

தலைவியின் மெய் வேறுபாட்டைக் கண்ட தாய் வேலனை அழைத்து வெறியெடுக்கும்போது தோழி அறத்தொடு நிற்கிறாள்.

இக்கூற்றில் குறுந்தொகையின் குறிஞ்சித்திணையில் கூடலூர்கிழார் பாடிய ஒரு பாடலும் ஐங்குறுநூற்றில் மருதத்திணையில் ஓரம்போகியார் பாடிய ஒரு பாடலும் குறிஞ்சித் திணையில் கபிலர் பாடிய 3 பாடலும் என மொத்தம் 5 பாடல்கள்[344] காணப்படுகின்றன.

தோழி, தாய் முதலியோர் வெறியாட்டு எடுத்தவிடத்து, தலைவன் ஒருவன் தலைவியின் தினைப்புனக் காவலில் அசோகந்தழை ஆடை கொடுத்துச் சென்றமையைக் குறிப்பாகவும்,[345]ஊரன் பொருட்டு இவள் தொடி நெகிழ தோள்கள் பசந்து[346] வேறுபடுவது ஏன்? என வினவியும் அவர் நாட்டிலுள்ள பூக்களுடைய குன்றத்தை நோக்கி நிற்கும் நிலையினைத் தலைவி பெற்றால் அவள் நோய் தணியும் என அறிவுறுத்தியும்,[347] இவள் உற்ற நோய்க்கு மருந்து வெறியன்று என்று தெளிவு பெறுவாய்[348] எனச் செவிலியின் அறியாமையைச் சுட்டியும் இவளிடம் உள்ள கற்பு நலம் நன்று, அதனை வேலன் கழங்கால் அளத்தற்கரியது[349] எனத் தலைவியின் கற்பின் சிறப்பைப் புலப்படுத்தியும் வெறியாட்டை விலக்கி அறத்தொடு நிற்கிறாள்.

தோழி குறிஞ்சித்திணையில் தலைவியின் களவை நேர்முகமாகவும், குறிப்பாகவும், சுற்றி வளைத்தும் மருதத் திணையில் தலைவி தலைவன் பொருட்டு வேறுபடுவது ஏன் என வினவியும் வெளிப்படுத்துகிறாள். செவிலி வெறியாட்டை ஏற்படுத்தக் காரணம் தலைவியின் களவை அறிதற் பொருட்டே எனலாம். இவ்விடத்து ஆய்வாளர் தம் கூற்றினை எண்ணிப்பார்ப்பது சிறப்புடையதாகும்.

*''சமுதாயச் சடங்கிற்கும் கற்பொழுக்கத்திற்கும் இடையே ஒரு போராட்டத்தை வெறியாட்டில் காணலாம்'' [350]*

என்கிறார் வ.சுப.மாணிக்கம்.

*"பழைய வழக்குகளுக்கும் புதிய ஊக்கத்திற்கும் இடையே போராட்டம் இருந்து வருகிறது"* [351]

என்கிறார் ஹோலிங் வொர்த்.

### *5.1.3.1.3 தமர் மறுப்புழி*

தமர் தலைவன் தலைவியின் வரைவை எதிர்த்து மறுத்துழி தோழி செவிலிக்கு அறத்தொடு நின்று கூறும் கூற்றுகள் ஐங்குறுநூற்றில் ஓரம்போகியாரின் மருதத்திணையில் 2 பாடல்களிலும், கபிலரின் குறிஞ்சித்திணையில் 2 பாடல்களிலும் என 4 பாடல்களில்[352] காணலாம்.

தோழி செவிலியிடம் தலைவி தலைவனின் மார்பை முயங்கியும், பசலை அடைந்து அழகிழந்து வேறுபடுவது ஏன்?[353] என உண்மை உரைத்து வினவியும் அறவோனாகிய நாடனுக்கு மகட் கொடை மறுத்தல் ஏன்?[354] என வினவியும் பெண்டிர் பலரைப் பெற்றோர் மறுக்காது தந்தாலும் தலைவன் பழைய உறவை உடையவன் என்று அவன் தலைவியை அல்லாமல் பிறரை விரும்பாதவன்[355] என்பதைக் குறிப்பிட்டும் அறத்தொடு நிற்கிறாள்.

இக்கூற்றுகள் வழி தோழி தலைவியின் களவை வெளிப்படையாகக் கூறுவதுடன் அவள் விரும்பும் தலைவன் சிறப்பைக் கூறி அவனுக்கு மகளைக் கொடுக்காது மறுப்பது எதனால் என்று துணிந்து கேட்கும் துணிச்சலை அறியலாம். தலைவியாலும், வெளிப்படுத்த முடியாத களவைத் தோழி வெளிப்படுத்தி வெற்றி காண நினைப்பது தோழியின் செயல் திறனையும் சொல்லாற்றலையும் காட்டுகிறது.

### *5.1.3.1.4 நொதுமலர் வரைவில்*

வேற்று வரைவு ஏற்படின் தன் தோழியாகிய தலைவியின் நிலை என்னாகும் என்று சிந்தித்துச் செயல்படுகிறாள் தோழி. பிற நிலைகளில் தலைவிக்கு வரைவில் இடையூறு ஏற்பட்டாலும் நொதுமலர் வரைவால் அவளது கற்புக்கு இழுக்கு ஏற்படும் என்று எண்ணிக் கட்டாயமான அறத்தொடு நிற்றலுக்கு ஆளாகிறாள் தோழி. இந்நிலையில் தாய்க்கு உண்மையை உணர்த்தியே ஆகவேண்டும் என்ற சூழ்நிலை உருவாகிறது.

இக்கூற்றாக நற்றிணை நெய்தல் திணையில் புலவர் பெயர் தெரியாத ஒரு பாடலும், ஐங்குறுநூற்று நெய்தல் திணையில் அம்மூவனார் பாடிய 2 பாடலும் குறிஞ்சித்திணையில்

கபிலர் பாடிய 2 பாடலும் பாலைத்திணையில் ஓதலாந்தையார் பாடிய ஒரு பாடலும் என மொத்தம் 6 பாடல்கள் காணப்படுகின்றன.[356]

வேற்று வரைவு வருதல் கண்ட தோழி செவிலியிடம்

> *"குன்றத்து அன்ன குவவு மணல் நீந்தி*
> *வந்தனர் பெயர்வர் கொல்தாமே?"* [357]

என்றும், ஊழ் பிறிதொன்றாகச் செய்யுமோ[358] என்றும் வினவுகிறாள்.

மேலும் வேற்று வரைவால் வருந்திய தலைவி உண்ணாதிருக்க இதன் காரணம் யாது எனச் செவிலி வினவிய போது தோழி,

> *"தண்ணம் துறைவன் நல்கின்*
> *ஒண்ணுதல் அரிவை பால் ஆகும்மே"* [359]

என்றும்

> *"...................................... என் தோழி*
> *நனி நாணுடையள்; நின்னும் அஞ்சும்*
> *.................................... மலைநாடன்*
> *மலர்ந்த மார்பின் பாயல்*
> *தவ நனி வெய்யள்; நோகோ யானே"* [360]

என்றும் நாடன் மார்பில் முயங்காதுள்ள நாட்களில் இவள் கண்கள் நீரைச் சொரியும்[361] என்றும் வந்தவன் பெயருடன் இவள் உயிர் ஒன்றியது[362] என்றும் தலைவி தான் விரும்பும் தலைவனை வரைய எண்ணியதை வெளிப்படையாகக் கூறி அறத்தொடு நிற்கிறாள்.

தோழி இங்கு வெளிப்படையாகத் தலைவியின் களவைக் கூறுவதற்குக் காரணம், பிறர் தலைவியின் களவை அறிந்து கொண்டு வேற்று வரைவைத் தடுப்பதற்கே ஆகும். இதனால் தோழியின் நுண்மான் நுழைபுலத்தையும் இடனறிந்து எடுத்துச் சொல்லும் ஆற்றலையும் தலைவியின் வாழ்வே தன் வாழ்வாகக் கருதும் அவர்தம் நட்புச் சிறப்பையும் அறியலாம்.

### *5.1.3.1.5 தலைவியின் ஆற்றாமை மிகுதியில்*

தலைவி, தன் களவைத் தானாக வெளிப்படுத்த முடியாமல் ஆற்றாமை மிக்கு இருக்கின்ற பொழுது தோழி செவிலிக்குக் கூறும் கூற்றுகள் ஐங்குறுநூற்று நெய்தல் திணையில் அம்மூவனாரின் 2 பாடல்களிலும் அகநானூற்று குறிஞ்சித் திணையில் தங்கால் முடக்கொற்றனார் பாடிய ஒரு பாடலிலும் நெய்தல் திணையில் போந்தைப் பசலையார் உலோச்சனார் ஆகியோர் முறையே பாடிய ஒரு பாடலிலும் என 5 பாடல்களில்[363] காணப்படுகின்றன.

தோழி செவிலியிடம் கடலலை ஓசையைத் தலைவன் தேர் மணியோசை என எண்ணி உறங்காது தலைவி வருந்துவதால் யான் வருந்துகிறேன்[364] என்றும், தலைவியை அழச் செய்தவன் மென்புலத் தலைவன்[365] என்றும், தலைவன் ஆயக்கூட்டத்தரிடையே தலைவியை நோக்கி 'போகவோ' என்றுரைத்தான், இதுவன்றி வேறொன்றுமில்லை[366] என்றும் உன்மகள் தலைவனைப் பார்க்கவில்லை ஆனால் ஊரலர் எழுகிறது[367] என்றும், புலி எவ்வழி சென்றது என்று வினவிச் சென்ற தலைவனை நோக்கி 'இவன் ஓர் ஆடவனே' என்றுரைத்தாள்[368] என்றும் அறத்தொடு நிற்கிறாள்.

நெய்தல் நிலத் தலைவியின் களவைக் குறிப்பாகவும் குறிஞ்சி நிலத் தலைவியின் களவைத் தலைவி கூற்றாகவும் தோழி கூறுகிறாள். இவ்விடத்தில் தலைவன் தலைவி களவு இயற்கையாய் எழுந்தது யான் ஒன்றும் அறியேன் என்று தலைப்பாடு நிலையில் தோழி உரைக்கின்றாள்.

### 5.1.3.2 தலைவன் வரைவிடை பிரியுமிடத்து

தோழி செவிலிக்கு அறத்தொடு நின்ற பின் வரைதற் பொருட்டுப் பொருள் வயிற் பிரிந்த தலைவன் காலம் தாழ்த்துவதால் செவிலி ஐயமுற்ற இடத்தும், தலைவன் வரைதற் பொருட்டுப் பொருளீட்டி வருதல் கண்டு கூறும் நிலையிலும் ஐங்குறுநூற்று நெய்தல் திணையில் அம்மூவனாரின் 7 பாடல்கள்[369] காணப்படுகின்றன.

செவிலி, மற்றொரு குலமகளைத் தலைவன் வரையும் கொல் என்று ஐயமுற்றபோது, எம் தோள்களை விட்டு நீங்கின் அவனால் விரும்பப்பட்ட தோள்கள் என்னாகும்? என்று வினவும்வழி, தன்னையும் தலைவியையும் உளப்படுத்திக் கூறுவதையும், 'நறுமணம் கமழாத கழியாயினும் முண்டகம் மலர்ந்து மணங்கமழ்ந்து நிற்கும்' என்று உள்ளுறையாகத் தலைவன் காலம் நீட்டிப்பினும் தலைவியைத் துறவாமைக்குரிய பேரன்பினன் என்பதை வற்புறுத்தியும் உரைக்கின்றாள்.[370]

மேலும் செவிலி, அவன் உங்களைத் துறந்தனன்; அவன் உங்கட்குக் கூறிய சொல் யாது? என ஐயுற்று வினவிய போது, தலைவன் முன்பு எம்மைத் தலையளி செய்தபோது கூறிய சொற்கள் இப்பொழுதும் எம் மனத்தில் உள்ளன[371] என்று தலைவனின் அன்பினைப் புலப்படுத்தி உரைக்கிறாள் தலைவி; அவனை எண்ணி வேறுபட்டுப் பசலை ஏற்பட்டு தோன்றுகிறாள்[372] என்று தன் கருத்தை வற்புறுத்தி உரைக்கின்றாள்.

தலைவன் வரைதற் பொருட்டுப் பொருளீட்டிக் கொண்டு வரைவொடு புகுவதைக் கண்ட தோழி செவிலியிடம், தலைவன் தேர் இடைவிடாத மணி ஓசையுடன் நெய்தல்

நிலப்பகுதியைச் சிதைத்துக் கொண்டு வருகிறது; அதை அங்குக் காண்பாயாக[373] என்றும் தலைவியின் நெற்றி பொன்னைவிட சிவந்து விளங்குவதுடன் மாமை அழகும் தானே பொருந்துகிறது[374] என்றும் கூறுகிறாள்.

இந் நெய்தற் திணை கூற்றுகளில் தலைவியின் களவைச் செவிலி அறிந்து உடன்படுவதுடன் வரைவு நீட்டித்த இடத்து ஆற்றாது ஐயுற்று தாய் வருந்துவதை அறியலாம். அவனை ஆற்றும் முகமாகத் தோழி தலைவியின் அழகு தானே வருவதையும் தலைவனின் தேரோசையைக் காட்டித் தாயைத் தேற்றும் நிலையையும் காணலாம்.

### 5.1.4 தமரிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

தலைவியின் மெலிவு கண்டு இது தெய்வத்தால் ஆனது என்று தமர் நினைத்தனர். அப்போது ஐங்குறுநூற்று நெய்தல் திணையில் அம்மூவனார் பாடிய தோழியின் கூற்றுப் பாடலில், இவளை வருத்தம் அடையச் செய்தது தெய்வம் அல்ல, தலைவன் என்னும் உண்மையை,

*''அருந்திறல் கடவுள் அல்லன்*
*பெருந்துறைக் கண்டிவள் அணங்கியோனோ''* [375]

என்று உரைக்கிறாள்.

தலைவன் வரைவு வேண்ட தமர் மறுக்கின்றனர். அப்போது தமரிடம் தோழி உரைப்பதாக ஐங்குறுநூற்று குறிஞ்சித் திணையில் கபிலர் பாடிய ஒரு பாடலில்,

*''பெருவரை நாடன் வரையுமாயின்*
*கொடுத்தனெம் ஆயினோ நன்றே -*
*இன்னும் ஆனாது நன்னுதல் துயரே''* [376]

என்று தலைவியை அவள் விரும்பும் தலைவனுக்கே கொடுத்தல் நல்லது என்றுரைக்கிறாள்.

இக்கூற்றுகளால் தலைவியின் சுற்றத்தாரிடமும் நேராகப் பேசும் உரிமை தோழிக்கு இருப்பதை அறியலாம். தலைவியின் களவை வெளிப்படுத்துவதுடன் திருமணம் செய்வித்தல் நல்லது என்று முடிந்த முடிபாகத் துணிவுடன் கூறும் வல்லமை உடையவள் தோழி என்றுணரலாம். இதனை உளங்கொண்டே க.பொ. இரத்தினம்,

*''சதுரப்பாடமைய உரையாடுவதில் இவளுக்கு நிகரானவர் ஒருவருமில்லை''* [377]

என்றுரைக்கிறார்.

### 5.1.5 கட்டுவிச்சியிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

கட்டுக்காணிய இடத்து தோழி கட்டுவிச்சியிடம் கூறும் கூற்றுகள் குறுந்தொகை குறிஞ்சித் திணையில் ஔவையார், கொல்லன் அழிசி ஆகியோர் பாடிய 2 பாடல்களில்[378] உள்ளன.

தோழி கட்டுவிச்சியிடம், நீ பாடிய பாட்டில் தலைவன் குன்றைப் பாடிய பாட்டை இன்னும் பாடுக[379] என்றும், தெய்வத்தால் வந்த தீங்கு எனக் கட்டுவிச்சி உரைத்ததும், மலையிலுள்ள குரங்கானது தலைவனை அறியும்; அது தன் கண்ணால் கண்ட நிகழ்ச்சியைக் காணேன் என்று பொய் கூறாது[380] என்றும் கூறுவதன் மூலம் தலைவன் தலைவியுடன் கொண்ட நட்பே நோய்க்குக் காரணம் என்பதனை எடுத்துரைக்கிறாள்.

### 5.1.6 பிறரிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

செவிலி தலைவியின் உடல் மெலிவிற்காக வெறியாட்டு நடத்தியபோது தோழி முருகன், வேலன், கழங்கு ஆகியவற்றுடன் உரைநிகழ்த்துகிறாள்.

நற்றிணை குறிஞ்சித் திணையில் பிரமசாரி பாடல் ஒன்றில் தோழி, மலைநாடனது மார்பு தர வந்த அரிய நோய் இது உன்னால் வந்ததன்று[381] என்று முருகனிடம் கூறுவாளாய் வெறியை விலக்குகிறாள்.

குறுந்தொகை குறிஞ்சித் திணையில் வேம்பத்தூர் கண்ணக் கூத்தன் பாடல் ஒன்றில் தோழி வேலனிடம், நீ முருகனை வணங்கிப் பலியிடும் உணவைத் தலைவனது மார்பும் ஏற்று உண்ணுமோ?[382] என்று வினவுவதன் வாயிலாகத் தலைவியின் களவை வெளிப்படுத்தி வெறியை விலக்குகிறாள்.

ஐங்குறுநூற்று குறிஞ்சித் திணையில் கபிலர் பாடல் ஒன்றில் தலைவியின் நோய் முருகப் பெருமானால் வந்தது எனக் கழங்கு கூறியது என்று வேலன் உரைத்ததனால் தோழி, இவளைத் தழுவி நட்புக் கொண்டவன் ஒரு ஆண்தகை. முருகன் அல்லன் என்று அறிவாயாக[383] என்று கழங்கிற்கு அறிவிக்கும் முகமாக வெறியை விலக்குகிறாள்.

இக்கூற்றுகளால் தோழி செவிலியிடத்து நேராகவும் கூறாது பிற பொருளிடத்துத் தலைவியின் களவை உணர்த்தும் நிலையில் கூறி வெறியை விலக்குவதை அறியலாம்.

தோழி தலைவியின் களவைச் செவிலியிடம் வெறியாட்டில் குறிப்பாகவும், நேராகவும், தமர் மறுக்குமிடத்துத் துணிச்சலாகவும், நொதுமலர் வரைவில் நேராகவும் எனப்

பல வகையாகவும், தமரிடத்து, நேராகவும் கட்டுவிச்சி, கழங்கு, முருகன் இவற்றிடம் வினவும் வகையிலும் அறத்தொடு நிற்கிறாள்.

இவ்வாறு தோழியின் அறத்தொடு நிற்றல் கூற்றுகள் வழி தோழியின் துணிவு, பிறர் மனம் ஏற்றுக் கொள்ளும் வண்ணம் கூறி அவர்களை உடன்படுமாறு செய்வது ஆகிய யாவும் வெளிப்படுவதைக் காணலாம்.

குறிப்பாக அக்காலச் சமுதாயத்தில் நிலவிய செவிலி, தலைவியின் தமர் எடுத்த வெறியாட்டு என்னும் செயலை எதிர்த்துக் குரல் கொடுத்துத் தலைவன் தலைவியர் நல்வாழ்வுக்கான வெற்றிப்பாதையை அமைத்துத் தருபவள் தோழி எனலாம். எனவே சங்க அக மாந்தர்களில் அன்பு, பண்பு, அறிவு, அறம், சொல்லாற்றல் என்றுரைக்கப்படும் அனைத்தும் அவளிடமே இருக்கிறது என்பதுடன் அவை நிறைந்தவளாகத் தோழியைத் தவிர வேறு யாரையும் கூற இயலாது.

தலைவன் தலைவியின் களவு வாழ்வே தோழியின்றேல் நிகழ்ந்திராது. அந்த அளவு தோழியின் பங்கு இடம் பெற்றிருக்கிறது. இவ்விடம் தோழியைப் பற்றி ஆய்வாளர் கூறும் கருத்துகளை எண்ணிப் பார்ப்பது பொருத்தமாகும்.

களவொழுக்கம் பற்றி,

> ***''தலைவன் தலைவி என்னுமிருவர் கூற்றினும் இவ்விருவர் அன்பினையும் வளர்க்கும் நன்மதி நாட்டம் அமைந்த தோழியின் கூற்றே, இக்களவொழுக்கத்தின் இயல்பினை இனிது விளக்குவதாம்''*** [384]

என்றுரைக்கிறார் வெள்ளைவாரணர்.

தோழியின் செயல் பற்றி மு. அருணாசலம்,

> ***''தலைமகன் தலைமகள், தாயர் முதலானவர்களைத் தன் செயல்வழி ஒழுகச் செய்யுந் திறமை, தோழிபாலுண்டெனக் கொள்ளலாம்''*** [385] ***என்கிறார்.***

மூடநம்பிக்கையை முறியடித்த தோழியை சோ. ந. கந்தசாமி,

> ***''தலைவியின் உடல் வேறுபாட்டிற்குக் கடவுட் காரணம் கற்பித்துக் கட்டுக் காணினும் வெறியெடுப்பினும் இம்மூட நம்பிக்கையை முறியடித்துக் காதற் காரணத்தை நிலைநாட்டி உண்மையைப் புலப்படுத்தும் புரட்சிப் பாத்திரம்''*** [386] ***என்கிறார்.***

### 5.1.6.1 உழவரிடம்

நற்றிணை மருதத் திணையில் தூங்கலோரியார் பாடல் ஒன்றில் தலைவி இற்செறிக்கப்பட்டமையை மறைந்திருக்கும் தலைவனுக்கு[387] உணர்த்த வேண்டி உழவனை விளித்துக் கூறும் கூற்று காணப்படுகிறது.

தோழி உழவனிடம், நீ வயலில் நாற்று நடுவதற்குச் சென்றால் அங்குள்ள கோரைகளையும் நெய்தல்களையும் களையாது பாதுகாப்பாயாக. அவை முறையே இற்செறிக்கப்பட்ட மடந்தைக்கு வளையாகவும் உடையாகவும் அணிய உதவும்[388] என்று கூறும்வழி மறைமுகமாக இற்செறிப்பைத் தலைவனுக்கு உரைக்கிறாள்.

## 5.1.7 தன்னுள் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

குறைநயப்பித்தல் துறையில் நற்றிணை நெய்தல் திணையில் மோசிகீரனார் பாடல் ஒன்றும் கலித்தொகை குறிஞ்சித் திணையில் கபிலர் பாடல் ஒன்றும்[389] காணப்படுகின்றன.

தோழி தலைவனின் குறையேற்று தலைவியிடம் கூற, அதனைத் தலைவி மறுக்கும்போது வருந்தித் தன்னுள் உரைக்கின்றாள்.[390]

சிறைப்புறமாக வரைவு கடாதல் துறையில் நற்றிணை நெய்தல் திணையில் கோட்டியூர் நல்லந்தையாரும் குறுந்தொகை மருதத் திணையில் பரணரும் கலித்தொகை குறிஞ்சித் திணையில் கபிலரும் முறையே ஒரு பாடல் பாடியுள்ளனர்.[391]

தோழி, குருகிடமிருந்து தப்பிய இறாமீன் தாழையின் வெண் பூவைப் பார்த்து குருகோ என அஞ்சும் என்பது ஊரார் பழிக்கஞ்சிய தலைவி அன்னையைக் கண்டவிடத்து அவள் சினந்து கண்டிப்பாளோ என்று அஞ்சுவாள்[392] என்ற இறைச்சிப் பொருளிலும் ஊரினர் கூறும் பழிச் சொற்கள் கேட்டு வருந்துவதால் பயன் என்[393] என வினவியும்,

> *"கூற்றம் வரினும் தொலையான் பகை எனின் தன் நாட்டார்க்குத்*
> *தோற்றலை நாணாதோன் குன்று."* [394]

என்று பாடும் முறையாலும் தலைவியின் நிலையை எடுத்துக் கூறித் தலைவனை விரைவில் வரையத் தூண்டுகிறாள்.

நற்றிணை குறிஞ்சித் திணையில் பாண்டியன் மாறன் வழுதி பாடலில் தோழி, அன்னை தலைவியைப் பலவாறு புகழ்ந்து பாராட்டி அன்பு செலுத்துகிறாள், 'யாய் மறப்பு அறியா மடந்தை'யைத் தலைவனோடு சேர்ப்பின் அன்னை என்னாவாளோ என யான் அஞ்சுகிறேன்[395] என்கிறாள். அன்னை தன் பெண்ணை வளர்க்கும் முறை அறிந்து வளர்ப்பதை இதனால் உணர முடிகின்றது.

குறுந்தொகை குறிஞ்சித் திணையில் வெண்பூதனார் பாடலில் வரைவு முயற்சியுடன் வந்த தலைவனைச் செவிலி ஏற்றுக் கொண்டதை அறிந்த தோழி அச் செவிலியை வாழ்த்தும் நிலையில்

> *"அரும் பெறல் அமிழ்தம் ஆர்பதம் ஆகப்*
> *பெரும் பெயர் உலகம் பெறீஇயரோ அன்னை*
> ..........................................................
> *ஓங்கு மலை நாடனை வரும் என்றாளே."* [396]

என்று தலைவனது வரைவை அன்னை முதலியோர் உடன் பட்டமையைத் தலைவிக்கு உணர்த்துகிறாள்.

### 5.1.8 பிற பொருட்களிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

கிளியிடம் தோழி இற்செறிப்பை உணர்த்தியும்,[397] தலைவனை அடிக்கடி வரும்படியும்[398] கூற்று நிகழ்த்துகிறாள். தும்பி,[399] தினை[400] ஆகியவற்றுடன் தலைவனிடம் இற்செறிப்பை உணர்த்தி வரைவு கடாவ வேண்டும் என்ற கருத்துப்படி கூற்று நிகழ்த்துகிறாள். கூகை, நிலா ஆகியவற்றை[401] விளித்து, இரவுக்குறி இடையீடு கூறி தலைவனை வரைவு கடாவும்படி உணர்த்தி உரைக்கிறாள். முகிலிடம் தலைவனைக் கடிந்து வரைவு கடாவுமாறு உரைக்கிறாள்.[402] மாவிடம் தலைவனை வரைவுகடாவ உரைக்கின்றாள்.[403]

## 5.2 கற்பு நெறி

### 5.2.1. தலைவியிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

தோழி தலைவியிடம், அவளது இல்லற வாழ்வு கண்டும், தலைவனைச் செலவழுங்குவித்த இடத்தும் தலைவன் பொருள் வயிற் பிரிந்த போது தலைவி ஆற்றாது இருந்த இடத்தும் தலைவன் குறித்த பருவம் வந்தும் அவன் வராததால் தலைவி ஆற்றாது இருந்த போதும் தலைவன் பொருள் வயிற் பிரிந்து திரும்பி வந்தமையை அறிவுறுத்தும் போதும் கூற்று நிகழ்த்துகின்றாள். இதில் தலைவியின் ஆற்றாமையை ஆற்றுவிக்கும் கூற்றுகளே மிகுதியாக உள்ளன.

#### 5.2.1.1 உடன்போய் வரைந்து மீண்ட இடத்து

இத்துறைக் கூற்றாக உள்ள ஐங்குறுநூற்றுப் பாலைத் திணையின் ஓதலாந்தையார் பாடல் ஒன்றில், தலைவி மீண்டும் வந்தபோது தோழி தலைவியிடம், நின்னை எண்ணும் பொழுது நீ செல்லும் சுரத்தில் பலவகையான பழங்கள், நீர் நிலைகள் பெற்றுச் செல்வதற்கு

இனிதாக விளங்குக என்று வாழ்த்திக் கண்ணீருடன் கலங்கும் என்னைவிட நம்மூரில் உள்ளவர் இரக்கத்துடன் புலம்பி நின்றனர்[404] என்று கூறுகின்றாள்.

இக்கூற்றால் தலைவி மீது கொண்ட அன்புறவு தோழியிடம் மட்டுமன்றி ஊராரிடமும் இருப்பதைக் காணலாம். மேலும் வழியிடைச் செல்வாருக்கு வேண்டுபவையாகிய உணவு, நீர், ஆகியவை யாராக இருந்தாலும் கிடைக்கப் பெறவேண்டும் என்ற சமுதாயத்தினரின் மனிதநேய அடிப்படையிலான உறவு புலப்படுகின்றது.

### 5.2.1.2 இல்வாழ்வு கண்டு மகிழ்ந்து

இத்துறையில் நற்றிணை குறிஞ்சித் திணையில் புதுக்கயத்து வண்ணக்கன் கம்பூர் கிழான் பாடல் ஒன்றும் அகநானூற்று[405] நெய்தல் திணை உலோச்சனார் பாடல் ஒன்றும் என 2 பாடல்கள் காணப்படுகின்றன.

திருமணத்திற்குப் பிறகு, தலைவியின் மனைக்குச் சென்ற தோழி தலைவியின் அழகு கண்டு, தலைவனின் மார்பு, துன்பம் இன்பம் ஆகிய இரண்டும்[406] தரும் என்றும் தலைவன் சான்றோர் மூலம் பேசித் திருமணம் செய்து கொண்டதால், அலர் பேசும் இயல்புடைய இவ்வூர் மிகவும் புதியதாகியது அச்செயல் நகையைத் தருவதாக உள்ளது[407] என்றும் தன் மகிழ்வினை வெளிப்படுத்தும் வண்ணம் உரைக்கின்றாள்.

தாயுள்ளம் கொண்ட தோழியின் இம்மகிழ்ச்சி, நல்ல நட்புக்கும், உடன் பிறப்பு போலக் கருதும் உணர்வுக்கும் எல்லாவற்றுக்கும் மேலாக உண்மையான தோழமை உறவுக்கும் சான்றாகத் திகழ்கிறது.

### 5.2.1.3 தலைவனைச் செலவழுங்குவித்தல் இடத்து

தலைவன் பொருள்வயிற் பிரியும் போது தோழி பலவாறு கூறி, செலவழுங்குமிடத்துத் தலைவிக்குக் கூறிய பாடல்கள், கலித்தொகை பாலைத்திணையில் பெருங்கடுங்கோன் பாடிய 4 பாடல்களில்[408] காணப்படுகின்றன.

தோழி தலைவியிடம், ‘நீ பொருள் தேடச் செல்வது உனக்கு அன்புடைய செயலன்று’ என்று யான் கூறியும் பிரிதலைக் கைவிடாத தலைவன், நின் இயற்கை அழகு தொலைதலைப் பற்றிக் கூறியதும் அதற்கு அஞ்சி அன்பு கொண்டு நின்றார். இவ்வாறு என் சொல்லின் எல்லையில் நின்று நின்னைப் பிரிந்து செல்வதைக் கைவிட்டார்[409] என்று தலைவன் செலவழுங்கியதைக் கூறுகிறாள்.

தலைவி தலைவனுடன் வருவதாகச் சொல்ல, அதுகேட்ட தலைவன் காட்டின் கொடுமை கூறித் தடுத்தான்; அதன் பொருட்டுத் தலைவன் தன்னை விட்டுப் பிரிவான் என்று வருந்திய தலைவிக்குத் தோழி, விளையாட்டாகப் பிரிந்து போவதாகச் சொன்னார், உண்மையில் பிரியார்; பிரியக் கருதுபவர் அச்சுறுத்திப் பிரிந்து செல்வாரா? அன்புடைய சொற்களை அல்லவா கூறியிருக்க வேண்டும். இது நகைத்தற் பொருட்டுக் கூறியதாகும்[410] என்று அவள் வருத்தத்தைப் போக்க தேறுதல் மொழி கூறுகிறாள்.

தலைவன் பொருள் ஈட்டும் பொருட்டுத் தலைவியைப் பிரிந்து செல்ல எண்ணினான்; அப்போது தலைவி அவன் போகும் வழியில் துன்பம் ஏற்படாத வண்ணம் தெய்வத்தைத் தொழுதாள்; அது கண்ட தோழி இது நம் கற்புக்குப் பொருந்தியதா என வினவுகிறாள்; பிறகு தலைவன் தலைவியைப் பிரிந்து செல்வதைக் கைவிட்டான் என்பதை அறிந்தாள்; அப்போது தோழி தலைவியிடம்,

> *"................ வான் தரும் கற்பினாள்*
> *நிறன் ஓடிப் பசப்பு ஊர்தல் உண்டு என*
> *அறன் ஓடி விலங்கின்று அவர் ஆள்வினைத் திறத்தே"* [411]

என்று அறக்கடவுள் விரைந்து சென்று தலைவனைச் செல்லாமல் தடுக்கும் நீ வருந்தற்க என்று கூறுகிறாள்.

நாடு காத்தற்குத் தலைவன் பிரிவதை உணர்ந்து வேறுபட்ட தலைவியிடம்,

> *".... இளமையும் நிலையுமோ என ஆங்கு*
> *பொருந்தியான் தான் வேட்ட பொருள்வயின் நினைத்த சொல்*
> *திருந்திய யாக்கையுள் மருத்துவன் ஊட்டிய*
> *மருந்து போல், மருந்து ஆகி, மனன் உவப்ப*
> *பெரும் பெயர் மீளி பெயர்ந்தனன் செலவே"* [412]

என்று தன் சொல் கேட்டுப் பிரிதலைக் கைவிட்டார் எனத் தோழி உரைக்கின்றாள்.

தலைவனின் வேற்றூர்ப் பயணம் தலைவியால் நேராக உணரப்படுவதே உலகியற்கை. ஆனால் சங்க இலக்கியத் தலைவன் தன் வேற்றூர்ப் பயணம் குறித்துத் தன் தலைவியிடம் நேராகக் கூறாது தோழியிடமே கூறுவான்; தோழி தலைவன் பிரிவால் தலைவிக்குண்டாகும் நலக்கேடுகளை உணர்ந்து அவற்றைத் தலைவனுக்கு உணர்த்தி அவன் பயணத்தை நிறுத்தித் தலைவிக்குத் தலைவனின் அன்பைப் பெற்றுத் தருகிறாள்.

தன் பிரிவை நேரில் கூறினால் பெருகும் தலைவியின் துன்பநிலைக்கஞ்சியும் தோழியின் மாட்டுக் கொண்டுள்ள பெரும் நம்பிக்கையினாலும் தமக்கு வாழ்வளிக்கும்

தோழியின் வழிகாட்டுதல் படியே ஒழுகவேண்டும் என்ற உள்ளார்ந்த உணர்வொன்றிய அன்புறவாலும் தலைவன் தன் பிரிவைத் தோழியிடம் கூறுகிறான் எனலாம்.

### 5.2.1.4 **செலவுக் குறிப்பறிந்து வேறுபட்ட தலைவியை ஆற்றுவித்தல்**

இத்துறையில் நற்றிணையில் 6 பாடல்களும் குறுந்தொகையில் 5 பாடல்களும் அகநானூற்றில் 2 பாடல்களும் என 13 பாடல்கள்[413] உள்ளன.

குறிஞ்சித் திணையில் 2 பாடல்களும்[414] பாலைத் திணையில் 11 பாடல்களும்[415] இடம் பெற்றுள்ளன.

பெருங்குன்றூர்க் கிழார், ஔவையார், கள்ளம்பாளனார், நொச்சி நியமங்கிழார், அம்மெய்யன் நாகனார், சேரமான் எந்தை, பாலை பாடிய பெருங்கடுங்கோ, சிறைக்குடி ஆந்தையார், வாடாப் பிரமந்தன், மாவளந்தன், மதுரைக்காயனார், உறையூர் முது கூத்தனார் ஆகிய 12 புலவர்கள்[416] முறையே ஒரு பாடலும் பெயர் தெரியாத புலவர் ஒருவர்[417] ஒரு பாடலும் பாடியுள்ளனர்.

தலைவன் பிரியும் குறிப்பறிந்த தலைவி வேறுபட்டாள்; அப்போது அவளுக்குத் தோழி, உன் கண்கள் சிந்திய நீர்த் துளிகளாகிய தூதே இன்று செல்ல இருக்கும் இளைஞரைப் போகாமல் தடுத்துத் திரும்பும்படி செய்யும்[418] என்று கூறுவதிலிருந்து தலைவியின் கண்ணீர்த் துளிக்குத் தலைவனின் செலவைத் தடுக்கும் ஆற்றல் உள்ளது என்பதும் அவள் கண்ணீர் சிந்துவதை அவன் தாங்கமாட்டான் என்பதும் புலப்படுகின்றன.

தலைவன் செல்லுவதற்கரிய காட்டு வழியிலே செல்வான் என்று கூறுவர்; அதற்காக யான் வருந்த மாட்டேன்; நீயும் வருந்தாதே, அவர் சென்ற காரியம் கைகூடட்டும்[419] என்று தோழி தலைவியிடம் கூறுவது 'வினையே ஆடவர்க்கு உயிரே என்பதைத் தோழி நன்குணர்ந்து கூறினாள்' எனலாம்.

தலைவன் பிரியான்; அவன் நம்மேல் விருப்பம் கொண்டு அன்பும் அருளும் உடையவன்; நம்மைப் பிரிந்து காட்டில் சென்றாலும் நம்மீது இரக்கங் கொண்டு பொருள் விரைவில் முடியாதிருப்பினும் திரும்பி வருவான்[420] என்று தலைவியின் வருத்தம் தீர்க்க அவனது அன்பையே காரணமாகக் காட்டி ஆற்றுவிக்கிறாள்.

தோழி, ஆற்றாத தலைவியிடம்,

*"நீர் வார் கண்ணை நீ இவண் ஒழிய*
*யாரோ பிரிகிற்பவரே?*

..................................................

ஒண்ணுதல் நின்னொடும் செலவு'' [421]

என்றும்,

''வினையே ஆடவர்க்கு உயிரே வாள்நுதல்
மனை உறை மகளிர்க்கு ஆடவர் உயிர் என
நமக்கு உரைத்தோரும் தாமே
அழாஅல் தோழி அழுங்குவர் செலவே'' [422]

என்றும்,

'நாம் உயிருடன் இருக்கின்ற வரை தலைவன் நம்மைப் பிரிந்து செல்லமாட்டான் இதைத் தெளிவாக உணருக'[423] என்றும், நின் கண்பார்வை அவரைப் பிரிந்து செல்லவிடாது[424] என்றும், அவளை ஆற்றுவித்தற் பொருட்டுப் பலவாறு உரைக்கின்றாள்.

தோழி தலைவன் பிரிவைத் தலைவிக்கு உரைக்குமிடத்து, தலைவன் தம்மாட்டுக் கொண்ட பேரன்பைப் புலப்படுத்துவதுடன், ஆடவர்க்குரிய கடமையையும் நினைவுறுத்துகிறாள்.

தலைவிமாட்டுத் தலைவன் கொண்ட பெருங்காதல் திறத்தால், தன் ஆண்மைக்குச் சான்றாய் வினைமேற்கொண்டு செல்வானாயினும் காலம் நீட்டியாது தலைவிமேல் கொண்ட அன்பு விரைந்திழுக்க வருவான் என்பதை உணர்த்தும் தோழியின் வாழ்வியலறிவு போற்றற்குரித்து.

5.2.1.5 **பிரிவிடை ஆற்றாத தலைவியை ஆற்றுவித்தல்**

தோழி கற்பில் தலைவியிடம் மிக அதிகமாக கூற்றுகள் நிகழ்த்துவது இத்துறையில் ஆகும். இக்கூற்றாக நற்றிணையில் 13 பாடல்களும் குறுந்தொகையில் 17 பாடல்களும் ஐங்குறுநூற்றில் 13 பாடல்களும் கலித்தொகையில் ஒரு பாடலும் அகநானூற்றில் 30 பாடல்களும் என 74 பாடல்கள்[425] உள்ளன.

குறிஞ்சித் திணையில் ஒரு பாடலும்[426] முல்லைத் திணையில் 14 பாடல்களும்[427] நெய்தல் திணையில் ஒரு பாடலும்[428] பாலைத் திணையில் 58 பாடல்களும்[429] காணப்படுகின்றன.

பேயனார் 11 பாடல்களும்[430] மாமூலனார் 12 பாடல்களும்[431] பாலை பாடிய பெருங்கடுங்கோ 5 பாடல்களும்[432] கல்லாடனார், கச்சிப்பேட்டு நன்னாகையார், ஓதலாந்தையார், தாயங்கண்ணனார், ஆகியோர் முறையே 2 பாடல்களும்[433] பொய்கையார், முது கூற்றினார், இளந்தேவனார், காரிக்கண்ணனார், காப்பியஞ் சேந்தனார், காவன் முல்லை

பூதனார், துறைக்குறுமா விற்பாலன் கொற்றனார், இடைக்காடனார். மதுரை மருதங்கிழார் மகனார் சொகுத்தனார், கள்ளிக் குடிப்பூதம் புல்லனார், பொதும்பில் கிழார் மகனார், மோசிகீரனார், வெள்ளிவீதியார், காவன் முல்லைப் பூதனார், கச்சிப்பேட்டுக் காஞ்சிக் கொற்றன், மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார், ஊண்பித்தை, பூங்கண்ணன், நாகம் போத்தன், மதுரைக் கண்டரத்தன், பெருங்குன்றூர் கிழார், ஆலத்தூர் கிழார், கொற்றன், நல்லந்துவன், உமட்டூர் கிழார் மகனார் பரங்கொற்றனார், அந்தியிளங்கீரனார், காட்டூர் கிழார் மகனார் கண்ணனார், குடவாயிற் கீரத்தனார், ஆமூர்க் கவுதமன் சாதேவனார், முள்ளியூர்ப்பூதியார், செயலூர் இளம்சாத்தன் கொற்றனார், நக்கீரர், மதுரை ஈழத்துப் பூதன் தேவனார், மதுரை மருதனிள நாகனார், எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார், எயினந்தை மகனார் இளங்கீரனார் ஆகிய 36 புலவர்களும்[434] முறையே ஒரு பாடலும், பெயர் தெரியாத 2 புலவர்கள்[435] முறையே ஒரு பாடலும் பாடியுள்ளனர்.

தலைவன் பொருள் வயிற் பிரிந்த காலத்து ஆற்றியிராத தலைவியை ஆற்றுதல் பொருட்டுத் தோழி, தலைவன் நம்மை விரும்பி அருள் செய்ய இன்னும் வரவில்லையாயினும் வேறு எங்கும் சென்றிருக்கமாட்டார்[436] என்றும் ஆண்பல்லி தன் துணையான பெண் பல்லியை அழைத்திடும் காட்டிடைச் சென்றவர் நம்மை நினையாரோ[437] என்றும் ஆண் யானை பெண் யானையை யா மரத்தின் பட்டையை உரித்து அதன் நீரைப் பருகச் செய்யும் அன்புக் காட்சியைக் கண்டு, நமக்கு அருளுதலை எண்ணி விரைவில் வருவார்[438] என்றும்

> *"நிலம் தொட்டுப் புகாஅர் வானம் ஏறார்*
> *விலங்கு இரு முந்நீர் காலின் செல்லார்*
> *நாட்டின் நாட்டின் ஊரின் ஊரின்*
> *குடிமுறை குடிமுறை தேரின்*
> *கெடுநரும் உளரோ நம் காதலோரே"* [439]

என்று தூதுவிட்டுத் தலைவனைத் தேடித் தருவேன் என்றும் தாம் சென்ற நாட்டில் பொருளினைப் பெற்றாரோ இல்லையோ?[440] என்றும், நின் நிலை அறியார்; அறியின் உடனே மீள்வர்[441] என்றும் இன்று வருவர்[442] என்றும் தலைவன் தலைவி இருவரது இயல்பும் நிலையும் எண்ணிப் பார்த்து தேறுதல் மொழிகள் உரைக்கின்றாள்.

தலைவன் தான் கூறிய பருவத்தில் பொய்க்காமல் வருவார் என்பதனை அவர் சொல் மூலம் நானும் நீயும் தெளிந்தோம். அதனால் அப்பருவம் கழிவதற்கு முன் அவர் வருவார்.[443] என்றும் தலைவன் குறித்த பருவம் இதோ வந்து விட்டது[444] என்றும் பெருஞ்செல்வத்தை ஒருநாளிலேயே பெற்றாலும் தாம் மேற்கொண்ட செயல் முடிந்ததும் தங்கி இருக்காமல் வருவார்[445] என்றும் இவளுடன் செல்வதற்கு அரிய காடு என நமக்குத் தன் உள்ளத்தைக்

கூறியவர், உன்னை மறந்து வேற்று நாட்டில் தங்க மாட்டார்[446] என்றும் அன்பும் அருளும் உடைய அவர் நின் பார்வை, கூந்தல், துயில், உன்னால் பெறப்படும் இன்பம் இவற்றை எண்ணி விரைந்து மீண்டும் வருவர்[447] என்றும் நம் தூதர் அவரிடம் சென்றுள்ளார்; அவர் மொழி கேட்பின் தங்காது நம் பசலை நீங்க வருவார்[448] என்றும் சோழ நாடு, உறையூர், அமிழ்தம் ஆகியவற்றைப் பெற்றாலும் நம்மிடையே வருவார்[449] என்றும் எடுத்துக் கூறி ஆற்றுவிக்கிறாள்.

தலைவி தலைவனுக்குப் பிரிவுடன்பட்டு பின் ஆற்றாது இருக்கும்போது தோழி வினவுகிறாள். அதற்குத் தலைவி அவர் போன சுரம், போவதற்கு அரிது என்று ஆற்றாதுள்ளேன் என்றுரைக்கிறாள். அது கேட்ட தோழி தலைவன் பிரிந்த காலம் வேனிற் பருவம் கழிந்த கார்ப் பருவத்தின் தோற்றம்; எனவே அச்சுரம் தணிந்து நன்றாகவே உள்ளது[450] என்று கூறி ஆற்றுவிக்கிறாள். தலைவன் சென்ற சுரத்தின் கொடுமை எண்ணி அஞ்சும் தலைவியின் உள்ளக் காதல், அவன் நலத்தை நாடும் அவளின் நற்பண்பைப் புலனாக்குகிறது.

#### 5.2.1.6 பருவங் கண்டு அழிந்த தலைவியை ஆற்றுவித்தல்

தலைவன் திரும்பி வருவதற்காகக் குறித்துச் சென்ற பருவம் வந்தும் தலைவன் வராதது கண்டு தலைவி வருந்தினாள். அப்போது தோழி அவளை ஆற்றுவிக்கிறாள்.

இத்துறையில், நற்றிணையில் 2 பாடல்களும் குறுந்தொகையில் 5 பாடல்களும் ஐங்குறுநூற்றில் 9 பாடல்களும் கலித்தொகையில் 2 பாடல்களும் அகநானூற்றில் 4 பாடல்களும் என 22 பாடல்கள்[451] உள்ளன.

குறிஞ்சித் திணையில் ஒரு பாடலும்[452] முல்லைத் திணையில் 15 பாடல்களும்[453] பாலைத் திணையில் 6 பாடல்களும்[454] இடம் பெற்றுள்ளன.

பேயனார் 9 பாடல்களும்[455] பெருங்கடுங்கோன் 2 பாடல்களும்[456] இளந்திரையனார், பெருங்குன்றூர் கிழார், கோவர்த்தனார், இடைக் காடன், ஒக்கூர் மாசாத்தியார், கருவூர்க் கந்தப்பிள்ளை, குறுங்கீரன், குறுங்குடி மருதனார், ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியன், மதுரை மருதன் இளநாகனார், எருமை வெலியனார் ஆகியோர்[457] முறையே ஒரு பாடலும் பாடியுள்ளனர்.

தோழி தலைவியிடம், இவ் இளவேனில், அவர் வருவார் என்பதற்குத் தூதாய்[458] வந்தது என்றும் தலைவனும் நாம் இல்லாத தனிமையுடன் வேனில் காலக் காமவிழாவும்

இருப்பதால் வருவார்[459] என்றும் நம் இருவர் வருத்தமும் நீங்க, அவர் வருவதைக் காண வருவாயாக[460] என்றும் தலைவன் குறித்த பருவத்தில் வருவர் என்பது தெளிந்தேன்[461] என்றும் தலைவன் அறிவு நின் மாமை அழகை மறக்கவிடுமோ[462] என்றும் மழை பெய்யத் தொடங்கியதால் தவறாது இன்றே வருவர்[463] என்றும் கூறி ஆற்றுவிக்கின்றாள்.

### 5.2.1.7 தலைவன் வரவு மலிதல்

பிரிந்த தலைவன் குறித்த பருவத்தில் மீண்டும் வருவதைத் தலைவிக்குக் கூறுகிறாள் தோழி. இத்துறையில் நற்றிணையில் 5 பாடல்களும் குறுந்தொகையில் ஒரு பாடலும் அகநானூற்றில் 2 பாடல்களும் ஐங்குறுநூற்றில் 10 பாடல்களும் கலித்தொகையில் 7 பாடல்களும் என 25 பாடல்கள்[464] உள்ளன.

முல்லைத் திணையில் 6 பாடல்களும்[465] நெய்தல் திணையில் ஒரு பாடலும்[466] பாலைத் திணையில் 18 பாடல்களும்[467] இடம் பெற்றுள்ளன.

பெருங்கடுங்கோ 7 பாடல்களும்[468] ஓதலாந்தையார் 6 பாடல்களும்[469] பேயனார் 4 பாடல்களும்[470] நக்கீரர் 2 பாடல்களும்[471] இளம்புல்லூர்க் காவிதி, குடவாயிற் கீரத்தனார், உலோச்சனார், பரணர், வடமோதன் கிழார் ஆகிய 5 புலவர்கள்[472] முறையே ஒரு பாடலும் பெயர் தெரியாத புலவர்[473] ஒரு பாடலும் பாடியுள்ளனர்.

தோழி, தலைவியிடம், தலைவன் நின்பால் காமஇன்பம் பெற்றதனால் இன்று வருவர்[474] என்று துணிந்து கூறுகிறாள். தலைவன் இளவேனிற் காலத்தில் நம்மை நினைத்து வந்ததனால் அவர் அறத்தைக் கடைப்பிடித்து வாழ்பவர்; அவர் வாழ்க[475] என்றும் காட்டிடையே நின் குணங்கள் தலைவனுக்குத் தோன்ற மீண்டும் வந்தனன்[476] என்றும் சுரத்தின் அழகு கண்டு, தான் குறித்த பருவம் என எண்ணித் தலைவன் பொருள் வயின் செலவும் இனி அழுங்குக என்று நின்னை விரும்பி நின் அழகு மிக வந்தார்[477] என்றும் தலைவன் வந்ததனால் அவிழ்ந்த நின் கூந்தலில் மலர்களை விரும்பி அணிந்து கொள்வாயாக[478] என்றும் கூறி தலைவனது வரவை உணர்த்துகிறாள்.

தலைவிக்குத் தலைவனின் பிரிவையும், அவள் ஆற்றியிருக்க வேண்டியதன் தேவையையும், தலைவனுக்குத் தலைவியின் ஆற்றாமையையும் உரைக்கும் தோழி தலைவன் வரவையும் தலைவிக்கு உரைப்பாள். பிரிந்து சென்றவன் மீண்டும் வந்து தன் தலைவியைப் பார்க்கும்போது இருக்கும் அவன் மனநிலை அறியும் தோழி தலைவியை அழகுபடுத்திக் கொள்ளக் கூறுவது தோழியின் உலகியலறிவை உணர்த்துவதாகும்.

#### 5.2.1.8 தலைவனுக்கு வாயில் நேருமிடத்து

தோழி தலைவனுக்கு வாயில் நேருமிடத்து தலைவியிடம் கூறுவதாக அமைந்த அகநானூற்று மருதத்திணையில் ஓரம் போகியாரின் பாடல் ஒன்றில், தலைவனின் பரத்தையை எண்ணி ஊடிப் பிரிந்து வாழ்பவர், தம்மிடமிருந்து திருமகள் நீங்க சிறிய அரிசியைச் சமைத்து உண்பவராகத் தனித்தவர் ஆவர். அவர்தம் புதல்வர் பாலில்லா முலையைச் சுவைக்க எளிமையுடையவராவர். இதை அறிந்திருந்தும் தலைவனிடம் ஊடுபவர் அறிவற்றவர்[479] என்று தலைவிக்கு அறிவுரை வழங்கித் தலைவனிடம் கொண்ட ஊடலைத் தீர்க்க அறிவுறுத்துகிறாள்.

### 5.2.2 தலைவனிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

தோழி தலைவனிடம் கற்பில் அவனது இல்லற வாழ்வு கண்டு மகிழ்ந்தும், அவனது பொருள் வயிற் பிரிவில் அச்செலவைத் தடுக்குமிடத்தும், அவனது பரத்தையிற் பிரிவினின்று மீண்டும் வந்த காலத்தும் உரையாற்றுகின்றாள். இவற்றுள் தலைவனின் செலவழுங்குவித்தலிலும், வாயில் மறுத்தலிலும் தோழி தலைவனிடம் அதிகம் கூற்று நிகழ்த்துகிறாள்.

ஐங்குறுநூற்றுக் குறிஞ்சித்திணை, கபிலர் பாடல் ஒன்றில் தலைவியைத் தன்னுடன் அவளுடைய பெற்றோர் அறியாமல் அழைத்துச் சென்று முறைப்படி மணந்து கொண்ட தலைவன், எதிரே வந்த தோழியிடம் இனி யான் இவளை வரைந்தமையை நுமர்க்குத் தெரிவிக்க வேண்டும் என்று கூறியதைக் கேட்ட தோழி, 'நீ இவளைக் கரண முறையில் வரைந்தமையை யான் விரைந்து சென்று தாய்க்கு உரைத்தேன்'[480] என்று மகிழ்வுடன் கூறுகிறாள்.

தலைவன், தன் மணநிகழ்வைத் தலைவியின் சுற்றத்தாருக்குத் தெரிவிக்கவும் அதனை முதன்முதலில் யாரிடம் கூறினால் மணஉறவைக் கேட்டு மகிழ்வர் என்பதையும் தெளிவாக உணர்ந்தறிந்து தோழியிடம் கூறுகிறான். இங்குத் தலைவனது உளவியல் நன்கு வெளியிப்படுகிறது.

#### 5.2.2.1 வதுவை கண்டு மகிழ்ந்து

இத்துறையில் நற்றிணை நெய்தல் திணையில் அம்மூவனார், உலோச்சனார் ஆகியோரின் 2 பாடல்களும் ஐங்குறுநூற்றுக் குறிஞ்சித் திணையில் கபிலரின் ஒரு பாடலும் என 3 பாடல்கள்[481] காணப்படுகின்றன.

தலைவன் தோழியிடம் நன்காற்றினாய் என்று கூறியபொழுது தோழி, எம்மை மறத்தல் உமக்கு முடியாதது போல எமக்கும் முடியாது; நினைக்க முடியா நெஞ்சுடன் ஊடல் செய்தோமில்லை[482] என்று கூறுகிறாள். இதனால் என்றும் நினைத்திருக்கும் தலைவனே பெரியவன் என்பதைப் பாராட்டி உரைக்கின்றாள்.

திருமணம் நடந்து கொண்டிருக்கும் நேரத்தில் தோழி தலைவனிடம்,

*''இனி செய்தனை யால் எந்தை வாழியர்*
*நன்மனை வதுவை அயர இவள்*
*பின்னிருங் கூந்தல் மலரணிந்தோயே''* [483]

என்று மணம் கண்டு மகிழ்ந்து வாழ்த்துகிறாள்.

#### 5.2.2.2 **இல்வாழ்வு கண்டு மகிழ்ந்து**

இத்துறையில் குறுந்தொகை மருதத் திணையில் நெடும்பல்லியத்தனாரின் ஒரு பாடலும் ஐங்குறுநூற்று நெய்தல் திணையில் அம்மூவனாரின் ஒரு பாடலும் என 2 பாடல்கள்[484] காணப்படுகின்றன.

தலைவனும் தலைவியும் வாழும் மனைக்கு அவர்களுடன் சென்ற தோழி தலைமகன் விருப்பம் கண்டு, நீ தலைவிபால் கொண்ட அன்பால் முன்பு பிறை போல வெளிப்பட்டு நுமக்குக் காண்பதற்கரியவளாக இருந்த தலைவியால் களவுக்காலத்தில் ஏற்பட்ட வருத்தங்களைப் பொறுத்து இருந்தீர் யான் அதனை நினைந்து வருந்துகிறேன்[485] என்று கூறுவதன் வாயிலாகத் தலைவி மீது கொண்ட தலைவனின் களவுக்கால அன்பின் வன்மை வெளிப்படுகிறது.

தலைவன் தலைவியை மணந்து கொண்டு பள்ளியிடத்து இருந்தபொழுது தோழி, மடந்தையான இவளுக்கு வருத்தம் உண்டாகுமாறு பிரியாதிருப்பாயாக[486] என்று தலைவனிடம் இல்லற ஒழுகலாற்றை எடுத்துரைக்கிறாள்.

#### 5.2.2.3 **செலவழுங்குவிக்கும் இடத்து**

இத்துறையில் தோழி தலைவனிடம் கூறும் கூற்றுகள் நற்றிணையில் 10 பாடல்களும் குறுந்தொகையில் ஒரு பாடலும் ஐங்குறுநூற்றில் 13 பாடல்களும் கலித்தொகையில் 13 பாடல்களும் அகநானூற்றில் 10 பாடல்களும் என 47 பாடல்கள்[487] உள்ளன.

முல்லைத் திணையில் 2 பாடல்களும்[488] நெய்தல் திணையில் ஒரு பாடலும்[489] பாலைத் திணையில் 44 பாடல்களும்[490] காணப்படுகின்றன.

பெருங்கடுங்கோன் 16 பாடல்களும்[491] ஓதலாந்தையார் 11 பாடல்களும்[492] பேயனார், ஆலம்பேரி சாத்தனார் முறையே 2 பாடல்களும்[493] சாத்தந்தையார், இளவேட்டனார், எயினந்தையார், வண்ணப் புறக்கந்தரத்தனார், மோசிகண்ணத்தனார், கோடி மங்கலத்து வாதுளி நற்சேந்தனார், இறங்கு குடிக்குன்றநாடன், காவிரிப்பூம்பட்டினத்து செங்கண்ணனார், மதுரை ஈழத்துப் பூதன் தேவனார், எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார், மதுரை மருதன் இளநாகனார் ஆகிய 15 புலவர்கள்[494] முறையே ஒரு பாடலும் பெயர் தெரியாத புலவர்[495] ஒரு பாடலும் பாடியுள்ளனர்.

பொருள் வயிற் பிரியக் கருதிய தலைவனிடம் தோழி, தலைவி தாய் வீட்டின் செழிப்பை விட்டு, உடன் போக்கில் காட்டிடையில் வந்த தவறாலோ இன்று அவள் கை வளையல்கள் கழன்று வருந்துமாறு நீ அவளைப் பிரியக் கருதுவதற்கு யான் வருந்துகிறேன்[496] என்றும், வெப்பமான காட்டிடையே கடந்து செல்ல உமக்கு உடல் பூரிக்கும் மகிழ்ச்சியாய் இருக்க, இவளுக்கு உன் பிரிவு நெஞ்சழிவு செயலாய் உள்ளது[497] என்றும் வருந்திக் கூறுகிறாள்.

இவ்வுலகில் நாள்தோறும் இன்பமும் இளமையும் அம்பின் நிழல் போன்று மறையும் தன்மை உடையன. இதனை அறியாதவர் என்பது அரிதாகும். அதனை நன்கு பேண வேண்டும். அதைவிட்டு துன்பமுடைய காட்டு வழியைக் கடந்து சென்று, நல் வாய்ப்பில்லா வாழ்க்கைக்கு நிலையற்ற பொருட்பற்றின் பொருட்டு 'யாம்பிரிதும்' எனக் கூறுகிறீர்[498] என்றுரைக்கிறாள். முன்பு உடன்போக்கில் காட்டில் தலைவன் மறவர் தோற்றோடும்படி வென்றும்; தலைவியின் தமர் வந்த போது மறைந்திருந்தும் சென்றான்[499] இவ்வாறு வீரமும் அறிவுத் தெளிவும் கொண்டு தலைவன் செயல்பட்டதை இன்று தோழி எடுத்துக் கூறுகிறாள்.

தலைவன் தன் பிரிவைப் பலமுறை நின் தோழிக்குக் கூறுக என்று இரந்து கேட்கிறான். அதற்குத் தோழி, தலைவியும் 'செல்க' என்று விடுத்தற்கு உரியள். ஆனால் அவள் கண்ணீர் சொரிய உம்மால் அவள் முன் நின்று விடைபெற்றுப் பிரிய முடியுமா?[500] என்று தலைவனை வினவுவதன் மூலம் தலைவனின் மனநெகிழ்வு புலப்படுகிறது. நம்முன்னோர்கள் உலகியல் முறைகளை வகுத்தபோது பொருள் தேடும் முறைகளில் தலைவன் தலைவியைப் பிரியாது வாழும் முறை ஒன்றினை வகுத்தமைக்க மறந்துவிட்டனர் போலும்[501] என்று வருத்தமுற்றுரைக்கின்றாள்.

நீ பிரிந்து செல்வதால் இவள் வருத்தமடைவாள். அதனால் என்ன பயன் எனவே நீ எம்மையும் உடன் அழைத்துக் கொண்டு செல்வாயாக; அவ்வாறன்றி நீ பிரிவதால் நின் பொருள் அறமற்றது. எனவே, அவளுடன் கூடிச் செய்வதே பொருள் என நினைத்துப்

பொருள் தேடிச் செல்வதைக் கைவிடுவாயாக. மேலும் நின் பிரிவால் இவள் அழகு கெடுவதுடன், உன் சிறுவனின் இளநகையைக் காண்பதினும் நீ பெறும் பொருள் தரும் இன்பம் பெரிதாகுமோ[502] என்று தலைவனின் பிரிவால் ஏற்படும் நிலையும் பிறர் வருந்தச் செய்யும் பிரிவால் ஏற்படும் பொருளீட்டல் அறமற்றது என்றும் கூறி தலைவனின் செலவைத் தவிர்க்கின்றாள். நீ பிரிந்து சென்றால் நின் அன்புமகன் பால் பொருட்டு அழுவான்[503] என்று கூறுவதனால் தலைவன் பிரிந்தவுடன் தலைவி உயிர்வாழாள் என்பதும் அதனால் மகன் தாய் அளிக்கும் பால் எண்ணி அழுவான் என்பதையும் தோழி குறிப்பாகச் சுட்டி உரைக்கின்றாள். யாம் தலைவியின் நிலையை உரைத்தும் கேளாது செல்வாயாயின் நின்னைத் தடுத்து நிறுத்துவது காடே ஆகும்[504] என்கிறாள்.

நீ பிரிந்து சென்றவுடனேயே தலைவி இறந்துபடுவாள்[505] என்றும் நீ தேடும் பொருள் இன்பம் தருவதல்லாது இவள் உயிரை மீட்டுத் தருவதைச் செய்யுமா[506] என்றும் பழியின்றி இச்செலவைக் கைவிட்டு வரும் விருந்தினரைப் பாதுகாத்து தம் மனைவி விரும்பும்படி அவளுடன் கூடியிருக்கும் போது இனிய முயக்கத்தைப் பெறும், அதுவே நிலையான பொருளாகும்[507] என்றும் சில நாள் வாழ்க்கை, இளமை முதலியன விரைவில் கழிவன[508] என்றும், பொருள் தேடும் முறைமையினின்று தேடினால் அது தேடுபவரை விட்டு நீங்கும்; மேலும் இம்மை மறுமைக்குப் பகையாகும்; இதனை அறியாத நீ எம்மையும் பொருளாக மதிப்பாயாக[509] என்றும் கூறுகிறாள். மேலும்,

*"............................................ உள நாள்*
*ஒரோஒ கை தம்முன் தழீஇ, ஒரோஒ கை*
*ஒன்றன் கூறு ஆடை உடுப்பவரே ஆயினும்*
*ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை அரிதுஅரோ*
*சென்ற இளமை தரற்கு"* [510]

என்றும் தலைவனிடத்துப் பொருள், வாழ்க்கை இவற்றை நன்குணரும் வண்ணம் உரைத்து செலவைத் தவிர்க்கின்றாள்.

நீ தேடும் பொருளுக்கு எக்குறையும் வராமல் இருக்க வேண்டும் என்பதே என் கவலை[511] என்றும் உமக்கு உம்வினை முழுமை அடைந்து வெற்றியுண்டாகுக; ஆனால் உம் பிரிவால் இவளுக்கு ஏற்படும் துன்பம் தீர்க்கும் மருந்து நீ சென்ற நாட்டில் இருக்குமாயின் செல்க[512] என்றும் தலைவி பொருட்டு இரங்கிக் கூறுகிறாள்.

### 5.2.2.4 செலவு உடன்படல்

தோழி தலைவனது செலவு உடன்படுவதாக நற்றிணை பாலைத்திணையில் பெயர் தெரியாத புலவரின் ஒரு பாடலும் முல்லைத் திணையில் கச்சிப்பேட்டு இளந்தச்சனாரின் ஒரு பாடலும் என 2 பாடல்கள்[513] காணப்படுகின்றன.

தோழி, செல்வோம் செல்வோம் என்ற தலைவனிடத்து, சென்று வினை முடித்து; அங்கே நீட்டித்திருப்பதைத் தவிர்வீராக என்றுரைக்கிறாள். பின்னர் தலைவன் இல்லாமல் வருந்தும்படியாக வாடைக்காற்றும் வந்து நின்றதே கண்டீரோ[514] என்றும் தலைவன் பிரிந்த காலத்து, யாம் வருந்தினால் நற்குடியில் பிறந்த எம்போன்றோர்க்குப் பெருமையுடைய தாகாது[515] என்றும் கூறித் தலைவன் பொருள்வயிற் பிரிவதற்கு உடன்படுகிறாள்.

### 5.2.2.5 **வினை முற்றி வந்த தலைவனிடம்**

இத்துறையில் ஐங்குறுநூற்று முல்லைத் திணையில் பேயனார் பாடிய ஒரு பாடலும் அகநானூற்று முல்லைத் திணையில் மதுரை மருதன் இளநாகனாரின் 2 பாடல்களும் மதுரை அளக்கர் ஞாழார் மகனார் அம்மள்ளனாரின் ஒரு பாடலும் காணப்படுகின்றன.[516]

தோழி, தலைவனிடம், போர் வினைமுற்றி விரைந்து வந்து தலைவிக்கு இனிய செயல் செய்தமையாலும் தலைவியின்கண் பசலை நீங்கி அழகு பெற்றமையாலும் எனக்கும் தலைவிக்கும் இனிதாய் உள்ளது 'நீடு வாழ்க' [517] என மகிழ்வுற்று உரைக்கிறாள்.

### 5.2.2.6 **தலைவனுக்கு வாயில் மறுத்தல்**

இத்துறையில் நற்றிணையில் 5 பாடல்களும் குறுந்தொகையில் 8 பாடல்களும் ஐங்குறுநூற்றில் 7 பாடல்களும் அகநானூற்றில் 13 பாடல்களும்[518] மருதத் திணையில் 30 பாடல்களும்[519] நெய்தல் திணையில் 2 பாடல்களும்[520] பாலைத் திணையில் ஒரு பாடலும்[521] காணப்படுகின்றன.

ஓரம்போகியார் 8 பாடல்களும்[522] பரணர் 6 பாடல்களும்[523] மருதம் பாடிய இளங்கடுங்கோ, ஆலங்குடி வங்கனார், அம்மூவனார் முறையே 2 பாடல்களும்[524] கொற்றனார், எயினந்தை மகன் இளங்கீரனார், ஒக்கூர் மாசாத்தியார், மிளைக் கந்தன், குன்றியன், தூங்கலோரி, கயத்தூர் கிழான், அள்ளூர் நன்முல்லையார், மதுரைத் தமிழ்க் கூத்தனார் கடுவன் மள்ளனார், மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார், நக்கீரர், குடவாயிற் கீரத்தனார் ஆகிய 13 புலவர்கள்[525] முறையே ஒரு பாடலும் பாடியுள்ளனர்.

பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன் தோழியிடம் வாயில் வேண்டி நின்ற போது தோழி தலைவனிடம், பரத்தையர், நீ பிரிந்த போது கண்ணீர் வடித்தனர். அவர்கள் உன்னை இழுக்க இழுக்க, உன் நிறைந்த துன்பத்தின் நிலையைக் கண்ட யான் என்ன செய்ய வல்லேன்[526] என்றும் நின்னைக் காணும் போதெல்லாம் எமக்கு இனிமை ஏற்படுவதால் அது ஒன்றே போதும்[527] என்றும் நின் புதல்வன் விளையாட்டில் மகிழ்வெய்திய தலைவி உன் பிரிவால் வருந்தியிருக்க நீ பிரிந்தது யாது கருதியோ[528] என்றும் உம் பரத்தையரை

எம் மனைக்கே அழைத்துவந்து வாழ்ந்தாலும் அவர்கள் புன்மனத்தில் அன்பு இருத்தல் அரிதாகும்; மேலும் எம்போல் புதல்வர்களைப் பெற்றாலும் கற்புடையவர்களாக ஆவது அதைவிட அரிதாகும்[529] என்றும் பலரும் பழிப்பதால் நீ துன்புற்று வரின் நான் உவப்பேன் என்றாலும் நீ இங்கு வந்து சோம்பலுற்றுத் தூங்கும் துயில் மற்றொரு நாளும் தோன்றும்; எனவே நேற்று பரத்தையைப் புணர்ந்தது போல இன்று பாணன் தரும் புதுப்பரத்தையுடன் மகிழ்ந்து இருப்பாயாக[530] என்றும் தலைவியின் சினக் குறிப்பை அறிந்த தோழி தலைவனை வெறுத்தும் வருந்தியும் இகழ்ந்தும் மறுத்துக் கூறுகிறாள்.

பாணன் வழி தலைவன் வாயில் வேண்டியவிடத்து தோழி, நின் பாணன் பொய்யுரைப்பதால் மற்றுமுள பாணர்கள் பிரிந்த தலைவியர்க்குப் பொய்யுரைப்பவர் போல் தோன்றுவர்[531] என்று பாணரை வெறுத்து மறுத்துரைக்கிறாள்.

பரந்தையர் நின்னைப் பழித்துக் கூறும் மொழியுடன் எம் தெருவிற்கு வருவதை நீ தவிர்த்து வாழ்வாயாக[532] என்றும் முன்பு தந்த வேம்பின் காயை இனிதெனப் பாராட்டி, இன்று சுனையின் குளிர்ந்த தெளிந்த நீரைத் தந்தாலும் வெப்பமும், உவர்ப்புச் சுவையும் உடையதெனக் கூறி நுமது அன்பின் திரிபை வெளிப்படுத்தினீர்[533] என்றும் எனது பெண்மை நலத்தைக் கொடுத்து நின் சூளைப் பெற்றுச் செல்வீர்[534] என்றும் எம்மை எம் தந்தையின் வீட்டிற்கு அழைத்துச் சென்று விடுவாயாக[535] என்றும் தலைவனை வெறுத்து வெகுண்டு கூறி வாயில் மறுக்கிறாள்.

தலைவன் அனுப்பிய வாயிலை மறுக்கும் தோழி, பரத்தையர் தெருவிற்குப் பிரிந்து சென்ற தலைவனுக்குத் தலைவியின் நெய்யணி குறித்துத் தெரிவிக்க தான் சென்றபோது அங்கு அவனைச் சூழ்ந்து நின்ற பரத்தையர்க்கு அஞ்சி நின்றதாகக் கூறுகிறாள்.[536] தோழியின் இக்கூற்று தலைவனின் பல பரத்தையருடனான தீயொழுக்கத்தைப் புலப்படுத்துகிறது.

புறத்தொழுக்கம் மேற்கொண்ட தலைவன் தோழியிடம் வாயில் வேண்டி நின்றபோது, அவன் பரத்தையருடன் புனலாடியதைப் பிறர் கண்டு தன்னிடம் கூறியதைத் தோழி உரைத்து வாயில் மறுக்கிறாள்.[537] தலைவனின் புறத்தொழுக்கம் ஊரலர் ஆகும் வண்ணம் மிகவும் இழிவுடையதாக இருப்பதை நினைவுறுத்தி அவன் மேற்கொள்ள வேண்டிய கற்பொழுக்கத்தைத் தோழி உணர்த்துகிறாள் என்பது எண்ணத்தக்கது.

பரத்தையருடன் புணர்ந்த மார்புக் குறியுடன் வாயில் வேண்டி வரும் தலைவனுக்குத் தோழி, அவன் மார்பைச் சிறப்பித்து மற்றவர் கூறுவதைக் கேட்ட அளவிலேயே தலைவி

சினங்கொள்வாள், அத்தகையவள் பரத்தையர் புணர்ச்சியால் உண்டான சாந்தும் மாலையும் உடைய அவன் மார்பைக் கண்டாள் உயிர் வாழமாட்டாள்[538] எனக்கூறி மறுக்கிறாள்.

தலைவனின் பரத்தமை ஒழுக்கத்தைச் சுட்டிக் காட்டி வாயில் மறுக்கும் தோழி, அவனை ஒழுங்குபடுத்த முடியாதென்ற நிலையில் அவன் போக்கிற்கு விட்ட தம் முடிவை,

*"ஒண் தொடி நெகிழினும் நெகிழ்க*
*சென்றீ, பெரும! நிற்தகைக்குநர் யாரோ?"* [539]

எனக் கூறி அவன் கூடா ஒழுக்கத்தை இழித்துரைக்கிறாள்.

தலைவனின் பரத்தை உடனான உறவை நேரில் கண்ட தோழி, 'நீ பரத்தையின் கைப் பிணிப்பை விட்டமைக்கே அவள் சினந்தாள்; ஊர்முழுதும் உன்னைத் தேடித் திரியும் அவள் தன் இல்லத்தில் தனித்துக் கிடக்காமல் இருக்க நீ அவளிடமே செல்க எனக்கூறி வாயில் மறுக்கிறாள்.[540] பரத்தையைத் தலைவன் தேடியலையும் நிகழ்வுக்கு மாறாகத் தலைவனைப் பரத்தை தேடியலையும் நிகழ்வு, தலைவன் பரத்தமை ஒழித்துத் திருந்தி வாழ்தற்கு வழியில்லா நிலையை உணர்த்துகிறது.

தலைவனின் புறத்தொழுக்கத்தால் சினந்த தோழி,

*"உணர்குவென் அல்லென்; உரையல் நின்மாயம்*
*நாண்இலை மன்ற யாணர் ஊர"* [541]

எனக் கூறி வாயில் மறுக்கிறாள். மேலும், "பொய்யால்; அறிவென் நின் மாயம்[542] என அவன் வஞ்சத்தைத் தான் நன்றாக அறிந்துள்ளதாகவும் உரைக்கிறாள்.

ஊரலர் தோன்றும் அளவிற்கு ஊரார் காண, பரத்தையுடன் நீராடியதை மறைத்துப் பொய்த்துரைக்கும் தலைவனைப் பொய்யன், நாணமில்லாதவன், வஞ்சன் எனக் கடிந்துரைக்கும் தோழியின் கூற்று தலைவன் மீதான வெறுப்பையும் தலைவியின் இல்லறவாழ்வில் கொண்ட அக்கறையையும் காட்டுகின்றது.

தலைவியைப் புகழ்ந்துரைத்தும் பரத்தையை இகழ்ந்துரைத்தும், வாயில் வேண்டிச் செல்லும் தலைவனிடம், 'பரத்தை ஒருத்தி நின்னை இகழ்ந்துரைத்தும் வருத்தம் மிகுமாறு பார்த்தும், நின்மார்பில் அணிந்த மாலையை அறுத்தும் ஊடி எம் தெருவழிச் செல்கிறாள். இதுதான் உன் தலைமைத் தன்மையோ? என இகழ்ந்துரைத்து, தம்மைப் புகழ்ந்துரைக்காமல் அகன்று செல்லுமாறு[543] தோழி உரைக்கிறாள்.

தலைமகளின் உயர்ந்த தகுதியைக் கூறி வாயில் மறுக்கும் தோழி 'நின் பரத்தை பகற்பொழுதில் மறைந்து மெல்ல வந்து எம் தலைவியிடம் முகமனுரையுடன், யானும்

உன் சேரியைச் சேர்ந்த அயல் வீட்டுக்குரிய உன் தங்கையாவேன் எனக் கூறி தலைவியின் நெற்றியையும் கூந்தலையும் தடவித் திரும்பிச் சென்றாள். அவளைக் கண்டு நான் நாணம் அடைந்தேன் எனக் கூறுகிறாள்.[544]

### 5.2.2.7 **தலைவனுக்கு வாயில் நேர்தல்**

இத்துறையில் நற்றிணை, ஐங்குறுநூறு ஆகியவற்றில் முறையே 2 பாடல்களும் குறுந்தொகையில் 3 பாடல்களும் கலித்தொகையில் ஒரு பாடலும் என 8 பாடல்கள்[545] உள்ளன.

குறிஞ்சித் திணையில் ஒரு பாடலும்[546] மருதத் திணையில் 3 பாடலும்[547] நெய்தல் திணை, பாலைத் திணை ஆகியவற்றில் முறையே 2 பாடல்களும்[548] இடம் பெற்றுள்ளன.

தலைவனின் பரத்தமை ஒழுக்கத்தால் ஊடல் கொண்ட தோழி ஊடலை நீட்டித்து நிலைநிறுத்திக் கொள்வதில்லை. மாறாகத் தலைவியும் தோழியும் ஊடல் தீர்ந்து தலைவனை ஏற்றுக்கொள்வர். இது வாயில் நேர்வதாகும். தலைவனிடம் வாயில் நேரும் தோழி, சான்றோர் செல்வம் எனப் போற்றக் கூடியது யாதெனில் தன்னைச் சேர்ந்தவர்களின் துன்பம் கண்டபோது அஞ்சி நெகிழ்ந்து அதைப் போக்கி இனியராய் விளங்கும் தன்மையே ஆகும். அதுவே உண்மையான செல்வம்[549] எனக் கடிந்துரைக்கிறாள்.

தலைவனின் பரத்தமை கொடுமையைத் தன் முன்னே சொல்வதற்கும் நாணம் அடைந்து மறைத்து உரையாடும் தலைவியின் கற்புக்கடம் பூண்ட ஒழுக்கத்தைக் கூறி அவள் அவனது பிழையைப் பாராட்டாது ஏற்றுக்கொள்வாள் எனத் தோழி தலைவனுக்கு வாயில் நேர்ந்துரைக்கிறாள்.[550] தலைவனின் கொடுமையைத் தம்மிடம் கூறாமல் மறைக்கும் தலைவி பரத்தமை நீங்கித் தலைவன் தன்னிடம் வரும்பொழுது அவன் நாணும்படி அவனை எதிர்கொண்டழைப்பாள்[551] எனத் தோழி தலைவனிடம் உரைக்கிறாள்.

தலைவன் இன்றி தலைவியின் இல்வாழ்க்கை அமையாது என்பதைக் கூறி அவனுக்கு வாயில் நேரும் தோழி,

> *"நீ எமக்கு இன்னாதன பல செய்யினும்*
> *நின் இன்று அமைதல் வல்லாமாறே"* [552]

என்றுரைக்கிறாள். தலைவிக்குத் தலைவனின் இன்றியமையாமை கூறும் தோழியின் இக் கூற்றில் அவன் மீண்டும் பரத்தையிற் பிரிவை மேற்கொள்ளலாகாது என்ற குறிப்புப் பொருளும் புலப்படுகின்றது.

### 5.2.2.8 தலைவனின் புறத்தொழுக்கம் பற்றிக் கூறுமிடத்து

இக்கூற்றுகள் ஐங்குறுநூற்றில் மட்டுமே காணப்படுகின்றன[553] ஓரம்போகியாரின் 21 பாடல்கள் மருத்திணையைச் சார்ந்தவை[554] கபிலரின் ஒரு பாடல் குறிஞ்சித் திணையைச் சார்ந்தது.[555]

தலைவன் தலைவியைப் பிரிந்திருந்த காலத்து அவளும் தோழியும் ஒழுகிய திறம் அறிய விரும்பினான். தலைவியும் தோழியும், தலைவனாகிய ஊரனும், அவனுக்குத் தூதாய் வரும் பாணனும் வாழ்க[556] எனவும், ஊரனின் நட்புப் பிறவிதோறும் சிறப்பதாகுக[557] எனவும், ஊரன் பரத்தையர் ஒழுக்கம் நீங்கித் தன் மனையில் இருப்பானாக[558] எனவும் ஊரன் மார்பு அனைவர்க்கும் உரியதாய் ஆகாமல் ஒழிக[559] எனவும் ஊரன் தேர் பரத்தையர் வீட்டின் முன் நிற்றலை விட்டு எம் வீட்டின் முன் நிற்பதாகுக[560] எனவும் அவனது புறத்தொழுக்கம் பற்றிய தம் வருத்தத்தை உணருமாறு எண்ணியிருந்ததைக் கூறுகின்றாள்.

களவில் பல நாள் ஒழுகிப் பின்னர் வரைந்து கொண்ட தலைவன் நான் வரையாது ஒழுகி இருந்த காலத்து நீவிர் இங்கு இருந்த நிலை யாது என்று வினவினான். அதற்குத் தோழி, ஊரன் இவளை விரைந்து மணந்து கொள்க; அவன் விருப்பத்திற்கேற்ப அவளை எம் தந்தையும் மறுக்காமல் கொடுப்பானாகுக[561] என்றும் ஊரன் இவளைத் தன்னுடன் மணந்து கொண்டு செல்வானாகுக[562] என்றும் ஊரன் முன் செய்த சூளுறவு இப்பொழுது பொய்யாமல் நடைபெறுக[563] என்றும் ஊரன் நட்பு பழிச்சொல்லுக்குரியதாக ஆகாது போக[564] என்றும் ஊரன் தலைவியை மணந்து கொள்ள வேண்டும் என்பதில் தாம் பெரிதும் உறுதியாக இருந்ததைத் தலைவன் உணரக் கூறுகிறாள்.

பரத்தையரிடத்தில் பலநாள் தங்கி மீண்டுவந்த தலைவனிடம், தலைவி நீ நல்காது போயினும் நின் மார்பையே நோக்கி வாழும் இயல்புடையவள்; அதனை அறிந்து நீ ஒழுகினால் அது இவள் உயிர் வாழ்க்கைக்கு ஆக்கம் ஆகும்; உனக்கு அறமும் ஆகும்[565] எனத் தோழி தலைவன் ஒருவனே அவளுக்கு உற்ற உறவாவான் என்பதை உணர்த்துகிறாள். பரத்தையின் ஏவலாள் தலைவியின் இல்லம் புகுந்த தலைவனைத் தோழி பரத்தை ஏவலாள் வருவதை விட்டு, அவள் இல்லத்திலேயே தங்குவது அவனுக்கும் தமக்கும் நல்லது[566] எனக் கூறும் வழி அவனுடைய உண்மையான அன்புறவை மட்டுமே தாம் விரும்புவதைக் காட்டுகிறாள்.

புறத்தொழுக்கத்தால் வாயில் நேராத தலைவியின் கொடுமையைத் தலைவன் கூறக் கேட்ட தோழி அத்தலைவனிடம், நின்னிடம் குற்றம் உள்ள இடத்து அதுகுறித்து நின்னைக் கடிந்து கொள்ளும் பொழுது நின் தந்தையும் தாயும் இவளினும்கடுமை உடையவர்

ஆவாரோ[567] என்று கூறுவதன் வழி தலைவனின் குறையைக் கடிவதில் தலைவனின் பொற்றோரை விடத் தலைவிக்கு உரிமை அதிகம் உள்ளதை அறியமுடிகிறது. தலைவனின் பெற்றோர் தம் மகனின் திருமணத்திற்குப் பிறகு அவன் செய்யும் தவற்றைப் பெரிதாக எண்ணி வருந்தியதற்கோ, கடிந்து கொண்டதற்கோ சான்றில்லை.

### 5.2.3 செவிலியிடத்து நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

கற்பில் தோழி செவிலிக்குக் கூறும் கூற்றுகள் ஐங்குறுநூற்றில் நெய்தல் திணையில் அம்மூவனார் பாடிய ஒரு பாடலிலும் குறிஞ்சித் திணையில் கபிலர் பாடிய ஒரு பாடலிலும் என 2 பாடல்களில்[568] உள்ளன.

செவிலி, அறத்தொடு நின்ற பின்பு தலைவியின் திருமணம் நன்கு நடந்ததால், தோழி அதனைக் குறிப்பாய் உணர்த்தும் நிலையில் இவள் **கண்கள் நீரைச் சொரிந்தன**[569] என்றுரைக்கிறாள். தலைவி மகனைப் பெற்றபின் செவிலி தலைவன் இல்லம் சென்றாள். அப்போது தோழி, செல்வம் மிக்க கொழுநனுக்கு மகனான செல்வனது ஊர் அதுவே[570] என்று தலைவனது ஊரைக் காட்டுமிடத்து மகப்பேறான பெருஞ் செல்வத்தைக் குறிப்பிடுவது. செவிலி அவனது ஊரைக் காண விரும்புவாள் என்பதால்தான். ஈண்டும் தோழியின் அறிவுத்திறன் வெளிப்படுகிறது.

### 5.2.4 பிறரிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

#### 5.2.4.1 பாணனிடம்

கற்பில் தலைவன், தலைவியை விட்டுப் பிரிந்து பரத்தையிடம் தங்கியிருந்து மீண்டும் வருகிறான். அதனால் அத்தலைவன் தன் பொருட்டுத் தலைவியிடம் பாணனைத் தூதாக அனுப்புகிறான். அப்பொழுது தோழி அப்பாணனிடம் நேரடியாக நிகழ்த்தும் கூற்றுகள் 9 பாடல்களில்[571] காணப்படுகின்றன.

நற்றிணை மருதத்திணையில் கூடலூர்ப் பல்கண்ணனார் ஒரு பாடலும்[572] நெய்தல் திணையில் கபிலரும் சீத்தலைச் சாத்தனாரும் முறையே ஒரு பாடலும்[573] குறுந்தொகையில் மருதத் திணையில் வடம வண்ணக்கன் தாமோதரும் பேயனும்[574] முறையே ஒரு பாடலும் ஐங்குறுநூற்றில் முல்லைத் திணையில் பேயனார்[575] 2 பாடலும் நற்றிணையில் பெயர் தெரியாத புலவர்[576] ஒரு பாடலும் அகநானூற்றில் கருவூர்ப் பூதஞ் சேந்தனார் நெய்தல் திணையில் ஒரு பாடலும்[577] பாடியுள்ளனர்.

பாணனிடம் தோழி, எம் தலைவி பேதைமையால் தலைவன் இல்லாமலும் கானலிலே விளையாடச் செல்வோம் என்றுரைப்பாள். தலைவன் வருவதால் பயன் ஒன்றுமில்லை.

எனவே தலைவன் வரவேண்டாம்[578] என்றும் தலைவன் வரவு தலைவியின் நுதல் பசப்பைக் களையமாட்டா; எனவே மீண்டும் செல்க[579] என்றும் இவளது நலம் அழிந்தமையைக் கண்டும் பிறர் அறியாது தன் கண்ணீரை மறைப்பதையும் நீ உரைப்பாயாக[580] என்றும் நெய்தல் நிலத் தலைவியின் பேதைமையையும் நிலையையும் எடுத்துக் கூறமாட்டாயா என்று வேண்டும் நிலையில் வாயில் மறுக்கிறாள்.

பாண, தலைவனுக்கு யாம் பொருத்தமற்றவர்; நீ தொழுது எம் மனை முன் நின்று பாடாதே; யாம் விரும்பாத பயனற்ற சொற்களைப் பேசாதே உன் தலைவனை அழைத்துக் கொண்டு செல்[581] என்றும் உன் சொல்லில் மட்டும் மற்றவர்களை விட தலைவன் இனிமை உடையவன்; அவன் தலைவியிடம் மிகுந்த அன்புடையவன்; எனினும் உண்மையில் அன்பற்றவன்[582] என்று மருத நிலத் தலைவியின் நிலை உணர்ந்த தோழி, தூதாக வந்த பாணனை வெறுத்தும் கடிந்தும் பேசுவதுடன் தலைவனையும் வெறுத்து உரைக்கிறாள்.

பரத்தையிற் பிரிந்து வந்து தலைவன் வாயில் பெறாது, தானே புக்குத் தலைவி ஊடலைத் தவிர்த்த போது தோழி பாணனிடம், தலைவன் தன் மகனைத் தழுவ, தலைவி தலைவனது புறத்தைத் தழுவினாள்.[583] என்று மகிழ்ந்து கூறுகிறாள். பருவ வரவின் பொழுது தூதாகி வந்த பாணன் தலைவனது கூற்றை உரைத்தபொழுது தோழி, நின்னைத் தூது அனுப்பிய அவரது தகவு என்ன பயன் உடையது[584] என்றும் அவர் பொய்ச் சொற்களுக்கு யாம் நாணி வருந்துவதையும் அறியவில்லையே என வருந்துகிறேன்[585] என்றும் முல்லைத் தலைவனை மட்டுமே பழித்துரைக்கின்றாள்.

### 5.2.4.2 **விறலியிடம்**

தோழி விறலியிடம் கூறுவதாக நற்றிணையின் மருதத் திணையில் புலவர் பெயரில்லா ஒரு பாடலும் பரணரின் ஒரு பாடலும் என 2 பாடல்கள்[586] காணப்படுகின்றன. பரணரின் பாடல் பரத்தை விறலியை எதிர்ப்பட்டுச் சொல்லியது எனவும் வருகிறது.

தலைவனால் அனுப்பப்பட்ட விறலியைப் பார்த்த தோழி, எல்லோரும் எழுந்து நம் கணவனைக் காத்துக் கொள்வோம்[587] என்றும் ஊரனுக்கு ஒரு நாளைக்கு ஒரு பரத்தையைக் கொணர்ந்து கொடுக்கும் மடம் கெழு பெண்டே, உன் பயனற்ற சொற்களை அப்பரத்தையின் தாயிடத்தும் கூறி அவரையும் முயங்க விடுப்பாயோ?[588] என்றும் மிகவும் வெகுண்டு தாக்கி உரைக்கிறாள்.

### 5.2.4.3 வாயில்களிடம்

இக்கூற்றில், குறுந்தொகை, மருதத் திணையில் தும்பிசேர் கீரன் ஒரு பாடலும் ஐங்குறுநூற்றின் மருதத்திணையில் ஓரம்போகியார் ஒரு பாடலும் நெய்தல் திணையில் அம்மூவனார் 2 பாடல்களும் என 4 பாடல்கள்[589] பாடியுள்ளனர்.

பரத்தையிற் பிரிந்த தலைவனுக்குத் தூதாக வந்த வாயில்களிடம் தோழி தலைவனது நட்பை உள்ளத்தில் நினைந்து இன்பம் அடைவதே போதுமானது[590] என்றும் தலைவியின் கண்கள் பசலை பூத்தன; எனவே இப்பொழுது தலைவன் வந்து பெறுவது யாது?[591] என்றும் மருத நிலத் தலைவியின் உள்ளம், உடல் ஆகியவற்றின் நிலை கூறி வாயில் மறுக்கிறாள்.

மேலும் தலைவனின் அன்பு தலைவியை நாடுமோ[592] என்றும் தலைவன் தலைவியிடம் கொண்ட அன்பு எனக்கு உண்மையாகத் தோன்றினாலும் தலைவிக்கோ வேறாக இருக்கிறதே யான் என் செய்வேன்[593] என்றும் நெய்தல் நிலத் தலைவி, தலைவனை விரும்பி ஏற்க மாட்டாள் என்பதை வெளிப்படையாகக் கூறி வாயில் மறுக்கிறாள்.

### 5.2.4.4 பாங்காயினாரிடம்

குறுந்தொகை மருதத் திணையில் ஆலங்குடி வங்கனார் பாடிய ஒரு பாடலில், பரத்தையிற் சென்று மீண்ட தலைவன் தலைவியிடம் தம் பாங்காயினாரைத் தூது அனுப்பினான். அப்பாங்காயினாரிடம் தோழி, தலைவன் வருத்தம் தரும் செயலைச் செய்தாலும் அதனால் மனதில் வருத்தம் கொள்ளினும் மன்னித்து மறந்து வாயில் நேர்தல் பெண் பிறப்பின் துன்பமே ஆகும்[594] என்று குடிப்பிறந்த பெண் கற்பொழுக்கம் பேணுவதற்காகத் தலைவனை ஏற்றுக்கொண்டு ஆக வேண்டும் என்று கூறி வாயில் நேர்கிறாள்.

### 5.2.4.5 அறிவரிடம்

குறுந்தொகை பாலைத்திணையில் ஓரிற் பிச்சையாரின் பாடல் ஒன்றில், தலைவன் குறித்துச் சென்ற வாடைப் பருவம் எப்பொழுது வரும் என்று[595] தோழி அறிவரை வினவுகிறாள்

### 5.2.4.6 குயவனிடம்

நற்றிணை மருதத்திணையில் கூடலூர்ப் பல்கண்ணனார் பாடல் ஒன்றில், தோழி குயவனிடம், யாழிசைத்துப் பாட்டுப் பாடும் பாணன் செய்த துன்பங்கள் பெருகின. இவனது பொய்மிக்க கொடிய சொற்களை நம்பாது உம்மைப் பாதுகாத்துக் கொள்ளுங்கள் என்று

மகளிரிடம் கூறிச் செல்லுக[596] என்று பாணனின் பொய்மை சொற்களைப் பழித்துரைக்கிறாள்.

### 5.2.5 தன்னுள் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

நற்றிணை மருதத்திணையில் பெயரில்லாப் புலவரின் பாடல் ஒன்றில், தலைவனுக்கு வாயில் நேர்ந்த தோழி தலைவியிடம் கூறுகிறாள். அதுகேட்ட அவள், சினம் கொண்டு புலவி செய்தமையால் வருந்திய தோழி, அன்னியும் பெரியனும் செய்த போரில் அழிந்த புன்னை மரம் இருவர் போரையும் ஒழித்தது. அதுபோல,

*''என்னொடு கழியும் - இவ் இருவரது இகலே''* [597]

என்று தன் அழிவு அவர்கள் துன்பம் தீர்க்கும் என எண்ணி தன்னுள் உரைக்கிறாள். இவளது இக்கூற்றால் தோழி, தலைவி தலைவன் பால் வைத்துள்ள அன்பும் அவளது பண்பும் புலப்படுகின்றன.

நற்றிணையில் மதுரைப் பேராலவாயர் முல்லைத் திணையில் பாடிய பாடல் ஒன்றில், வினைவயிற் பிரிந்த தலைவன் மீண்டும் வந்தவிடத்து, தலைவனது தேர் இல்லின் வாயிலில் வந்தது. தலைவி எந்நாளும் கொண்ட அரிய துன்பம் நீக்கித் தன் கணவனுக்கு விருந்தயரும் விருப்பமுடையவளாய் இருக்கிறாள்[598] என்று தலைவியின் விருந்தோம்பல் சிறப்பை உவந்து கூறுகிறாள்.

புதல்வன் பிறந்த பின் தலைவன் இல்லம் வந்த பொழுது தோழி கூறியதாக நற்றிணை மருதத்திணையில் கோண்மா நெடுங்கோட்டனார் பாடிய பாடல் ஒன்றில், தோழி, பாதுகாப்பான மனையில் புதல்வன் பிறந்தான்; அணிகள் அணிந்த மகளிர் புள்ளின் ஓசையால் நல்லது அறிய விரும்பினர். புனிறு நாறு செவிலியொடு புதல்வன் துஞ்ச நெய்யாட்டு முடிந்தது; புதல்வனை ஈன்ற தாய் உறங்கினாள்; நடு இரவில் கள்வனைப் போலத் தலைவன் தன் தந்தையின் பெயரைத் தன் புதல்வனுக்குச் சூட்ட அங்கு வந்தான்[599] என்றுரைக்கிறாள்.

இக்கூற்றால் தலைவி குழந்தை ஈன்றெடுக்கும் பொழுது செவிலித்தாய் அருகிலிருந்து கவனித்து வருவதை அறிய முடிகிறது. இன்றும் மகப்பேற்றின் பொழுது அது பெண்ணின் தாய் வீட்டில் நடைபெறுவதுடன், அத்தாய் அருகிலிருந்து கவனிப்பதையும் அறியலாம். மேலும் குழந்தையின் தந்தை, தன் தந்தையின் பெயரைத் தன் மகனுக்குச் சூட்டவிரும்புவது அன்றுமுதல் இன்றுவரை நடைபெற்று வரும் ஒரு மரபாக விளங்குவதையும் அறியலாம்.

## 5.3 ஆய்வு முடிவுகள்

1. தோழியின் கூற்று அதிக அளவில் இடம்பெறும் நூல் நற்றிணை ஆகும். அதற்கடுத்த நிலைகளில் முறையே ஐங்குறுநூறும் குறுந்தொகையும் அகநானூறும் விளங்குகின்றன.

2. தோழியின் கூற்றுகளில் களவு ஒழுக்கக் கூற்றுகளே அதிகம் இடம்பெறுகின்றன. தலைவனிடம் தலைவியை வரைந்து கொள்ள வேண்டிக் கூறும் தோழியின் கற்பறம் காக்கும் செயலே அதற்குக் காரணமாகும்.

3. தோழியின் கூற்றுகள் களவில் குறிஞ்சித் திணையிலும் நெய்தல் திணையிலும் அடுத்தடுத்த நிலைகளில் இடம்பெறுகின்றன.

4. கற்பில், பிரிவிடை ஆற்றாத தலைவியிடம் நிகழ்த்தும் கூற்றுகள் அதிகம் உள்ளன. அதனை அடுத்து தலைவனிடம் செலவழுங்குவித்தலிலும் வாயில் மறுத்தலிலும் கூற்றுகள் அதிகமாக உள்ளன.

5. கற்பில் பாலைத்திணையிலும் மருதத் திணையிலும் முறையே அதிக அளவு கூற்றுகள் உள்ளன.

6. தோழி கூற்றுகளாகப் பாடிய புலவர்களில் கபிலர் மிக அதிகமாகப் பாடி முதலிடம் பெறுகிறார். அம்மூவனார், ஓரம்போகியார், பாலை பாடிய பெருங்கடுங்கோ, பேயனார், உலோச்சனார், மதுரை மருதன் இளநாகனார் ஆகியோர் முறையே அடுத்தடுத்த இடத்தைப் பெறுகின்றனர்.

7. தலைவியின் உணர்வுகளைத் தோழி தனக்குரியதாக்கிக் கொண்டு கூறுவதால் தலைவி கூற்றுப் பாடல்கள் குறைவாக உள்ளன.

8. தலைவன் அழகு தன்னுள்ளத்தைக் கவர்ந்தது எனத் தலைவன் அழகைப் புகழ்ந்து கூறித் தலைவனுடன் தலைவியை உறவாக்க முயல்கிறாள் தோழி.

9. தலைவி எந்நாளும் நிறைநலத்தோடு இன்புற்று வாழவேண்டும் என்ற உயர்ந்த உள்ளம் உடையவளாகத் தோழி விளங்குகிறாள்.

10. நற்றாய், செவிலித்தாய் ஆகிய இருவரும் தம் பருவ மகளாகிய தலைவியின் உறுப்பு நலன்கள், கூந்தல் ஆகியவற்றை எப்பொழுதும் கவனமாக உற்று நோக்குகின்றனர்.

11. தோழி, தலைவியின் காதல் உறவை ஈடேற்ற, தாய் தடையாக இருப்பதாக உணரும் போது அத்தாய், நரகம் சென்று துன்புறுமாறு பழிக்கிறாள்; தலைவன் தலைவி

உறவை வளர்த்தெடுப்பதே இவளின் வாழ்நாள் குறிக்கோள் என்பதை அறிய முடிகிறது.

12. தலைவி, தலைவனிடம் தன்னைத் திருமணம் செய்து கொள்ளுமாறு நேர்முகமாகக் கேட்டதாகச் செய்திகள் இல்லை. இது தமிழ்ப் பெண்மையின் சிறப்பைக் காட்டுவதாக உள்ளது.

13. செவிலித் தாய் இரவு பகலாகத் தன் மகளைக் கண்காணிக்கும் இயல்புடையவள்.

14. மகள் தாயிடம் தன் காதலை வெளிப்படையாகக் கூறுகின்றாள் அல்லள்.

15. தலைவன் தலைவியை மணந்து கொள்ள தோழி பல சூழல்களைக் கூறி விரைவு படுத்தவேண்டி உள்ளது.

16. தலைவன் தலைவியின் கற்பறத்திற்கு, உடன்போக்கு என்னும் கசப்பான வரம்பு கடத்தலொழுக்கம் தேவையானதாக உள்ளது.

17. தலைவன் தலைவி உறவுக்கு அறத்தொடு நிற்றல் ஒன்றே அறவழியைக் காட்டுகிறது.

18. தலைவனைச் சேட்படுத்தும் தோழி, தலைவனுடைய உயர்குடிப் பிறப்பும், தலைவியின் எளிய நற்குடிப்பிறப்பும் கூறி, பின்னர் அவர்தம் காதலுக்கு உதவியாய் அமைந்து கற்பறம் காணச் செய்தல், காதலுக்குக் குலவேற்றுமை, செல்வ வேற்றுமை ஆகியவை தடையானவை அல்ல என உணர்த்தும் பண்டைத் தமிழ் மரபின் கொள்கையைக் காட்டுவதாகும்.

19. தலைவன் தலைவி இருவர்க்கும் ஏற்படும் காதல் நோய்க்கு அவ்விருவரே ஒருவர்க்கொருவர் மருந்தாகின்றனர்.

20. வரைவு கடாதல் இல்லையாயின் களவுத் தலைவன் களவிலேயே காலம் போக்கும் கடமை குறைவுடையவன் ஆவான். அவ்வாறின்றி இல்லறக் கடமையில் ஒழுங்குள்ளவனாக உயர்ந்து வாழ வரைவு கடாதல் உதவியாக உள்ளது.

21. தலைவியின் களவை வெளிப்படுத்தும் வகையில் நிகழ்த்தப்படும் வெறியாட்டு எனும் அக்காலச் சமுதாய மரபை அறத்தொடு நிற்றல் வழித் தோழி தலைவியின் தன்மானம் கருதித் தகர்த்தெறிகிறாள்.

22. தோழி செவிலித்தாயின் மூலம் தலைவியின் காதலை அவள் பெற்றோர்க்கு உணர்த்துகிறாள்.

23. தலைவியின் காதலைச் செவிலி வழி அறிந்த அவள் தமர் சிறிதுபொழுது மனங்கொதித்துப் பின்னர் உடன்படுகின்றனர். இவ்வொழுகலாறு இன்றைக்கும் நிலவுகிறது.

24. தோழி நற்றாயிடம் உரையாடுவதாகச் சான்றுகள் இல்லை.

25. தோழி தன்னுடைய சொல்லாற்றலால் தலைவியின் திருமணத்திற்குச் செவிலி, தமர் ஆகியோரை உடன்படுமாறு செய்கிறாள்.

26. தலைவன் மேற்கொள்ளும் பிரிவைத் தவிர்க்கும் தோழியின் கூற்றுகள் கற்பில் அதிகம் காணப்படுவதால் தோழிக்குத் தலைவன் மீதுள்ள உரிமை புலனாகிறது.

27. தலைவன் பிரிவைத் தவிர்க்கும் தோழி, வாழ்வதற்குத் தேவைப்படும் பொருளின் இன்றியமையாமை உணர்ந்து ஒருபோது தலைவனின் பிரிவுக்கு உடன்படுகிறாள்.

28. தலைவிக்குத் தோழி தாய்போல இருந்து அவளுக்கு உண்டாகும் துன்பங்களை நீக்குகிறாள். மேலும் ஆசானாகவும் சிறந்த தோழியாகவும் திகழ்கிறாள்.

29. தலைவனுக்கு வாயில் நேர்தல், வாயில் மறுத்தல், அவனது புறஒழுக்கத்தைக் கண்டிக்கும் பொருட்டு இடித்துரைத்தல் ஆகிய அனைத்துரிமைகளும் தோழியே வாய்க்கப் பெற்றிருக்கிறாள்.

30. தலைவியை இரவுபகல் பாராது கவனமாகக் காக்கும் செவிலியின் பாதுகாப்புணர்வு தோழியின் கூற்றால் வெளிப்படுகின்றன.

# அடிக்குறிப்புகள்

1. தொல். பொருள். களவு. 123
2. வ.சுப. மாணிக்கம் - 'தமிழ்க் காதல்' பக். 58
3. அகம். 58, 298
4. ஆ. சிங்காரவேலு, 'அபிதான சிந்தாமணி' பக். 905
5. நா. செயராமன், 'ஈன்றதாய்' பக். 25
6. Tamil Lexicon Vol. IV Pa. 2115
7. சரளா இராசகோபாலன் 'சங்க இலக்கியத்தில் தோழி' ப-ள் - 11-12
8. நற். 25,32,220,245,359 குறு. 74, 176, 212, 230, 298, 346, ஐங். 206, 207, 211, கலி. 60,61,63 அகம். 32, 180, 250, 268, 330, 356, 380, 392.
9. நற். 25, 32, 220, 359, குறு. 74, 176, 298, 346, ஐங். 206, 207, 211, கலி. 60, 61, 63, அகம். 32, 268, 392
10. அகம். 356
11. நற். 245, குறு. 212, 230 அகம். 180, 250, 330, 380
12. நற். 32, 359, ஐங். 206, 207, 211, கலி. 60, 61, 63.
13. குறு. 298, அகம். 356
14. நற். 25, 220, 245, குறு. 74, 176, 212, 230, 346, அகம். 32, 180, 250, 268, 330, 380, 392.
15. நற். 25
16. நற். 32 : 3-7
17. நற். 245 : 6-12
18. நற். 359
19. குறு. 74.
20. குறு. 176.
21. குறு. 212
22. குறு. 230
23. குறு. 298
24. குறு. 346
25. அகம். 330
26. அகம். 356
27. அகம். 392
28. கலி. 61 : 16-17

29. நற். 4, 63, 135, 138, 285, குறு. 109.
30. நற். 285.
31. நற். 4, 63, 135, 138, குறு. 109.
32. நற். 4, 138
33. நற். 63, 135, 285 குறு. 109.
34. நற். 4
35. நற். 138
36. குறு. 109.
37. நற். 63
38. குறு. 294 அகம். 20, 302, 358, 368, 370
39. அகம். 302, 358, 368, குறு. 294 அகம். 20, 370
40. அகம். 358, 368
41. குறு. 294 அகம். 20, 302, 370
42. குறு. 294
43. அகம். 20
44. அகம். 302
45. அகம். 358
46. நற். 36, 145, 151, 154, 261 குறு. 138, 292, 372, 375 அகம். 68, 88, 188, 248, 278, 282, 362, 382, கலி. 65
47. நற். 36, 151, 154, 261, குறு. 138, 292, 375, அகம். 68, 88, 188, 248, 278, 282, 362, 382, கலி. 65.
48. நற். 145 குறு. 372.
49. அகம். 248, 278, 382, கலி. 65
50. நற். 36, 145, 151, 154, 261, குறு. 138, 292, 372 அகம். 68, 88, 188, 282, 362
51. குறு. 375
52. நற். 145
53. நற். 154
54. கலி. 65
55. புலவர் குழந்தை, 'தொல்காப்பிய காலத் தமிழர்' பக். 130
56. குறு. 292
57. அகம். 248: 14-16
58. அகம். 282: 10-19
59. அகம். 382

60. நற். 11, 27, 68, 119, 178, 191, 194, 267, 306, 313 குறு. 159
61. நற். 68, 119, 194, 306, 313 குறு. 159
62. நற். 11, 27, 178, 191, 267
63. நற். 11, 191
64. நற். 27, 68, 119, 194, 267, 306, 313 குறு. 159
65. நற். 178
66. நற். 27
67. நற். 68
68. நற். 191
69. நற். 306, 313
70. ஐங். 269
71. நற். 53, 233, குறு. 332, ஐங். 216, 246
72. நற். 53
73. குறு. 332
74. நற். 61, 85, 222
75. நற். 61
76. நற். 365
77. நற். 72, 88, 96, 122, 123, 147, 175, 203, 206, 228, 231, 239, 263, 297, 299, 339, 344, 372, 378, 399 குறு. 55, 227, 268, 357, அகம். 28, 98, 108, 210, 228, 312 ஐங். 268
78. நற். 88, 122, 147, 206, 228, 297, 339, 344, 399 குறு. 268, 357, அகம். 28, 98, 108, 228, 312 ஐங். 268
79. நற். 72, 96, 123, 175, 203, 231, 239, 263, 299, 372, 378, குறு. 55, 227 அகம். 210
80. நற். 203, 372 அகம். 210
81. நற். 299, 378, குறு. 357 ஐங். 268
82. நற். 72, 88, 96, 122, 123, 147, 206, 228, 231, 239, 263, 297, 339, 344, 399, குறு. 55, 227, 268 அகம். 28, 98, 108, 228, 312.
83. நற். 175
84. நற். 72
85. நற். 88
86. நற். 122
87. நற். 147
88. நற். 206

89. நற். 297
90. நற். 339
91. அகம். 28
92. நற். 47, 173, 268, 282, 288, 322 குறு. 111, 248, 263, அகம். 232, 242, 272, ஐங். 244, 247
93. நற். மேற்படி, குறு. 111, 263 அகம். மேற்படி, ஐங். மேற்படி.
94. குறு. 248.
95. குறு. 248, ஐங். 244, 247
96. நற். 47, 268, 282, 288, 322, குறு. 111, 263, அகம். 232, 242, 272
97. நற். 173
98. நற். 173:5-9
99. நற் 288
100. குறு. 111
101. குறு. 248
102. அகம். 272
103. ஐங். 244
104. புலவர் வேதா, 'வாராய் தோழி' பக். 132.
105. நற். 13. குறு. 259, 321, 333, 374, 379, ஐங். 228, 241, 242, 249, கலி. 37
106. நற். 13, ஐங். 228, 241, 242, 249 கலி. 37
107. குறு. 259, 333, 374
108. குறு. 321, 379
109. குறு. 321 : 7-8
110. குறு. 374
111. குறு. 379
112. ஐங். 228
113. ஐங். 241
114. குறு. 259 : 5-8
115. குறு. 333
116. ஐங். 242
117. கா. கோவிந்தன் 'நற்றிணை' பக். 221
118. நற். 149, குறு. 217, 262, 343, 369, 383 ஐங். 200, 235, 254, அகம். 65, 221, 285
119. குறு. 217 ஐங். 235, 254

120. நற். 149, ஐங். 200
121. குறு. 262, 343, 369, 383, அகம். 65, 221, 285
122. ஐங். 235, 254
123. நற். 149 குறு. 217, 262, 343, 369, 383, ஐங். 200, அகம். 65, 221, 285
124. அகம். 65
125. நற். 149:8-10
126. குறு. 343
127. குறு. 369
128. குறு. 383
129. ஐங். 200
130. ஐங். 235
131. ஐங். 254
132. ந. சுப்புரெட்டியார், 'அகப் பொருளில் தோழி' பக். 62
133. நற். 7, 111, 125, 132, 134, 197, 328, குறு. 90, 117, 143, 166, 247, 265, 284, 308, 328, 367, 373 ஐங். 219, 225, 226, கலி. 131.
134. நற். 125, 134, 328, குறு. 90, 143, 247, 265, 284, 308, 373, ஐங். 219, 225, 226
135. குறு. 367
136. நற். 111, 132, குறு. 117, 166, 328 கலி. 131
137. நற். 7, 197
138. ஐங். 219, 225, 226
139. நற். 7, 197, 328, குறு. 90, 117, 143, 166, 247, 265, 284, 308, 328, 367, 373 கலி. 131
140. நற். 111, 125, 132, 134
141. குறு. 247
142. குறு. 373
143. ஐங். 219
144. ஐங். 225
145. ஐங். 226
146. நற். 22, 78, 91, 163, 235, 278, 393, குறு. 34, 51, 52, 146, 297, 351, 389, கலி. 38, 39, 40, 41, 45, 107, 115, ஐங். 147, 189, 202, 218, 300, அகம். 42, 70, 160, 178.
147. நற். 22, 393, குறு. 52, 146, 297, 389 கலி. 38 - 41, 45, ஐங். 202, 218, 300 அகம். 42, 178.

148. கலி. 107, 115.
149. குறு. 34.
150. நற். 78, 91, 163, 235, 278 குறு. 51, 351, ஐங். 147, 189, அகம். 70, 160
151. ஐங். 202, 218, 300 கலி. 38-41, 45, அகம். 42
152. குறு. 351, ஐங். 147, 189
153. கலி. 107, 115
154. நற். 78, 91, 278, 393, குறு. 34, 51, 52, 146, 297, 389 அகம். 70, 160, 178
155. நற். 22, 163, 235
156. குறு. 51
157. குறு. 351
158. ஐங். 300
159. குறு. 52
160. குறு. 146
161. குறு. 389
162. ஐங். 147
163. கலி. 39 : 20-25
164. கலி. 40
165. கலி. 41 : 40-44
166. கலி. 107: 30-34
167. கலி. 115: 17-18
168. குறு.1, ஐங். 177, 187, 196
169. ஐங். 177
170. குறு. 1
171. ஐங். 187
172. ஐங். 196
173. அகம். 200, 310
174. அகம். 200
175. அகம். 310
176. ச.வே. சுப்பிரமணியன், 'குறுந்தொகையில் உள்ளுறை', ஒன்று நன்று பக்-95
177. நற். 45, 379, ஐங். 91
178. நற். 45: 1-5
179. நற். 379

180. ஐங். 91
181. நற். 323, 331 குறு. 113 அகம். 38
182. குறு. 113
183. அகம். 38:15-18
184. நற். 323
185. நற். 331
186. நற். 19, 67, 215, 276, 363, 398 குறு. 81, ஐங். 179, 186, 194, 282 கலி. 50, 132 அகம். 2, 10, 90, 92, 150, 202, 220, 270, 300, 350.
187. குறு. 81, ஐங். 282, கலி. 50, அகம். 2, 92, 202
188. நற். 19, 67, 215, 276, 363, 398 ஐங். 179, 186, 194, கலி. 132, அகம். 10, 90, 150, 220, 270, 300, 350
189. ஐங். 179, 186, 194, அகம். 10
190. ஐங். 282, கலி. 50, அகம். 2 நற். 363, 398, அகம். 300
191. அகம். 90, 220
192. நற். 19, 67, 215, 276, குறு. 81, கலி. 132, அகம். 92, 150, 202, 270, 350
193. நற். 19
194. நற். 67, 215
195. நற். 276
196. நற். 363
197. கலி. 50
198. கலி. 132, அகம். 90
199. ஐங். 186
200. அகம். 270
201. அகம். 300, 350
202. ஐங். 282
203. அகம். 202
204. அகம். 92
205. அகம். 10
206. அகம். 220
207. நற். 172, 283 குறு. 114, 355, ஐங். 260 அகம். 30, 120 132, 156, 172, 218, 288, 320, 340, 394
208. குறு. 355, ஐங். 260 அகம். 132, 172, 218, 288
209. அகம். 394, 156

210. நற். 172, 283, குறு. 114, அகம். 30, 120, 320, 340
211. குறு. 355, ஐங். 260, அகம். 218
212. அகம். 120, 340
213. நற். 283, குறு. 114, அகம்., 30, 132, 156, 172, 288, 320, 394
214. நற். 172
215. ஐங். 260, அகம்.132
216. அகம். 156
217. அகம். 172
218. அகம். 288
219. அகம். 320
220. நற். 232 குறு. 179, 198, 345 கலி. 49 அகம். 12, 18, 80, 148, 182, 240, 308, 360
221. நற். 232 குறு. 179, 198 கலி. 49, அகம். 12, 18, 148, 182, 308
222. குறு. 345 அகம். 80, 240, 360
223. குறு. 198 கலி. 49 அகம். 12, 18, 182
224. நற். 232, குறு. 179, 345, அகம். 80, 148, 240, 308, 360
225. அகம். 12: 1-5
226. அகம். 240
227. நற். 156, 168, 188, 223, 292, குறு. 42, 69, 335, 336, ஐங். 60, 279, 296, 362 அகம். 118, 168, 192, 318 கலி. 52
228. நற். 156, 168, 188, 292 குறு. 42,69, 335, 336, ஐங். 279, 296 அகம். 118, 168, 192, 318 கலி. 52
229. ஐங். 60 நற். 223, ஐங். 362
230. குறு. 42, ஐங். 279, 296, அகம். 118, 318 கலி. 52
231. நற். 156, 223, 292, குறு. 69, 335, 336, ஐங். 60, 362, அகம். 168, 192
232. நற். 168, 188
233. குறு. 42
234. கலி. 52:20-25
235. ஐங். 60
236. அகம். 318
237. செ. வெங்கடராமர், செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு 5, பரல் 9, பக். 438
238. நற். 98, 108, 195, 227, 247, 375 குறு. 18, 53, 244 ஐங். 180, 193, 234, 238, 251, 264, 275, 276, 277, கலி. 44, 48, 135, 149, அகம். 112, 238

239. நற். 98, 108, 195, 247, குறு. 18, 244 ஐங். 234, 238, 251, 264, 275, 276, 277, கலி. 44, 48, அகம். 112, 238
240. குறு. 53
241. நற். 227, 375 ஐங். 180, 193, கலி. 135, 149
242. குறு. 18, ஐங். 234, 238, 251, 264, 275, 276, 277, கலி. 44, 48 அகம். 238
243. ஐங். 180, 193 கலி. 135, 149
244. நற். 98, 227, 247, 375, குறு. 53, 244, அகம். 112
245. நற். 108, 195
246. நற். 98
247. நற். 108
248. நற். 195
249. நற். 247
250. அகம். 238
251. கலி. 44
252. குறள். 1102
253. நற். 375
254. குறு. 18
255. குறு. 53
256. குறு. 244
257. அகம். 112
258. ஐங். 276
259. கலி. 44
260. ஔவை சு. துரைசாமிப் பிள்ளை, ஐங்குறுநூறு முன்னுரை பக். 149.
261. நற். 23, 159, ஐங். 231, 232, கலி. 46, 53, 124-127, 129, 136 அகம். 78
262. நற். 23, ஐங். 231, 232, கலி. 46, 53, அகம். 78
263. நற். 159, கலி. 124-127, 129, 136
264. ஐங். 231, 232, கலி. 46, 53
265. கலி. 124-127, 129, 136
266. நற். 23, 159 அகம். 78
267. நற். 23
268. அகம். 78, ஐங். 231, கலி. 124, 125, 136
269. கலி. 129.

270. நற். 257, 336, 353, 383

271. மேற்படி

272. நற். 57, 253, 258, 295, 354, 368, குறு. 303, 324, 342, கலி. 133 அகம். 60

273. நற். 57, 253, 368, குறு. 342

274. நற். 258, 295, 354 குறு. 303, 324 கலி. 133, அகம். 60

275. நற். 253, 368

276. நற். 57, 258, 295, 354, அகம். 60, குறு. 303, 324, 342, கலி. 133

277. நற். 253

278. நற். 368, 258

279. நற். 354, 295

280. குறு. 324

281. அகம். 60

282. நற். 15, 55, 93, 254, 317, 326, 355, 395, 396 ஐங். 236, 266, 273, 285, 287, 289, கலி. 121 அகம். 100

283. நற். 55, 93, 317, 326, 355, 396 ஐங். 236, 266, 273, 285, 287, 289

284. நற். 15, 254, 395, கலி. 121 அகம். 100

285. ஐங். 236, 266, 273, 285, 287, 289.

286. நற். 15, 55, 93, 254, 317, 326, 395 கலி. 121, அகம். 100

287. நற். 355, 396

288. நற். 55

289. நற். 317

290. நற். 355

291. ஐங். 236

292. ஐங். 287

293. இரா. தண்டாயுதம், 'சங்க இலக்கியம்' பக். 106

294. நற். 12

295. அகம். 107

296. அகம். 283

297. நற். 10, குறு. 115, 388, ஐங். 364

298. நற். 10

299. குறு. 115

300. ஐங். 364

301. குறு. 388
302. த. சாம்பசிவன், 'தமிழ் இலக்கியத்தில் நெய்தல் திணை' பக். 108.
303. நற். 37, 183, 345 குறு. 124, 225, 236, 365, 397 ஐங். 233, 239, 257, 297 அகம். 286
304. குறு. 325, 365, ஐங். 233, 239, 257, 297
305. அகம். 286
306. நற். 183, 345, குறு. 236, 397
307. நற். 37, குறு. 124
308. குறு. 225, ஐங். 223, 239, 257, 297
309. நற். 37, 345, குறு. 124, 236, 365, 397, அகம். 286, நற். 183
310. நற். 37
311. குறு. 124
312. குறு. 236
313. குறு. 397: 4-8
314. ஐங். 297
315. அகம். 286
316. குறு. 225
317. ஐங். 93, அகம். 158
318. ஐங். 93
319. அகம். 158
320. ம.ரா.போ. குருசாமி, 'சங்க காலம்', பக். 109
321. நா.செயராமன் 'முல்லைப் பாடல்கள்' பக். 91
322. தொல். பொருள். பொருளியல். 203
323. தொல். பொருள். களவு. 112: 37-42
324. இறை. சூ. 29. நக்கீரர் உரை. பக். 141
325. வ.சுப. மாணிக்கம், 'தமிழ்க்காதல்' பக். 79
326. இளவழகனார், செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு 6, பரல் 4 பக். 57
327. தொல். பொருள். களவு. 112 : 42
328. இறை. சூ. 14:2
329. இறை. சூ. 14 நக்கீரர் உரை பக். 95
330. க. இரத்தினம் 'சங்க அகப்பாடல்களில் கூற்று' பக். 196
331. ம.ரா.போ. குருசாமி, 'சங்க காலம்' பக். 113
332. கலி. 39 : 20-25

333. குறி.பா. 30-31

334. குறி.பா 19-22

335. குறி.பா 1, 34

336. குறி. பா 27-29

337. தொல். பொருள். பொருளியல் 204

338. தொல். பொருள். களவு. ப-ள் 231-234

339. நற். 207, 351, குறு. 214, 366, ஐங். 28, 29, 30, 107, 110, 168, 190, 205, 210, 212, 220, 243, 248, 271, 366, 367 அகம். 48, 110, 190

340. நற். 351 குறு. 366, ஐங். 366

341. ஐங். 366

342. குறு. 366

343. நற். 351

344. குறு. 214, ஐங். 28, 210, 243, 248

345. குறு. 214

346. ஐங். 28

347. ஐங். 210

348. ஐங். 243

349. ஐங். 248

350. வ.சுப. மாணிக்கம், 'தமிழ்க் காதல்' பக். 84

351. Leta S. Holling Worth, 'The Psycology of the Adolescent', Pa. 56.

352. ஐங். 29, 30, 212, 271

353. ஐங். 29, 30

354. ஐங். 212

355. ஐங். 271

356. நற். 207, ஐங். 110, 168, 205, 220, 367

357. நற். 207

358. ஐங். 110

359. ஐங். 168

360. ஐங். 205

361. ஐங். 220

362. ஐங். 367

363. ஐங். 107, 190, அகம். 48, 110, 190.

364. ஐங். 107

365. ஐங். 190
366. அகம். 110
367. அகம். 190
368. அகம். 48
369. ஐங். 101, 102, 103, 105, 106, 108, 109
370. ஐங். 108
371. ஐங். 109
372. ஐங். 106.
373. ஐங். 101, 102
374. ஐங். 103, 105
375. ஐங். 182
376. ஐங். 258
377. கா.பொ. இரத்தினம், ''அகநானூற்றுச் சொற்பொழிவுகள்'' பக். 54
378. குறு. 23, 26
379. குறு. 23
380. குறு. 26
381. நற். 34
382. குறு. 362
383. ஐங். 250
384. வெள்ளைவாரணர், 'குறிஞ்சிப்பாட்டு, பத்துப்பாட்டுச் சொற்பொழிவுகள் பக். 252
385. மு. அருணாசலம், 'நெய்தல்' ஐங்குறுநூற்றுச் சொற்பொழிவுகள் பக். 93.
386. சோ.ந. கந்தசாமி, குறுந்தொகைத் திறனாய்வு ப-ள். 1-2.
387. நற். 60
388. மேற்படி
389. நற். 342 கலி. 47
390. மேற்படி
391. நற். 211, குறு. 89, கலி. 43
392. நற். 211
393. குறு. 89
394. கலி. 43
395. நற். 301
396. குறு. 83

397. நற். 376

398. ஐங். 284.

399. ஐங். 290.

400. குறு. 251, 392.

401. நற். 83, குறு. 47

402. அகம். 188

403. நற். 58.

404. ஐங். 398

405. நற். 294, அகம். 400

406. நற். 294

407. அகம். 400

408. கலி. 2, 13, 16, 17

409. கலி. 2

410. கலி. 13

411. கலி. 16:20-22

412. கலி. 17

413. நற். 5, 129, 148, 171, 208, 252, குறு. 22, 135, 273, 331, 348, அகம். 27, 137

414. நற். 5, 129,

415. நற். 148, 171, 208, 252, குறு. 22, 135, 273, 331, 348, அகம். 27, 137

416. நற். 5, 129, 148, 208, 252, குறு. 22, 273, 331, 348 அகம். 27, 137

417. நற். 171.

418. நற். 5

419. நற். 148

420 நற். 208

421. குறு. 22

422. குறு.135

423. குறு. 273

424. அகம். 27

425. நற். 18, 28, 41, 92, 189, 237, 246, 274, 286, 316, 329, 333, 387, குறு. 16, 37, 59, 130, 180, 211, 213,215, 232, 253, 260, 282, 287, 317, 338, 350, 358, ஐங். 315, 316, 431- 440, 461, அகம். 61, 69, 71, 85, 91, 111, 127, 129, 159, 171, 173, 177, 197, 201, 211, 213, 223, 227, 231, 233, 237, 251, 269, 295, 311, 313, 357, 359, 393, 399

426. குறு. 317

427. நற். 316, குறு. 287, 358, ஐங். 431- 440, 461

428. கலி. 150

429. நற். 18, 28, 41, 92, 189, 237, 246, 274, 286, 329, 333, 387, குறு. 16, 37, 59, 130, 180, 211, 213, 215, 232, 253, 260, 282, 338, 350, ஐங். 315, 316 அகம். 61, 69, 71, 85, 91, 111, 127, 129, 159, 171, 173, 177, 197, 201, 211, 213, 223, 227, 231, 233, 237, 251, 269, 295, 311, 313, 357, 359, 393, 399

430. ஐங். 431-440, 461

431. அகம். 61, 91, 127, 197, 201, 211, 233, 251, 295, 311, 359, 393

432. குறு. 16, 37, அகம். 111, 223, 313

433. குறு. 260, அகம். 171, குறு. 180, 287, அகம். 213, 237 ஐங். 315, 316.

434. நற். 18, 28, 41, 237, 246, 274, 286, 316, 329, 333, 387, குறு. 59, 130 211, 213, 215, 232, 253, 282, 317, 338, 350, 358 கலி. 150 அகம். 69, 71, 85, 129, 159, 173, 177, 227, 231, 269, 357, 399

435. நற். 92, 189

436. நற். 189

437. குறு. 16

438. குறு. 37

439. குறு. 130

440. குறு. 180.

441. குறு. 253

442. குறு. 215

443. கலி. 150

444. குறு. 338, 358, அகம். 85 ஐங். 461

445. அகம். 127

446. அகம். 129

447. அகம். 61, 69, 91, 111, 159, 171, 173, 177, 197, 211, 223, 231, 233, 311, 313, 357, 359, 393, 399.

448. அகம். 251

449. அகம். 201, 237, 213

450. ஐங். 431 - 440

451. நற். 99, 112 குறு. 66, 251, 275, 380, 382, ஐங். 462-464, 465-470 கலி. 26, 27 அகம். 4, 25, 59, 73

452. நற். 112

453. நற். 99 குறு. 66, 251, 275, 382 ஐங். 462 - 464, 465-470, அகம். 4
454. குறு. 380 கலி. 26, 27 அகம். 25, 59, 73
455. ஐங். 462 - 464, 465 - 470.
456. கலி. 26, 27
457. நற். 99, 112, குறு. 66, 251, 275, 380, 382, அகம். 4, 25, 59, 73
458. கலி. 26
459. கலி. 27
460. அகம். 73
461. ஐங். 466
462. ஐங். 470
463. ஐங். 468, 469
464. நற். 86, 89, 164, 212, 367, குறு. 177, ஐங். 351-354, 357, 358, 496-499 அகம். 125, 317, கலி. 29, 31-36
465. நற். 89, 367, ஐங். 496 - 499
466. குறு. 177
467. நற். 86, 164, 212, ஐங். 351 - 354, 357, 358, கலி. 29, 31-36, அகம். 125 317
468. கலி. 29, 31-36
469. ஐங். 351 - 354, 357, 358
470. ஐங். 496 - 499
471. நற். 86, 367
472. நற். 89, 212, குறு. 177, அகம். 125, 317
473. நற். 164
474. குறு. 177
475. நற். 86
476. ஐங். 354
477. ஐங். 357, 499
478. ஐங். 496
479. அகம். 316
480. ஐங். 250
481. நற். 35, 131, ஐங். 294
482. நற். 131
483. ஐங். 294 : 3-5

484. குறு. 178, ஐங். 149

485. குறு. 178

486. ஐங். 149

487. நற். 26, 33, 43, 46, 48, 71, 124, 318, 325, 337, குறு. 363 ஐங். 301-310, 368, 423, 424. கலி. 3,4, 5,7,8 12, 14, 15, 18, 19, 21, 22, 25, அகம். 13, 81, 143, 161, 179, 215, 271, 307, 319, 387

488. ஐங். 423, 424.

489. நற். 124

490. நற். 26, 33, 43, 46, 48, 71, 318, 325, 337, குறு. 363, ஐங். 301 - 310, 368, கலி. 3, 4, 5, 7, 8, 12, 14, 15, 18, 19, 21, 22, 25 அகம். 13, 81, 143, 161, 179, 215, 271, 307, 319, 387.

491. நற். 48, 318, 337, கலி. 3, 4, 5, 7, 8, 12, 14, 15, 18, 19, 21, 22, 25

492. ஐங். 301-310, 368

493. ஐங். 423, 424, அகம். 81, 143

494. நற். 26, 33, 43, 71, 124, 325, குறு. 363, அகம். 13, 161, 179, 215, 271, 307, 319, 387

495. நற். 46

496. நற். 26

497. நற். 43

498. நற். 46

499. நற். 48

500. நற். 71

501. நற். 337

502. ஐங். 301-310

503. ஐங். 424

504. கலி. 3

505. கலி. 4,5,7,19, அகம். 143

506. கலி. 7

507. கலி. 8

508. கலி. 12

509. கலி. 14

510. கலி.18: 8-12

511. அகம். 13

512. அகம். 215, 271

513. நற். 229, 266

514. நற். 229

515. நற். 266

516. ஐங். 500, அகம். 104, 184, 314

517. மேற்படி

518. நற். 30, 230, 269, 330, 360, குறு. 127, 139, 196, 238, 258, 295, 354, 384, ஐங். 51, 54, 75, 76, 84, 158, 159, அகம். 46, 96, 116, 176, 226, 246, 256, 296, 306, 326, 346, 366, 386

519. நற். 30, 230, 330, 360 குறு. மேற்படி, ஐங். 51. 54, 75, 76, 84, அகம். மேற்படி

520. ஐங். 158, 159

521. நற். 269

522. நற். 360, குறு. 127, 384, ஐங். 51, 54, 75, 76, 84

523. குறு. 258, அகம். 116, 226, 246, 326, 386

524. அகம். 96, 176, நற். 230, 330, ஐங். 158, 159.

525. நற். 30 269, குறு. 139, 196, 238, 295, 354, அகம். 46, 256, 296, 306, 346, 366

526. நற். 30

527. நற். 230

528. நற். 269,

529. நற். 330

530. நற். 360

531. குறு. 127

532. குறு. 139

533. குறு. 196

534. குறு. 238

535. குறு. 354

536. ஐங். 54

537. ஐங். 75, 76

538. ஐங். 84

539. அகம். 46:15-16

540. அகம். 176

541. அகம். 226:1-2

542. அகம். 256:8

543. அகம். 306

544. அகம். 386

545. நற். 210, 270, ஐங். 100, 143, குறு. 9, 10, 309 கலி. 70

546. குறு. 309

547. நற். 210 ஐங். 100 கலி. 70

548. நற். 270, ஐங். 143, குறு. 9,10

549. நற். 210

550. குறு. 9

551. குறு. 10

552. குறு. 309 : 7-8

553. ஐங். 1-10, 44-46, 50, 52, 55, 56, 57, 58, 59, 98, 240.

554. ஐங். 1-10, 44-46, 50, 52, 55-59, 98.

555. ஐங். 240

556. ஐங். 1

557. ஐங். 2

558. ஐங். 3

559. ஐங். 4

560. ஐங். 5

561. ஐங். 6

562. ஐங். 7, 10

563. ஐங். 8

564. ஐங். 9

565. ஐங். 44

566. ஐங். 46

567. ஐங். 98

568. ஐங். 104, 208

569. ஐங். 208

570. ஐங். 104

571. நற். 127, 167, 291, 380, குறு. 85, 359, ஐங். 471, 472, அகம். 50

572. நற். 380

573. நற். 291, 127

574. குறு. 85, 359

575. ஐங். 471, 472

576. நற். 167
577. அகம். 50
578. நற். 127
579. நற். 167
580. நற். 291 அகம். 50
581. நற். 380
582. குறு. 85
583. குறு. 359
584. ஐங். 471
585. ஐங். 472
586. நற். 170, 310
587. நற். 170
588. நற். 310
589. குறு. 61, ஐங். 16, 153, 156.
590. குறு. 61
591. ஐங். 16
592. ஐங். 153
593. ஐங். 156
594. குறு. 45
595. குறு. 277
596. நற். 200
597. நற். 180
598. நற். 361
599. நற். 40

# 6. நற்றாய், செவிலித்தாய் கூற்றுவழி உறவுகள்

# 6. நற்றாய், செவிலித்தாய் கூற்றுவழி உறவுகள்

6.0 மனித வாழ்வு பல்வேறு உறவுகளால் பின்னிப் பிணைக்கப் பெற்றுள்ளது. அவ்வுறவுகளில் முறைப் பெயர் சுட்டிய உறவாகக் கொள்ளப்படுவது தாய் உறவு. அதிலும் குறிப்பாக, மனித உயிர் மண்ணோடு உறவு கொள்ள வழியாக அமைகின்ற முதன்மையும் முக்கியமும் கொண்ட உறவு தாய் உறவு ஆகும். இந்தத் தாய் உறவின் வழியாக மனிதன் பிற உறவுகளைத் தெரிந்து கொள்கிறான். வரலாற்றுக்கு முற்பட்ட பண்டைய நமது மனித சமுதாய அமைப்பு தாய்வழிச் சமுதாயமாகவே அமைந்திருந்தது.

குறிப்பாக மனிதப் பிறப்பிற்குக் காரணமான தந்தை பற்றிய உறவும் இத்தாய் உறவின் மூலமாக அறியப்படுகிறது. இக்கருத்தை உள்ளடக்கியே 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்', 'தாயிற் சிறந்ததொரு கோயிலும் இல்லை'[1] என்னும் முன்னோர் வாக்குகள் எழுந்தன. எல்லாவற்றிற்கும் மேலாக, இவ்வுலகைப் படைத்ததாகக் கருதப்படுகின்ற இறைவனைப் பற்றிய உணர்வு அறியப்படுவதும் இத்தாய் வழியே ஆகும். அதனால்தான் 'தாய், தந்தை, ஆசிரியன், தெய்வம்' (மாதா, பிதா, குரு, தெய்வம்) என்ற வழிபாட்டு வரிசைமுறை உருவாயிற்று எனலாம். அத்தகையத் தாயை நாம் வணங்கிப் போற்ற வேண்டும் என்பதை இன்றும் வலியுறுத்துகிறோம்.

## 6.0.1 தாய்மையே உலக உறவு

தாய்மைக்குக் காரணமான மக்கட் செல்வப் பிறப்பால் கொள்ளும் இன்ப மேலீட்டை 'ஈன்ற பொழுதில் பெரிதுவக்கும்'[2] எனும் குறள் மொழி உணர்த்தும். உலகத்தின் தலைமை உறவான தாய் தன்னையே தியாகம் செய்து தன் மக்கட் செல்வத்தை வளர்க்கும் திறத்தையும், அத்தாயை இச்சமுதாயம் போற்ற வேண்டிய கடமையையும் நம் பண்டைத் தமிழ் இலக்கியங்கள் பலவாறு விரித்துரைக்கின்றன.

சங்க அக இலக்கியங்கள் நற்றாய் ஈனும் ஆண், பெண் ஆகிய இருபால் குழவியினருள் தாய்க்கும் மகளுக்கும் உள்ள உறவு நிலை பற்றிய செய்திகளையே பெரிதும் பேசுகின்றன.

பெண் குழந்தையைப் பேணி வளர்த்து ஆளாக்குவதில் தந்தையினும் தாய்க்கே முக்கியப் பொறுப்பும் கவனமும் இருப்பதை இக்காலத்தும் காண்கிறோம். இவ்வுணர்வு இற்றை நாளினும் சங்க காலத்தில் மேலோங்கி இருந்த காரணத்தால் நற்றாயின் மகளாகிய தலைவியைப் பற்றிய செய்திகளே சங்க இலக்கியத்தில் பெரிதும் காணப்படுகின்றன.

மேலும் நற்றாயும் செவிலித்தாயும், தலைவியிடமும், தோழியிடமும், தம் இல்லத்தாரிடமும், தலைவனிடமும், பிற அயலாரிடமும் கொண்ட உறவு நிலை பற்றிய செய்திகளைக் காணலாம்.

சங்க காலத்தில் பிள்ளையில்லாதாரை வறுமையாளராகக் கூறியுள்ளனர். குறிப்பாகப் பெண் பிள்ளை இல்லாமையை வறுமையெனக் கூறியுள்ளதாக எண்ணத் தோன்றுகிறது. இக்காலத்தும் முதல் பிள்ளைப் பேறு பெண் குழந்தையாக இருப்பின் அதைத் திருமகள் பிறப்பாக எண்ணிப் போற்றும் தமிழ்ப் பண்பாளர் வாழ்வியலையும் காண இயல்கின்றது.

நீண்ட காலம் பிள்ளைப் பேறின்றி இருந்தோர்க்குப் பெருஞ் செல்வமாய்ப் பிறந்தவள் மகள் என்பதை,

*"..................................................... இவளே*
*பல்கோட் பலவின் பயிர்ப்பு உறுதீம்கனி*
*அல்கு அறைக் கொண்டு ஊண் அமலைச் சிறுகுடி*
*நல்கூர்ந்தார் செல்வ மகள்"* [3]

எனவும்,

*"................................................ கொடிஇயல்*
*பல்கலை சில்பூங் கலிங்கத்தள் ஈங்கு இது ஓர்*
*நல்கூர்ந்தார் செல்வ மகள்"* [4]

எனவும் கலித்தொகை கூறுவதைக் காணலாம்.

மகளைத் தவமிருந்து பெற்றதாகக் கூறும் ஐங்குறுநூறு,

*"குன்றக் குறவன் கடவுள் பேணி*
*இரந்தனன் பெற்ற எல்வளைக் குறுமகள்"* [5]

எனக் கூறுகிறது.

மேலும் பெண் வளர்ப்பு பெருமையுடையது என்பதை,

*"அன்னை காக்கும் தொல் நலம்"* [6]
*"யாய் மறப்பு அறியா மடந்தை"* [7]
*"யாய் நயந்தெடுத்த ஆய்நலம்"* [8]

என்னும் சங்கப்புலவர் கூற்றுகள் மெய்ப்பிக்கின்றன.

### 6.0.2 தாய்-சொற்பொருள் விளக்கம்

குழந்தையை ஈனும் தாய் 'நற்றாய்' என்று அழைக்கப்படுகிறாள். அக்குழந்தையை வளர்க்கும் பல தாயரைப் பற்றிய சான்றோர் கருத்துகள் இங்குக் கருதத்தக்கன.

தாயரைப் பற்றிக் குறிப்பிடுகின்ற அபிதான சிந்தாமணி,

''பாராட்டும் தாய், ஊட்டும் தாய், முலைத்தாய், கைத்தாய், செவிலித்தாய் அன்றியும் அரசன்தேவி, குருவின்தேவி, அண்ணன் தேவி, தன் தேவியை ஈன்றாள், தன்னை ஈன்றாள்'' [9] என்னும் பத்துப் பெயர்களைக் கூறுகிறது.

நா. கதிரைவேற் பிள்ளையின் தமிழ் மொழி அகராதி,

''அண்ணன் தேவி, அரசன் தேவி, ஊட்டுந்தாய், குருவின் தேவி, கைத்தாய், செவிலித்தாய், தன் தேவியை ஈன்றாள், நற்றாய், பாராட்டும் தாய், மாதாவின் சகோதரி'' [10] என்று கூறுகின்றது.

கழகத் தமிழகராதி,

''அண்ணன் தேவி, அரசன் தேவி, ஊட்டுந்தாய், குருவின் தேவி, கைத்தாய், செவிலித்தாய், தன் தேவியை ஈன்ற தாய், பாராட்டுந்தாய், தாயுடன் பிறந்தாள், முதல், முதல்தரம், முதன்மை'' [11] எனக் குறிப்பிடுகின்றது.

தமிழ்க் கலைக்களஞ்சியம், 'ஐவகைத்தாயத்தாருள் ஒருத்தி, தாய் போலக் கருதப்படும் அரசன் தேவி, குருவின் தேவி, அண்ணன் தேவி, மகட்கொடுத்தவள் இவர்களுள் ஒருத்தி'[12] எனப் பொருள் தருகின்றது.

***'தாயர் ஐவகைய ரென்பர் பெரியர். ஐவரும் முலைத்தாய், ஊட்டுந்தாய், கைத்தாய், பாராட்டும் தாய், செவிலித்தாய் ஆகிய இவரேயாம். வேறுவகை யாலும் ஐந்தாயர் கூறுவதுண்டு. அன்னார் தன்னை ஈன்றாள், தன் தேவியை ஈன்றாள், அண்ணன் தேவி, குருவின் தேவி, அரசன் தேவி ஆவர்''*** [13]

என்று பூர்ணலிங்கம் பிள்ளை கூறுகிறார்.

### 6.0.3 தொல்காப்பியம் குறிப்பிடும் தாய்

தொல்காப்பியர் நற்றாயையும் செவிலித்தாயையும் குறிப்பிடுகிறார். தலைவியை ஈன்றெடுப்பவள் நற்றாய்; அவளைப் பேணி வளர்ப்பவள் செவிலித்தாய். மகள் நலத்தில் நற்றாய் கொண்டுள்ள ஆர்வம் செவிலித்தாய் மாட்டும் நிறைவாகக் காணப்படுகிறது. அதை உணர்த்தும் தொல்காப்பியர்,

> *''ஆய்பெருஞ் சிறப்பின் அருமறை கிளப்பின்*
> *தாயெனப் படுவாள் செவிலி யாகும்''* [14]

என்று குறிப்பிடுகிறார்.

நற்றாயும் செவிலித்தாயும் உணர்வு ஒருமைப்பாடுடையவர் என்பதை அவர்தம் செயற்பாடுகளில் அறியலாம். இதை,

*"தாய்க்கும் வரையார் உணர்வுடம் படினே"* [15]

என்கிறார் தொல்காப்பியர்.

நற்றாய், தலைவியாக இருந்த காலத்து அவளுக்குத் தோழியாக இருந்தவளே பிற்காலத்துச் செவிலித் தாயாகிறாள். நற்றாயின் மகளாகிய தலைவியின் குழந்தைப் பருவக் காலத்தும் சிறப்பாக அவளின் இளமைப் பருவக் காலத்தும் அவளைப் போற்றி வளர்ப்பவள் செவிலித்தாய் ஆகிறாள்.

இளம்பூரணர், 'ஏமப்பேரூர்ச் சேரியும் சுரத்தும் தேடிச் செல்லும் தாயராகக் கைத்தாயர்' என்பவரைக் குறிப்பிடுகிறார்.[16]

### 6.0.4 நற்றாய் பெயர்கள்

'நற்றாய்' என்னும் சொல்லுக்குப் பொருள் தரும் தமிழ்க் கலைக்களஞ்சியம்,

'நன்மை+தாய்' (One's Own Mother) பெற்றதாய் எனக் கூறுவதைக் காணலாம்.[17]

அன்னை, ஆய், ஞாய், யாய், தாய், ஈன்றாள், ஈன்றவள். ஈன்றோள், ஈன்பிளவு, பயந்தோள் என்பன தாயைக் குறிக்கும் பெயர்களாக இருந்துள்ளன.[18]

'அன்னை' என்ற சொல்லின் திரிபாக 'அஞ்ஞை' வழங்கப்பட்டது.[19]

'அம்மா' என்று தாயைக் குறிக்கத் தற்காலத்தில் வழங்கப்படும் சொல் அக்காலத்தில் 'அம்ம' என்று வழங்கப்பட்டுள்ளது. தொல்காப்பியர் இச்சொல் மாற்றம் பற்றிக் கூறும்போது,

*"அம்ம என்னும் அசைச்சொல் நீட்டம்*
*அம்முறைப் பெயரொடு சிவணா தாயினும்*
*விளியொடு கொள்ப தெளியு மோரே"* [20]

என்கிறார். 'அம்ம' எனும் அசைச்சொல் நீட்டம் பெற்று விளிப் பெயராகிப் பின்னர் முறைப்பெயராக மாற்றம் அடைந்துள்ளது என்பது தொல்காப்பியர் கருத்தாகும்.

"குழந்தை பெற்றவள் 'ஈன்றாள்' எனப்படுதல் போலப் பெறாதவள் 'ஈனாள்' எனப்பட்டாள்". "பெற்றவன், பெற்றவள்" என்ற சொல்லாட்சிகளும் பிற்கால வழக்காகும். திருமணத்தில் மனைவியைப் பெறும் கணவனே 'பெற்றோன்' என்று சங்க காலத்தில் குறிப்பிடப்படுவதை,

*'பெற்றோன் பெட்கும் பிணையை ஆக'*

என்ற அகநானூற்று வரி வாயிலாக அறியலாம்.

'ஆய் என்பது தாய்த்தன்மை கொண்ட அரசனுக்கும் வழங்கி இருந்தமையை 'ஆய் அண்டிரன்', 'ஆய் எயினன்' என்ற பெயர்களால் அறியலாம். இச்சொல் பிற்காலத்தில் ஆயா, ஆயாள், ஆயி, ஆய்ச்சி, ஆச்சி, ஆச்சாள், ஆத்தாள் எனப் பலவாறு பிரிந்திருக்கலாம்''.[21]

இலக்கியத்தில் 'மகடூஉ'[22] என்ற சொல் சில இடங்களில் மகளைப் பெற்ற தாயைக் குறிப்பிடுவதுடன், 'நன்னராட்டி'[23] என்ற பாராட்டுச் சொல்லை வழங்கி இருப்பதையும் காணலாம்.

தாயை, அன்னை, அம்மை, அவ்வை, அம்மாள், அம்மாய், அம்மாச்சி, அம்மன் என்றும் வட்டார மொழிகளில் ஆய், ஆயி, ஈன்றாள், சனனி, தல்லி, தௌவை, மாதா[24] என்றும் தற்காலத்தில் அழைக்கின்றனர். மேற்கூறியவை எல்லாம் குழந்தை பிறந்த பின் தாயை அழைக்கும் சொற்களாக அமைய குழந்தை வயிற்றில் உள்ள தாயைப் 'பிள்ளைத்தாச்சி' என்ற சொல்லால் அழைப்பதனையும் நடைமுறை வாழ்வில் காணலாம்.

### 6.0.5 செவிலித்தாய்

செவிலித்தாய், ஈனாத்தாய், காவற் பெண்டு என்ற பெயர்கள் வளர்ப்புத் தாயைக் குறிப்பன.[25] செவிலித்தாய் (Foster-Mother) ஐவகைத் தாயருள் வளர்ப்புத் தாய்[26] என்று தமிழ்க் கலைக் களஞ்சியம் கூறுகிறது. செவி இயலி என்று பொருள் கொண்டு, செவி வழியாகப் பெற்ற அறிவினைக் கொண்டு தலைவியைக் குழந்தையிலிருந்து வளர்த்துப் பாதுகாத்துக் கொண்டு வருபவர் என்கிறார் வாசுகி அம்மையார்.[27]

தலைவியின் தோழியர், கற்பு வாழ்வில் செவிலியர் ஆயினர். அவர்கள் எண்ணிக்கையில் பலராக இருந்தனர். அவர்களுள் தலைவியின் உயிர்த்தோழியே பிற்காலத்தில் செவிலித் தாயாகிறாள்.[28] தோழி தலைவியைத் தோழி என அழைப்பது போலவே செவிலித்தாயும் நற்றாயைத் தோழி என்று அழைக்கிறாள்.[29]

> ''*நற்றாயின் உடல்நலம் பாலூட்டும் காலத்தில் தாய்ப்பாலைத் தவிர்க்க வேண்டிய தனிக்காரணம், குழந்தையைத் தாயிடமிருந்து பிரிக்க வேண்டிய சூழ்நிலை, செல்வச் செழிப்பு இவற்றில் ஒன்றின் காரணமாய் வளர்ப்புத் தாய் முறை ஏற்பட்டது.* **(S. Singaravelu, Social Life of Tamils the Classical Period, Pa. 184)** *மிகப் பழங்காலத்தில் வளர்ப்புத் தாய், தாதி என்ற இருவரையும் செவிலி என்ற ஒரே சொல்லால் சுட்டினர்; ஆனால் காலப் போக்கில் குழந்தைக்கும் வளர்ப்புத் தாய்க்கும் இடையில் இயற்கையான பாசம் வேரூன்றி உறுதிப்பட்டதனால் இலக்கண நூலோர், 'செவிலி' என்ற*

*சொல்லுடன் 'தாய்' என்பதை இணைத்துக் குடும்ப உறவுத் தொடரில் மற்றுமோர் சொல்லை உருவாக்கினர். (மேற்கண்ட நூல் பக்.188). அவள் ஈனாத் தாயார் (அகம். 105:6) என்று சிறப்பிக்கப்படுகிறாள்.*[30]

*''சங்க இலக்கியத்தில் தலைவியோ தோழியோ பெற்றவளை நற்றாய் என்றோ வளர்த்தவளைச் செவிலி என்றோ சுட்டவில்லை. உரையாசிரியர்கள்தாம் இவ்வாறு பாகுபடுத்திக் கூறுகின்றனர். செவிலி தலைவியின் குடும்பத்துடன் மிகவும் நெருக்கமாகத் தொடர்பு கொண்டவள் அவள் பணத்திற்காக வேலை செய்யும் தாழ்ந்த பணிமகள் போலன்றிக் குடும்பத்தில் மேம்பாடான நிலையில் இருந்தாள்; தலைவியை வளர்ப்பதில் அன்புணர்வும் சிறந்த கடமையுணர்ச்சியும் காட்டினாள்''* [31]

*தலைவியின் உடல் வளர்ப்பு நிலையில் மட்டுமின்றி அவளது புதிய குடும்ப அமைப்பிலும் செவிலித்தாயும் அவளது மகளான தோழியும் முக்கிய பங்கேற்றனர்* [32]

என்கிறார் எஸ். சிங்காரவேலு.

ஆனால் ஈ.சோ. பாஸ்கரதாஸ்,

*''தலைவியின் குழந்தைப் பருவத்தில் அவள் உடலைப் போற்றி வளர்ப்பவள் செவிலி; தலைவியின் இளமைப் பருவத்தில் அவள் உள்ளத்தைப் போற்றிக் காப்பவள் தோழி''* [33]

என்கிறார்.

செவிலிக்குரிய கடமையைப் பற்றிக் குறிப்பிடுமிடத்து எஸ். சிங்காரவேலு,

*''குழந்தையை ஊட்டி வளர்த்தல், ஓம்புதல், குடும்பத்தாரின் ஓம்புதலுடன் அவள் விரும்பும் தலைவனை மணந்து கொள்ளும் வரை அவளுக்குக் கற்பித்தல் என்பவற்றுடன் தலைவி மணப்பருவம் உற்றபோது செவிலித் தாயின் பொறுப்பு பன் மடங்காகி விடுகிறது. தலைவியின் ஒழுகலாறு, தோழியின் நடக்கை, இவர்கள் தலைவனுடன் பழகுதல் முதலியன குடும்ப நிலையைப் பாதிப்பதால், அவற்றைச் செவிலித்தாய் கூர்ந்து கவனிக்கிறாள். இவை செவிலித்தாயின் கடமைகள் ஆகின்றன''* [34]

என்கிறார்.

> *"இத்தகு கடமைகளால் அவள் நன்றாய்க்குச் சமமான நிலையைப் பெற்றிருக்கிறாள்.[35] எனவே, தலைவிக்கு எவ்வளவு நட்புரிமை உடையவளோ, அதே வகையில் நற்றாய்க்குச் செவிலி தோழமை உடையவள்"* [36]

என்கிறார் கி.வா.ஜ.

நற்றாய் நிலையிலிருந்து செவிலி செயற்படுவதால் தொல்காப்பியம், தலைவிக்குள்ள சிறப்புகள் தோழிக்குத் தரப்படுவதைப் போல நற்றாய்க்குரிய சிறப்புகள் செவிலிக்கு வழங்கப்படுகின்றன[37] என்று கூறுகிறது.

### 6.0.6 நற்றாய், செவிலித்தாய் பகுப்பு

நற்றாய், செவிலித்தாய் ஆகிய இருவரும் மகளிடம் கொண்ட உறவைப் பிரித்தறிவதற்குத் தொல்காப்பியர் இலக்கணம் இவ்வாய்விற்கு அடிப்படையாகக் கொள்ளப்படுகின்றது. மேலும் உரையாசிரியர் தம் துறை விளக்கக் குறிப்பில் சுட்டப்படுவதும் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது.

தொல்காப்பியர்,

> *"கிழவன் தன்னொடுங் கிழத்தி தன்னொடும்*
> *நற்றாய் கூறல் முற்றத் தோன்றாது"* [38]

என்று கூறுவதிலிருந்து நற்றாய், தலைவன், தலைவி ஆகிய இருவரிடமும் நேராகக் கூற்று நிகழ்த்தாமை புலப்படுகிறது. மேலும் செவிலி கூற்று நிகழுமிடங்களாக,

> *"களவல ராயினுங் காமமெய் படுப்பினும்*
> *அளவுமிகத் தோன்றினுந் தலைப்பெய்து காணினுங்*
> *கட்டினுங் கழங்கினும் வெறியென இருவரும்*
> *ஒட்டிய திறத்தாற் செய்திக் கண்ணும்*
> *ஆடிய சென்றுழி அழிவுதலை வரினுங்*
> *காதல் கைம்மிகக் கனவின் அரற்றலுங்*
> *தோழியை வினாவலும் தெய்வம் வாழ்த்தலும்*
> *போக்குடன் அறிந்தபின் தோழியொடு கெழீஇக்*
> *கற்பின் ஆக்கத்து நிற்றற் கண்ணும்*
> *பிரிவின் எச்சத்து மகள்நெஞ்சு வலிப்பினும்*
> *இருபாற் குடிப்பொருள் இயல்பின் கண்ணும்*
> *இன்ன வகையிற் பதின்மூன்று கிளவியொடு*
> *அன்னவை பிறவுஞ் செவிலி மேன"* [39]

எனக் கூறுகிறார்.

அன்னவை பிறவும் என்றதனான்,

> *''நாற்றம் பெற்று நிலைப்புக் காண்டல்*
> *உண்டியிற் குறைதல் உடம்புநனி சுருங்கல்*
> *கண்துயில் மறுத்தல் கோலஞ்செய் யாமை''* [40]

முதலாயின கொள்க என்று இளம்பூரணர் உரைவழி அறியப்பட்டவையுமாகிய அனைத்தும் செவிலிக்குரியன.

''அக்கூற்றுச் செவிலி தானே கூறப்படுவனவுந், தலைவியுந் தோழியுங் கொண்டு கூற்றாகக் கூறப்படுவனவுமென இருவகையாம்; இக்கூறப்பட்ட பதின்மூன்று கிளவியும் அவை போல்வன பிறவுஞ் செவிலி தானே கூறப்படுவனவுந் தலைவியுந் தோழியும் அவள் கூற்றாய்க் கொண்டெடுத்து மொழியப்படுவனவுமாய்ச் செவிலிக்குரியவாமென்றவாறு, 'இன்னவகை' யென்றார், தன் கூற்றுங் கொண்டு கூற்றுமாய் நிகழுமென்றற்கு' [41] என்கிறார் நச்சினார்க்கினியர்.

நற்றாய் கூற்று நிகழும் இடங்களைக் கூறும் தொல்காப்பியம்,

> *''தாய்க்கும் வரையார் உணர்வுடம் படினே''* [42]

என்று வரையறுக்கிறது.

இந்நூற்பாவிற்கு 'அங்ஙனஞ் செவிலி உணர்ந்தாங்கே நற்றாயும் மதியுடம்படில்; நற்றாய்க்கும் முற்கூறிய பதின்மூன்று கிளவியும் பிறவுமாகக் கொண்டு எடுத்து மொழிதல் வரையார். ''தாய்க்கும் என்றார், இவட்கு அத்துணை பயின்றுவாரா என்றற்கு அது நற்றாய் இல்லறம் நிகழ்த்துங் கருத்து வேறு உடைமையின் உற்று நோக்காள்; செவிலியே தலைவியை உற்று நோக்கி ஒழுகுவாளாதலின்[43] என்று நச்சினார்க்கினியர் கூறும் உரையிலிருந்து செவிலிக்குக் கூற்று நிகழும் இடங்களான பதின்மூன்றும் நற்றாய்க்கும் உரியதாகத் தொல்காப்பியர் கூறினாலும், சில இல்லறக் கடமைகளால் செவிலித்தாயே தலைவியை மிகுதியாக உற்று நோக்குவாள் என்பது புலப்படுகிறது.

### 6.1.0 நற்றாய் கூற்று வழி உறவுகள்

சங்க இலக்கியத்தில் நற்றாய் கூற்றுகளாக நற்றிணையில் 9 பாடல்களும், ஐங்குறு நூற்றில் 13 பாடல்களும், அகநானூற்றில் 8 பாடல்களுமாக 30 பாடல்கள் உள்ளன.[44]

குறுந்தொகையிலும் கலித்தொகையிலும் இக்கூற்றுகள் காணப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. நற்றாய் கூற்றுகளாக அமைந்துள்ள பாடல்கள் யாவும் பாலைத் திணைக்கு உரியவை ஆகும்.[45]

நற்றாய் கூற்று நிலையில் ஓதலாந்தையார் 13 பாடல்களும்,[46] கயமனார் 6 பாடல்களும்,[47] மாமூலனார், குடவாயிற் கீரத்தனார் முறையே 2 பாடல்களும்,[48] பூதனார், இனிசந்த நாகனார், கண்ணகாரன் கொற்றனார், தாயங் கண்ணனார் ஆகியோர் முறையே ஒவ்வொரு பாடலும்[49] பாடியுள்ளனர் என்பதும் பாடினோர் பெயர் தெரியாப் பாடல்கள் 3 உள்ளன[50] என்பதும் அறியத்தக்கதாகும்.

இவ்வாறு சங்க இலக்கிய நூல்களில் காணப்படும் நற்றாய் கூற்றுப் பாடல்கள் கீழ்க்காணும் ஆறு துறையின் கண் இடம் பெற்று உள்ளன.

### 6.1.0.1 மகட் போக்கிய தாய் கூற்று

இத்துறை சார்ந்தவையாக நற்றிணையில் 2 பாடல்களும், ஐங்குறுநூற்றில் 9 பாடல்களும், அகநானூற்றில் 7 பாடல்களும் என 18 பாடல்கள்[51] உள்ளன.

### 6.1.0.2 தாய் மனை மருண்டு சொல்லியது

இத்துறைப் பாடல்களாக நற்றிணையில் 6 பாடல்கள் மட்டும் உள. பிற சங்க இலக்கிய நூல்களில் இத்துறைப் பாடல்கள் இல்லை.[52]

### 6.1.0.3 மனை மருண்டு தலைவியின் தோழிக்கு நற்றாய் சொல்லியது

இத்துறையில் கயமனாரின் நற்றிணைப் பாடல் ஒன்று மட்டும் காணப்படுகின்றது.[53] பிற சங்க இலக்கிய நூல்களில் இத்துறைப் பாடல் பிறிதொன்றும் காணப்படவில்லை.

### 6.1.0.4 தெருட்டும் அயலிலாட்டியர்க்கு நற்றாய் உரைத்தது

இத்துறையில் மாமூலனாரின் அகநானூற்றுப் பாடல் ஒன்றினைத்[54] தவிர பிற சங்க இலக்கிய நூல்களில் இத்துறைப் பாடல் ஏதும் இல்லை.

### 6.1.0.5 செவிலி ஆற்றாமை கண்டு நற்றாய் அவளுக்குச் சொல்லியது

இத்துறையில் ஓதலாந்தையாரின் ஐங்குறுநூற்றுப் பாடல் ஒன்று மட்டும்[55] காணப்படுகிறது.

### 6.1.0.6 உடன்போய் மீண்டவிடத்து நற்றாய் கூறியது

இத்துறையில் ஓதலாந்தையாரின் ஐங்குறுநூற்றுப் பாடல்கள் மூன்று காணப்படுகின்றன.[56]

இத்துறைகள் சார்ந்த நற்றாயின் கூற்றுகள் யாவும் சங்க இலக்கியத்தில் தலைவி உடன்போக்கு மேற்கொண்ட இடத்தில் மட்டுமே நிகழ்கின்றன என்பதும் பிற சூழ்நிலைகளில் நற்றாயின் கூற்றுகள் நிகழவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கன. ஆனால் நற்றாய் தமருக்கு அறத்தொடு நிற்பதாகத் தோழியே தலைவியிடம் கூறுகிறாள்.

'உடன்போக்கு' ஒழுக்கத்தைப் பற்றிக் குறிப்பிடும் வ.சுப. மாணிக்கம்,

*''படிகடவா இளமங்கை பிறந்த வீட்டைத் துறந்து பெற்றோரை மறந்து முன்பின் அறியா ஆடவனைக் காதற் கொழுநன் என நம்பிக் கரடுமுரடான வழியில் உடன்போக்குத் துணிந்தபோது, அகவிலக்கியம் புதினம் போலும் சாயலையும் விறுவிறுப்பையும் பெறுகின்றது''* [57]

என உரைக்கிறார்.

சங்க காலத் தலைவன் தன்னால் காதலிக்கப்படும் தலைவியின் தமரிடத்துத் தானே பெண் கேட்டு அவர்கள் பெண்தர மறுத்துப் பின்னர் உடன்பட்டுத் திருமணம் நிகழும். அவ்வாறு தலைவன் பெண்கேட்டு அவளின் தமர் மறுத்த போது இருவரும் உடன்போக்கை மேற்கொண்டு, அதன் பின்னர் திருமணம் நிகழும்.

தொல்காப்பியர், உடன்போக்கு நிகழ்வின்போது நற்றாய் கூற்று நிகழிடங்களாகக் கூறுவன இங்குக் கருதத்தக்கன.

*''தன்னும் அவனும் அவளுஞ் சுட்டி*
*மன்னும் நிமித்தம் மொழிப்பொருள் தெய்வம்*
*நன்மை தீமை அச்சஞ் சார்தலென்று*
*அன்ன பிறவும் அவற்றொடு தொகைஇ*
*முன்னிய கால மூன்றொடு விளக்கித்*
*தோழி தேஎத்துங் கண்டோர் பாங்கினும்*
*போகிய திறத்து நற்றாய் புலம்பலும்*
*ஆகிய கிளவியு மவ்வழி உரிய''* [58]

என்ற தொல்காப்பிய நூற்பாவிற்கு உரைகாணும் இளம்பூரணர்,

*''நற்றாய் தலைவி தலைவனுடன் சென்ற காலை தன்னையும் அவனையும் அவளையும் சுட்டி, நிலையான நிமித்தம், மொழிப்பொருள், தெய்வம், தனக்கும் அவர்களுக்கும் உள்ள நன்மை, தீமை, அச்சம், சார்தல் என்று அத்தன்மையான பிறவும் அவற்றுடன் கூட்டி முன்பு இவ்வாறு இருந்தாள். இன்று இவ்வாறு உள்ளாள்; இனி என் ஆவாளோ என்று மூன்று காலத்தையும்*

*ஒன்றாக எண்ணியவிடத்தும், தோழி இடத்தும் கண்டோர் இடத்தும் புலம்புவதும் அவ்வழி நிகழும் கூற்றுகளாகும்.''* [59]

என்கிறார்.

இவ்வியலில் நற்றாயின் கூற்றுகள் செவிலித்தாய், தோழி, பிறர், தன்னெஞ்சு ஆகியோருடன் நிகழ்த்தும் முறைமையில் ஆராய்ச்சிக்கு உட்படுத்தப்படுகின்றன.

### 6.1.1 செவிலியிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

சங்க இலக்கிய நற்றாயின் தோழியே செவிலி ஆவாள். நற்றாயின் மகளாகிய தலைவியின் தோழியைப் பெற்றவளும் இச்செவிலி என்பதும் குறிப்பிடத்தக்கது. இவ்வுறவு ஒரு குடும்பப் பெண்டிர் அடுத்தடுத்த தலைமுறையிலும் தலைவியராய் விளங்க, மற்றொரு குடும்பப் பெண்டிர் தோழியராய் விளங்கி வந்தமையும் அறிய முடிகின்றது. இவ்வேற்றுமை அப்பெண்டிர்தம் குடிப்பெருமை பின்னணியில் அமைந்திருக்கலாம் என எண்ணத் தோன்றுகிறது. இருப்பினும் தலைவியராய் வரும் குடும்பப் பெண்டிர், தோழியராய் அமையும் குடும்பப் பெண்டிரைத் தமக்கிணையாகப் போற்றி அவ்வுறவைப் பெருமைக் குரியதாக மேம்படுத்திக் கொண்ட பண்பாட்டு நிலைப்பாட்டை மறுத்தற்கில்லை.

தலைவிமேல் தான் கொண்டுள்ள விருப்பம் அவள் தலைவனுடன் காடுகளைக் கடந்து உடன்போக்கு சென்றதால் தனக்கு வருத்தம் தருவதாக நற்றாய் கூறுகிறாள். அவள் தன் மகளைச் செவிலித்தாயின் மகளாகக் கூறுகிறாள்.[60] இது நற்றாய் தன் மகள் மீது தான் கொண்டுள்ள அன்புக்கு இணையாகச் செவிலித்தாயும் அன்பு கொண்டுள்ளமையைக் காட்டுவது மட்டுமல்லாமல் அதை நற்றாய் உணர்ந்துள்ளமையையும் காட்டுகின்றது. செவிலியின் ஆற்றாமையை நற்றாய் போக்க முயலும் முயற்சியே இந்நற்றாய் கூற்றாகும்.

தலைவன் தலைவியரிடையே நிகழும் களவுப்புணர்ச்சிக் காலத்து அவர்தம் உடன்போக்கின்போது நற்றாய்க்கும் செவிலிக்கும் ஏற்படும் துன்ப உணர்வில் மட்டுமே இவர்தம் உறவின் உறுதிப்பாடு வெளிப்படுகின்றது. கற்புப் புணர்ச்சிக் காலத்து தலைவி தலைவனுடன் கூடி வாழும் மனையற மாட்சிமை கண்ட செவிலி நற்றாயிடம், 'அறிவும் ஒழுக்கமும் யாண்டுணர்ந்தனள் கொல்''[61] எனக் கூறிப் பெருமிதம் அடைகின்றாள்.

இதனைத் 'தன்னும் அவனும் அவளும் சுட்டி' (தொல்-அகத்-௩௯) எனவரும் நூற்பாவின்கண் ''நன்மை'' என்றதனால் நன்மை குறித்து நற்றாய் புலம்பினள் என்க' எனவரும் உரையாசிரியர் கூற்றால் இது செவிலிக் கூற்றாவதோடு நற்றாய் கூற்றாகவும் கொள்ள இடமளிக்கின்றது.[62]

### 6.1.2 தோழியிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

மனைமருண்டு தோழிக்குக் கூறும் நற்றாய் பாலை வழியில் சென்ற தன் மகள் பொருட்டு வருந்துவதும்[63] மகள் சென்றபோது இரங்கும் நற்றாய் மகள் பொருட்டன்றி அவளை எண்ணிக் கண்களில் நீர் வடிக்கும் தோழியின் பொருட்டு வருந்துவதும் நிகழ்கின்றன[64]. இவற்றால் நற்றாயின் உறுதியிழந்த மனநிலை புலனாகின்றது.

### 6.1.3 அயலாரிடை நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

மகள் உடன்போக்கு சென்றமைக்கு வருந்தாமல், அவளைப் பிரிந்தும் தன் உயிர் போகாமைக்கு நற்றாய் வருந்துகிறாள். புறப்புண்ணுக்கு நாணி சேரன் வடக்கிருந்தபோது பலரும் உடன் உயிர் துறந்தனர் என்னும் வரலாற்றுப் புறச் செய்தியை இவ்வகப்பொருள் நிகழ்ச்சியுடன் ஒப்பிட்டு உரைக்கிறார் புலவர் மாமூலனார்.[65]

உடன்போக்கு சென்ற தன் மகள் பொருட்டுப் பலவாறாகத் துன்புற்ற தாயை, அவள் வீட்டின் அயலாரும் அவள் துன்பத்தைக் கண்டோரும் ஆறுதல் கூறித் தேற்றுகின்றனர்.

தனக்கு ஆறுதல் கூறும் அயலாரைக் கண்ட தாய்,

> *"இனியே, தாங்குநின் அவலம் என்றிர் அதுமற்று*
> *யாங்ஙனம் ஒல்லுமோ அறிவுடை யீரே"* [66]

என்று தன்னால் மகளைப் பிரிந்த துன்பத்தை எவ்வாறு தாங்கிக் கொள்ள முடியும் என்று கேட்கின்றாள்.

மகள் பிரிவைத் தன்னால் தாங்க முடியாமைக்குக் காரணம் தனக்கு ஆறுதல் அளிப்போரெல்லாம் பல பெண்டிரை உடையோர்; ஆனால் தானோ ஒரு மகள் உடையவள் எனக் கூறுகின்றாள் தாய். உடன்போக்கினால் மகளைப் பிரிந்த நற்றாய் அயலாரிடம் தன் மகள் கட்டிய மணல் வீட்டைக் காட்டித் துன்புறுகிறாள்.[67] உடன்போக்கு சென்று மகள் திரும்பி வந்தபோது ஊரலர் கேட்டும், மகளைப் பிரிந்தும் வருந்திய தாய் என் மகளைக் காட்டுகிறேன் வாருங்கள் எனச் சுற்றத்தாரிடம் கூறுகின்றாள்.[68] உடன்போக்கைத் தன் மகள் மேற்கொள்ளினும் அவள் கற்பு ஒழுக்கத்தைக் கைக் கொண்டாள் என்ற தாயின் குடிஒழுக்கம் போற்றும் குணத்தைக் காட்டுகின்றது.

### 6.1.4 தன் நெஞ்சிடை நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

தன் மகள் உடன்போக்கு மேற்கொண்டபோது நற்றாய் தன் நெஞ்சிடம் பலவாறு கூறிப் புலம்புகிறாள். நற்றாய் தன் மகள் பெண்மைத் தன்மை நிறையப் பெற்றமையை அவளை நோக்கி அறிந்து ஐயுற்றும், அறியாமையால் வீட்டுக் காவலில் வைக்காமல்

தவறிவிட்டதாகக் கூறுகிறாள்.[69] இதனால் தலைவியின் பெண்மையைப் பாதுகாக்க வேண்டிய பெருங்கடமை தாயின் பொருட்டே என உணர்வதை அறியலாம்.

ஊரலரால் தலைவியின் களவறிந்த தான் குறிப்பால் உணர்ந்திட அதைத் தாங்கும் மனவலிமையின்றித் தலைவி உடன்போக்கு சென்றாள்.[70] உடன்போக்கு சென்றவளை எண்ணி வருந்தும் நற்றாய் தன் மகளுக்கு உடன்போக்கு உண்டாகுமாறு செய்த பழவினை காட்டுத்தீப்பட்டு அழிவதாகுக எனப் புலம்பி ஊழ்வினையைப் பழிக்குமிடத்து[71] மகள் மீது கொண்டுள்ள அன்புறவு இத்தாய்க்கு ஊழ்மீது வன்முறை எண்ணத்தை உருவாக்கியுள்ளமையைப் புலப்படுத்துகின்றது.

தன் மகள் தலைவனுடன் உடன்போக்கு சென்றமைக்கு வருந்தவில்லை. மாறாக மகளைப் பிரிந்தும் தன்னைப் பிரிந்து போகாத தன் உயிரை எண்ணியே வருந்துகிறாள்.[72] இதில் தாய், தன் மகளையே தன் உயிராகக் கருதுவதும் அவள் நீங்கிய பின் தன் உயிர் நீங்காது இருக்கிறதே என்ற அவள் ஏக்கமும் ஆற்றொணாத் துன்பமும் வெளிப்படுகின்றன.

தன்னுயிர் போகாமைக்கு வருந்துகின்ற தாய் தன் மகளின் உடன்போக்கு குறித்து ஏதிலார் கூறும் அலரைத் தான் கேட்டிருக்குமாறு தன்னைக் கொண்டு செல்லாத கூற்றுவன் இறந்தொழியட்டும்[73] எனப் பழித்துரைக்கிறாள். போகாத தன்னுயிரையும், கொண்டு செல்லாத கூற்றுவனையும் பழிக்கும் தலைவியின் தாய், தன் மகளை உடன்போக்கில் கொண்டு சென்ற தலைவனின் தாயைத் தானடையும் துன்பத்தை அடைந்து ஒழியட்டும் எனவும், தன் மகளைக் காட்டுவழி அழைத்துச் சென்ற தலைவன் தானடையும் துன்பத்தைவிட அதிகத் துன்பத்தை அடைவானாக எனவும் பழித்துப் பேசுகிறாள்.[74]

தாயர்தம் பழிப்புரை பற்றிக் கூறும் நற்றிணை உரையாசிரியர் பின்னத்தூர் நாராயணசாமி ஐயர்,

> *''இங்ஙனம் கூறியதனால் தலைவனுக்குத் தாயும் தலைவிக்குத் தாயுமாவார் ஒருவரை ஒருவர் கடிந்து கூறுதல் பண்டைக்கால முதல் தமிழ்நாட்டில் நிகழும் வழக்குப் போலும்''* [75]

என்கிறார்.

இக்காலத்துத் தலைவன் தலைவியர் பெற்றோர் சம்பந்தி என்ற உறவுப் பெயரால் அழைக்கப் பெறுகின்றனர். சங்க காலத்துத் தாயர் ஒருவரை ஒருவர் பழிக்கும் வழக்கம் இக்காலத்தும் சம்பந்தியரிடம் நின்று நிலவிவருதல் காணலாம்.

இப்பழிப்பும் தொடர்பில்லாதாரைப் பழித்தல் இல்லை. மகன், மகள் வழிப் பிறந்த உறவுத் தொடர்பால் இப்பழிப்பு நிகழ்கிறது. இது அன்புறவல்ல, மாறாக எதிர்நிலை உறவு என்றோ பகை உணர்வு உறவு என்றோ குறிப்பிடலாம்.

உடன்போக்கு சென்ற மகள் பொருட்டு இரங்கும் தாய் ‘‘வேனில் பருவத்து அனல்வீசும் கொடிய வழியில் தன் மகள் எவ்வாறு நடக்கும் வல்லமை உடையவள் ஆவாளோ[76] எனவும், ‘குரங்குகளாலும் புகுந்தறிய இயலாத அடர்ந்த காட்டைத் தன்மகள் கடந்து சென்றாள்,[77] எனவும் தலைவனிடம் சேர்ந்து மணமுடிக்கும்பொழுது காலிலணிந்திருந்த சிலம்பைக் கழற்றுதற்குச் செய்யும் விழாச் சிறப்பைத் தான் காணமுடியாமல் பிறர் கண்டு மகிழுமாறு பாலைவழிச் சென்ற மகளின் கால்கள் வருத்தம் அடைகின்றனவோ[78] எனவும் புலம்புகிறாள்.

மேலும் தலைவனின் பொய்யுரையை மெய்யுரையாய் நம்பி வேனிற்காலத்தில் சென்ற தன் மகள் அவ்வாறு செல்ல வல்லமை உடையவளோ என்னும் கருத்தை நற்றிணை, அகநானூறு, ஐங்குறுநூறு ஆகியவை உணர்த்துகின்றன.[79] தாய் குறிப்பிடும் தலைவனின் பொய்யுரை என்பது தலைவியின் உறுப்பு நலனை மிகைப்படுத்திக் கூறுவதும் உடன்போக்கு செல்லும் வழியின் கொடுமையைத் தலைவியிடம் கூறாமையும் ஆகியவையாகக் கொள்ளலாம். இத்தகு பொய்யுரையை நம்பி, மகள் சென்றாளே எனத் தாய் வருந்துகின்றாள்.

தன் மகளைப் பிரிந்த தாயின் புலம்பலைக் கூறும் கயமனார் பாடல் உரையில், ‘தந்தை செல்வத்தை வெறுத்துக் கேள்வனது செல்வத்தை விரும்பி இரவிலே சென்ற என் புதல்வி மாமி நாத்தூணார் செறிந்திருப்ப எங்ஙனம் இருக்குமோ’ என்னும் இறைச்சிப் பொருள் கூறப்பட்டுள்ளமை மகள் பொருட்டு இரங்கும் அத்தாயின் துன்ப மனநிலையைக் காட்டுகின்றது.[80]

தன் மகள் மேற்கொண்ட உடன்போக்கினால் அவளைப் பிரிந்து வருந்தும் நற்றாய் மகளின் குழந்தைப் பருவ நடத்தைகளை எண்ணிப் பார்க்கின்றாள். பொன்கலத்தில் பாலொடு தேன் கலந்த உணவை ஏந்திச் செவிலித்தாயர் ஊட்டவும் உண்ணாதவளாகிய தன் மகள் தந்தை மாளிகையிலுள்ள செல்வத்தை நினைக்காமல் தலைவனுடன் வெப்பமிகுந்த வேனிற்காலத்தில் செல்ல எவ்வாறு வலிமை உடையவள் ஆனாள்[81] தேனொடு கலந்த இனிய பாலை உண்ணாமல் விம்மி அழுதவள் தலைவன் பொய்ம்மொழியை நம்பிச் சுரத்தில் சென்றாள்; இத்தகைய இளமையள் எவ்வாறு இல்லறம்

நடத்துவாள்; அதனால் உண்டாகும் துன்பத்தைத் தன்னால் எப்படித் தாங்க முடியும்[82] என்கிறாள்.

இவ்வாறு தன் மகளின் குழந்தைப் பருவ நடத்தைகளை எண்ணிப் பார்க்கும் தாயின் கூற்று, மகள் மேற்கொண்ட உடன்போக்கும், பின்னர் அவள் நிகழ்த்த உள்ள இல்லறமும் இனிதே நடைபெற வேண்டும் என்ற தாயுள்ளத்தின் எதிர்பார்ப்பைக் காட்டுகின்றது. இத்தகைய வளமனை வாழ்வைத் துறந்துவிட்டுச் சென்ற தன் மகளின் தலைவன் மீதான காதலைத் தாய் உணர்வதும் தெளிவாகின்றது.

''உடன்போக்கு சென்ற மகள் வழியில் எருமைத் தொழுவத்தில் தங்கியும், நெல்லிச்சோலை காயைத் தின்றும் வறண்ட சுனையின் சிறிதளவு நீரைப் பருகியும் செல்வாளோ,[83] உடன்போக்கின்போது வழியில் தன்னை நினைத்துப் பார்த்தாளோ,[84] தன் மகள் காட்டு வாழ்க்கையை மேற்கொண்டுள்ள சிற்றூரில் தங்கியிருப்பாளோ,[85] அவள் செல்லும் ஊர்கள் பொருளின்றி வருவோரைப் பாதுகாக்கும் முகமறிந்த மக்களை உடையதாக வேண்டும்,[86] என்றெல்லாம் உடன்போக்கில் மகளுக்கு உண்டாகும் நிலை பற்றி எண்ணிப் பார்க்கின்றாள் நற்றாய் என்பது குறிப்பிடத்தக்கது.

இவை யாவும் செல்வச் செழிப்போடு வளர்ந்த மகள் உடன்போக்கில் உண்ண உணவும், பருக நீரும், இருக்க இடமும், தங்குதற்கு நிழலும் பெற்றுத் துன்பமின்றிச் சென்று தலைவனை மணந்து வாழ்வாங்கு வாழ எண்ணுகின்ற தாயின் உள்ளத்தைக் காட்டுவனவாகும்.

மகள் மேற்கொண்ட உடன்போக்கு வழியின் அருமையை உணர்ந்த தாய், 'தன் மகள் தலைவனுடன் உடன்போக்கு சென்றமை அறநெறியே என்றும், அதனால் அவள் செல்லும் சுரம் மழை பெய்து வெம்மை இல்லாமல் குளிர்ந்த இனிமை உடையதாக வேண்டும் என்றும் வேண்டுகிறாள்.[87] தன் மகளின் காதலுறவுக்கு உடன்படும் தாயின் அருள் உள்ளம் இதனால் தெற்றெனப் புலப்படுகின்றது.

உடன்போக்கினால் மகளைப் பிரிந்தவளாகிய தாய், மகளை அழைத்துச் சென்ற தலைவன் அவளை அலங்கரித்தும், துய்த்தும் தன் மார்பில் தூங்கச் செய்தும் செல்ல வேண்டும் எனத் தெய்வத்தை வேண்டிப் பரவுகிறாள்.[88]

தன் மகளை உடன்கொண்டு போன தலைவனிடம் அவள் கொண்டிருந்த அன்பின் உறுதியைத் தான் அறிந்திருப்பின் இருவர்க்கும் திருமணம் செய்து வைத்திருப்பதாகக் கூறுகிறாள்.[89] பெற்றோராகிய தாம், தம் மகளின் தோழியர் சூழ செய்து வைக்கும்

திருமணத்தால் பெறுகின்ற இன்ப நுகர்ச்சியை விட உடன்போக்கில் மணந்து கொள்வது இன்பந்தருமோ[90] என்று தனக்குத்தானே வினவுகிறாள் தாய். இவற்றால் தன் மகள் மீது பொழியும் தாயன்பை அறிய முடிகின்றது.

உடன்போக்கு சென்ற மகள் தலைவன் இல்லத்தில் மணந்து கொள்கிறாள். அதனால் தன் மனையில் தான் கண்டு களிக்குமாறு சிலம்புகழி நோன்பு நடக்காமல் தலைவனின் பெற்றோர் கண்டுகளிக்க அவர் இல்லத்தில் நடக்கிறதே என்று துன்புறுகிறாள். தன் வீட்டில் நடக்க வேண்டிய மகளின் சிலம்புகழி நோன்பு அவளை உடன்போக்கில் அழைத்துச் சென்ற தலைவனின் இல்லத்தில் நடந்துவிட்டதே என்பதை அறிந்து கொண்ட தாய், அவர்கள் திருமணமாவது தன் வீட்டில் நடைபெற வேண்டும் என விரும்புகிறாள்.[91]

''மகளிர்க்கு மணமாகாமுன் பெற்றோர் அணிந்த சிலம்பு, 'கன்னிமைச் சிலம்பு' என்றும், திருமணம் நிகழும்போது கணவன் அணியும் சிலம்பு 'கற்புச் சிலம்பு' என்றும், கணவன் தரும் சிலம்பை அணியும் திருமணம் 'சிலம்பு கழீஇய மணம்' என்றும் கூறப்படும்''[92] என்பது உரையாசிரியர் கூற்றாகும்.

> ***''குமரிக்குச் சிலம்பு அடையாளம் என்பதனால் குமரிக் கழிவுக்குச் சிலம்புக் கழிவு வேண்டப்படும். எனவே திருமணத்திற் சிலம்புகழி நோன்பு ஒரு கரணமாயிற்று, சடங்காயிற்று, இன்றியமையாத விழாவாயிற்று. இது சங்கச் சமுதாய வழக்கு. உடன்போகிய காலத்து உறவினரில்லாப் புதியதோர் நாட்டில் மணஞ்செய்து கொண்டாலும், ஆண்டும் சிலம்பைக் கழற்றும் சடங்கு நிகழும், நிகழ வேண்டும் என்று அறிகின்றோம்''*** [93]

என்கிறார் வ.சுப. மாணிக்கம்.

இவையாவும் தன் மகளுக்குச் செய்ய வேண்டிய கடமைகளைக் குறைவறச் செய்து மகிழ்ச்சி கொள்ள எண்ணுகின்ற தாயின் அன்புள்ளத்தையும், அது நடைபெறாத போது அதை எண்ணி வருந்தும் அவள் ஏக்கத்தையும் வெளிப்படுத்துகின்றன.

உடன்போக்கு சென்ற தன்மகள் குறித்து வருந்தும் தாய் அவள் பயன்படுத்திய பொருட்கள் பயன்படுத்தப் பெறாமல் கிடப்பதைக் கண்டும் வருந்துகிறாள். தன் மகளின் தோழியர் கூட்டத்தையும் அவள் பாவை கொண்டாடிய நொச்சி நிழல் பரப்பு, திண்ணை ஆகியவற்றையும் காணுந்தோறும் கண்ணீர் வடித்து அழுகிறாள். அவளைக் காட்டிலும் அவள் வளர்த்த கிளியும் அன்னையே என உறவுமுறை கூறிக் கத்துவதாகக் கூறி வருந்துகிறாள்.[94]

மேலும் அத்தாய்,

> *"இதுஎன் பாவைக்கு இனியநன் பாவை*
> *இதுஎன் பைங்கிளி எடுத்த பைங்கிளி*
> *இதுஎன் பூவைக்கு இனிய சொற்பூவை"* [95]

எனத் தன் மகள் பழகிய பாவை, கிளி, பூவைப் பறவை ஆகியவற்றை அவளாகவே உருவகித்து, அவை தம்மை வளர்த்த தலைவி நீங்கினமையால் கலங்கின எனக் கூறுகிறாள்.

தன்மகள் விளையாடிய பந்து, பாவை, கழங்கு ஆகியவற்றை உடன் கொண்டு செல்லாமல், மகளின் எண்ணம் அவ்வப்பொழுது உண்டாகித் துன்புறுமாறு அவற்றை விட்டுச் சென்றாள் எனத் துன்புறுகிறாள்.[96]

இவற்றால் தாய் மகள் மாட்டுக் காட்டும் இரக்கத்துடன் அவள் பயின்ற பொருட்கள் மாட்டுக் காட்டும் இரக்கத்தையும் அறிய முடிகின்றது. அப்பொருட்களைக் காணுங்கால் மீண்டும் மீண்டும் மகளின் பிரிவு தாயை வருத்துகின்றமை புலப்படுகின்றது.

தன் மகள் தாய்போல் நீரூற்றி முகம் பார்த்து வளர்த்த வயலைக் கொடிக்கு இனி நீரூற்றி வளர்ப்பார் யாரும் இல்லாததால் அக்கொடி இரங்கத்தக்கதெனத் தாய் வருந்து கிறாள்.[97] தன் மகள் தன்னைத் துடிக்க விட்டதோடு தான் தாயாக இருந்து வளர்த்ததையும் விட்டுச் சென்றாளே என்ற வருத்தம் தாய்க்கு மேலிடுகின்றது; தன்னைப் போன்றே அவள் வளர்த்த பிற உயிர்களும் வருந்துவதாகக் கற்பித்துக் கூறப்பட்டுள்ளது எனலாம்.

உடன்போக்கு சென்ற மகள் தன் தலைவனுடன் திரும்பி வருவாள் என்னும் எண்ணமுடைய தாய் மகிழ்ந்து வெறியாட்டு நிகழ்வித்து வேலனிடம் நடக்கப் போகும் நிகழ்வு குறித்து வினவுகிறாள். அவள், தன் மகளைத் தலைவன் முதலில் எம் மனைக்கு கொண்டு வருவானோ, அன்றி தன்னுடைய மனைக்குக் கொண்டு செல்வானோ? அவனுடைய எண்ணம் யாதோ? தவறாத குறியைக் கூறுவாயாக' என வேண்டுகிறாள்.[98]

தலைவனுடன் உடன்போக்கில் சென்ற தன் மகள் அவனை மணந்து திரும்பி வருவாள் என்பதால் அவர்களை வரவேற்கும் தாயின் மகிழ்ச்சியும் பிரிந்த மகள் திரும்புவதால் இழந்த அவளை மீண்டும் காணப்போகும் தாயின் ஆவலும் புதுமணம் பூண்டோரை ஆதரித்துப் போற்றல் வேண்டும் என்னும் பெற்ற மனத்தின் பித்தும் புலனாகின்றன.

உடன்போக்கு சென்ற மகள் திரும்பி வரும் பொருட்டுக் காக்கையைப் பரவித் தான் அதற்குச் செய்யும் நன்மைகள் பற்றிய முறையை எடுத்துக் கூறுகிறாள்.

அத்தாய், தலைவனுடன் சென்ற தன் மகள் திரும்பி வருமாறு அக்காக்கை கூவினால் அது தன் சுற்றத்தோடு கூடி உண்ணுமாறு ஊன் கலந்த உணவைப் பொற்கலத்தில் தருவதாக உரைக்கிறாள்.[99] காக்கை கரைந்தால் புதியோராகிய விருந்தினர் இல்லத்திற்கு வருவர் என்பது தமிழர் நம்பிக்கை. ஆகவே இந்நம்பிக்கை அடிப்படையில், காக்கையைக் கரையுமாறு வேண்டுகிறாள் தாய். இது 'கேளாதன வற்றைக் கேட்பன போலக் கிளத்தல்' என்னும் அகத்திணை மரபைச் சேர்ந்தது.

## 6.2.0 செவிலித்தாய் கூற்றுவழி உறவு

சங்க இலக்கியத்தில் செவிலியின் உறவை வெளிப்படுத்தும் அவள் கூற்று நிகழிடங்களும் கூற்றுகளின் வகைப்பாடுகளும் இவ்வியலின் முற்பகுதியில் குறிக்கப் பெற்றுள்ளன.

செவிலித்தாய் காட்டும் அன்புறவு வெளிப்படும் காலமும் தன்மையும் பற்றிய தொல்காப்பியர் கருத்து இங்கு நோக்கத்தக்கது.

> *''கழிவினும் நிகழ்வினும் எதிர்வினும் வழிகொள*
> *நல்லவை உரைத்தலும் அல்லவை கடிதலும்*
> *செவிலிக் குரிய ஆகும் என்ப''* [100]

எனும் அக்கூற்று, முக்காலத்தும் தன் குல முன்னோர் வழியைப் பின்பற்றுமாறு நல்லவற்றைக் கூறுவதும் தீயவற்றைக் கடிவதும் என இருவகைத்து ஆகும் என்பதைப் புலப்படுத்துகிறது.

இந்நூற்பாவிற்கு உரைகாணும் இளம்பூரணர்,

> ***''இறந்த கால முதலியவற்றாற் கூறுதலாவது முன்புள்ளார் இவ்வாறு செய்து நன்மை பெற்றார் இவ்வாறு செய்து தீமை பெற்றார் எனவும், இப்பொழுது இன்னோர் இவ்வாறு செய்து பயன்பெறா நின்றாரெனவும், இவ்வாறு செய்தார் பின்பு நன்மை தீமை பெறுவர் எனவுங் கூறுதல். அவை, அறனும் பொருளும் இன்பமும் பற்றி நிகழும்; அவையாவன, தலைமகன் மாட்டும் உலகத்தார் மாட்டும் ஒழுகும் திறன் கூறுதல்''*** [101]

எனக் கூறுகிறார்.

சங்க இலக்கியத்தில் செவிலித்தாய் கூற்றுகளாக நற்றிணையில் 2 பாடல்களும், குறுந்தொகையில் 9 பாடல்களும், ஐங்குறுநூற்றில் 13 பாடல்களும், கலித்தொகையில் ஒரு பாடலும், அகநானூற்றில் 17 பாடல்களும் என 42 பாடல்கள் இடம்பெற்றுள்ளன.[102]

முல்லைத் திணையில் 12 பாடல்களும்,[103] பாலைத் திணையில் 30 பாடல்களும்[104] இடம்பெற்றுள்ளன. இவற்றுள் முல்லைத் திணைப் பாடல்கள் கற்புக்கால நிகழ்விலும், பாலைத் திணைப் பாடல்கள் களவுக் கால நிகழ்விலும் இடம்பெற்றுள்ளன.

செவிலி கூற்றுப்பாடல்களாகக் கயமனார் 11 பாடல்களும்,[105] பேயனார் 10 பாடல்களும்[106] ஓதலாந்தையார் 3 பாடல்களும்,[107] மோசிகீரனார், கோடங்கொற்றனார், மதுரைக் காஞ்சிப் புலவர், சேரமான் இளங்குட்டுவன், கபிலர், மதுரை எழுத்தாளன் சேந்தம் பூதன், கருவூர் கண்ணம்பாலனார், நக்கீரர், குடவாயிற் கீரத்தனார், கருவூர் கண்ணம்புல்லனார், கந்தரத்தனார், வெள்ளிவீதியார், பாலை பாடிய பெருங்கடுங்கோ, ஔவையார், போதனார் கூடலூர்கிழார், குழற்றத்தனார் ஆகியோர் முறையே[108] ஒரு பாடலும் பாடியுள்ளனர். புலவரின் பெயர் தெரியாத நிலையில் ஒரு பாடல் உள்ளது.[109]

முல்லைத் திணைப் பாடல்களாகக் குறுந்தொகையில் கூடலூர் கிழார், குழற்றத்தன் ஆகிய இருவரும் முறையே ஒவ்வொரு பாடலும் ஐங்குறுநூற்றில் பேயனார் 10 பாடல்களும் பாடியுள்ளனர்.

இவ்வாறு சங்க இலக்கிய நூல்களில் காணப்படும் செவிலிக் கூற்றுப் பாடல்கள் கீழ்க்காணும் துறையின் கண் இடம் பெற்றுள்ளன.

### 6.2.0.1 மகட்போக்கிய செவிலி கூற்று

இத்துறையில் குறுந்தொகையில் 5 பாடல்களும், அகநானூற்றில் 15 பாடல்களும் என 20 பாடல்கள்[110] உள்ளன.

### 6.2.0.2 தலைவி உடன்செல்ல செவிலி தன் மகளுக்குச் சொல்லியது

இத்துறையில் அகநானூற்றில் கருவூர் கண்ணம்புல்லனாரின் ஒருபாடல் மட்டும்[111] உள்ளது.

### 6.2.0.3 தலைமகளை நினைந்து செவிலி மனைக்கண் வருந்தியது

இத்துறையில் அகநானூற்றில் வண்ணப்புறக் கந்தரத்தனாரின் ஒருபாடல் மட்டும்[112] உள்ளது.

### 6.2.0.4 இடைச்சுரத்துப் பின்சென்ற செவிலி கண்டார்க்குச் சொல்லியது

இத்துறையில் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை ஆகியவற்றில் முறையே ஒரு பாடல்[113] உள்ளது.

### 6.2.0.5 செவிலி நற்றாய்க்கு அறத்தொடு நிற்றல்

இத்துறையில் குறுந்தொகையில் ஔவையார் பாடல் ஒன்று மட்டும்[114] உள்ளது.

### 6.2.0.6 தலைமகள் உடன் சென்ற வழி தெருட்டுவார்க்குச் சொல்லியது

இத்துறையில் ஐங்குறுநூற்றில் ஓதலாந்தையாரின் ஒரு பாடல்[115] உள்ளது.

### 6.2.0.7 உடன்போன தலைவி இன்று வரும் எனக் கேட்ட செவிலி நற்றாய்க்குச் சொல்லியது

இத்துறையில் ஐங்குறுநூற்றில் ஓதலாந்தையாரின் ஒரு பாடல்[116] உள்ளது.

### 6.2.0.8 இல்லறம் சென்று வந்து நற்றாய்க்கு உரைத்தல்

இத்துறையில் நற்றிணையில் போதனார் பாடல் ஒன்று உள்ளது.[117]

### 6.2.0.9 கடிமனை சென்று வந்த செவிலி நற்றாய்க்கு உரைத்தல்

இத்துறையில் குறுந்தொகையில் கூடலூர்கிழார், குழற்றத்தனார் முறையே ஒரு பாடலும், ஐங்குறுநூற்றில் பேயனார் 10 பாடல்களும்[118] பாடியுள்ளனர்.

இவ்வியலில் செவிலியின் கூற்றுகள் நற்றாய், தன்மகள், கண்டோர், பிறர், தன் நெஞ்சு ஆகியோருடன் நிகழ்த்தும் முறைமையில் ஆராய்ச்சிக்கு உட்படுத்தப்படுகின்றன.

### 6.2.1 நற்றாயிடம் நிகழ்த்தும் கூற்று வழி உறவு

செவிலிக்கும் நற்றாய்க்கும் இடையிலான கூற்றுவழி உறவைத் தலைவன் தலைவியர் களவுக்கால உறவு எனவும் கற்புக்கால உறவு எனவும் இருவகைப்படுத்தலாம்.

தலைவன் தலைவியர்தம் களவுக்காலத்தில் செவிலிக்கும் நற்றாய்க்கும் இடையில் நிகழும் கூற்றுவழி உறவு பெரிதாகத் தெரியவில்லை. ஆனால் கற்புக் காலத்து நிகழும் செவிலி நற்றாய் இடையிலான கூற்றுவழி உறவு பெரிதும் பேசப்படுகின்றது.

தலைவன் தலைவி உடன்போக்கு மேற்கொண்டதைத் தன் மகளாகிய தோழியால் அறிந்த செவிலி அவர்தம் காதல் நட்பு உலகறிய உறுதி பெற்றதாகுமாறு அவர்கள் மணம்பூண்டிருப்பர்[119] என நற்றாய்க்குக் கூறுகிறாள்.

இது பற்றிக் கூறும் உ.வே.சாமிநாதையர்,

*''கொடுப்போரின்றியும் கரணம் நிகழ்வதுண்டாதலின் உடன்போக்கின் பின் இருவரும் மணம் புரிந்து கொள்வதனால் மடந்தையினது நட்பானது உலகறிய உண்மையாகுமென்றாள் செவிலி''* [120]

என உரைக்கிறார்.

உடன்போக்கு சென்ற தலைவிக்குத் தலைவன் இல்லத்தில் திருமணம் நிகழ்ந்து அவள் தன் இல்லத்திற்கு வரும் நாள் அறிய நற்றாய் விழைகிறாள். நற்றாயின் உள்ளம் உணரும் செவிலித்தாய் தலைவி தன் தலைவனுடன் இன்ன நாளில் வருவாள் எனத் தூதர் உரைத்ததாக உரைக்கிறாள்.[121] இதனால் மகளைப் பிரிந்த நற்றாயின் துன்ப உளமறிந்து அத்துன்பத்தைப் போக்கும் வகையில் அவளைத் தேற்றும் செவிலியின் நட்புறவுத் திறம் வெளிப்படுகின்றது.

களவுக் காலம் மட்டும் அன்றித் தலைவன் தலைவியின் கற்புக் காலத்தும் செவிலித்தாய் தன் தோழியாகிய நற்றாய்க்குத் துணையாகிறாள். களவு மலர்ந்து கற்புமணம் பூண்ட தலைவியின் இல்லற மாண்பைக் காணச் செல்கின்றாள் செவிலித்தாய். அவள் கண்டு மகிழ்ந்த தலைவியின் இல்லற மாண்பை நற்றாயும் கேட்டு மகிழுமாறு அவளுக்கு உரைக்கிறாள். இதை,

*''மணமனைச் சென்று வந்த செவிலி*
*பொற்றொடி கற்பியல் நற்றாய்க் குணர்த்தலும்*
*நன்மனை வாழ்க்கைத் தன்மை யுணர்த்தலும்*
*அன்னவர் காதல் அறிவித் தலுமெனும்*
*இன்னவை பத்தும்இல் வாழ்க்கை விரியே.''* [122]

என நம்பியகப் பொருள் விரித்துரைக்கும்.

கடிமனை சென்று வந்த செவிலி நற்றாய்க்குத் தலைவியின் மனையற மாண்பைச் சொல்லுவதாக அமைந்துள்ள பாடல்கள் யாவும் முல்லைத் திணைக்குரியவையாகவே உள்ளன. ஆனால் நற்றிணையில் 'பிரசங் கலந்த' எனவரும் போதனாரின் இத்துறைப் பாடல் ஒன்று மட்டும் முல்லைத் திணைக் குரியதாக இல்லாமல் பாலைத் திணைப் பாடலாகக் குறிப்பிடப் பெற்றுள்ளமை ஆராய்ச்சிக் குரியதாகும்.

இப்பாடலுக்கு உரைவிளக்கம் தரும் பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயர்,

*''இஃது உரிப்பொருளால் பாலை''* [123]

என்கிறார்.

தலைவி உடன்போக்கு சென்றதால் நற்றாய் அவளைப் பிரிந்தாள் என்னும் கருத்தால் அப்பிரிவு கருதி இப்பாடல் பாலைத் திணைப் பாற்பட்ட தென்கின்றனர் எனலாம்.

மேலும் 'இச்செய்யுளை நற்றாய் கூற்று என்பதினும் செவிலி கூற்றென்பதினும் காட்டில் அகம்புகன் மரபின் வாயில்களாகிய தோழி முதலியோர் தம்முட் கூறிக் கொண்டது என்று கோடலே மிகவும் பொருந்துவதாகும். இதற்கு, 'கற்புங் காமமும் நற்பா லொழுக்கமும், மெல்லியற் பொறையும் நிறையும் வல்லிதின், விருந்து புறந்தருதலும் சுற்ற மோம்பலும், பிறவு மன்ன கிழவோன் மாண்புகள், முகம்புகன் முறைமையிற் கிழவோற் குரைத்தல், அகம்புகன், மரபின் வாயில்கட்குரிய (தொல்.கற்.கக) என்னும் விதி கொள்க[124] என்கிறார் பின்னத்தூர் நாராயணசாமி ஐயர்.

இனி, இச்செய்யுள் இவ்விதிபற்றியும் செய்யுளியலுள் 'வாயிலுசாவே தம்முளுமுரிய என்பதனால் தலைமகற் குரைத்தலேயன்றித் தம்முட்டாமே' கூறியதாக ஆசிரியர் இளம்பூரணர் கூறுதலும் காண்க (தொல்.கற்.கக - உரை)[125] என இப்பாடலின் கூற்று பற்றி விளக்கமளிக்கிறார் பெருமழைப் புலவர் பொ.வே. சோமசுந்தரனார்.

இப்பாடல் வழி குழந்தைப் பருவத்தளாய பொழுது செவிலித்தாய் ஊட்டிய உணவை மறுத்து விளையாடிய தலைவி இன்று தான்விரும்பி மணந்து கொண்டவனாகிய தலைவன் வறுமையடைந்தான் என்பதால் ஒருபொழுது மறுத்து மறுபொழுது உண்ணும் வலிமையுடையவள் ஆனாள். இத்தகைய இல்லற மாண்புக்குரிய நல்லறிவும் ஒழுக்கமும் எப்பொழுது அறிந்தாள் என நற்றாய் வியப்புறுமாறு செவிலி மகிழ்ந்துரைக்கிறாள்.

இது தலைவன் தலைவியர் மேற்கொண்ட கற்பறம் பூண்ட இல்லற மாண்பையும், மகளைப் பிரிந்து துன்புற்ற நற்றாயின் உள்ளத்தைத் தேற்றிய செவிலித்தாயின் அன்புறவையும் வெளிப்படுத்துவதாகும்.

தலைவியொருத்தி புளித்த தயிரைப் பிசைந்து கொண்டிருந்தபோது அவளுடைய உடை அவிழ, அக்கையினால் உடையை இழுத்துக் கட்டித் தாளிப்பால் கண்களில் புகை மணப்பத்தானே துழாவிச் சமைத்த இனிய புளிக்குழம்பைத் தன் தலைவன் இனிதென உண்டுவப்பதால் தலைவியின் முகம் நுட்பமாய் மலர்ந்தது எனச் செவிலித்தாய் நற்றாய்க்கு உரைக்கும் கூற்று[126] தலைவி தன் தலைவனின் தேவையறிந்து அவன் மகிழுமாறு சமைத்தளிக்கிறாள் என்பதையும் தலைவனும் அவள் செய்கையால் மகிழ்ச்சி கொள்கிறான் என்பதையும் அவன் மகிழ்ச்சி அவளுக்கு வெட்கத்துடன் கூடிய இனிய மகிழ்ச்சியை உண்டாக்குகிறது என்பதையும் உணர்த்துகிறது.

கற்புக் காலத்துக் கடிநகர் சென்ற செவிலித்தாய், வேந்தன் ஏவிய தொழில்மேல் வேற்றூர் சென்ற தலைவன் அங்கே தங்கிவிடாமல் உடனே வந்துவிடுகின்ற அன்பை நற்றாயிடம் கூறுகிறாள்.[127] இது தலைவனும் தலைவியும் துன்புறுத்தும் பிரிவின்றி ஒன்றி வாழ்ந்து இன்புறுகின்றனர் என்பதைக் காட்டுவதாகும்.

மேலும் செவிலித்தாய் தலைவி ஈன்ற குழந்தையொடு சேர்ந்தியற்றும் இல்லற மாண்பைப் புலப்படுத்துகிறாள்.

கன்றின் இருபுறமும் ஆண்மானும் பெண்மானும் கிடந்தாற்போன்று மகன் இடையில் கிடப்பத் தலைவனும் தலைவியும் கிடந்த கிடக்கையும்,[128] மகனை அணைத்துக் கிடந்த தலைவியைத் தழுவிக் கிடந்த தலைவன் கிடக்கையும்,[129] புன்னகை பூத்து சிறுதேர் உருட்டும் மகனைக் கண்ட அவனிடம் தலைவன் கொண்ட அன்பின் பெருமையும்,[130] தன் மகனுக்குப் பாலூட்டிய தலைவியின் முதுகைத் தலைவன் தழுவிக் கிடந்தமையும்,[131] தலைவன் இல்வாழ்க்கைக்குத் தலைவி தகுதியான விளக்கம் ஆனமையும்,[132] மகன் விளையாட அவனை இனிதாகப் பார்த்த வண்ணம் தன் தலைவியைத் தலைவன் தழுவிக் கிடந்தமையும்,[133] இசையின்ப நுகர்ச்சி போலத் தலைவன் தலைவியிடம் பெறும் புணர்ச்சி இன்பத்தையும்,[134] தலைவி முல்லைப் பூவைச் சூட தலைவன் தன் மகனுடன் சிறந்து இனிதாய் விளங்கியதையும்,[135] தன் மகனைத் தழுவிக் கிடந்த தலைவனையும், மகனையும் தலைவி ஒருசேரத் தழுவியபடி கிடந்தமையும்[136] தலைவன்தன் மைந்தனின் விளையாட்டின்பத்தில் தலைவியொடு சேர்ந்து இன்புற்றமையும்[137] ஆகிய யாவும் தலைவன் தலைவியர் தாம் ஈன்ற மகனுடன் இணைந்திருந்து பெற்ற இன்பமாகச் செவிலி நற்றாய்க்கு உரைக்கிறாள்.

இவ்வில்லறச் சிறப்பியல்புகளை ஐங்குறுநூறு தவிர வேறெந்த சங்க இலக்கியத்திலும் காணவில்லை என்பது குறிப்பிடத்தக்கது,

இவை நற்றாய்க்குத் தானீன்ற மகள் தன்னைப் போல் தாய்மையடைந்ததெண்ணிப் பெறவேண்டிய இன்பத்தையும் தான் பாட்டி ஆனதெண்ணி அடைய வேண்டிய இன்பத்தையும் ஒருசேர உணர்த்துவனவாகும்.

### 6.2.2 தன் மகளிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

செவிலி தலைவியின் தோழியாகிய தன் மகளிடத்துக் கூற்று நிகழ்த்துவதிலும் உறவு வெளிப்படக் காணலாம். செவிலி உடன்போக்கு சென்ற தலைவி பொருட்டுத் தான் வருந்தாமல், வழியில் ஒலிக்கும் தண்ணுமை ஒலியைக் கேட்டுத் தலைவி வெறுப்பாளோ என்று வருந்துகின்ற தன் நெஞ்சிற்கே தான் பெரிதும் வருந்துவதாக உரைக்கிறாள்.[138]

தலைவியை அழைத்துச் சென்ற இளையவனுக்குத் தகுதியானவளாய் சிற்றூர் வரிய மனையில் சிலம்பைக் கழித்து அதனுடன் மணம் கொண்டாளோ எனச் செவிலித்தாய் தன் மகளிடம் உரைக்கிறாள்.[139] தலைவியின் தோழியாகத் தன் மகள் விளங்குவதால் தன் நெஞ்சம் பற்றியோ அன்றித் தன் மகள் பற்றியோ செவிலித்தாய் வருந்துவது இயற்கை.

### 6.2.3 கண்டோரிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

தலைவி உடன்போக்கு சென்ற பின்னர் அவர்களைத் தேடி இடைச்சுரத்துச் செல்கிறாள் செவிலி. அவள் இடைச்சுரத்துக் கண்டார் மாட்டு, அக்காட்டு வழியில் காளையொடு சென்ற தன் மகளை அவர்கள் கண்டிருப்பின் தனக்குக் கூறுமாறு வேண்டுகிறாள்.[140] தன் மகளைச் சுரத்திடைக் கண்டதாகக் கூறிய கண்டோர் மாட்டு மகளின் அழகிய மெல்லிய சிலம்பணிந்த கால்கள் நிலத்தில் பொருந்தி நடந்தனவோ என வினவுகிறாள்.[141] தன் மகளைத் தேடிச் செல்லும் இடைச்சுரத்து எதிர்ப்பட்ட துறவியரிடம், காளையொடு சென்ற தன் மகள் பற்றி வினவுகிறாள். அவர்களைத் தாம் கண்டதாகவும் அவர்கள் செயல் அறம் பொருந்தியது ஆதலின் அவர்கள் பொருட்டு வருந்த வேண்டாம் எனவும் அத்துறவியர் உரைக்கின்றனர்.[142]

உடன்போக்கு சென்ற தலைவியை நற்றாய் தேடிச் செல்வதாகச் சங்க இலக்கியத்தில் குறிப்புகள் காணப்படவில்லை. அதேபோன்று உடன்போக்கு சென்ற தலைவனை அவனை ஈன்ற தாயோ அன்றித் தந்தையோ அன்றித் தமரோ தேடிச் செல்வதாகவும் சான்றுகள் இல்லை.

தலைவியை நற்றாய் தேடிச் செல்லாத நிலையில், செவிலித்தாய் தேடிச் செல்வது தலைவியைத் தான் ஈன்ற மகளாகக் கருதும் அன்புரிமையைக் காட்டுகின்றது. துறவியர் கூற்று தலைவன் தலைவியர் அறம் மாறாத வகையில் மணம் பூண்ட மாட்சிமையை உணர்த்துகிறது எனலாம்.

### 6.2.4 பிறரிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

செவிலித்தாய், நற்றாய், இடைச்சுரத்துக் கண்டோர் ஆகியோருடன் நிகழ்த்தும் கூற்று களன்றிப் பெண்மான், தெருட்டுவோர் போன்ற பிறரிடமும் தலைவியின் உடன்போக்கு குறித்து உரையாடுகிறாள். உடன்போக்கு சென்ற மகளைத் தேடிச் செல்லும் செவிலித்தாய் வழியில் எதிர்ப்பட்ட மானிடம் தன் மகள் தலைவனுடன் சென்ற வழியைக் கேட்கிறாள்.[143]

தலைவி தலைவனுடன் சென்றபின் தமக்கு ஆறுதல் கூறித் தெளியச் செய்வார்க்குப் பதிலிறுக்கும் செவிலித்தாய், தலைவிக்குத் தாய் எனும் உரிமை பெற்றிருந்தும், அவளை அவனுக்கு உரியவளாகக் கொடுக்கும் பேற்றைத் தான் பெறாமல் அவன் ஆயத்தார் பெற்றனரே எனக்கூறி வருந்துகிறாள்.[144]

தன் மகள் பெண்மானையொத்த மென்மையள் என்பதால் கேளாதவற்றைக் கேட்பன போலக் கிளத்தல் என்னும் அகப்பொருட் கொள்கைக்கேற்பச் செவிலித்தாய் தன்மகள் சென்ற வழியை மானிடம் கேட்கிறாள் எனக் கொள்ளலாம். தன் மகளுக்குத் தலைவன் வீட்டார் மகட்கேட்டு மணம் நடந்திருப்பின் தன் மகளைத் தலைவனுக்கு உரியவளாகக் கொடுக்கும் பேற்றை அடைந்திருப்போம். உடன்போக்கு சென்றதால் தலைவன் வீட்டில் மணவினை முற்றுவிக்கப் பெறும் சூழ்நிலையில் தமக்குரிய பேற்றை இழந்துவிட்டோம் என்ற செவிலியின் கூற்றால் அவளின் உரிமை இழப்புத் துன்பத்தை உணரமுடிகின்றது.

### 6.2.5 தன்னெஞ்சிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

மகள் உடன்போக்கு சென்றமையை அறிந்த செவிலி தலைவியைத் தான் அணைத்தபோது வியர்வை உண்டாகி வெளிப்படுத்திய வெறுப்பை அவள் தலைவனின் தழுவலை விரும்பி உடன்போக்கு சென்றபோது உணர்ந்ததாக உரைக்கிறாள்.[145]

தலைவன் தலைவி சென்ற வழியில் அவர்களைக் காணாது வருந்தும் செவிலி,

*"காலே பரி தப்பினவே கண்ணே*
*நோக்கி நோக்கி வாள் இழந்தனவே*
*அகல் இரு விசும்பின் மீனினும்*
*பலரே மன்ற இவ்வுலகத்துப் பிறரே"* [146]

என்று புலம்புகின்றாள். தன் மகளைத் தேடி அவள் கிடைக்கப் பெறாமையால் வீட்டிலுள்ள செவிலித்தாய் தன் இழப்பைவிட நற்றாய், பெற்றோர் தமக்கு விருப்பமான ஒரு பொருளை இழந்துவிட்டனர் எனக் கலங்கியுரைக்கிறாள்.[147]

காளை ஒருவனுடன் தன் மகள் சென்றமை அறிந்த செவிலித்தாய், தன் மகளை அடித்த கைகளை நொந்து கொள்கிறாள்.[148] தன் மகள் ஆயத்தாருடன் விளையாடுவதை விரும்பாமல் பாலை வழியின் பருக்கைக் கற்கள் அடியின் அழகை அழிக்கத் தலைவனோடு போயினளே அது எளிதெனக் கருதிச் சென்றாளோ எனத் தனக்குத்தான் வருந்துகிறாள்.[149]

கழங்கு, பந்து ஆடினும் உடல் வலித்ததெனக் கூறும் தன் மகள் மெல்லடிகள் மலைவழியில் செல்ல வலிமையுடையனவோ? என எண்ணி ஏங்குகிறாள்.[150] தன் மகள் மனையில் முல்லை நொச்சி ஆகிய ஆடுமிடம் யாவும் கண்ணுறும் செவிலி அத்தகைய மகளின் ஆடல் ஒழிந்தமையை எண்ணி வருந்துகிறாள்.[151]

பாலை உண்பிக்கவும், உண்ணாமல் பந்தலில் ஒடுகின்ற இளையமகள் நீண்ட வழியில் செல்லும் கால்கள் வலிமை உடையதாகுமோ? அவள் மலைவழியில் முகந்த நீரைப் பெருமூச்சுடன் பருகினாளோ என்கிறாள்.[152] மகள் சென்றதற்காக வருந்தாது நீரற்ற

பாலையில் நடக்க வல்லமையுடையாளோ என மகளின் மென்மைக்கு வருந்துகிறாள்.[153] கொடிய காளை போன்ற தலைவன் என் மகளை நான் பாராட்டவும் நற்றாய் தன் கடமையைச் செய்யவும் எம் இல்லத்தில் திருமணம் நிகழாமலும் வெப்பம் குறைந்த காலத்தில் அழைத்துச் செல்லாது மூங்கில் விளைந்த காட்டில் அழைத்துச் சென்றான். என் மகள் அக்காட்டில் எப்படிச் சென்றாளோ என வருந்தியுரைக்கிறாள்.[154]

இவ்வாறு பாலையின் கொடுமை தன் மகளின் மெல்லடியை வருத்தும் எனக் கவலையுற்ற தாய் அது மழை பெய்து இனியதாகுக எனத் தெய்வத்தை வேண்டுகிறாள்.[155]

தன் மகள், தான் தலைவனுடன் இரவில் உடன்போக்கு செல்வது தெரியாத வகையில் காற்சிலம்பைக் கழற்றி விலக்கிச் சென்றாளோ! அவள் வழியில் தங்கியிருப்பாளோ? அன்றித் தலைவனுக்கு முன் நடந்து செல்வாளோ?[156] அவள் அறியாத இடத்தில் சிலம்பு கழிந்து மணப்பது கொடியது என்கிறாள்.[157] தன் மகள் தலைவனிடம் கொண்டிருந்த அன்பை முன்னமே அறிந்து வைத்திருப்பின் என் இல்லத்தில் மகிழ்ச்சி விளங்க மணம் செய்து வைத்திருப்பேனே என்கிறாள்.[158] உடன்போக்கு மேற்கொண்ட தன் மகளுக்கு அவள் சென்றுள்ள ஊருக்குச் சென்று அவர்களுக்கு இல்லத்து மூதாட்டியாய் ஆவேன் என உரைக்கிறாள்.[159]

மகள் தனக்குத் தெரியாமல் களவுப் புணர்ச்சியை மேற்கொண்டு உடன்போக்கு சென்று விட்டாள் என்ற வெறுப்பின் காரணமாக ஒப்பற்ற தலைவனின் மெய்யுரையைப் பொய்யுரையாகவே பலவிடத்தும் கூறிப் புலம்புகிறாள். அதனால் தலைவனை 'அறனிலாளன், வன்கண்காளை, ஏதிலன், ஏதிலாளன், நொதுமலாளன், கடுங்கண் காளை[160] என்றவாறு இகழ்ந்துரைக்கிறாள். ஆனால் கற்புக் காலத்தில் தலைவன் தலைவியுடனும் புதல்வனுடனும் இனிதே வாழ்வதால் 'நசையினன், நெடுந்தகை' [161] என்று போற்றுகிறாள்.

தன் மகள் உடன்போக்கு செல்லும் முன்னர் நடந்து கொண்ட அவள் நடத்தைகள் உடன்போக்குக்குரிய அடையாளக் குறிப்பாக இருந்தமையைத் தான் அறியாது போன அறியாமையை எண்ணிப் பார்க்கும் செவிலி கூற்றால் அவள் மகள் மீது கொண்டிருந்த நம்பிக்கை புலனாகிறது.

மகளைப் பிரிந்த பிரிவால் செவிலி தன்னை வருத்திக் கொள்வது அவள் மகள் மாட்டுக் கொண்ட அன்பைக் காட்டுகிறது. தலைவியின் பெற்றோர் அவள் பிரிவால் அடையும் துன்பம் கண்டு துன்புறும் செவிலியின் கூற்றுகள் அவர்களுக்குள் உள்ள ஆழமான நட்புரிமையின் வெளிப்பாடு எனலாம். மகளின் மென்மைத் தன்மைக்குப் பலவாறு வருந்திப் புலம்பும் செவிலி தெய்வத்தைப் பரவும் நிலை, எந்நாளும் அவள் வாழ்வு சிறக்க எண்ணுகின்ற தாய்மைப் பேரன்பாகும்.

## 6.3 ஆய்வு முடிவுகள்

1. சங்க இலக்கியங்களில் நற்றாய் கூற்றைவிட செவிலித்தாயின் கூற்றே மிகுதியாக உள்ளன.

2. நற்றாய், செவிலித்தாய் என்ற உறவுமுறைப் பெயர்கள் சங்க இலக்கியப் பாடல்களில் காணப்படவில்லை. மாறாக அவை உரையாசிரியர் தம் உரைக்குறிப்பு களிலேயே காணப்படுகின்றன.

3. நற்றாய், செவிலித்தாய் ஆகிய இரு தாயர் உறவுகள் தலைவனுக்கு உரியவையாகப் பாடல்கள் இல்லை.

4. அக்காலச் சமுதாய நிலையில் பெற்ற தாய், சேயை வளர்த்ததாக இல்லை. சங்க இலக்கியம் வளப்பமான மேட்டுக்குடி மக்கள் வாழ்க்கையைப் படம் பிடித்துக் காட்டுகிறது. அதனால் தலைவியை வளர்க்க செவிலித்தாய் இருந்திருக்கிறாள்.

5. ‘தாய்’ என்ற கலைச்சொல்லுக்குப் பொருள் உரைக்கும் அபிதான சிந்தாமணி, தமிழ்மொழி அகராதி, கழகத்தமிழ் அகராதி, தமிழ்க்கலைக் களஞ்சியம், ஆய்வறிஞர் பூர்ணலிங்கம் பிள்ளையின் ‘தாய்’ எனும் தலைப்பிலான கட்டுரை ஆகிய யாவும் நற்றாய், செவிலித்தாய் எனும் தாயர் பெயர்களுடன் மேலும் பல தாயர் பெயர்களைக் குறிப்பிட்டுக் காட்டுகின்றன. நற்றாய், செவிலித்தாய் ஆகிய இரு பெயர்களைத் தவிர பிற தாயர் பெயர்கள் சங்க இலக்கியங்களில் காணப்பெறவில்லை.

6. நற்றாய் கூற்றுப் பாடல்கள் யாவும் பாலைத் திணையிலும் செவிலி கூற்றுப் பாடல்களில் களவு ஒழுக்கப் பாடல்கள் பாலைத் திணையிலும், கற்பொழுக்கப் பாடல்கள் முல்லைத் திணையிலும் அமைந்துள்ளன.

7. நற்றாய் கூற்றுப் பாடல்கள் நற்றிணை, ஐங்குறுநூறு, அகநானூறு ஆகியவற்றிலும் செவிலி கூற்றுப் பாடல்கள் எட்டுத்தொகையுள் அக இலக்கியங்கள் ஐந்திலும் இடம் பெற்றுள்ளன.

8. கயமனார், ஓதலாந்தையார், பேயனார் என்பவர்கள் முறையே நற்றாய், செவிலித்தாய் கூற்றுப் பாடல்களை அதிகமாகப் பாடியவர்களாவர்.

9. பாலைத் திணைப் பாடல்களைப் பாடிய புலவர்கள் பாடல்களில் பாலை வழிச் சென்ற தலைவியை எண்ணி வருந்தும் தாயரின் அவலச் சுவையே மேலோங்கி நிற்கிறது.

10. முல்லைத் திணைப் பாடல்களைப் பாடிய புலவர் பாடல்களில் தலைவன் தலைவியின் இல்லற மாண்பைக் கண்டு தாயர் அடையும் மருட்கைச் சுவையும் உவகைச் சுவையும் மேலோங்கி நிற்கின்றன.

11. பொருள் வயிற் பிரிந்த தலைவன் பொருட்டு எண்ணி வருந்தும் தலைவியின் துன்பத்தைப் பாலைத் திணையில் பாடும் புலவர் பெருங்கடுங்கோ, பாலையின் கொடுமையினைப் பாடுவதில் வல்லவர்.
அதுபோலத் தலைவி தலைவனுடன் உடன்போக்கு சென்றதனால் தாயர் தம் மகள் பாலை வழிச் சென்ற துன்பத்தை எண்ணி வருந்துவதைப் பாடுவதில் புலவர் கயமனார் வல்லவர்.

12. தலைவன் தலைவியின் உடன்போக்கு பாடல்களில் தலைவனின் தாயர் வருந்துவதாகப் பாடல்கள் இல்லை. மாறாகத் தலைவியின் தாயர் வருந்துவதாகவே பாடல்கள் உள்ளன.

13. முல்லைத் திணையில் தலைவன் பிரிவை ஆற்றியிருந்த தலைவி, தலைவன் பொருள் ஈட்டித் திரும்பி வர இல்லற வாழ்க்கை இன்பமுடையதாகக் காணப்படுகிறது.

14. தாயர் தம் மகளின் களவுப்புணர்ச்சி வழிவந்த திருமணத்திற்கு உடன்படுவது போன்றுள்ள பாடல்கள் குறைவாக உள்ளமைக்குக் காரணம் காதலரை வரவேற்கும் தாயர் சங்க காலத்தில் குறைவாக விளங்கினர் என்பதாகும்.

15. மகள் பிரிவின் காரணமாகப் புலம்பும் நற்றாயின் துன்பத்தைக் காட்டிலும் செவிலித்தாயின் புலம்பலில் துன்பம் மேலிட்டுக் காணப்படுகின்றது.

16. நற்றாய் தன் மகளை உயிராகவே எண்ணி அவள் பிரிவின்போது ஆற்றாது புலம்புகிறாள். செவிலியின் மகளாகிய தலைவியின் தோழியைத் தன் மகளாகக் கருதுவது நற்றாயின் பண்பாக உள்ளது.

நற்றாய் தன் மகளைச் செவிலியின் மகளாகவே அவளிடம் கூறுகிறாள். நற்றாய் பிறரிடத்தில் தன் மகளைப் பிரிந்த ஆற்றாமைத் துன்பத்தைப் போக்கிக் கொள்ளும் வடிகாலாகக் கூற்று நிகழ்த்துகிறாள்.

17. நற்றாயின் மகளைத் தன் மகளாகவே எண்ணிப் பாலூட்டிச் சீராட்டி வளர்க்கும் செவிலித்தாய் அம்மகளைக் குழவிப்பருவத்து மெல்ல ஓச்சும் உரிமையும் பருவ வயதில் கண்டிக்கும் உரிமையும் ஒருசேரப் பெற்றவளாகக் காணப்படுகிறாள். செவிலித்தாய் தன் தோழியாகிய நற்றாயிடம், தலைவியின் உடன்போக்கினால் தான் அடைந்த துன்பத்தை உரைப்பதும், உடன்போக்கு சென்று மணந்தபின் அவர்தம் இல்லற மாண்பைக் கண்ணுற்று மகிழந்துரைப்பதும் ஆகிய இரு மனநிலைக்கும் உரியவள் ஆகிறாள்.

18. தலைவன் தலைவியுடன் நிகழ்த்தும் இல்லற வாழ்வில் பெருமகிழ்ச்சி அடைகிறான். தன் புதல்வன் செயல்கண்டு நெஞ்சம் மகிழ்கிறான். தலைவன் தலைவியைக் களவுப் புணர்ச்சி மேற்கொண்டு கைவிட்டதாகச் செய்திகள் இல்லை.

19. தலைவி தலைவனின் உரையை நம்பித் தாயர்தம் அன்பையும் தான் பயின்ற பொருட்களையும் மறந்து, வீட்டைக் கடந்து கொடிய பாலை வழிச் செல்ல உடன்படுகிறாள்.

தன் தலைவனுடன் நிகழ்த்தும் இல்லற வாழ்வில் காணும் இன்ப துன்பங்களைச் சமமாகவே எண்ணுபவளாயும், தன் தந்தையின் வளமையான செல்வத்தைச் சிறிதும் எண்ணாதவளாயும் விளங்குகிறாள்.

தன் தலைவன், புதல்வன் ஆகியோரது மகிழ்வைக் கண்டு மகிழும் மனைத்தக்க மாண்புடையவளாகத் தலைவி திகழ்கிறாள்.

# அடிக்குறிப்புகள்

1. இராம. சுப்பிரமணியன், 'அறமலர்க் கொத்து' பக். 20, 27
2. குறள். 69
3. கலி. 50:11-14
4. கலி. 56:10-12
5. ஐங். 257:1-2
6. நற். 23:4
7. நற். 301:8
8. ஐங். 384:3
9. ஆ. சிங்காரவேலு முதலியார் - 'அபிதான சிந்தாமணி', பக். 805
10. நா. கதிரைவேற் பிள்ளை, 'தமிழ் மொழி அகராதி', பக். 492
11. கழகத் தமிழ் அகராதி. பக். 484
12. Tamil Lexicon Vol. III, Pa. 1839
13. எம். எஸ். பூரணலிங்கம் பிள்ளை 'தாய்' செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு-4, பக்.300
14. தொல். பொருள். களவு. 122
15. தொல். பொருள். களவு. 114.
16. தொல். பொருள். அகத். 40, இளம் உரை. ப-ள் 38-39
17. Tamil Lexicon Vol. IV, Pa. 2185
18. சு. கோகிலவாணி 'சங்க இலக்கியத்தில் தாய்-சேய் உறவு, ஓர் உளவியல் நோக்கு', பக். 17
19. அகம். 145:22, குறு. 15:8
20. தொல். சொல். விளி. - 36
21. சு. கோகிலவாணி 'சங்க இலக்கியத்தில் தாய்-சேய் உறவு, ஓர் உளவியல் நோக்கு', பக். 17
22. சிறுபாண். 192; பெரும்பாண் 58, 304
23. அகம். 184
24. நா. கதிரைவேற் பிள்ளை, 'தமிழ் மொழி அகராதி', பக்.110
25. அகம். 145:22, குறு. 15:8
26. Tamil Lexicon Vol. III, Pa. 1619
27. வாசுகி அம்மையார், 'நற்றிணையில் நற்றாய்' பக்.42
28. நற். 110:6, குறு. 229:3, அகம். 254 : 2, நெடு. 153
29. குறு. 15:4
30. சரளா இராசகோபாலன், 'சங்க இலக்கியம்' (அகம்) பக். 90

31. மேற்படி பக்.91
32. S. Singaravelu "Social Life of Tamils - The Classical Period" Pa.19
33. ஈ.கோ. பாஸ்கரதாஸ், 'அகப்பொருள் பாடல்களில் தோழி' பக்.10
34. S. Singaravelu "Social Life of Tamils - The Classical Period" Pa.181, 188
35. S. Singaravelu "Social Life of Tamils - The Classical Period" PP. 186 - 187
36. கி.வா. ஜகந்நாதன், 'தாமரைப் பொய்கை' பக். 34
37. தொல். பொருள். களவு. 136, பொருளியல். 197, 198
38. தொல். பொருள். செய். 493
39. தொல். பொருள். களவு. 113
40. தொல். பொருள். களவு. 113 இளம். உரை, பக். 238
41. தொல். பொருள். களவு. 113 நச்சர் உரை, பக். 137
42. தொல். பொருள். களவு. 114
43. தொல். பொருள். 114 நச்சர் உரை, பக். 145
44. நற். 29, 66, 143, 179, 184, 271, 279, 293, 305, ஐங். 313, 371-379, 391, 394, 399, அகம். 15, 35, 55, 105, 195, 275, 315, 383
45. மேற்படி
46. ஐங். 313, 371-379, 391, 394, 399
47. நற். 279, 293, 305, அகம். 195, 275, 383
48. அகம். 15, 55, 35, 315
49. நற். 29, 66, 143, அகம். 105
50. நற். 179, 184, 271
51. நற். 29, 279, ஐங். 371-379, அகம். 15, 35, 105, 195, 275, 315, 383
52. நற். 66, 143, 179, 184, 271, 293
53. நற். 305
54. அகம். 55
55. ஐங். 313
56. ஐங். 391, 394, 399
57. வ.சுப. மாணிக்கம், 'தமிழ்க் காதல்', பக். 82
58. தொல். பொருள். அகம். 39
59. தொல். பொருள். அகம். 39 இளம். உரை. பக். 37
60. ஐங். 313
61. நற். 110:9
62. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் உரை, நற்றிணை நானூறு, பக். 188

63. நற். 305
64. ஐங். 378
65. அகம். 55
66. நற். 184
67. அகம். 275
68. ஐங். 394
69. அகம். 315
70. நற். 143
71. ஐங். 376
72. அகம். 55
73. நற். 27
74. ஐங். 373, நற். 293
75. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் உரை, நற்றிணை நானூறு, பக். 500
76. நற். 29
77. ஐங். 374
78. நற். 279
79. நற். 66, 305, ஐங். 313, அகம். 35, 105
80. நற். 279
81. அகம். 105
82. நற். 179
83. நற். 271
84. ஐங். 372
85. அகம். 315
86. அகம். 15
87. ஐங். 371
88. அகம். 35
89. அகம். 263
90. ஐங். 379
91. ஐங். 399
92. 'ஐங்குறுநூறு' 399, அ. மாணிக்கனார் உரை, பக்.304
93. வ.சுப. மாணிக்கம், 'தமிழ்க் காதல்', பக்.156
94. நற். 143, 184, 293, 305
95. ஐங். 375
96. ஐங். 377
97. அகம். 383

98. அகம். 195
99. ஐங். 391
100. தொல். பொருள். கற்பு. 151
101. தொல். பொருள். கற்பு. 151 இளம். உரை, ப-ள் 303-304
102. நற். 110, 198, குறு. 15, 44, 84, 144, 167, 242, 356, 378, 396 ஐங். 380, 389, 400-410, கலி.9, அகம். 7, 17, 49, 63, 89, 117, 145, 153, 189, 203, 207, 219, 263, 321, 369, 385, 397
103. நற். 167, 242, ஐங். 401-410
104. நற். 110, 198, குறு. 15, 44, 84, 144, 356, 378, 396 ஐங். 380, 389, 400, கலி.9, அகம். 7, 17, 49, 63, 89, 117, 145, 153, 189, 203, 207, 219, 263, 321, 369, 385, 397
105. நற். 198, குறு. 356, 378, 396 அகம். 7, 17, 145, 189, 219, 321, 397
106. ஐங். 401-410
107. ஐங். 380, 389, 400
108. நற். 110, குறு. 15, 44, 84, 144, 167, 242, கலி. 9, அகம். 49, 63, 89, 153, 203, 207, 263, 369, 385
109. அகம். 117
110. குறு. 84, 144, 356, 378, 396 அகம். 7, 17, 89, 117, 145, 153, 189, 203, 207, 219, 263, 321, 369, 385, 397
111. அகம். 63
112. அகம். 49
113. நற். 198, குறு. 44, ஐங். 389, கலி.9
114. குறு. 15
115. ஐங். 380
116. ஐங். 400
117. நற். 110
118. குறு. 167, 242 ஐங். 401-410
119. குறு. 15
120. உ.வே.சா. உரைக் குறிப்பு, குறுந்தொகை, பக். 39
121. ஐங். 400
122. நம்பி. கற்பு. 203:9-13
123. பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் உரை, நற்றிணை நானூறு, பக். 190
124. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் உரை, நற்றிணை நானூறு, பக். 190
125. பெரு.உரை. நற்றிணை நானூறு, பக். 190
126. குறு. 167
127. குறு. 242

128. ஐங். 401
129. ஐங். 402
130. ஐங். 403
131. ஐங். 404
132. ஐங். 405
133. ஐங். 406
134. ஐங். 407
135. ஐங். 408
136. ஐங். 409
137. ஐங். 410
138. அகம். 63
139. அகம். 369
140. நற். 198
141. ஐங். 389
142. கலி. 9
143. அகம். 7
144. ஐங். 380
145. குறு. 84
146. குறு. 44
147. அகம். 189
148. அகம். 145
149. குறு 144, 396
150. அகம். 17, 153
151. அகம். 49, 117
152. குறு. 356, அகம். 89, 207, 219
153. அகம். 219
154. அகம். 397
155. குறு. 378
156. அகம். 321
157. அகம். 385
158. அகம். 263
159. அகம். 203
160. அகம். 17, 117, 153, 267, 219, 263, 275, 321
161. ஐங். 402, 408

# 7. பரத்தை மற்றும் பிறர் கூற்றுவழி உறவுகள்

# 7. பரத்தை மற்றும் பிறர் கூற்றுவழி உறவுகள்

7.0 அகத்திணை உறவு அன்பின் ஐந்திணை உறவாகும். இதை உடன்பாட்டுறவு எனக் கொள்ளலாம். வாழ்வில் முரண்பாடுற்ற எதிர்நிலை உறவு இருப்பதையும் அறிகின்றோம். அன்பின் ஐந்திணை உறவில் எதிர்நிலை உறவுக்குரிய ஒருத்தி பரத்தை ஆவாள். அகத்திணை மாந்தர்களுள் தலைவனுடனான பரத்தையின் பங்களிப்புப் பெரிதாகும்.

அன்பின் ஐந்திணை வழிப்பட்ட தலைவன் தலைவியர் வாழ்வின் இடையீடாகிய இப்பரத்தை தலைவனுக்கு உறவாகிறாள். ஆனால் தலைவியின் ஊடலுக்குக் காரணம் இவளே என்பதும் உணரத்தக்கது. எனவே இவள் தலைவனுக்கு அன்புறவாகவும், தலைவிக்கு எதிர்நிலை உறவாகவும் விளங்குகிறாள் எனலாம்.

பரத்தையை விரும்பித் தலைவன் பிரிந்து செல்வது தலைவிக்கு இன்பம் தரும் நிகழ்வன்று. இதுபற்றி ஆயும் வ.சுப. மாணிக்கம் அவர்களின் கீழ்வரும் கூற்று இங்கு நினைக்கத்தக்கது.

> *''பொருள் வரம்பும் நல்லொழுங்கும் தெளிந்த அமைப்பும் பெறுமாறு அறிஞர் படைத்த ஐந்திணைக்கண், ஆகாப் பரத்தையிற் பிரிவைச் சேர்த்திருத்தல் பொருந்தாது என்பது மிக வெளிப்படை''* [1]

என்கிறார்.

> *''திருமண வாய்ப்பு இல்லாத வரைவின் மகளிர் எனும் பொதுப் பெண்டிர் கூட்டம் வீரயுக சமுதாயத்தின் ஒரு தனி அங்கமாக உருப்பெறத் தொடங்கியது''* [2]

என்று ஜி. ஜான்சாமுவேல் கூறுகிறார்.

> *''அளவு மீறிய பரத்தை ஒழுக்கமுடைய ஒரு தலைவன்; அவனைத் தடுத்துத் திருத்த முடியாத ஒரு மனைவி; அவளுடைய நிலைக்காக வருந்தும் ஒரு தோழி ஆகியோரைக் கொண்ட ஒரு குடும்பத்தின் சித்திரம் சங்க இலக்கியங்களில் காணப்படுகிறது''* [3]

என்கிறார் சாலினி இளந்திரையன்.

### 7.0.1 பரத்தை - சொல் விளக்கம், வகைப்பாடு

பரத்தை என்னும் சொல்லுக்குப் பொருள் காணும் தொல்காப்பிய உரையாசிரியர் நச்சினார்க்கினியர் 'அயன்மை' என்கிறார்.[4] கழகத் தமிழகராதியும், தமிழ் சொற்களஞ்சியமும் பரத்தை-பொதுமகள்; வேற்றுப் பெண் எனவும் பொருள் கூறுகின்றன.[5]

இப்பரத்தையர் இற்பரத்தை, காதற்பரத்தை, குலப்பரத்தை, நயப்புப்பரத்தை, காமக்கிழத்தி எனவும் அழைக்கப்பட்டுள்ளனர்.

பரிபாடல் உரையில் இற்பரத்தையே காதற்பரத்தை குலப்பரத்தை எனவும் அழைக்கப்படுகிறாள். இது காமக்கிழத்தியாகக் கொண்ட பரத்தை எனப் பொருள்படும்.[6] அகநானூற்றுத் துறை விளக்கத்தில் நயப்புப் பரத்தை என்பவள் விருப்பப் பரத்தை என்னும் பொருளில் வழங்கப்படுவாள் என்று காணப்படுகிறது.[7] ஐங்குறுநூற்று உரையில் காதற்பரத்தை என்பாள், 'சேரிப்பரத்தையின் மகளாய்த் தலைவனது காதற்கு உரிமைபூண்டு அவனையே சார்ந்திருப்பாள்'[8] என்று சொல்லப்படுகிறது.

நம்பியகப்பொருள் காமக்கிழத்தி என்பவள், 'ஒருவர்க்கே உரிமை பூணுங் குலப்பரத்தை மகளாய்க் காமங் காரணமாகத் தலைமகனால் வரைந்து கொள்ளப்பட்டவள்'[9] என உரைக்கிறது. பரத்தை என்பவள் ஒருத்தியே. இவள் பொதுமகள் ஆவாள். இவளே விலைமகளாகவும், சேரிப்பரத்தையாகவும் கருதப்படுபவள். மற்றைய இற்பரத்தை, காதற்பரத்தை, குலப்பரத்தை, நயப்புப் பரத்தை, காமக்கிழத்தி ஆகிய அனைவரும் தலைவனிடம் உரிமைபூண்டோர் ஆவர்.

ஆயினும், காமக்கிழத்தி ஒருத்தியே தலைவனால் திருமணம் செய்து கொள்ளப் பெற்றவள்; பிறர் தலைவன் ஒருவனுக்கே உரிமையுடையவராய் மணம் முடிக்கப் பெறாமல் அவனால் காமந் துய்க்கப்படுவோர் ஆவர்.

தலைவனுடன் காதலுறவு கொண்ட இவரனைவருள்ளும் காமக்கிழத்தி ஒருத்தி மட்டுமே தலைவனுடைய முன்னுரிமை முழுவுரிமை பூண்டவளாகிய இல்லக்கிழத்தி, மனைக்கிழத்திக்கு ஒப்ப, கிழத்தி எனும் உரிமைப் பெயருடன் அழைக்கப்படுகின்றவள் ஆவாள்.

*"தலைவியர் இருவர் என்னும் கருத்து அகப்பொருள் மரபுக்கு மாறானதாகும். காமக்கிழத்தி, 'மனையோள் ஒத்தவளே, அன்றி மனையோளாதல் இல்லை; மனைக்கிழத்தி ஆதல் இல்லை. ஒருடம்பிற்கு இரண்டு தலைகள் இல்லாமை போல ஒரு தலைவனுக்கு இரு தலைவியர் இருத்தல் பொருந்தாது"* [10]

என்று ஈ.கோ. பாஸ்கரதாஸ் கூறுகிறார்.

### 7.0.2 பரத்தை - சமுதாய நோக்கு

*"சமுதாயத் தேவையே பண்டைப் பரத்தமைக்குக் காரணம். அடக்கமில்லாத ஆடவர்தம் காமப்பசிக்குப் பரத்தையர் இரையாவர். ஆணின் பொருளும் பெண்ணின் மெய்யும் பண்டமாற்றாதலைப் பண்டைச் சமுதாயம் பார்த்துக் கொண்டிருந்தது"* [11]

என்கிறார் வ.சுப. மாணிக்கம்.

ஆகவே, பரத்தை என்பதற்குப் பொதுமகள் எனப் பொருளிருப்பினும் அன்பின் ஐந்திணைப் பரத்தையை 'மனையோள் ஒத்தலின்' என்று தொல்காப்பியம் பேசுகிறது.[12]

மேலும் வ.சுப. மாணிக்கம்,

*'இப்பெண்டிர்களைப் பொருட் பெண்டிர்களாக விலைமாதர்களாகத் தொல்காப்பியமும், சங்கப் பனுவல்களும் புனையவில்லை. இப்பரத்தையர்க்கு அமைந்த நற்பெயர் 'காமக்கிழத்தி' (தொல் க0கூசா) என்பது கிழத்தி என்ற சொல்லாட்சியால், இந்நங்கையர்தம் ஒருபால் உயர்வு பெறப்படும். பரத்தையர்கள் பொருளையெல்லாம் வவ்வினார்கள் என்றோ, அது காரணமாக ஆடவர்கள் வறுமையெய்தினார்கள்; குடிகெடுத்தார்கள் என்றோ, அதுபற்றித் தலைவியர் பிணங்கினர் என்றோ மருதப் பாடல்கள் சிறிதும் மொழிந்தில. இதனால் இம்மங்கையர் பொருட் பெண்டிரல்லர் என்பது தெளிவு"* [13]

என்றுரைக்கின்றார்.

இக்கருத்துகளால் சங்க காலச் சமுதாயத்தில் பரத்தமை ஏற்றுக் கொள்ளப்பட்டமை தெரிகிறது. மேலும் அவர்கள் தலைவனுடன் உறவு கொண்டனரே அல்லாமல் குடும்பத்தில் பங்கேற்றவர் அல்லர் என்பதை உணரலாம்.

இவ்வியலில் பரத்தை, காதற்பரத்தை, இற்பரத்தை, நயப்புப் பரத்தை, காமக்கிழத்தி ஆகியோர் கூற்றுவழி ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது.

## 7.1. பரத்தை கூற்றுவழி உறவு

பரத்தை கூற்று நிகழும் பின்புலங்கள் பற்றி ஆ. இராமகிருட்டினன் அவர்கள் கீழ்க்காணும்படி உரைத்துள்ளார். அவை,

"1. தலைவன் தன்னைப் பிரிந்து தலைவியிடம் சென்றான் என்பதை அறிந்தபோது
2. தலைவனின் வரவுக்குத் தன் அன்பே காரணம் எனத் தலைவி கூறக் கேட்டபோது
3. தலைவி தன்னைப் புறனுரைத்தாள் எனக் கேட்டபோது
4. தலைவன் தலைவியைப் போற்றி ஒழுகுதலை அறிந்தபோது
5. தலைவனை நயப்பித்துக் கொண்டாள் எனப் பரத்தையைத் தலைவி குறைபடும்போது" [14]

ஆகியவை ஆகும்.

சங்க இலக்கியத்தில் பரத்தை கூற்றாக நற்றிணையில் 11 பாடல்கள், குறுந்தொகையில் 2 பாடல்கள், ஐங்குறுநூற்றில் 16 பாடல்கள், அகநானூற்றில் 5 பாடல்கள் என 34 பாடல்கள்[15] உள்ளன.

குறிஞ்சித் திணையில் 2 பாடல்களும்,[16] மருதத்திணையில் 23 பாடல்களும்,[17] நெய்தல் திணையில் 9 பாடல்களும்[18] என இடம் பெற்றுள்ளன.

அம்மூவனார் 9 பாடல்களும்,[19] ஓரம்போகியார் 8 பாடல்களும்,[20] பரணர் 4 பாடல்களும்,[21] கபிலர், மதுரை மருதனிளநாகனார், ஔவையார், ஆலங்குடி வங்கனார் ஆகியோர்[22] முறையே 2 பாடல்களும், கடுவனிள மள்ளனார், வில்லக விறலியார், இடையன் நெடுங்கீரனார், ஐயூர் முடவனார் ஆகிய 4 புலவர்கள்[23] முறையே ஒரு பாடலும், பெயர் தெரியாத புலவர் ஒரு பாடலும்[24] பாடியுள்ளனர்.

பரத்தை, தலைவன் தன்னுடன் கொண்ட உறவை நட்பாகக் கருதியமையால், நட்பு நட்பாவதை உணராமல் போனால் உன்னை விரும்புவோர் துன்பம் அடைவர் என நொந்துரைக்கின்றாள்.[25] தன்னுடன் நட்பு கொண்ட தலைவன் தன் நெஞ்சில் இருந்தும்,[26] தன்னுடனிருந்து நீங்காது உள்ளான் எனக்கூறி, தலைவன் பிரியக் கருதியவிடத்து அவன் தன்னைப் பிரியாமல் இருப்பதற்காக அவனைப் புகழ்ந்துரைக்கின்றாள். என்னை நீ

விரும்பினாய், எனக்கூறுவதை நின் மனைவி கேட்கின் வருந்துவாள்[27] எனப் பரத்தை தலைவனுக்கு உரைக்கிறாள்.

ஊரலர் கூறத் தலைவனுடன் புனலாடுவோம்[28] எனவும், தலைவன் தன் மனைவியுடன் சென்று புனலாடாமல் தன்னுடன் ஆடவேண்டும்[29] எனவும், தலைவனுடன் கொண்ட ஊடலால் இனி தன்னிடம் அல்லாது மனைச்சென்று மனைவியுடன் இன்புறுக[30] எனவும் கூறுகிறாள். தலைவன் பெதும்பைப் பருவத்தாளாகிய ஒருத்தியுடன் உறவு கொண்டமை அறிந்த பரத்தை அவளைத் தான் அறிந்தமையை எள்ளி இடித்துரைத்து ஊடல் கொள்கின்றாள்.[31]

தலைமகளுக்குப் பாங்காயினார் கேட்குமாறு பரத்தை, தலைவனே தன்னை விரும்பி வருவதால், தலைவி வருந்துவது ஏன்?[32] என்றும், தலைவனும் தானும் புனலாடுவதற்குத் தலைவி அஞ்சுபவள் ஆயின் தலைவனைப் பாதுகாத்துக் கொள்வாளாக[33] என்றும், தலைவனுடைய எண்ணப்படி தான் நடப்பதல்லாமல் தனக்கெனத் தனித்த எண்ணமில்லை[34] என்றும், தலைவன் தம்மிடம் வருவதைத் தான் விரும்புவதாகத் தலைவியாகிய தன் தங்கை கூறுவதைப் புறத்தே வெறுப்பினும் அகத்தே விரும்புவதாகவும்[35] பரத்தை உரைக்கிறாள்.

தலைவனை ஆடலாலும், பாடலாலும் தான் வயப்படுத்தியதாகத் தலைவி கூறுவதால் உண்மையாகவே இனி அவனை வயப்படுத்தினால் அவள் என்ன செய்வாள்?[36] என வினவுகிறாள். தலைவனைத் தன்னுடன் இணைத்துப் பேசித் தலைவி இகழ்வதால் அவள்முன் அவள் வயிற்றடித்துக் கொள்ளுமாறு கைகளை வீசிச் செல்வோமெனக் கூறுகிறாள்.[37]

தன்னுடைய பேரழகால் தலைவனைத் தான் தன்வயப்படுத்தவில்லையானால் தன்தாய் பாதுகாத்த தன்னுடைய அழகு ஒழிக[38] என வஞ்சினம் உரைக்கிறாள்.

தலைவியின் பாங்காயினார் கேட்குமாறு தன் பாங்காயினார்க்குப் பரத்தை உரைக்குமிடத்துத் தன்னை இகழ்ந்து பேசுவார் வருந்துவர்[39] என்று கூறுகின்றாள். பரத்தை தன் பாங்காயினாரிடத்துக் கூறும் பொழுது வேறொரு இளம்பரத்தை தெருவில் சென்றதால் எழுந்த மக்கள் பேச்சினால், அவ்வூர்ப் பெண்கள் தம் கணவன்மாரைப் பாதுகாத்தனர்[40] என்றும், தலைவன் தலைவியிடம் பரத்தையுடன் நீராடவில்லை எனச் சூளுரைத்தான் எனில் நேற்றைக்குத் தன்னுடன் நீராடியவர் யாரோவென[41] இகழ்ந்துரைக்கிறாள்.

பரத்தை தன் தோழியிடம், தலைவன் தன்னைப் பிரிதல் தக்கதன்று[42] என்றும், தலைவன் பிரியினும் தன் உள்ளத்தினின்றும் பிரியாததால் அவன் பிரிவிலன்[43] எனவும் கூறுகின்றாள்.

தலைவனுடன் ஊடல்கொண்ட பரத்தை தனித்து நீராட, அவளின் ஊடல் நீங்கும் பொருட்டு, 'நீ யார் மகள்?' என அவள் கையைத் தலைவன் பற்ற, அவனை இடித்துரைக்கும் பொருட்டுப் பரத்தையின் தோழி, 'நீ யார் மகன்?'[44] என வினவுகிறாள். தான் அழகுபடுத்திக் கொண்டிருக்கவும், தலைவன் தன்னைக் கூடாமையால்[45] பரத்தை வருந்துகின்றாள்.

தலைவிக்குப் பாங்காயினார் கேட்ப விறலியிடத்து, தலைவன் தன்னைத் தீண்டியதை அவன் மனைவிக்கு உரைப்பேன் எனப் பரத்தை கூறியபோது அவனுக்கு ஏற்பட்ட நடுக்கத்தை நினைத்து நகைக்கிறாள்.[46] எம்மிடம் தலைவி விருப்பமுற்றதால் யாம் தலைவனை அவளிடம் அனுப்பினோம். இதனை அறியாத ஊரார் தலைவியிடத்தில் பரத்தை காதலுடையவள் என்கின்றனர்[47] என உரைக்கின்றாள்.

தலைவி பரத்தையை விரும்புதலும், தலைவன் தன் பரத்தமையால் தலைவிக்கு அஞ்சுவதும் வெளிப்படுவதுடன், தலைவியின் சிறப்பும் புலனாகிறது.

பரத்தை விறலிமேல் வைத்துத் தலைவியை நெருங்கிச் சொல்லுமிடத்து நீ உண்ட மிச்சிலைப் பிறர் உண்ணல் போலத் தலைவனைப் பிறர் கூடினர். அது உனக்கு இழுக்கன்று. எனவே புலவாதொழிக[48] எனக் கூறுகிறாள். பரத்தை பாணர்க்கு உரைக்குமிடத்து, தலைவனாகத் தன்னை நாடிக் கூறியமையால் அவனை விடேன்[49] என உரைக்கின்றாள்.

தலைவியின் பாங்காயினாராகிய விறலியர்க்கும் பாணர்க்கும் உரைக்கும் பரத்தை தன் காதலனாகிய தலைவன் விருப்புடன் தன்னைக் கூடானாயினும் அவனைத் தான் காண்பது ஒன்றே வாழ்க்கை இன்பம்; அவன் இல்லாத ஊர் தனக்கு இனிமை அற்றது என்று[50] தன் காதலைப் புலப்படுத்துகிறாள்.

## 7.2 காதற்பரத்தை கூற்றுவழி உறவு

சங்க இலக்கியத்தில் காதற்பரத்தை கூற்றுப் பாடல்கள் குறுந்தொகையில் 2 பாடல்கள், ஐங்குறுநூற்றில் 5 பாடல்கள், அகநானூற்றில் 2 பாடல்கள் என 9 பாடல்கள்[51] அமைந்துள்ளன. அனைத்துப் பாடல்களும் மருதத் திணையில் அமைந்துள்ளன.[52]

ஐங்குறுநூற்றில் ஓரம்போகியார் 5 பாடல்களும்,[53] அகநானூற்றில் பரணர் 2 பாடல்களும்,[54] குறுந்தொகையில் ஆலங்குடி வங்கனார், மாங்குடி மருதன் ஆகியோர் முறையே ஒரு பாடலும்,[55] பாடியுள்ளனர்.

தலைவனிடம் ஊடிய காமக்கிழத்தி, அவன் தலைவியிடம் செல்வானாயின் அவனை அவள் கவர்ந்து கொள்வாள் என அஞ்சி அவன் பொருட்டுத் தான் இழந்த அழகை அளித்துவிட்டுச் செல்லுமாறு கூறுகிறாள்.[56] மேலும் சேரிப்பரத்தை வாழும் சேரிக்கும் தலைவன் செல்லக்கூடாதென்றும், அவன் மீண்டு வாராதவாறு அவள் கவர்ந்து கொள்வாள் என்றும், ஆதலால் அவனால் இழந்த தன்னழகைத் தனக்குத் தந்துவிட்டுச் செல்லல் வேண்டும்[57] என்றும் ஊடல் கொள்கிறாள்.

தலைவனைத் தன் வீட்டிற்குச் செல்லக்கூடாதெனத் தான் தடுப்பதாகக் கூறும் அறியாமை உடையவளாகத் தலைவி இருக்கிறாள் எனத் தலைவனின் பாங்காயினாரிடம் காதற்பரத்தை வருந்தி உரைக்கிறாள்.[58]

தலைவியின் பாங்காயினார் கேட்பக் கூறும் காதல்பரத்தை, தன்னை வயமாக்கத் தன்னிடம் புகழ்மொழி உரைப்பான் தலைவன். ஆனால் தலைவியிடம் அவன் சென்றால்,

*"கையும் காலும் தூக்கத் தூக்கும்*
*ஆடிப் பாவை போல"* [59]

அவள் ஏவல் கேட்டு நடப்பான் எனத் தலைவன் இயல்பை உரைக்கின்றாள்.

தலைவி அறியாமையால் தன்னை எப்பொழுதும் குறை கூறுகின்றாள்[60] என்றும், அனைவரையும் குறைகூறும் இயல்புடைய தலைவி தன்னை மட்டும் குறைகூறாமல் இருப்பாளோ[61] என்றும் தலைவியின் இயல்பை இகழ்ந்துரைக்கிறாள்.

மேலும் தலைவியின் பாங்காயினார் கேட்பத் தன் தோழியிடம் பேசும் பரத்தை தலைவன் தலைவியிடம் பிரியேன் எனச் சூளுரை செய்யினும், அவன் தன்னிடம் கூறும் சூளுரை பொய்த்துப் பல பரத்தையிடத்தும் செல்லும் இயல்பினனாதலால் தலைவிக்குத் தந்த சூளுரையையும் பொய்ப்பான்[62] எனத் தலைவனைப் பழிக்கிறாள்.

தலைவன் தன்னைப் பிரிந்து தன் தலைவியின் இல்லத்திற்குச் சென்று வாழ்வான் என்று அயல்பரத்தையர் கூறுவது ஏன்[63] எனத் தன் தோழியிடம் உரைக்கிறாள்.

தலைவன் பரத்தையைப் பிரிந்து தலைவியிடம் சென்று வாழ்வான் என்பது உலகியல்பே அன்றி உண்மையில் பரத்தையை அறவே துறப்பான் என்பதல்ல என்பது

காதல் பரத்தை கூற்றின் பொருளாகும். தலைவன் தலைவியிடம் அன்பு காட்டி வாழ்கின்றான் என்று கேள்வியுற்றவள் தலைவிக்குப் பாங்காயினார் கேட்குமாறு, தலைவன் தலைவியிடம் அன்புகாட்டி வாழ்வதற்குக் காரணம் அவள் அவன் மனைவி என்பதால் அல்லாமல் வேறில்லை[64] என்கிறாள்.

## 7.3 இற்பரத்தை கூற்றுவழி உறவு

இற்பரத்தை கூற்றாக ஔவையாரின் குறுந்தொகை மருதத் திணைப் பாடலொன்றும் பரணரின் அகநானூற்று மருதத் திணைப் பாடலொன்றும் என 2 பாடல்கள்[65] உள்ளன. வேறொரு பரத்தை தன்னைப் புறங்கூறினாள் என்பது கேட்ட இற்பரத்தை அவளின் பாங்காயினார் கேட்ப உரைக்கின்றாள். தலைவனைத் தான் அகப்படுத்தவில்லை. அவன் தானே வலிய என்பால் வந்தனன்[66] என்பது இற்பரத்தையின் கூற்றாகும். தலைவியின் பழிப்புரையைக் கேட்ட இற்பரத்தை, தான் தலைவனுடன் நீராடுவதில் மட்டும் தொடர்புடையவள்; ஆனால் அவனோ வேறொருத்தியுடன் தொடர்புடையவன். அதனால் தலைவி தன்மேல் வெறுப்புற்றுப் பழித்துரைக்கக் காரணம் ஏதும் இல்லை[67] என்கிறாள்.

## 7.4 நயப்புப் பரத்தை கூற்றுவழி உறவு

நயப்புப்பரத்தை கூற்றில் அகநானூற்றுப் பாலைக்கொட்டிலார் என்பார் மருதத் திணையில் பாடிய பாடல் ஒன்றில்,

தன்னைப் பழித்துரைக்கும் காமக்கிழத்தியின் தோழி கேட்க உரைக்கும் நயப்புப் பரத்தை 'துணங்கைக் கூத்து விழாவிற்குத் தான் செல்லாமல் விட்டதால், காமக்கிழத்தியைத் தலைவன் விரும்புவான் ஆனான். இனித் தலைவனைத் தான் செல்லுமிடமெல்லாம் தன்னுடன் திரிய வைப்பேன்[68] என வஞ்சினம் மொழிகிறாள்.

## 7.5 காமக்கிழத்தி கூற்றுவழி உறவு

காமக்கிழத்தியின் கூற்று, கலித்தொகையில் மருதனிள நாகனாரின் மருதத் திணைப் பாடல்களில் மட்டும் காணப்படுகின்றன.[69]

ஆண்டுக்கு ஒருநாள் வரும் தலைவன் வருகையில் அந்நாள் மகிழ்ந்திருப்பதுபோல் ஆண்டு முழுவதும் மகிழ்வதாகவும், அதனால் அப்பரத்தையின் மனைக்கே அவன் சென்று சேரட்டும்[70] எனவும் ஊடுகிறாள். முற்காலத்து அன்புற்றிருந்த தலைவனின் பிற்காலத்துச் செயலால் மனம் அழிந்து போகிறது. இருப்பினும் அவனைக் காணும்போது தான் நெஞ்சழிந்து காமங் கொள்வதாகக்[71] காமக்கிழத்தி உரைக்கிறாள்.

தலைவனின் பாணன், பரத்தை, அவன் நெஞ்சம், அவன் தேர் ஆகிய யாவும் பித்துடையன. ஆனால் தான் பித்துடையவள் அல்லள்[72] என்கிறாள். இவ்வாறு தலைவன் மாட்டு ஊடல் கொள்ளும் காமக்கிழத்தி பின்னர் ஊடல் நீங்கிக் கூடல் கொள்கிறாள்.

தன்மாட்டு நில்லாத தன் நெஞ்சம் தலைவனின் தீமையைப் பொறுத்துக் கொள்ளக்கூடியது. எனவே அவன் எப்பொய்யும் கூறாதவனாக வேண்டும்[73] எனவும், தலைவன் எக்குற்றம் செய்யினும் தன்னுள்ளம் அவனிடம் செல்வதால் தன் ஊடலைத் தீர்க்க அவன் எச்செயலும் மேற்கொள்ள வேண்டாம்[74] எனவும் கூறித் தன் ஊடல் தீர்கிறாள் காமக்கிழத்தி.

நீ விரும்பாத முயக்கம் எமக்குக் கனவில் கிடைக்கப் பெற்ற செல்வத்தைப் போன்று விளங்கும்[75] என்றும், நீ விரும்பியவரிடத்து அனுபவிக்கக் கருதியவற்றை அனுபவித்துப் பின் விருப்பம் இல்லாதபோது என்னையும் நினைப்பாய்[76] என்றும் கூறித் தன் ஊடலைத் தீர்க்கிறாள்.

மேற்கண்ட பல்வேறு பரத்தையர் கூற்றையும் ஒப்பு நோக்கிக் காணும்போது தலைவி தன்னைப் புறனுரைத்தாள் என்ற இடத்தும் தலைவன் பிற பரத்தையுடன் உறவு கொண்டான் என்ற இடத்தும் வருந்தியும் ஆற்றாதும் காணப்படுகின்றனர். தலைவன் தன்னை விட்டு நீங்கும் எண்ணம் கொண்ட இடத்து தன் அழகை மீண்டும் தரச் சொல்லியும் தம் மனத்தில் இருப்பதால் தலைவன் நீங்காதவனே என்று கூறியும் ஆறுதல் அடைகின்றனர். ஊடல் காலத்துத் தலைவன் வருவதால் ஊடல் நீங்கிக் கூடி மகிழ்கின்றனர்.

## 7.6 பிறர் கூற்று வழியிலான உறவு

சங்க இலக்கியத்தில் காணப்படும் பிறர் கூற்று வழி உறவுகள் என்பன வாயில்கள் தலைமை மாந்தரிடம் கொண்ட உறவாகவே உள்ளன.

'களவிலும் கற்பிலும் தலைவன் தலைவியர்க்குத் துணை நிற்பவர்கள் வாயில்கள் ஆவர். இவ்வாயில்கள் அகமாந்தர்களின் உணர்வு வெளியீட்டிற்கும், உறவு நிலைப்பேற்றுக்கும் வாயில்போன்று அமைந்து விளங்குபவர்கள்' [77]

வாயில்கள் பற்றிக் குறிப்பிடும் தொல்காப்பியர்,

*"தோழி தாயே பார்ப்பான் பாங்கன்*
*பாணன் பாடினி இளையர் விருந்தினர்*
*கூத்தர் விறலியர் அறிவர் கண்டோர்*
*யாத்த சிறப்பின் வாயில்கள் என்ப"* [78]

எனப் பன்னிரண்டு வாயில்களைத் தொகுத்துக் கூறுகிறார்.

இப்பன்னிரு வாயில்களுள் தோழி, தாய் ஆகிய இரு மாந்தரும் தலைவன் தலைவியருடன் நெருங்கி உறைபவராகக் காணப்படுவதால், இவ்வியலில் அவர்களைப் பற்றிய ஆராய்ச்சி மேற்கொள்ளப்படாமல் தனித்தனி இயல்களில் அவர்கள் ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளனர். தோழி, களவு, கற்பு ஆகிய இரு நிலையிலும் பல இடங்களில் வாயில் நேர்ந்திருக்கிறாள்.

தொல்காப்பியர் குறிப்பிடும் 'தாய்' என்பதற்குச் 'செவிலித்தாய்' எனக் கூறுவர் நச்சினார்க்கினியர். அவர் குறிப்பிடும் செவிலித்தாய் கூற்றுகளாக அமைந்துள்ள பாடல்களில் அவள், தலைவியின் பிரிவின் பொருட்டுப் புலம்புவதாகப் பாடல்கள் காணப்படுகின்றனவே அல்லாமல் வாயில் நேர்ந்ததாகப் பாடல்கள் இல்லை. எனினும் களவில் கூடும் தலைவி, தலைவனின் எண்ணம் முன்பே தெரிந்திருந்தால், தானே திருமணம் செய்திருக்க முடியும்[79] எனக் கூறுகிறாள். இக்கூற்று தாய் வாயிலாக இருக்க எண்ணுவதை உணர்த்துகிறது. ஆனால் தாய் இதுபோன்ற வாயிலாக இருந்தமையைக் காட்டும் ஒரு பாடல் கூட சங்க இலக்கியத்தில் இல்லை.

பார்ப்பான், மகளைப் பிரிந்த செவிலித்தாயைத் தேற்றும் வாயிலாக ஐங்குறுநூற்றில் ஒரு பாடல் மட்டும்[80] காணப்படுகிறது. இதுபோன்ற பாடல் வேறெங்கும் காணப்படவில்லை. மேலும் இவ்வாயிலைப் பற்றிக் கண்டோர் கூற்றில் விளக்கப்படுகிறது.

பாங்கன், பாணன், கண்டோர் ஆகியோரின் வாயில் கூற்றுப் பாடல்கள் உள்ளன. ஆனால் தொல்காப்பியர் குறிப்பிடும் பாடினி, விருந்தினர், விறலியர், அறிவர், கூத்தர், இளையோர் ஆகியோரின் கூற்றுகளாக வரும் பாடல்கள் சங்க இலக்கியங்களில் எங்கும் காணப்படவில்லை.

### 7.6.1 பாங்கன் கூற்றுவழி உறவு

பாங்கன் கூற்றுப் பாடல்களாகக் குறுந்தொகையில் குறிஞ்சித் திணையில் நக்கீரனார், மிளைப்பெருங்கந்தன் ஆகியோர் முறையே ஒவ்வொரு பாடலும்,[81] ஐங்குறுநூற்றில்

நெய்தல் திணையில் அம்மூவனார் ஒரு பாடலும்,[82] பாடியுள்ளனர். பிற இலக்கியங்களில் இத்தகைய பாடல்கள் காணப்படவில்லை.

குறுந்தொகையில் குறிஞ்சித் திணையில் அமைந்துள்ள பாங்கன் கூற்றில், தலைவன் கொண்ட காமம் நன்று தீதென்று அறியாத ஒருத்தியிடம் சென்றதால் வெறுக்கத்தக்கது[83] என்றும், அக்காமத்தைத் தன்னுடைய அறிவால் அடக்கி ஆள வேண்டும்[84] என்றும், தலைவன் வேறுபாட்டைக் கண்டு இடித்துரைக்கும் வண்ணம் உள்ளன.

ஐங்குறுநூற்று நெய்தல் திணைப் பாடலில் தலைவன் குறிப்பிட்ட குறிவழிச் சென்று தலைவனால் குறிக்கப்பட்ட தலைவியைக் கண்ட பின்னர் அறியாது தலைவனை இகழ்ந்த தன்னுடைய அறியாமை என்னே[85] என்று தனக்குள் கூறுகிறான்.

இக்கூற்றுகளால் தலைவனை இடித்துரைக்கும் செயலைப் பாங்கன் மட்டும் செய்கிறான் என்பதும் அதனால் ஏற்படும் மனநிலையும் அறியப்படுகிறது.

*''மொழிஎதிர் மொழிதல் பாங்கற் குரித்தே''*
*''குறித்தெதிர் மொழிதல் அஃகித் தோன்றும்''* [86]

என்ற தொல்காப்பியர் கூற்றிற்கேற்பப் பாங்கன் தலைவனது கூற்றுக்கு எதிராகக் கூறுகிறான்.

### 7.6.2 பாணன் கூற்றுவழி உறவு

பாணன் கூற்றுப் பாடல்கள் சங்க இலக்கியங்களில் ஐங்குறுநூற்றில் முல்லைத் திணையில் பேயனார் ஒரு பாடலும் கலித்தொகை பாலைத் திணையில் பெருங்கடுங்கோன் ஒரு பாடலும் அகநானூற்றில் ஒக்கூர் மாசாத்தனார் முல்லைத் திணையில் ஒரு பாடலும், பரிபாடலில் திணை குறிப்பிடப்படாத நிலையில் கரும்பிள்ளைப்பூதனார், நல்லந்துவனார் ஆகியோர் முறையே ஒரு பாடலும் என 5 பாடல்களைப்[87] பாடியுள்ளனர்.

தொல்காப்பியர்,

*''நிலம் பெயர்ந் துரைத்தல் அவள்நிலை உரைத்தல்*
*கூத்தர்க்கும் பாணர்க்கும் யாத்தவை உரிய''* [88]

என்று பாணர்க்குரிய கூற்று நிகழிடங்களைக் கூறுகிறார்.

இக்கூற்றுக்கேற்பத் தலைவியது நிலைமை கண்ட பாணன் தலைவன் இருக்கும் பாசறை சென்று, 'தலைவி நிலையை யானும் பிறரும் கூறக் கேட்டும் நீ அவளிடத்து அருள் செய்யாதிருப்பதால் நினக்கு யாம் பாணரும் ஆகோம். எமக்கு நீயும் தலைவனும் ஆகாய்'[89] என்கிறான். பரத்தையிடம் சென்ற தலைவனிடம் தலைவி பொருட்டுச் சென்ற

பாணன், 'உம் தலைவி அழகைப் பெற, தேரைப் பூட்டிச் செல்வாயாக'[90] என்று கூறுகிறான். பாணன் தலைவனிடம் செல்லப் புறப்படும் பொழுது தலைவனின் தேர் வருவது கண்டு தலைவியைச் சார்ந்தோரிடம், அவனுடைய வரவை உணர்த்துகிறான்.

தலைவன் போர்வயிற் பிரிந்த இடத்து இன்ன பருவத்தில் வருவேன் எனச் சொல்லிச் செல்கிறான். பருவம் வந்தும் அவன் வாராமையால் தோழி வருத்தம் மேற்கொண்ட தலைவியை ஆற்றுவிக்கிறாள். எனினும் தலைவி ஆற்றாதது கண்டு ஒரு பாணனை அவனிடம் தூதுவிடுகிறாள். அவன் தலைவனது பாசறைக்குப் போனபோதும், வேறொரு பாடலில் தலைவியது ஆற்றாமை கண்டு தலைவனிடம் தூதாய்ச் சென்ற பாணனும் தலைவனிடம் கார்ப்பருவத்தின் வரவையும், அதுபொழுது வையை ஆற்றில் நிகழும் நீர் விழாவின் சிறப்பு குறித்தும் எடுத்துக் கூறுகிறான்.[91]

இக்கூற்றுகள் வழி தொல்காப்பியர் கூறும் கூற்றுக்கேற்பப் பாணன் தலைவன் பிரிவால் வருந்தியிருக்கும் தலைவியின் நிலையைச் சேய்மைக்கண் பிரிந்திருக்கும் தலைவனிடம் சென்று உரைக்கும் வாயிலாக விளங்குவதை அறிய முடிகிறது.

### 7.6.3 கண்டோர் கூற்று வழி உறவு

சங்க இலக்கியத்தில் காணப்படும் கண்டோர் கூற்றுப் பாடல்கள் நற்றிணை, குறுந்தொகை ஆகியவற்றில் முறையே 3 பாடல்களும், ஐங்குறுநூறு, கலித்தொகை ஆகியவற்றில் முறையே 9 பாடல்களும் அகநானூற்றில் ஒரு பாடலும் என 25 பாடல்கள்[92] உள்ளன.

திணைவழிக் காணும்போது குறிஞ்சித் திணையில் ஒரு பாடலும்,[93] முல்லைத் திணையில் 2 பாடல்களும்,[94] நெய்தல் திணையில் 9 பாடல்களும்,[95] பாலைத் திணையில் 13 பாடல்களும்[96] பாடப்பெற்றுள்ளன.

நல்லந்துவனார் 9 பாடல்களும்,[97] ஓதலாந்தையார் 8 பாடல்களும் [98] பெரும்பதுமனார் 2 பாடல்களும்,[99] கயமனார், ஔவையார், மோதாசனார், உறையூர் முது கொற்றன், பேயனார், ஆகியோர்[100] முறையே ஒரு பாடலும், பெயர் தெரியாத புலவர் ஒரு பாடலும்,[101] பாடியுள்ளனர்.

தொல்காப்பியர்,

> *"பொழுது மாறும் உட்குவரத் தோன்றி*
> *வழுவின் ஆகிய குற்றங் காட்டலும்*
> *ஊரது சார்பும் செல்லுந் தேயமும்*

*ஆர்வ நெஞ்சமொடு செப்பிய வழியினும்*
*புணர்ந்தோர் பாங்கிற் புணர்ந்த செஞ்சமொடு*
*அழிந்தெதிர் கூறி விடுப்பினும் ஆங்கத்*
*தாய்நிலை கண்டு தடுப்பினும் விடுப்பினும்*
*சேய்நிலைக்கு அகன்றோர் செலவினும் வரவினும்*
*கண்டோர் மொழிதல் கண்டது என்ப''* [102]

என்று கூறுகிறார்.

#### 7.6.3.1 தலைவன் மடல் ஏற - தமர் மகட்கொடுத்திட கண்டோர் கூற்று

தலைவியின் பொருட்டுத் தோழியிடம் இரந்து பின்னின்ற தலைவன் மடல் ஏறிய வழி, அவள் தமர் அஞ்சித் தலைவியைக் கொண்டு வந்து கொடுத்தலைக் கண்டோர் கூறியது என்னும் துறையில் கலித்தொகையில் நல்லந்துவனார் பாடல் ஒன்றில்,

தலைவியின் அருமையைக் கூறி மடல்மா ஊர்ந்து புலம்பிய தலைவனுக்குத் தலைவியின் தமர் அவளை மகட்கொடையாக அளித்த காட்சியைக் கண்டோர் வியந்துரைக்கின்றனர்.[103]

#### 7.6.3.2 தலைவன் தலைவி உடன்போக்கில் கண்டோர் கூற்று

உடன்போக்கின் போது இடைச்சுரத்துக் கண்டோர் கூறியது என்னும் துறையில் நற்றிணை 2 பாடல்களும் குறுந்தொகையிலும், ஐங்குறுநூற்றிலும் முறையே 3 பாடல்களும்[104], பாலைத் திணையில் 6 பாடல்களும்[105] உள்ளன.

இத்துறை சார்ந்த 7 பாடல்களில் நற்றிணையில் உள்ள ஒரு பாடல் பாலைத் திணையாகவும், குறிஞ்சித் திணையாகவும் பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் குறிப்பிட்டுள்ளமை நோக்கத்தக்கது.[106] ஆனால் முழுப்பாடல் கருத்தின் அடிப்படையில் நோக்கினால் அது பாலைத் திணைக்கும் கண்டோர் கூற்றுக்கும் உரியதாகவே அமைகிறது எனலாம்.

கொடிய பாலைவழியில் தலைவியை உடன்போக்கில் கொண்டு செல்லும் தலைவனைக் கண்டோர் அவனுள்ளம் மலையைப் புரட்டித் தள்ளுகின்ற இடியைக் காட்டிலும் கடினமானது எனக் குற்றம் சாட்டுவர்.[107] வில்லுடைய இவ்வாடவனது காலில் வீரக்கழலும், தோள் வளை அணிந்த இம்மகளின் மெல்லடியில் சிலம்புகளும் உள்ளனவே! இந்நல்லோர் யாரோ? மணம் புரியாது செல்லும் இவர்கள் நிலை இரங்கத்தக்கது[108] என்றுரைக்கின்றனர். தலைவியைத் தேடிச் செல்லும் தாயின் அன்பையும், தலைவியின் மெல்லடித் தன்மையையும் வியந்துரைக்கின்றனர்.[109] ஊழின் வலிமையால் அவர்கள்

கூடினமையால் அவ்வூழை வியந்து போற்றுகின்றனர்.[110] வழியில் ஆறலைக் கள்வரின் இடர்ப்பாடு உண்டாதலால் இரவுப் பொழுதில் மேலும் செல்லுதலைத் தவிர்க்க வேண்டுமென அறிவுறுத்துகின்றனர்.[111] தலைவன் தலைவியின் அன்பை ஒன்றை ஒன்று பிரிந்தால் உயிர்வாழாத அன்றில் பறவையுடன் ஒப்பிட்டு வியப்படைகின்றனர்.[112] ஊரிடைத் தங்கும்போது தலைவியைக் கண்டு வருந்தும் பெண்டிரையும் கண்டு வருந்துகின்றனர்.[113] தலைவன் வளைத்த வெண்கடம்பின் பூவைப் பறித்துத் தலைவி தானும் சூடிப் பஞ்சாய்ப் பாவைக்கும் சூட்டுவதைக் கண்டு தலைவன் மகிழ்வதைக் கண்டோர் தாமும் மகிழ்கின்றனர்.[114]

### 7.6.3.3 கண்டோர் தலைவி தாயிடம் கூறும் கூற்று

தலைமகள் புணர்ந்துடன் போவதை இடைச்சுரத்துக் கண்டோர் அவள் தாயிடம் சென்று 'முதற்சூலில் பிறந்த தலைவி தலைவனுடன் காட்டைக் கடந்து சென்றாள். ஆதலால் நீ வருந்தாதே' [115] எனக் கூறி ஆற்றுவிக்கின்றனர்.

மகட்போக்கிய நற்றாயது நிலைமையைக் கண்டோர், 'என் உயிர் கெடுக' என வருந்துவதுடன் மகள் விட்டுச் சென்ற மணல் மீதுள்ள பாவையை எடுத்து அதன் கண்ணையும் நெற்றியையும் தடவி, நொச்சிச் செடியின் வரி நிழலில் கிடத்தி, தாழியிலுள்ள வாடிய குவளை மலரைப் பறித்து அப்பாவைக்குச் சூட்டி என் அரிய மகளே! உன்னை ஈன்ற என் மகளை எனக்குக் கொணர்ந்து காட்டுவாயாக' எனக் கூறி அழுதனளே என இரங்கிக் கூறுகின்றனர். இதிலிருந்து ஈன்ற தாயின் அன்புப் பித்து மனம் புலனாகின்றமையை அறிய முடிகின்றது.[116]

### 7.6.3.4 இடைச்சுரத்துத் தாயைக் கண்டோர் கூற்று

தலைவன் தலைவி உடன்போக்கு சென்ற வழியே பின் சென்ற செவிலி பலரையும் வினவுதலைக் கண்டோர், 'நின் மகள் காளை போன்றவனுடன் செல்வதை யாம் இடைச்சுரத்துக் கண்டோம்' [117] என்றும், கரிய அடியுடைய யா என்னும் மரத்தின் செறிவற்ற நிழலில் தங்கிச் சிறு மலைகளைக் கடந்து சென்றால் காணலாம்[118] என்றும் கூறுகின்றனர்.

இடைச்சுரத்து அந்தணரான கண்டோர் தாயிடம் 'பேதையம் பெண்டே' நின் மகள் தலைவன் பாராட்ட குன்றுகள் மிக்க உயர்ந்த மலைகளைக் கடந்து சென்றுவிட்டாள். ஆதலால் அவளைப் பின் தொடர்ந்து சென்று தேடித் துன்புற வேண்டாம்[119] என்று கூறுவன தாயின் அறியாமையையும், அவள் திரும்பிச் செல்லுதலே நலம் என்பதையும் உணர்த்து வனவாகும்.

### 7.6.3.5 உடன்போக்கு மீட்சியில் கண்டார் தாயிடம் கூறும் கூற்று

உடன் சென்ற தலைவி மீண்டு வருதலை அயலோராகிய கண்டோர் அத்தாய்க்குக் கூறும் துறையில் ஐங்குறுநூற்று ஒரு பாடலில் அயலோர், துன்புற்று அற நூல்களைச் சினந்து பழிக்கும் அன்னையிடம் விடலை முன்வர அவன் பின் நின் மகள் வந்தாள்[120] என்ற செய்தியைக் கூறுவதன் வாயிலாக, களவு ஒழுக்கத்தில் ஒழுகுதல், உடன்போக்கு செல்லல் ஆகியவை அறநூலுக்கு உடன்பாடே என்பதையும் அவற்றைத் தாய் பழிப்பது அவள் மகளின் பிரிவுத் துயரைத் தாங்காமையே என்பதையும் அறியலாம்.

### 7.6.3.6 கற்பில் தலைவன் மீட்சியில் தலைவியைக் கண்டார் கூற்று

கற்பில் தலைவன் பிரிவால் ஆற்றாத தலைவி மாலைப் பொழுதில் வருந்தியிருக்கும் அவ்வமயம் தலைவன் வர அதனால் அவள் உள்ளம் மலர்கின்றது.[121] மேலும் வேந்து பொருட்டுப் பிரிந்த தலைவன் திரும்பிவர வருந்திய தலைவி துன்பம் நீங்குகிறது.[122] இவற்றைக் கண்டோர் தலைவியது வருத்தத்தைக் கண்டவாறே கூறுவதைக் கலித்தொகை வாயிலாக அறியலாம். இதன்மூலம் கற்பில் தலைவன் பிரிவால் தலைவி படும் துயரும் அவன் மீண்ட காலை அவளது மகிழ்வும் அறியப்படுவதுடன் அவ்விருவரது கடமை உணர்வும் அகமகிழ்வுணர்வும் அறியலாம்.

வரைவிடைப் பிரிந்து நீட்டித்துழித் தலைவி பிரிவாற்றகில்லாது நாணுவரையிறந்து கலங்கி மொழிந்து அறிவழிந்துழி அவன் வந்து சாரத் தெளிந்தமை கண்டார் கூறிற்று என்னும் துறையில் நல்லந்துவனாரின் 6 பாடல்கள்[123] உள்ளன. அவற்றில் தலைவன் பிரிவால் மிக்க காமத்து மிகு திறன் என்பதன் அடிப்படையில் தலைவி தன் பிரிவுத் துயரை அவளைக் காண வந்தவரிடத்தும், சான்றோர், மேகம், ஊரவர், ஞாயிறு, திங்கள், காமம் முதலிய பொருள்களை நோக்கிக் கூறியும், தேடித் தரும்படி வேண்டியும் புலம்புகிறாள். அவளது நிலை கண்டோர் வியக்கின்றனர். அதுபொழுது தலைவன் வர, அவள் தன் துன்பம் தீர்ந்து அவன் மார்பைத் தழுவுகிறாள். இவ்வாறு அவளது நிலையையும் அவள் கூறும் புலம்பலையும் கண்டோரே கூறுவதாகப் பாடல்கள்[124] அமைந்துள்ளன.

### 7.6.3.7 தலைவன் மீட்சியை இடைச்சுரத்துக் கண்டார் கூற்று

தலைவன் வினைமுற்றித் திரும்பி வருதலை இடைச்சுரத்துக் கண்டோர், ‘பனிக்கடு நாளில் சென்று, இப்பொழுது மேகம் மழை பொழிய தலைவன் மார்பில் சந்தனத்தோடும் நல்லருளோடும் திரும்பி வருவதால் மகிழ்வேன்[125] என்று கூறுகின்றனர். நற்றிணையில் வரும் இப்பாடல் வழி தலைவன் வினைமுற்றி வருவதால் தலைவி மட்டுமன்றி கண்டோரும் மகிழ்வடைகின்றனர் என்பதை அறியலாம்.

வினை பலவற்றால் பிரிந்தொழுகும் தலைவன், தன் பிரிவை எண்ணும் போதே இல்லில் உள்ள தலைவி அஞ்சி மேனி நலம் குன்றுவாள் என்பதால் செலவைத் தவிர்த்து தலைவியுடன் உடன் உறைகிறான்[126] என்று ஐங்குறுநூற்றுப் பாடலில் உணர்ந்தோராகிய கண்டோர் உரைக்கின்றனர். இதிலிருந்து பிரிவற்ற தலைவன் தலைவியின் காதல் வாழ்வைக் கண்டு, கண்டோர் மகிழ்வதை அறியலாம்.

இவற்றால் கண்டோர் களவு கற்பு என்ற இரு நிலையில் வாயில்களாக உள்ளனர் என்பதும், தலைவன் தலைவியின் உடன்போக்கு உலகியல் அறமே என்றுரைப்பதுடன் அவர்களைப் பற்றிப் பல்வேறாக எண்ணுவதையும் அறியலாம். கற்பில் வினையால் பிரிந்த தலைவன் வந்துழி தலைவி கொண்ட மகிழ்வைத் தாமும் அடைகின்றன.

கண்டோர், தாயின் உணர்வை அறிந்து அவரைத் தேற்றும் முகமாகக் கூறும் கூற்று எண்ணிப் பார்க்கத்தக்கதாகும்.

### 7.6.4 பிற வாயில்களின் கூற்றுவழி உறவு

ஐங்குறுநூற்று மருதத் திணையில் உள்ள பாடலில் பரத்தை மாட்டுப் பிரிந்த தலைவன் மீண்டு வரத் தலைவி அவனுக்கு இன்துணைவியாய் ஆயினாள்! என்னே![127] என்று வியந்தும், கலித்தொகை நெய்தல் திணையில் உள்ள பாடல்களில் பிரிந்த தலைவனை எண்ணியிருக்கும் தலைவி மாலையில் புலம்பியிருக்கும் பொழுது, தலைவன் வந்து தீண்ட அவள் தளிர்த்தனள்[128] என்றும், கரை காண இயலாத நடுக்கடலில் மரக்கலம் சிதைந்து அழுந்துபவன் திரை கொண்டுவந்து தந்த ஒரு தெப்பத்தைப் பெற்றுப் பின்னர்த் தீதின்றிப் பிழைத்தது போலத் தலைவியது காதலன் விரைவில் வந்து சேர்ந்த துன்பம் யாவும் விரைவாய் நீங்கின, அதைக் காண்பீர்[129] என்றும் வியந்துவாயில்கள் தத்தமக்குள் கூறிக் கொள்கின்றனர்.

நற்றிணையின் ஒருபாடலில் தேர்ப்பாகன் வாயிலாக இருந்து போர்க்கள வேலை முடிந்து திரும்பிச் செல்லும் தலைவனுக்கு, 'நேற்று இரவுதான் வேந்தன் வினையினின்று விட்டான் என்று வருந்தாதே, பகல் விருந்தோம்பும் உன் மனைவியின் தோளில் துயில விரும்புபவனே! யான் விரைவில் கொண்டு சேர்ப்பேன்'[130] என்று கூறுகிறான்.

உழையர் வாயிலாக இருந்து கூறுவதனை முல்லைத் திணையிலுள்ள 3 அகநானூற்றுப் பாடல்களில் மட்டும் காணமுடிகின்றது.[131]

போர்க்கள வினை கொண்டு பிரிந்த தலைவனின் அருகில் உள்ள உழையர், வினை முடித்த தலைவனின் தேர் விரைந்து மாலைக் காலத்தில் நகரில் புகுவதனால் தலைவி

விருந்து பெறுவாள் போலும்[132] என்றும், வெற்றியுடைய மகிழ்ச்சியுடன் புக வேண்டின் தலைவியின் நெற்றியிலுள்ள பசலை எங்குத் தங்கும்[133] என்றும் கூறுகின்றனர்.

மேலும் வினைமுடித்து விரைந்து வந்த தலைவன் விரைந்து கொண்டு வந்த தேர்ப்பாகனைப் பாராட்டிப் பாகனைத் தழுவி வீட்டில் அழைத்துக் கொண்டு போயினான் என்பதனையும் அவன் வரவால் தலைவி மகிழ்ந்தாள் என்பதையும் கண்ட உழையர் தமக்குள் மகிழ்ந்து உரைக்கின்றனர்.[134]

சான்றோர் வாயிலாக இருந்து கூறுவதனை மருதத் திணையிலுள்ள 2 கலித்தொகை பாடல்களில் மட்டும் காணமுடிகின்றது.[135]

அரசனான தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்திருக்கிறான். அதனால் தலைவி புலவி கொண்டு ஆற்றாதவள் ஆயினள். அதுபோழ்து அவளுக்கு உண்டான காமநோயைச் சான்றோர் அவனுக்கு எடுத்துக் கூறுகின்றனர். அதன் மூலம் அவன் தலைவிக்கு அருள வேண்டும்[136] என்று உணர்த்துகின்றனர்.

தலைவனான குறளனும் தலைவியாகிய கூனியும் தாங்களே வாயில்களாக இருந்து தாங்கள் கொண்ட காதலை வெளிப்படுத்துவது கலித்தொகை ஒரு பாடலில் மட்டும் காணப்படுகிறது.[137]

கலித்தொகைப் பாடல் ஒன்றில், 'காளை ஒருவன் முரட்டுக் காளையைத் தழுவி அடக்கினான்; அதனால் அவன் மணப்பதற்குரிய மங்கையையும் அவனது அரிய செயலையும் யாவரும் பாராட்டுகின்றனர்[138] எனச் சுற்றத்தார் கூற்றாகக் கூறப்படுகிறது. இதன் வழித் தலைவன் தலைவியின் திருமணம் அறிவிக்கப்படுவதுடன் ஏற்றுக் கொள்ளப்பட்டமையும் அறியமுடிகிறது.

ஆய்ச்சியர் மகிழ்வைக் கூறும் கலித்தொகையின் ஒரு பாடல் ஆயர் தம் எருமை முதலிய இனங்களைத் தகுந்தவாறு இருப்பிடங்களுக்குச் செலுத்தினர்; அவர் செயல் கண்டு மகிழ்ந்த ஆய்ச்சியர் அவர்களுடன் கைக்கோத்துக் குரவைக் கூத்தாடி மகிழ்ந்தனர்[139] எனக் காட்டுகிறது.

பிற வாயில்களில் தேர்ப்பாகன், உழையர், சுற்றத்தார், ஆய்ச்சியர் ஆகியோர் தலைவன் தலைவியரின் மகிழ்வையும், செயலையும் கண்டு தத்தமக்குள் பேசி மகிழ்கின்றனர். சான்றோர் பிரிந்திருக்கும் அரசனைத் தலைவிக்கும் அருளவேண்டும் என உணர்த்துகின்றனர். குறளனும் கூனியும் தத்தம் காதலைத் தாமே வெளிப்படுத்தும் வாயிலாக விளங்குகின்றனர்.

## 7.7 ஆய்வு முடிவுகள்

1. சங்க இலக்கியங்களில் பரத்தை கூற்றாக 54 பாடல்கள் உள்ளன.

2. பரத்தை கூற்றாகத் திணை முறையில் வரும் பாடல்கள், மருதத் திணை, நெய்தல் திணை, குறிஞ்சித்திணை ஆகியவற்றில் முறையே அடுத்தடுத்த இடத்தில் உள்ளன.

3. இற்பரத்தை, காதற்பரத்தை, குலப்பரத்தை, நயப்புப்பரத்தை, காமக்கிழத்தி ஆகிய பெயர்களால் பரத்தை குறிப்பிடப் பெறுகிறாள்.

4. இவ்வியலில் மேற்கூறிய முறையில் அவரவர் தம் கூற்றுவழி ஆய்வுகள் நிகழ்த்தப் பெற்றாலும் அனைவரிடமும் ஒன்று போன்ற எண்ணங்களே உள்ளமை அறியலாம்.

5. காமக்கிழத்தி என்பவள் பிற பரத்தையரின் வேறுபட்டவளாய், ஒருவனையே விரும்பித் திருமணம் செய்து கொண்டவள் ஆவாள். எனவே 'தலைவி'யை ஒப்ப மதிக்கப்படுபவள் என்னும் பொருளில் 'கிழத்தி' எனும் சொல்லுடன் காமக்கிழத்தி என்று அழைக்கப்பட்டுள்ளமை அறியலாம்.

6. தலைவியை ஒப்பக் காமக்கிழத்தி மதிக்கப்படுவதால்தான், கலித்தொகையில் காமக்கிழத்தி கூற்றாக உள்ள பாடல்கள், தலைவன் பிற பரத்தையிடம் சென்றமை குறித்து, தலைவியைப் போன்றே காமக்கிழத்தி ஊடல் கொண்டமையாக அமைந்துள்ளன.

7. பரத்தையர்க்கும் தலைவியைப் போன்ற உணர்வுகள் மேலோங்கி இருப்பதைக் காண முடிகின்றது. தலைவனைப் பரத்தையர் முழுநேரமாக பெறுகின்ற பேறற்றவர்கள்; அப்பரத்தையர் தலைவனைக் கண்ணால் காண்டலே போதும் எனவும், அவனைத் தம் நெஞ்சில் எப்பொழுதும் உடையவர் எனவும், பிரியுமிடத்தும் தம் நெஞ்சிலேயே அவன் இருப்பதால் வருத்தமின்றி மகிழ்ச்சி கொள்வதாகவும், வேறு பரத்தை மாட்டுத் தலைவன் பிரியும் போது அது குறித்துப் பரத்தை வருந்துவதாகவும் கூறப்படும் செய்திகள் தலைவியின் உணர்வை ஒத்துள்ளமை குறிப்பிடத்தக்கன.

8. பரத்தை தலைவனின் விருப்பத்திற்கேற்ப ஒழுகுதலன்றி தனக்கெனத் தனி விருப்பமில்லாதவள்.

9. தலைவன் பிரிவையும், தன் காதலையும் ஒப்பிட்டாய்ந்து தான் கொண்டுள்ள காதல் சிறப்பைத் தலைவன் அறியாதவனாக உள்ளான் என்றெண்ணி ஏங்குகிறாள் பரத்தை.

10. உலகியல் வழித் தலைவி மாட்டுத் தலைவன் பிரிந்து செல்வதைப் பரத்தை ஏற்றுக் கொள்கிறாள்.

11. அக்காலச் சமுதாயம் முதுமை அடைந்த பரத்தையைப் பெரிதும் பாதுகாத்துப் போற்றுதல் இல்லை.

12. பரத்தை தலைவியைத் தன் தங்கையாகக் கருதுகிறாள்.

13. தலைவி, தன்னைப் புறங்கூறினாள் எனப் பிறரால் கூறக் கேட்கும் பரத்தை தலைவியை அறியாமை உடையவளாகக் கருதுகிறாள்.

14. பரத்தை தன்னையும் தலைவனையும் சேர்த்து இகழ்ந்துரைக்கும் தலைவியைத் தானும் பலவாறு இகழ்ந்துரைக்கிறாள்.

15. தலைவனிடம் கொண்டுள்ள உறவைக் குறிக்கத் தலைவி 'அன்பு' என்னும் சொல்லைப் பயன்படுத்துகிறாள். ஆனால் பரத்தை 'நட்பு' என்னும் சொல்லைப் பயன்படுத்துகிறாள்.

16. பிறர் கூற்று வாயில்களாகவே அமைந்துள்ளன.

17. தொல்காப்பியர் குறிப்பிடும் வாயில்களில் பாடினி, விருந்தினர், விறலியர், அறிவர், கூத்தர், இளையோர் ஆகிய வாயில்களின் கூற்றுகள் சங்க இலக்கியங்களில் காணப்படவில்லை.

18. பாங்கன் களவு வாழ்வில் தலைவன், தலைவி மாட்டுக் கொண்ட காதலை அறிந்து அவனுக்குக் காமத்தின் செயலை விளக்கி அறிவுறுத்துவதுடன், தலைவன் காட்டிய தலைவியைக் கண்டு தன் செயலுக்காக வருந்தவும் செய்கிறான்.

19. கற்பு வாழ்வில் தலைவன் தலைவியைப் பிரிந்த காலத்துப் பாணன் தலைவியது நிலைகண்டும், தோழியால், தலைவன் இருக்கும் இடம் சென்று தலைவியது நிலைமையைக் கண்டும் தலைவனிடம் எடுத்துக் கூறுகிறான். இது தலைவன் தலைவி பிரிவை நீக்கச் செய்வதுடன் இல்லறம் சிறப்புற அமைய வழிகோலுகிறது.

20. கண்டோர் கூற்று களவு, கற்பு ஆகிய இரு நிலையிலும் அமைகிறது. களவில் தலைவன் தலைவி உடன்போக்கு மேற்கொண்டபோது இடைச்சுரத்துக் கண்டோர் அவர்களுக்கு இரங்கியும் அவர்கள் செயல்கண்டு போற்றி மகிழ்ந்தும் வழியினது கொடுமையால் தலைவனைக் குற்றம் சாட்டியும், அவ்வழி பற்றி அறிவுறுத்தியும் உரைப்பதைக் காணலாம். தலைவியைத் தேடிச் செல்லும் தாயைக் கண்டோர் அவள் வினாவிற்குப் பதில் உரைப்பதுடன் தலைவன் தலைவியர் செயல் அறமே என்றும், உலகின் நடைமுறை சிலவற்றை எடுத்துக்காட்டி அறிவுறுத்தவும் செய்கின்றனர். தலைவி உடன் போக்கையும், மணம் முடித்து மீண்டு வருதலையும் இல்லில் உள்ள தாயருக்கு அறிவிப்பது கண்டோர் செயலாகும்.

    கற்பில் தலைவன் வினைமேற்கொண்டு பிரிந்து வரும்பொழுது இடைச்சுரத்துக் கண்டோர் மகிழ்கின்றனர். மேலும் தலைவன் பிரிந்த இடத்து தலைவியது நிலையையும், அவன் மீண்டு வந்தவிடத்து அவனைக் கண்டு தலைவி மகிழ்வடைவதையும் கண்டோர் வியந்து கூறுவதைக் காணலாம்.

21. பிற வாயில்கள், தலைவன் தலைவிக்குள்ள அன்பை வியந்து பாராட்டுவதைக் காணலாம். குறளனும் கூனியும் தமக்குள் உள்ள அன்பைத் தாமே வெளிப்படுத்தும் வாயிலாக அமைந்துள்ளனர்.

22. தலைவன் தலைவியைக் கண்டு அஞ்சுபவன் என்பது பரத்தை கூற்றுவழி உணரலாம்.

23. உடன்போக்கால், பெற்ற தாயும் வளர்த்த தாயும் அடையும் துன்பம் பல கோணங்களில் கூறப்பட்டுள்ளமையால் தாயின் மனம் பித்து என்பது புலனாகின்றது.

# அடிக்குறிப்புகள்

1. வ.சுப. மாணிக்கம் 'தமிழ்க் காதல்' பக். 276
2. ஜி.ஜான். சாமுவேல், 'திறனாய்வுச் சிந்தனைகள்' பக். 53
3. சாலினி இளந்திரையன், 'சங்க அக இலக்கியங்களில் பாத்திரங்களின் பண்போவியம்', பக். 3
4. தொல். பொருள். களவு. III நச்சர் உரை. பக். 60
5. கழகத் தமிழ் அகராதி. பக். 589
   Tamil Lexicon, Vol. IV, Pa. 2495
6. Tamil Lexicon, Vol. I, Pa. 360
7. அகம். 336, துறைவிளக்கம், மாணிக்கனார் உரை, பக். 117
8. Tamil Lexicon, Vol. II, Pa. 862
9. நம்பி. அகத். 113, பழைய உரை, பக். 56
10. ஈ.கோ. பாஸ்கரதாஸ், 'அகப்பொருள் பாடல்களில் தலைவி' பக். 81
11. வ.சுப. மாணிக்கம், 'தமிழ்க்காதல்', பக். 284
12. தொல். பொருள். கற்பு, 149:11
13. வ.சுப. மாணிக்கம், 'தமிழ்க்காதல்', பக். 290
14. ஆ. இராமகிருட்டினன், 'அகத்திணை மாந்தர் ஓர் ஆய்வு' பக். 201
15. நற். 100, 150, 176, 216, 225, 290, 310, 315, 320, 390, 400, குறு. 80, 370, ஐங். 38, 39, 77, 78, 79, 81, 86, 88, 121-128, அகம். 76, 106, 166, 216, 276
16. நற். 176, 225
17. நற். 100, 150, 216, 290, 310, 320, 390, 400, குறு. 80, 370, ஐங். 38, 39, 77, 78, 79, 81, 86, 88, அகம். 76, 106, 166, 216, 276
18. நற். 315, ஐங். 121-128
19. மேற்படி
20. ஐங். 38, 39, 77, 78, 79, 81, 86, 88
21. நற். 100, 310, அகம். 76, 276
22. நற். 225, 320, 216, 290, 390, குறு. 80, நற். 400, அகம். 106
23. நற். 150, குறு. 370, அகம். 166, 216
24. நற். 176
25. நற். 315
26. நற். 400
27. ஐங். 81
28. ஐங். 77
29. ஐங். 78
30. ஐங். 86

31. ஐங். 121-128
32. நற். 225
33. குறு. 80
34. குறு. 370
35. ஐங். 88
36. அகம். 76
37. அகம். 106
38. அகம். 276
39. அகம். 216
40. நற். 320
41. அகம். 166
42. ஐங். 38
43. ஐங். 39
44. ஐங். 79
45. நற். 390
46. நற். 100
47. நற். 176
48. நற். 290
49. நற். 150
50. நற். 290
51. குறு. 8, 164, ஐங். 37, 40, 87, 89, 90, அகம். 376, 396
52. மேற்படி
53. ஐங். 37, 40, 87, 89, 90
54. அகம். 376, 396
55. அகம். 8, 164
56. அகம். 396
57. அகம். 376
58. ஐங். 90
59. குறு. 08
60. குறு. 164
61. ஐங். 87
62. ஐங். 37
63. ஐங். 40
64. ஐங். 89
65. குறு. 364, அகம். 186
66. குறு. 364
67. அகம். 186

68. அகம். 336
69. கலி. 68, 69, 71, 72, 74, 78, 90, 91
70. கலி. 71
71. கலி. 72
72. கலி. 74
73. கலி. 90
74. கலி. 92
75. கலி. 68
76. கலி. 69
77. ஆ. இராமகிருட்டினன், 'அகத்திணை மாந்தர் ஓர் ஆய்வு' பக். 209
78. தொல். பொருள். கற்பு. 52
79. அகம். 263
80. ஐங். 387
81. குறு. 78, 204
82. ஐங். 173
83. குறு. 78
84. குறு. 204
85. ஐங். 173
86. தொல். பொருள். கற்பு. 180, 181
87. ஐங். 480, கலி. 30, அகம். 14, பரி. 10, 20
88. தொல். பொருள். கற்பு. 167
89. ஐங். 480
90. கலி. 30
91. பரி. 10, 20
92. நற். 02, 324, 394, குறு. 07, 229, 390, ஐங். 381, 382, 383, 386, 387, 388, 390, 393, 421, கலி. 120, 141-148, அகம். 165
93. நற். 324
94. நற். 394, ஐங். 421
95. கலி. 120, 141-148
96. நற். 02, குறு. 07, 229, 390, ஐங். 381-383, 386-388, 390, 393, அகம். 165
97. கலி. 120, 141-148
98. ஐங். 381-383, 386-388, 390
99. நற். 02, குறு. 07
100. நற். 324, 394, குறு. 229, 390, ஐங். 421
101. அகம். 165
102. தொல். பொருள். அகத். 43
103. கலி. 141

104. நற். 2, 324, குறு. 7, 229, 230, ஐங். 381-383
105. நற். 2, குறு. 7, 229, 230, ஐங். 381-383
106. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் உரை, 'நற்றிணை நானூறு', பக். 550
107. நற். 02
108. குறு. 07
109. நற். 324
110. குறு. 229
111. குறு. 390
112. ஐங். 381
113. ஐங். 382
114. ஐங். 383
115. ஐங். 386
116. அகம். 165
117. ஐங். 390
118. ஐங். 388
119. ஐங். 387
120. ஐங். 393
121. கலி. 120
122. கலி. 148
123. கலி. 142, 143, 144, 145, 146, 147
124. மேற்படி
125. நற். 394
126. ஐங். 421
127. ஐங். 96
128. கலி. 130
129. கலி. 134
130. நற். 121
131. அகம். 324, 354, 384
132. அகம். 324
133. அகம். 354
134. அகம். 384
135. கலி. 99, 100
136. மேற்படி
137. கலி. 94
138. கலி. 102
139. கலி. 106

# 8. புறப்பாடல் புலவர் கூற்றுவழி உறவுகள்

| | |
|---|---|
| 8.0 | முன்னுரை |
| 8.1 | புலவர் மன்னனிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு |
| 8.2 | புலவர் வள்ளலிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு |
| 8.3 | புலவர் தன் மனைவியிடம் கூறும் கூற்றுவழி உறவு |
| 8.4 | புலவர் தலைவனிடம் கூறும் கூற்றுவழி உறவு |
| 8.5 | புலவர் குறுநில மன்னனிடம் கூறும் கூற்றுவழி உறவு |
| 8.6 | புலவர் சிற்றரசனிடம் கூறும் கூற்றுவழி உறவு |
| 8.7 | புலவர் சான்றோரிடம் கூறும் கூற்றுவழி உறவு |
| 8.8 | புலவர் - புலவரிடம் கூறும் கூற்றுவழி உறவு |
| 8.9 | புலவர் பாணனிடம் கூறும் கூற்றுவழி உறவு |
| 8.10 | புலவர் - விறலியிடம் கூறும் கூற்றுவழி உறவு |
| 8.11 | புலவர் வாயிலோனிடம் கூறும் கூற்றுவழி உறவு |
| 8.12 | புலவர்-நெஞ்சிடம் கூறும் கூற்றுவழி உறவு |
| 8.13 | கணவனை இழந்த மனைவியின் நிலை<br>எண்ணிக் கூறும் கூற்றுவழி உறவு |
| 8.14 | பிறர் கூற்று நிலையில் புலவர் கூறும் கூற்றுவழி உறவு |
| 8.15 | புலவர் அஃறிணைப் பொருள்களிடத்து நிகழ்த்தும் கூற்றுவழி உறவு |
| 8.16 | புலவர் பொதுநிலையில் கூறும் கூற்றுவழி உறவு |
| 8.17 | ஆய்வு முடிவுகள் |

# 8. புறப்பாடல் புலவர் கூற்றுவழி உறவுகள்

8.0 சங்க இலக்கியங்கள் மனித வாழ்வின் மாண்புக்குரிய களஞ்சியமாகத் திகழ்கின்றன. அவ்விலக்கியங்கள் மனித வாழ்வின் அகவொழுக்கம், புறவொழுக்கம் என்ற இரண்டு நிலைகளில் மனித உறவுகளைப் பேசுகின்றன.

அகவாழ்வுக்குப் புறவாழ்வும், புறவாழ்வுக்கு அகவாழ்வும் ஒன்றுக்கொன்று உறுதுணைப் பயப்பனவாக உள்ள உண்மை நாம் உணரத்தக்கது. எவ்வாழ்விலும் உயர்ந்த மனித நேய உறவுகள் பின்பற்றப் பட வேண்டும். அவையே வாழ்க்கையில் வெற்றி தேடித் தரும் படிக்கற்களாய்ப் பயன்படும். அகவாழ்வு காதல் உறவை மையப்படுத்தி விளங்க, புறவாழ்வு மனிதனின் நாகரிகம், பண்பாட்டின் அடிப்படையிலான ஒழுக்கத்தை மையப்படுத்தி விளங்குகிறது எனலாம்.

சோ. இலக்குமிதரன் பாரதி என்பவர் பண்பாடு பற்றிக் கூறும்பொழுது,

> *''பண்பாடு என்பதும் மக்களுடைய சிந்தனை, சொல், செயல், கருவிகள் ஆகிய அனைத்தின் முழுமையாகும். இயற்கையாகப் பிறவியில் பெறுவதல்ல, எண்ணித் துணிந்து ஏற்றுக்கொள்வது. மீண்டும் மீண்டும் செய்து பதமாகியது''* [1]

என்கிறார்.

> *''நாகரிகம் என்பது திருந்திய வாழ்க்கை. அது எல்லாப் பொருள்களையும் தமக்கே பயன்படுத்துவது. பண்பாடு என்பது திருந்திய ஒழுக்கம். அது எல்லாப் பொருள்களையும் தமக்கும் பிறர்க்கும் பயன்படுத்துவது''* [2]

என்று ஞா. தேவநேயன் நாகரிகம், பண்பாடு ஆகியவற்றுக்கு விளக்கம் கூறுகிறார்.

> *''தம்மைச் சார்ந்தோருக்கு உண்டாகும் துன்பத்தைத் தவிர்ப்பதே ஒரு மனிதனுக்கு உயர்ந்த பெருமையைத் தருகிறது என்னும் இந்த வாசகம் அடிப்படையில் மனித உறவுகளைப் பற்றியதாக இருப்பதால் அதுவே நாகரிக நடைமுறைக்கு இலக்கணமும் ஆகிவிடுகிறது. மனிதப்பண்பின் ஒரு*

*பெரும் கூறாகிய இதய நெகிழ்வே மனித வாழ்வின் அடிப்படையாக அமைய வேண்டும் என்கிற தெளிவும் தெளிவாகப் பிறந்து விடுகிறது''* [3]

என்று மனிதன் பிற மனிதனிடம் கொள்ளும் உறவு நாகரிகத்தின் இலக்கணமாக அமைவதை சாலினி இளந்திரையன் சுட்டுகிறார்.

இவற்றை நோக்கும் பொழுது, மனிதன் முன்பின் அறிமுகமில்லாதோரிடத்தும் அவர் எதிர்ப்பட்ட போது உறவு கொண்டு அவர்தம் துன்பத்தை நீக்குதலே புறவாழ்வு எனலாம். இம்முறையில் சங்க காலத்தில் புரவலன், வள்ளல் ஆகியோர் புலவரை ஆதரித்தும் புலவர் அரசன் தன் வாழ்வில் தீயநெறிச் சென்றால் இடித்துரைத்தும், துன்பத்தில் பங்கு கொண்டு இன்னுரை ஆற்றியும், புலவர் தம்மைப் போன்று துன்புற்றார் இன்னலைப் போக்க, தாம் சென்று பயன் பெற்றாரிடம் ஆற்றுப்படுத்தியும் உதவினர் எனலாம். மேற்கூறியவாறு அறிமுகம் இல்லார் மாட்டும் போர், அறம், கொடை, விருந்தோம்பல் ஆகியவற்றால் உறவுகள் மலர்ந்தன.

அக, புற உறவுகள் பற்றிக் குறிப்பிடுகின்ற சி. பாலசுப்பிரமணியன்,

*''அகவாழ்வு வீட்டு இன்பத்திற்கும் புறவாழ்வு நாட்டுச் சிறப்புக்கும் உரமூட்டின''* [4] *என்கிறார்.*

சங்க காலச் சமுதாயத்தினரும் புறவாழ்வின் சிறப்பை அறிந்து விருப்புற்றுத் தங்கள் கடமையாகச் செய்தனர் என்பதை,

*''தம் குடும்பத்தையும், நாட்டையும் காத்தற் பொருட்டுத் தம்முயிர் கொடுத்துச் செய்தற்குரிய ஆண்மைத் திறத்தைத் தம்வழியினர் பெறுதல் வேண்டும் என்பது தமிழ்ச் சமுதாய முன்னோர்களின் விருப்பம். அதை நிறைவேற்றுதல் பின்னோர் கடமையாக இருந்தது''* [5]

என்னும் செந்துறை முத்து கூற்றால் அறியலாம்.

*''அறம், பொருள், வீடு என்ற மூன்றையும் குறிக்க வருவனவெல்லாம் புறத்திலே சார்த்திப் பேசப்பெறும். இப்புறத்தில் கடவுள் நெறி முதலாக, அறமாற்றல், பொருள் பெருக்கல், அவற்றில் வரும் சிக்கல்கள், அவற்றைத் தீர்க்கும் முறைகள், வாயில்கள் இன்னபிற வெல்லாம் விளக்கமாகப் பேசப் பெறுவன''* [6]

என்றுரைக்கிறார் அ.மு. பரமசிவானந்தம்.

மேலும் புறத்திணைப் பற்றிக் கூறும் சாமி. சிதம்பரனார்,

*"கண்ணாற் கண்டு வாயால் விளக்கிச் சொல்லக்கூடிய செய்திகள் அனைத்தும் புறப்பொருளிலே அடங்கும். அரசர்களுடைய போர்முறை அவர்களுடைய ஆட்சியின் பெருமை; அவர்களுடைய வீரம், கொடை, புகழ், வரலாறு ஆகியவைகள் எல்லாம் புறப்பொருளில் அடங்கும். வாணிகம், கைத்தொழில் நீதி ஆகியவைகளும் புறத்திணைச் செய்திகளே"* [7]

என்று குறிப்பிடுகிறார்.

அரசர், வள்ளல், தலைவன், இரவலர், பகைமன்னன், பாணன். விறலி, பிறபுலவர், நெஞ்சு, தன் மனைவி, சான்றோர், குறுநில மன்னன், சிற்றரசர் ஆகியோருடன் பொதுநிலையிலும் பிறர் கூற்று நிலையிலும் பிற பொருள்களிடத்துப் புலவர் நிகழ்த்தும் கூற்றுகள் வழிப் பிறக்கும் உறவுகள் ஆராயத்தக்கன.

## 8.1 புலவர் மன்னனிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

புலவர்கள் தம் வறுமை காரணமாக மன்னனை நாடிச் சென்று அவன் புகழும், மூத்தோர் தம் புகழும் பாடிப் பரிசில் பெற்று வருவர் என்பது சங்கப் புலவர்களைப் பற்றிய ஒரு பொதுவான கருத்தாகும்.

*"உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்*
*அனைத்தே புலவர் தொழில்"* [8]

என்று திருவள்ளுவர் புலவரின் தொழில் பற்றிக் கூறுகிறார்.

புலவர், புலமையோர், புலமை எனும் சொல்லுக்குப் பொருளுரைக்கும் சென்னைப் பல்கலைக் கழக அகராதியின், கீழ்வரும் சில கூற்றுகள் இங்கு எண்ணத் தக்கவை ஆகும்.

அவை "புலவர் pulavar n < புல-மை புலமையோர், [wise man, sages;] ஞானிகள், [Dancers, actors] கூத்தர், ஓவியம் முதலிய கலைவல்லார்[9] [Artists] என்பதும்,

'புலமையோர்' என்ற சொல்லுக்குக் கவி, கமகன், வாதி, வாக்கி என்ற நால்வகைக் கல்வி வல்லோர் என்பதும்,

'புலமை' என்ற சொல்லுக்கு, கல்வி [Knowledge, learning] மெய்ஞ்ஞானம், [spiritual, wisdom] செய்யுளியற்றும் ஆற்றல் [Poetic talent or ability][10] என்பதும் ஆகும்.

கழகத் தமிழகராதி 'புலவர்' என்ற சொல்லுக்கு, அறிஞர், கவிவாணர், பொருநர், புலமையோர், ஓவியம் முதலிய கலைவல்லார் எனச் சில பொருள் தருகிறது.[11]

மன்னர்கள் தமக்குள் வஞ்சித்துப் போர் செய்வதற்கான காரணங்களாக ஆய்வறிஞர்கள் கூறும் கருத்துகள் இங்கு நோக்கத்தக்கன.

> *''அரசர் போர், ஆசை, பாதுகாப்பு, பகை, தண்டனை, மறம், அருள் என்னும் அறுவகைக் காரணத்தாற் பிறக்கும்; 'மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை, புகழாசை, விண்ணாசை என்ற ஐவகை ஆசைகள், தற்காப்பு, நாட்டுக்காப்பு, மதக்காப்பு எனும் மூவகைப் பாதுகாப்பு, பழிதீர்ப்பு, பழம்பகை, பொறாமை எனும் மூவகைப் பகை, இகழ்ச்சி, திறையிறாமை, படையெடுப்பு ஆகிய மூன்று தண்டனை, கடுமறம், தன்குடி, பிறர்குடி மேல் கொண்ட அருள் ஆகிய அறுவகை காரணமாகப் போர்கள் தோன்றலாம்''* [12]

என்கிறார் ஞா. தேவநேயன்.

> *''பொருள் பெருக்கல், நாடுபிடித்தல், புகழ் பெருக்கல், பழியும் அவமானமும் ஏற்படாமல் தன்னைக் காத்தல் பகைவர் செருக்கடக்கல்''* [13]

என்றுரைக்கிறார் பொற்கோ.

> *''நாடு கொள்ளும் நாட்டம், பேரரசு அமைக்கும் பேரவா, திறைதரத் தவறும் சூழல், மகள் மறுத்தல் நிலை, நாடிடைப் பட்ட பகுதிகளின் கண் ஆதிக்க விருப்பம்''* [14]

என்று மா. இராசமாணிக்கனார் குறிப்பிடுகிறார்.

> *''அளவு கடந்த மண்ணாசை, தம்குடிகளுக்கு வாழ்விடம் நாடல், தம் படைவலி, தம் செங்கோல், தம் ஆணை ஆகியவற்றை அனைவரும் ஒப்புக் கொள்ளச் செய்து, அரசருக்கு அரசராக விளங்கும் ஆர்வம், உறவினரிடமிருந்து அரசுரிமை பெறும் விருப்பம், மானம் காத்தல், பிறன் மகளை மணக்கும் விருப்பம்''* [15]

என்று சு. வித்தியானந்தம் கூறுகிறார்.

இவ்வாய்வறிஞர் தம் கூற்றுகள் வழியே சங்க இலக்கியப் புற மாந்தர்தம் வீரம், வஞ்சினம், மகட்கொடை, மகள் மறுத்தல் ஆகிய நிலைகளில் போர் நிகழ்வுகள் அமைந்திருக்கின்றன என்பதை அறிகிறோம்.

மேலும் பண்டைத் தமிழர்தம் புறவாழ்வாகப் புலவர் சந்து செய்வித்தல், அவர் மன்னரிடம் பரிசில் வேண்டும் முறை, மன்னனிடம் உரையாடும் நிலை, அவனை நல்வழிப்படுத்தல், நண்பனாக ஏற்றல், அவனுக்கு உதவிடுதல், போர் வீரனின் வீரச் செயல், வீரத்தாயின் விருப்பம், வீர மனைவியின் செயல், குடிமக்கள் செயல் ஆகியன அறிவும் அறமும் சார்ந்த நிலையில் உண்மைத் தன்மை உடையதாக விளங்குகின்றன.

இதனையே,

> ***''மனத்திட்பம், மதிநுட்பம், நிர்வாகத் திறன், நல்லமைப்பு முறைகள், நற்பயிற்சி, நல்லறநாட்டம், இடம் காலத்திற்கு ஏற்ப எண்ணிச் செயல்படல் ஆகியவற்றால் வலிமை, ஆற்றல், வெற்றி, சிறப்பு, புகழ் ஆகிய அனைத்தும் எய்தலாம் என்றும் இது பழந்தமிழர் வாழ்ந்து விளக்கிய உண்மை''*** [16]

என்று தங்கங் கந்தசாமி கூறுகிறார்.

வஞ்சித் திணை, துணைவஞ்சியில் புலவர் மன்னனிடம் கூறும் கூற்றுகள் 5 பாடல்களில்[17] காணப்படுகின்றன.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் கருவூரை முற்றுகை யிட்டிருந்தபோது ஆலத்தூர் கிழார் என்ற புலவர், மன்ன! நின் வீரர்கள் பகை மன்னரின் காவல் மரத்தை வெட்டுகின்றனர். வெட்டும் ஓசையை நின் பகை மன்னன் காதில் ஒலிப்பதைக் கேட்டும் அவன் நின்னை எதிர்க்க வரவில்லை. அப்படிப்பட்டவனிடம் நீ போரிடத் துணிந்தாய் என்பது வெட்கப்படத்தக்கதாகும். எனவே இனிப் போரிடுவாயோ? விடுவாயோ அறியேன். ஆனால் உனக்குப் புகழ் உண்டாகாது என்பதை அறிவாயா?[18] என்று கூறிச் சந்து செய்கிறார்.

அரணுக்குள் உள்ள நெடுங்கிள்ளியை முற்றுகையிட்ட நலங்கிள்ளியை நோக்கி, புலவர் கோவூர்க்கிழார், நீயும் அவனும் சோழரே! உமக்குள் எவர் தோற்றாலும் தோற்பது உம் சோழர் குடியே! நீவிர் இருவரும் போரில் வெற்றிபெறுதல் என்பது உலக இயற்கையன்று. எனவே நீங்கள் இப்போரைத் தவிர்த்தல் வேண்டும்[19] என்று அறிவுறுத்திப் போரைத் தடுக்கிறார்.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் மலையமான் மக்களை யானைக்காலில் இட்டுக் கொலை செய்ய இருந்தபோது கோவூர்கிழார், நீ புறாவின் துன்பம் தீர்த்த சிபியின் வழியில் வந்தவன். இச்சிறுவர்கள், புலவரின் வறுமையைப் போக்கும் அருள் உடையவரின் மரபிலே வந்தவர்கள். அவர்கள், கொல்ல வரும் யானையைக் கண்டு அழுகின்ற அழுகை மறந்து நிற்கின்ற பச்சிளங் குழந்தைகள். நான் இப்போது கூறியதைக் கேட்டனையானால் நீ விரும்பியதைச் செய்வாயாக![20] என்று மன்னனுக்கு அருட்செயலை நினைவூட்டி அவன் தீய எண்ணத்தை மாற்றுகிறார்.

பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனிடம் காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக்கண்ணனார், நீயும் நின் வீரரும் பகைவர் நாட்டை எது செயினும் அவன் காவல் மரத்தை வெட்டுவதைக் கைவிடுவாயாக; அவை நின் யானைக்குக் கட்டுத்தறியாக ஆவதற்குத் தகுதியற்ற இளைய மரங்கள்[21] என்று கூறுவதன் மூலம் சந்து செய்விக்கிறார்.

கோப்பெருஞ் சோழன் தன் மக்கள்மேல் போருக்கு எழுந்தபோது புல்லாற்றூர் எயிற்றியனார்,

> *"............................ இசைவெய் யோயே*
> *நின்ற துப்பொடு நின்குறித்து எழுந்த*
> *எண்ணில் காட்சி இளையோர் தோற்பின்*
> *நின்பெரும் செல்வம் யார்க்கு எஞ் சுவையே*
> *அமர்வெஞ் செல்வ நீ அவர்க்கு உலையின்*
> *இகழுநர் உவப்பப் பழியெஞ் சுவையே*
> *அதனால் ஒழிகதில் அத்தை நின்மறனே வல்விரைந்து*
> *எழுமதி வாழ்க நின் உள்ளம்"* [22]

என்று நல்வினையைச் செய்ய விரைந்து எழுவாயாக என்று கூறிச் சந்து செய்விக்கின்றார். இக்கூற்றுகளால் சினம் கொண்டு போருக்குச் செல்லும் மன்னர்களைக் காண முடிகிறது.

தொல்காப்பியர்,

> *"உறுப்பறை, குடிகோள், அனல், கொலை என்ற*
> *வெறுப்பின் வந்த வெகுளி நான்கே"* [23]

என்று சினத்திற்கு நான்கு காரணம் கூறுகிறார். இவற்றுள் 'குடிகோள்' என்பது தாரமும் சுற்றமும் குடிப்பிறப்பும் முதலாயவற்றுக்கண் கேடு சூழ்தல் என்றும் 'கொலை' என்பது அறிவும் புகழும் முதலாயினவற்றைக் கொன்று உரைத்தல்[24] என்றும் பேராசிரியர் உரை காண்கிறார்.

மேற்கூறிய மன்னர்களுக்கு ஏற்படும் சினம் குடிகோள், கொலை என்ற இரண்டின் காரணமாக எழுகிறது. இதனால் மன்னர்க்கு ஏற்படும் அழிவை எண்ணிப் புலவர்கள் அவர்களுக்குள் சந்து செய்யும் வண்ணம் குடிப்பெருமை, இரக்கச் சிந்தனை, மான உணர்வு போன்றவற்றை எடுத்துக் கூறியும் நினைவூட்டவும் செய்கின்றனர். இவ்வாறு எடுத்துக்கூறும் திறமையும் துணிவும் அமைச்சரினும் புலவர்களுக்கே மிகுதியும் இருந்தமையை அறியலாம். அதற்குக் காரணம் புலவர்கள், அனைவருக்கும் பொதுவானவர்களாக இருந்து அறிவுரை கூறுவதேயாகும்.

இதனையே,

> ***''நால்வகைப் படைகளைப் பெற்றிருப்பினும் அவற்றால் வெற்றி உண்டாகாது; அறவழிகளாலேயே வெற்றி உண்டாகும் என்னும் உண்மையைத் தமிழ்ப் புலவர்கள் அவ்வப்போது அரசர்க்கு அறிவுறுத்தி வந்தனர்''*** [25]

என்று லெ.ப.கரு. இராமநாதன் கூறுகிறார்.

நொச்சித் திணையில் மகள் மறுத்தல் துறையில் 2 பாடல்களில் கபிலர் மன்னரிடம் கூறும் கூற்றுகள்[26] காணப்படுகின்றன.

மூவேந்தரும் பாரியின் மகளிர் இருவரையும் பெண் கேட்டு வந்தனர். அவன் தர மறுத்தான். எனவே அவ்வேந்தர்கள் ஒவ்வொருவராக வந்து போரிட்டுத் தோற்றதைக் கண்ட கபிலர், பறம்பு நாட்டைப் பெற விரும்பின் இரவலராய் வந்து யாசித்தால் பாரி பறம்பு நாட்டையும் மலையையும் உங்கட்கு அளித்துவிடுவான்[27] என்றும் பறம்பு நாட்டின் முந்நூறு ஊர்களையும் பாரி, தன்னைப் பாடி வந்த பரிசிலருக்குக் தந்து விட்டான். நீங்களும் அவர்களைப் போல் பாடி வருவீராயின், பரிசிலாகப் பெற யாமும் பாரியும் உள்ளோம்; பறம்புமலையும் உள்ளது[28] என்றும் கூறுவதனால் பாரியின் வீரம், கொடைச்சிறப்பு ஆகியவற்றை உணர இயல்கின்றது.

வாகைத் திணை அரசவாகைத் துறையில் புலவர் மன்னரிடம் கூறும் கூற்றாக பாடல்கள்[29] காணப்படுகின்றன.

சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறையின் அருள், பெருமை, கண்ணோட்டம் ஆகியவற்றை எண்ணி புதுப் பறவை வந்தாலும் பழைய பறவை நீங்கிச் சென்றாலும் தீச்சகுனம் என்பதை அறியாத காவலனே! இத்தகு இயல்பை நீ பெற்றிருப்பதால், இவ்வுலகத்து உயிர்கள் எல்லாம் உனக்குத் துன்பம் வந்து விடுமோ என்று

அஞ்சும்[30] என்று குறுங்கோழியூர் கிழார் கூறுகிறார். இதன்மூலம் மன்னரிடத்து இருந்த பிறஉயிர்களின் மீதான அன்புறவு புலப்படுகிறது.

சோழன் மாவளத்தானிடம் தாம்பல் கண்ணனார், தலைவ! நின் முன்னோர் பார்ப்பனர் வெறுக்கும் செயலைச் செய்யார். ஆனால் நீ செய்தது பொருத்தமா? என நான் கேட்டதும் நீ தவறு செய்தவன் போல நாணம் கொண்டாய். இவ்வாறு பொறுக்கும் தன்மை இக்குடியில் பிறந்தவர்க்கு எளிமையுடையது. எனவே நானே தவறு செய்தேன். காவிரி ஆறு இட்ட மணலினும் பல காலம் நின் வாழ்நாள் சிறப்பதாகுக என அவன் குற்றத்தை உணரச் செய்து வாழ்த்துகிறார்.[31]

சோழன் நெடுங்கிள்ளியின் ஆவூரை நலங்கிள்ளி முற்றுகையிட்டிருந்தான். இம்மன்னன் அவனுடன் போரிடாது அரணை அடைத்துக் கொண்டு உள்ளே இருந்தான். அப்போது கோவூர்கிழார்.

*"இன்னாது அம்ம ஈங்கு இனிது இருத்தல்*
*துன்னரும் துப்பின வயமான் தோன்றல்*
*அறவை யாயின் நினது எனத் திறத்தல்*
*மறவை யாயின் போரொடு திறத்தல்"* [32]

என இவை எண்ணாது உள்ளிருப்பது நாணத்தக்கது என்று வேந்தர்க்கு அழகு, வீரம் என்பதை எடுத்துக்கூறுகிறார்.

சோழன் கரிகால் பெருவளத்தானிடம் வெண்ணிக் குயத்தியார், வெண்ணி என்னும் ஊரின் போர்க்களத்தில் ஏற்பட்ட புறப்புண்ணுக்கு நாணம் கொண்டு வடக்கிருந்தோன் உன்னைவிட நல்லவன் அல்லனோ[33] என்று வினவுவதன் மூலம் புலவர் மன்னனிடம் வீரத்தினும் மானத்தைப் பெரிதும் போற்றினர் என்பதுணரலாம்.

பாடாண் திணை செவியறிவுறூஉ துறையில் புலவர் மன்னனிடம் கூறிய கூற்றுகள் 7 பாடல்களில்[34] காணப்படுகின்றன.

சேரமான் பெருஞ்சோற்றுதியந் சேரலாதனைப் பாடும் முரஞ்சியூர் முடிநாகராயர், பாண்டவர் ஐவருடனே சினந்து நிலத்தைக் கொண்ட துரியோதனன் முதலிய நூற்றுவரும் போரிட்டுப் போர்க்களத்தில் மடியும் வரையும் இருபடைக்கும் பெருஞ்சோறாகிய உணவை வரையாமல் வழங்கினர் எனும் கொடைத்தன்மையைப் போற்றிப் பின் வாழ்த்துகிறார்.[35] சேரமான் இருபடைக்கும் நடுநிலைமை வகித்து, அறம் தழைக்கச் செய்யும் போர் இடையறவு படாவகையில் பெருஞ்சோறளித்தான் எனக் கூறலாம்.

இதைப் பற்றிக் கூறும் தொல்காப்பியர், ''பிண்டம் மேய பெருஞ்சோற்று நிலை'' [36] என்கிறார்.

சேரமான் கருவூர் ஏறிய ஒள்வாட் கோப்பெருஞ் சேரல் இரும்பொறையிடம் நரிவெரூஉத்தலையார், நீ பகைவரால் அணுகப்படாத இயல்பான செல்வத்தை உடையவன். எனவே, உனக்கு ஒன்றைச் சொல்கிறேன் கேட்பாயாக! அருளும் அன்பும் இன்றி பாவம் செய்து நரகத்தை அடைபவருடன் சேராது நீ நாட்டைக் குழந்தை வளர்ப்பவரைப் போல் காப்பாயாக! இது எளியதன்று பெறுவதற்கரியது[37] என்று நாட்டைக் காப்பாற்ற வேண்டிய முறையைக் கூறுகிறார்.

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைக் காரிகிழார் என்பவர் பெருமையுடையவனே! நின் முடியானது, வேதம் ஓதிய அந்தணர், வாழ்க என வாழ்த்த கையை எடுக்கும் முன்பு வணங்குக; நின் மாலை புகையால் வாடட்டும் நின் சினம் மனைவியின் ஊடல் முகத்தின் முன் தணியட்டும்[38] என்று இன்ன இன்னவாறு செய்ய வேண்டும் என்று அறிவுறுத்துகிறார்.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனிடம் வெள்ளைக்குடி நாகனார், 'நீயும் புறம் கூறுவாரின் உறுதியில்லா சொற்களைக் கேளாது, ஏரைக் காப்பவரின் குடியைக் காத்து அதன்மூலம் மற்றக் குடிகளையும் காப்பாயானால் உன்னுடைய பகைவர் உன் அடியினைப் போற்றுவர்[39] என்று மன்னன் குடிமக்களைக் காக்க வேண்டிய கடமையைக் கூறுகிறார்.

பாண்டியன் அறிவுடை நம்பி குடிமக்களிடம் வரி வாங்குவதில் குறை இருப்பதைக் கண்ட பிசிராந்தையார், மன்னன் ஒருவன் மக்களின் நிலை அறிந்து அறநெறிப்படி வரியை வாங்குவானானால் மக்கள் மகிழ்ந்து அவனுக்குத் தருவதுடன் அவர்கள் வாழ்வும் சிறக்கும். அன்பு கெடும்படி வாங்கும் வரியால் உலகம் அழியும்[40] என்று வரிவாங்கும் முறையை உணருமாறு கூறுகிறார்.

பாடாண்திணை வாழ்த்தியல் துறையில் 4 பாடல்கள் புலவர் மன்னரிடம் கூறுவதாகக் காணப்படுகின்றன.[41]

பாண்டியன் கருங்கை ஒள்வாட் பெரும்பெயர் வழுதியிடம் இரும்பிடர்த்தலையார், பல துன்பமிக்க வழியைக்கடந்து உன்னைப் பார்க்க இரவலர் வருவார்கள். அவ்வாறு அவர்கள் வருவது அவர்கள் நிலை கண்டு வறுமையைத் தீர்க்கும் நின் வள்ளண்மையே ஆகும். எனவே,

*“...................................................... வழுதி*
*நிலம் பெயரினும் நின்சொற் பெயரல்”* [42]

என்று கூறுவதால் சொன்ன சொல் தவறாது காப்பாற்றுவது மன்னர் கடமையாகும் என்பது புலப்படுகிறது.

அதியமான் தனக்குக் கிடைத்த அரிய நெல்லிக்கனியை ஔவையாருக்கு அளித்தான். அதனால் புலவர், இனிய பழம் அரியது எனவும் அதன் பெரும் பயனையும் எனக்குச் சொல்லாது நின் மனத்துள் கொண்டு சாதல் நீங்க எனக்குத் தந்தாய். நீலமணிமிடற்றன் போல நிலைபெற்று வாழ்வாயாக[43] என்கிறார். இதனால் மன்னன் புலவரிடத்துக் கொண்ட ஆழமான அன்புறவு வெளிப்படுகிறது.

பாடாண் திணை இயன்மொழித் துறையில் புலவர் மன்னனிடம் கூறும் கூற்றாக 11 பாடல்கள்[44] காணப்படுகின்றன.

*“ஆவும் ஆனிய பார்ப்பன மாக்களும்*
*பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்*
*தென்புலம் வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்*
*பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்*
*எம் அம்பு கடிவிடுதும் நும்அரண் சேர்மின்என*
*அறத்துஆறு நுவலும்”*

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி கூறும் போர் அறச்செய்தி கேட்டும் அவன் ஈகையை அறிந்தும் அவனைப் பலநாள் வாழ்க[45] என்கிறார் நெட்டிமையார் என்னும் புலவர். இதனால் மன்னர் போர் செய்யும்போது கடைப்பிடிக்கும் அறப்பண்பு புலனாகின்றது.

ஊன்பொதி பசுங்குடையார் சோழன் நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னியிடம், நின்னை வழிபடுபவரை விரைவில் அறிவாயாக. நீ மனதால் ஆராய்ந்து, தீமையை ஒருவரிடம் கண்டால் அவரை நீதி நூற்கேற்ப தண்டிப்பாயாக! அவர் நின்னடி வணங்கினால், அருள் செய்து தண்டனையைக் குறைப்பாயாக[46] என்று மன்னன் நீதி வழங்க வேண்டிய முறையைக் கூறுகிறார்.

மோசிகீரனார் என்னும் புலவர் ஒருமுறை சேரமான் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை என்ற மன்னனைக் காண வந்தார். அப்போது அம்மன்னனது முரசும் நீராட்டிற்கு எடுத்துச் செல்லப்பட்டிருந்தது. முரசின்றி இருந்த கட்டிலில் வந்த வருத்தத்தால் புலவர் படுத்துறங்கினார். மன்னன் அவரைத் தண்டிக்க வாள் ஓச்சி வந்தான். அங்கு உறங்குபவர் புலவர் என்றறிந்ததும் மன்னன் கவரி வீசினான். அதைக் கண்ட புலவர்,

*"இவண்இசை உடையோர்க்கு அல்லது அவணது*
*உயர்நிலை உலகத்து உறையுள் இன்மை"*

என்ற காரணத்தாலா நீ இவ்வாறு கவரி வீசினாய்[47] என்று கேட்கிறார். இதனால் மன்னன், புலவரது புலமையையும் புலவரையும் மதித்துப் போற்றும் உறவு முறையைக் காணலாம்.

பாடாண் திணை பரிசில் கடாநிலைத் துறையில் 7 பாடல்கள் புலவர் மன்னரிடம் கூறும் கூற்றாக உள்ளன.[48]

பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன், ஆவூர் மூலங்கிழாருக்குப் பரிசில் தராது காலம் தாழ்த்தினான். அதனால் வெகுண்டு, நின்னிடம் உண்டான இச்செயல் எம் குடியில் தோன்றிய முன்னோர் முன்பு காணாததை யான் கண்டேன் என்று கூறி, எக்காலமாயினும் என் மெல்லியலை எண்ணிச் செல்வேன் நின் ஆயுள் சிறப்பதாகுக[49] என்கிறார். அம்மன்னன் செயலால் மக்கள் துன்புறக்கூடாது எனப் புலவர் எண்ணுகிறார்.

புலவர் மன்னன் செயலால் கோபம் கொண்டாலும் அவனை வாழ்த்தவே செய்கிறார். எனவே புலவர் மன்னன் மாட்டு வைத்திருக்கும் அன்புறவு வெளிப்படுகிறது.

கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக் குமரனார் பரிசில் விரும்பும் முறையைச் சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமா வளவனிடம்,

*"சீறூர் மன்னர் ஆயினும் எம்வயின்*
*பாடறிந்து ஒழுகும் பண்பினாரே*
*மிகப்பேர் எவ்வம் உறினும் எனைத்தும்*
*உணர்ச்சி யில்லோர் உடைமை யுள்ளேம்*
*நல்லறி வுடையோர் நல்குரவு*
*உள்ளுதும் பெரும யாம் உவந்துநனி பெரிதே"* [50]

என்று கூறுகிறார்.

இவ்விடத்துத் திருவள்ளுவரின்,

*"பழிமலைந் தெய்திய ஆக்கத்தின் சான்றோர்*
*கழிநல் குரவே தலை"* [51]

என்ற குறளை ஒப்புநோக்கலாம்.

பெருங்குன்றூர் கிழார், சேரன் குடக்கோச் சேரலிரும் பொறை பரிசில் நீட்டித்த போது, என் மனைவியின் துன்பம் நீங்க வேண்டி இப்போதே உன்னிடம் விடை பெற்று, என் வறுமையை முன்னே போகவிட்டு நான் துன்ப நெஞ்சுடன் செல்வேன்[52] என வருந்திக் கூறுகிறார்.

பாடாண் திணை பரிசில் துறையில் 4 பாடல்கள்[53] உள்ளன. கபிலர், பாரி மகளிரை இருங்கோவேள் என்னும் மன்னனிடம் அழைத்துச் சென்று, இவர்களை நான் உனக்குத்தர ஏற்றுக்கொள்வாயாக என்று கேட்டார். ஆனால் அம்மன்னன் மறுக்க, இளங்கோவேளே! சிற்றரையம், பேரரையம் என்ற பகுதிகளையுடைய அரையம் அழிந்ததற்குக் காரணம் உம் குடியில் தோன்றிய ஒருவன், கழாத்தலையார் என்ற புலவரை இகழ்ந்ததே ஆகும். என் சொல்லைப் பொறுத்துக் கொள்க யான் விடை பெறுகிறேன்[54] என்று தன் நண்பனின் மக்களுக்குத் தான் தந்தையாக இருந்து கடனாற்றுவதுடன் தன் ஆற்றாமையையும் வெளிக்காட்டுகிறார்.

சோழன் பாமுளூர் எறிந்த நெய்தலங் கானல் இளஞ்சேட் சென்னி பரிசில் தரக் காலம் நீட்டித்த இடத்து ஊன்பொதி பசுங்குடையார், 'நீ இரப்பவரைப் பாதுகாப்பதனை முறைமையாக மேற்கொள்வாயாக' [55] என்று அறிவுறுத்துகிறார்.

பாடாண் திணை பரிசில்விடைத் துறையில் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், எருக்காட்டூர்த் தாயங்கண்ணனாரின் புலமை நலத்தை வியந்து, 'இவன் நம்மை மறவாது நினைத்து வந்த பரிசிலன் ஆவான்' என்று கூறி சூட்டிறைச்சியும், கள் தெளிவும் அணிகலன்களும் நல்கினான். இதனால் இவன் நிழலில் உள்ள யாம் ஊழிக் காலம் வரினும் அஞ்சோம்.[56] என்று அவன் கொடைச் சிறப்பால் எதற்கும் அஞ்சாத புலவனது வலிமை உள்ளத்தைக் கூறுகிறான்.

பொதுவியல் திணை முதுமொழிக்காஞ்சித் துறையில் 3 பாடல்கள்[57] உள்ளன.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனுக்குக் குடபுலவியனார், நீர்நிலை பெருகும்படி செய்பவர் இந்நிலவுலகத்திலும் தாம் செல்லும் உலகத்துக்குச் செல்வமும் பெற்றவராவர். எனவே நீயும் நீர் நிலை பெருகச் செய்[58] என்று புலவர் மன்னனிடம் அறச் செயலின் பயனை எடுத்துக் கூறுகிறார்.

பொதுவியல் திணை கையறுநிலைத் துறையில் 3 பாடல்கள்[59] உள்ளன.

வடக்கிருந்த கோப்பெருஞ் சோழன் பேசும் ஆற்றல் இழந்த நிலையில், கருவூர்ப் பெருஞ்சதுக்கத்துப் பூதனார், நின்னுடன் வடக்கிருந்தார் பலருள் நான் இல்லாமையை எண்ணி என்னுடன் புலந்து பேசாதுள்ளாய்[60] என்று வருந்திக் கூறுகிறார்.

பொத்தியார், கோப்பெருஞ் சோழனிடம், எனக்கு மகன் பிறந்தபின் வா என்று என்னைப் போக்கிய அன்புற்றவனே! உன்னுடன் எனக்குள்ள நட்பை எண்ணி, நீ எனக்கு வடக்கிருக்கக் குறித்த இடம் யாது' [61] என்று வினவுகிறார்.

இப்புலவர் தம் கூற்றுகளால் மன்னரிடத்து அவர்கள் கொண்ட அன்புறவின் உரிமை வெளிப்படுகிறது.

பொதுவியல் திணை பெருங்காஞ்சித் துறையில் 2 பாடல்கள்[62] உள்ளன.

ஐயாதி சிறு வெண் தேரையார் ஒரு மன்னனிடம், துன்பம் மிக்க இறுதிநாள் வருவதற்கு முன்பே, உலக வாழ்வில் பற்றில்லாது நீ எண்ணிய தவத்தைச் செய்வாயாக[63] என்றும், கூகைக்கோழியார் பாணனுக்குப் பொன் தாமரையும் பாடினிக்கு மாலையும் தந்து சுற்றம் சூழ இருந்து உண்டு மகிழ்வோமாக. ஏனெனில் சுடுகாட்டை அடையும்போது இவ்வாறு நடைபெறுவது அரிது[64] என்றும் கூறுவதன் வாயிலாக நிலையாமையை எடுத்துரைக்கின்றார்.

## 8.2 புலவர் வள்ளலிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

பாடாண்திணை பரிசில் துறையில் புலவர் வள்ளலிடம் கூறும் கூற்றுகள் 5 பாடல்களில்[65] காணப்படுகின்றன.

பரணர், கண்டீரக் கோப்பெரு நள்ளி என்ற வள்ளலிடம் நாள்தோறும் அணிகளுடன் ஆண் யானையைப் பரிசிலர்க்கு அளிக்கின்றாய். ஆதலால்,

> *"பீடில் மன்னர்ப் புகழ்ச்சி வேண்டிச்*
> *செய்யா கூறிக் கிளத்தல்*
> *எய்யா தாகின்று எம்சிறு செந்நாவே"* [66]

என்று செம்மாப்புடன் கூறுகிறார்.

வல்வில் ஓரியிடம் கழைதின் யானையார்

> *"ஈயென இரத்தல் இழிந்தன்று அதன்எதிர்*
> *ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று*
> *கொள்எனக் கொடுத்தல் உயர்ந்தன்று அதன்எதிர்*
> *கொள்ளேன் என்றல் அதனினும் உயர்ந்தன்று"*

என்றும், வள்ளல்கள் பரிசில் தரவில்லையானால் பறவை நிமித்தத்தையும் புறப்பட்ட நேரத்தையும் பழிப்பாரே அன்றி, வள்ளல்களைப் பழிக்க மாட்டார். வள்ளலே உன்னை நான் வெறுக்கமாட்டேன். நீ வாழ்க! என்றும் பரிசில் கொடுப்பதாலும் பெறுவதாலும்[67] ஏற்படும் நிலையைச் சுட்டுகிறார்.

புறத்திணை நன்னாகனார் ஓய்மான் வில்லியாதனிடம் கிணைப் பொருநன் ஒருவனைக் கண்டபொழுது அவன் நின் சிறப்பைக் கூறினான். அதன் காரணமாக

நின்னிடம் குற்றமற்ற தாயிடம் பால் குடிக்க ஓடி வரும் குழந்தை போல நான் நின்னிடம் பரிசில் பெற ஆசையுடன் வந்தேன்[68] என்றுரைக்கிறான்.

பரிசில் கடா நிலையில் 4 பாடல்கள்[69] உள்ளன.

பெருஞ்சித்திரனார் குமண வள்ளலிடம் வயதான தன் தாய், உப்பில்லாத கீரையாகிய உணவை உண்ணும் தன் மனைவி, சுற்றத்தார் ஆகியோர் மகிழும்படி பரிசில் தர வேண்டும் என்கிறார். முகம் மாறுபட்டுத் தரும் பரிசிலாக யானையே இருந்தாலும் கொள்ள இயலாது எனவும், மகிழ்ந்து கொடுக்கும் சிறிய பரிசிலாய் இருந்தாலும் அதனைத் தாம் பெற்றுக் கொள்வதாகவும் கூறுகிறார்.[70]

மேலும் தன் மனைவி, பசியால் அழும் குழந்தையைத் தேற்ற, அக்குழந்தையை நோக்கி 'உன் தந்தை இன்னும் வரக் காணோம். வந்தால் அவரை வெறுத்து இகழ அவர் வரும்போது உன் முகத்தை எப்படி வைத்துக் கொள்வாய் சொல்' என்பதைக் கூறி என் மனைவி விருப்பம் மிக, அழிவற்ற செல்வத்தை மிகுதியாகக்[71] கொடுத்து விரைவாக அனுப்புவதை நான் விரும்புகிறேன் என்றும், என் மனைவியின் வருத்தத்தைக் கண்டு இதனைப் போக்கக் கூடியவன் நீ என எண்ணி உன்னிடம் வந்தேன். என் நிலையை அறிந்து கொண்டால், உன்னை வற்புறுத்தியேனும் நின்னிடம் இருந்து பரிசிலைப் பெறாமல் விடமாட்டேன்[72] என்றும் கூறுகிறார்.

இதனால், புலவர் நிலையை உணரும் அன்புடையவனாக மன்னன் இருப்பின் நாணப்படாமல் கேட்டுப் பொருள் பெறும் உறவுரிமையை அப்புலவர்கள் பெற்றமை காண முடிகிறது.

பாடாண் திணை பரிசில்விடைத் துறையில் 2 பாடல்கள்[73] உள்ளன.

பெருஞ்சித்திரனார் இளவெளிமானிடம், இரவலரைப் பாதுகாப்பவன் நீ ஒருவன்தான் என்று எண்ணாதே, இரவலரைக் காப்பவர் பலர் உள்ளனர் என்பதை உணர்வாயாக. உன் ஊரில் உள்ள காவல் மரம் வருந்தும்படி யான் கொண்டுவந்து கட்டியுள்ள பெரிய நல்ல யானை இப்போது யாம் பெற்று வந்த பரிசிலாகும். இதை நீ அறிவாயாக[74] நான் இனிச் செல்லுவேன் என்று இகழ்ந்து உரைக்கிறார்.

பெருந்தலைச் சாத்தனார் இளங்குமணனிடம் வந்து,

> *"துன்னரும் சிறப்பின் உயர்ந்த செல்வர்*
> *இன்மையின் இரப்போர்க்கு ஈஇ யாமையின்*
> *தொன்மை மக்களின் தொடர்பு அறியலரே"*

என்று கொடையால் ஏற்படும் சிறப்பைக் கூறி யான் நின் தமையன் குமணனிடம் இருந்து வருகிறோம். அவனை நான் பாடியபொழுது 'பரிசிலன் ஒருவன் பயன் இல்லாது வறிதே வாடித் திரும்புதல் என்பது என் நாட்டை நான் இழந்ததை விட மிகவும் துன்பம் தரத்தக்கது' என்று எண்ணியவனாய் அவ்விடத்தில் தருவதற்குத் தன் தலையைத் தவிர வேறொன்றும் இல்லாததால் வாளைத் தந்தான். அதை மகிழ்வுடன் இங்கு கொண்டு வந்தேன்[75] என்றுரைக்கிறார்.

இதனால் மன்னனின் முறைதிறம்பா ஈகையும், அதனால் வரும் நற்பயனும் புரவலர் புலவரை ஆதரித்த முறைமையும் புலவர் இரு மன்னரை சந்து செய்தமையும் புலனாகின்றன.

பொதுவில் துறை பொருண்மொழிக்காஞ்சித் துறையில் மலையமான் திருமுடிக்காரி மற்ற புலவர்க்குக் கொடுத்த பரிசில் போலக் கபிலருக்கும் பரிசில் வழங்க அதனால் கோபமுற்ற கபிலர்,

> *"................................ பரிசில் மாக்கள்*
> *வரிசை அறிதலோ அரிதே பெரிதும்*
> *ஈதல் எளிதே மாவண் தோன்றல்*
> *அதுநற்கு அறிந்தனை யாயின்*
> *பொதுநோக்கு ஒழிமதி புலவர் மாட்டே"* [76]

என்று அவனுக்குத் தெளிவு ஏற்படும்படி உரைக்கின்றார்.

பொதுவியல் திணை கையறுநிலைத் துறையில் கபிலர் வேள்பாரியிடம் நீயும் நானும் கொண்ட நட்பில் என்னை வெறுத்து, 'இங்கே என்னை இருப்பாயாக' என்று சொல்லி இப்படி வேறுபட்டாயா! இப்பிறப்பில் நீயும் நானும் கூடி இருந்தது போல மறுபிறவியிலும் இடைவிடாது உன்னுடன் கூடி வாழ்வதை விதி சேர்க்குமாக[77] என்று தன் நண்பனிடம் கொண்ட தீரா அன்பைப் புலப்படுத்துகிறார்.

பெருந்திணை குறுங்கலித் துறையில் வையாவிக் கோப்பெரும் பேகன் மனைவி கண்ணகி தனித்து துன்புற்று இருப்பதை உணர்ந்த பரணர், அரிசில்கிழார், பெருங்குன்றூர் கிழார் ஆகிய புலவர்கள் பேகனிடம், யாம் நின்னைப் பாடி பரிசில் பெற வந்திலோம். நீ நின் மனைவியின் துன்பத்தை நீக்கும் அறமாகிய பரிசிலையே பெற வந்தோம்[78] என்று உரைக்கின்றனர்.

புலவர்க்குப் பொருளாகிய பரிசிலைக் காட்டிலும் பேகன் தன் மனைவியிடம் காட்டும் காதல் அருளே பரிசெனத் தோன்றுவது அவரின் உயர்ந்த உள்ளத்தை உணர்த்துகிறது.

### 8.3 புலவர் தன் மனைவியிடம் கூறும் கூற்றுவழி உறவு

குமணனிடம் பரிசில் பெற்று வந்த புலவர் பெருஞ்சித்திரனார், பாடாண் திணை பரிசில் துறையில், தன் மனைவியிடம் இச் செல்வத்தை உன்னை விரும்பும் மகளிருக்கும், உன்னால் அன்பு காட்டப்படும் மகளிருக்கும், கற்புடைய உன் உறவினரான மூத்த மகளிருக்கும், உனக்குக் கடனுதவி செய்தவர்க்கும், இன்ன தன்மையாரென்று எண்ணாது இதனை இவருக்குத் தரலாம் என்றும் எண்ணாது இதனை வைத்துக் கொண்டு நன்றாக வாழலாம் என்றும் எண்ணாது அனைவருக்கும் கொடுப்பாயாக[79] என்கிறார்.

### 8.4 புலவர் தலைவனிடம் கூறும் கூற்றுவழி உறவு

காஞ்சித்திணை பெருங்காஞ்சித் துறையில் 3 பாடல்கள்[80] உள. காவிட்டனார் கீரன் என்பவர் அந்துவன் கீரன் என்ற தமிழ்த் தலைவன் உலகப் பற்றுடையவனாக இருப்பதால் அவனிடம், பெரிய நாடுகளை வென்ற முடி மன்னரும் சுடுகாட்டையே அடைந்தனர். உனக்கும் அவ்வாறு வரும். இவ்வுலகில் புகழும், பழியுமே நிற்கும். எனவே நடுவுநிலை தவறாத அறமே உரைத்தும், இரவலருக்கு வேண்டுவன தந்தும் பழிநீக்கி புகழ் புரிய நீ மேலுலகம் சென்றாலும் அப்புகழ் இவ்வுலகில் நிலைத்து நிற்கும்[81] என்று அறிவுரை வழங்குகிறார்.

சங்கவருணர் என்னும் நாகரையர் பாண்டி மன்னனின் ஆணைப்படி நடக்கும் தலைவன் தந்துமாறன் மிக்க செல்வம் உடையவனாக விளங்கியதைக் கண்டு, உன்னிடம் பொருளை விரும்பி வருபவருக்கு வேண்டும் பொருளை நிறைய தருவாயாக! நாளும் உனக்குரிய ஒழுக்கத்தில் குறையாது ஒழுகுவாயாக![82] இவற்றால் புகழ் உண்டாகும் என்று அறிவுரை கூறுகிறார்.

கோதமனார் என்பவர் தருமபுத்திரன் என்னும் தலைவனிடம்,

> *"நின் ஊற்றம் பிறர் அறியாது*
> *பிறர் கூறிய மொழி தெரியா*
> *ஞாயிற்று எல்லை ஆள்வினைக்கு உதவி*
> *இரவின் எல்லை வருவது நாடி,*
> *உரைத்திசின் பெரும நன்றும்"*

என்றும் இறைச்சியையும் சோற்றையும் குறைவின்றி விரும்பி வந்தவர்க்கு அளித்து உண்ணச் செய்து நீயும் உண்பாயாக[83] என்றும் அறிவுரை வழங்குகிறார்.

பாடாண் திணை இயன்மொழி வாழ்த்தில் ஏறைக்கோன் என்ற குறிஞ்சித் தலைவனிடம் குறமகள் இளவெயினி என்பவர்,

*"தமர்தன் தப்பின் அதுநோன் றல்லும்
பிறர்கை யறவு தான்நா ணுதலும்
படைப்பழி தாரா மைந்தினன் ஆகலும்
வேந்துடை அவையத்து ஓங்குபு நடத்தலும்
நும்மோர்க்குத் தருவன அல்ல"* [84]

என்று அறவுரை வழங்குகிறார்.

## 8.5 புலவர் குறுநில மன்னனிடம் கூறும் கூற்றுவழி உறவு

ஆதன் நுங்கன் என்ற குறுநில மன்னனிடம் கள்ளில் ஆத்திரையனார் என்னும் புலவர், என் உயிர் என் உடலை விட்டு நீங்கும் காலத்தில் உன்னை மறக்கும் நிலை உண்டாகும். அதுவல்லாது மற்றபொழுதில் உன்னை மறவேன்[85] என்று அவனிடம் உள்ள தன் அன்பைப் புலத்துகிறார்.

## 8.6 புலவர் சிற்றரசனிடம் கூறும் கூற்றுவழி உறவு

பாடாண் திணை இயன்மொழித் துறையில் 2 பாடல்கள்[86] உள. சேர மன்னர் கீழ் இருந்து ஆளும் நாஞ்சில் வள்ளுவன் என்ற சிற்றரசனிடம் ஒரு சிறைப் பெரியனார், மூவேந்தரைப் பாடும் ஆசை இல்லாதவனாக நான் ஒருவனே உள்ளேன். முன்காலம் முதல் நான் அறிந்தவன் நீ ஒருவனே! உன்னைப் பெற்றவரான நின் தந்தையும் தாயும் நீயும் வாழ்க[87] என வாழ்த்துவதன் மூலம் அவனது சிறப்பைக் கூறுகிறார்.

நல்லேர் முதியன் என்பவனிடம் கள்ளில் ஆத்திரையான் நின் முன்னோனான ஆதனுங்கன் போன்று நீயும் பசித்த என் சுற்றத்தவரின் துன்பம் கெடும்படி சிறப்பான நல் அணிகலன்களை அளிப்பாயாக[88] என்று வேண்டுகிறார்.

நாஞ்சில் வள்ளுவன் என்பானிடம் மருதனின நாகனார் பாடாண் திணை பரிசில் கடாநிலைத் துறையில், விறலியர் வாழ்தல் வேண்டி யான் 'பொய் கூறேன் மெய் கூறுவல்' என்று கூறி ஒருநாள் போர் வருமாயின் என்போன்றோரின் பசித்துன்பமுடையார் வருந்துதலும் உண்டு. எனவே போர் வருவதற்கு முன்பே பரிசிலைத் தந்து விடுப்பாயாக[89] என்று புலவரது குணம் வெளிப்பட பரிசிலை வேண்டுகிறார்.

பெருந்தலைச் சாத்தனார் கடிய நெடுவேட்டுவன் என்பவனிடம், பாடாண்திணை பரிசில் துறையில்,

*"முற்றிய திருவின் மூவர் ஆயினும்
பெட்பின்றி ஈதல் யாம்வேண் டலமே"*

என்று செருக்குடன் கூறி, மேகம் நீரில்லாது திரும்பாதது போலப் பரிசிலர் இனம் தேரோடு கூடிய யானையின்றித் திரும்பமாட்டா[90] எனவே நோயின்றி விளங்குவாயாக என்றுரைப்பதன் மூலம் பரிசில் வேண்டுகிறார்.

## 8.7 புலவர் சான்றோரிடம் கூறும் கூற்றுவழி

பொதுவியல் திணை பொருண்மொழிக் காஞ்சித் துறையில் நரிவெரூஉத்தலையார் என்பவர், பல்சான்றீரே என விளித்து

> *"நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும்*
> *அல்லது செய்தல் ஓம்புமின் அதுதான்*
> *எல்லாரும் உவப்பது அன்றியும்*
> *நல்லாற்றுப் படூஉம் நெறியுமார் அதுவே"* [91]

என்று அறிவுரை வழங்குகிறார்.

பொதுவியல் திணை, ஆனந்தப்பையுள் என்னும் துறையில் அமைந்த பூதப்பாண்டியன் மனைவியாகிய பெருங்கோப் பெண்டு பாடல் அரச குடும்பத்தினர்க்கும் அரச சுற்றத்தார்க்கும் இடையிலான அன்புறவை வெளிப்படுத்துகிறது. பூதப்பாண்டியன் இறந்தபோது மூட்டிய சிதையில் வீழ்ந்து தன்னை மாய்த்துக்கொள்ள முனையும் பெருங்கோப்பெண்டு தன்னைத் தடுக்கும் அரச சுற்றத்தாரைக் கண்டு,

> *"பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட்டு ஈமம்*
> *நுமக்குஅரிது ஆகுக தில்ல எமக்குஎம்*
> *பெருந்தோள் கணவன் மாய்ந்தென அரும்புஅற*
> *வள்இதழ் அவிழ்ந்த தாமரை*
> *நள்இரும் பொய்கையும் தீயும் ஓரற்றே"* [92]

எனச் சினந்துரைக்கிறாள். பெருங்கோப்பெண்டைத் தீப்புகாமல் தடுக்கும் சான்றோர்தம் அன்பும், தன்னைத் தடுக்கும் சான்றோர்க்குப் பிணப்படுக்கை அரியது ஆகட்டும் என்று கூறும் சான்றோர் நலனை நாடும் அவளன்பும் அரச குடும்பத்தினர்க்கும் அவரைச் சார்ந்த அரச சுற்றத்தார்க்கும் உள்ள உறவை வெளிப்படுத்துகின்றது.

இவ்வாறு கணவன் இறந்தபின் மனைவி தீப்புகுதல் பற்றிக் குறிப்பிடும் இரா. சந்தோஷ்குமாரி,

> ***"கணவனோடு மறுமையில் சேரலாம் என்னும் நம்பிக்கையே இதற்கு அடிப்படை"*** [93]

என்று கூறுகிறார்.

### 8.8 புலவர் - புலவரிடம் கூறும் கூற்றுவழி உறவு

வாகைத் திணை மூதின் முல்லைத் துறையில், குறிஞ்சி நிலத்தின் வழியாகச் செல்லும் புலவர்களைப் பார்த்து வேறொரு புலவர் அந்நிலத்தில் வாழும் வேளாண் தலைவன் ஒருவன் மனைவியின் பண்பு நலத்தைக் கூறுகின்ற பொழுது, தன் வீட்டில் உள்ளவற்றை எல்லாம் இரவலர் உண்டதாலும் பெற்றுக் கொண்டதாலும் தீர்ந்து போக, கடனாகப் பெற முடியாததாலும், விதைத்தினையை உரலில் இட்டுக் குற்றி உபசரித்து உண்ணச் செய்வாளே அன்றி இல்லை என்று கூறி வறிதே செல்லவிடாள். மேலும் யானைகளை உடைய மன்னர் தன்னிடம் வந்தாலும் அவர்களை உண்ணச் செய்வதும் அதுவே ஆகும்.[94] இவ்வாறு கூறுவதன் வாயிலாக அக்கால மக்களின் விருந்தோம்பற் சிறப்பு புலப்படுகின்றது.

பாடாண் திணை பரிசில்விடை துறையில் ஔவையார் நாஞ்சில் வள்ளுவனைப் பற்றிப் புலவர்களிடம் கூறுமிடத்து, சிறிது அரிசி வேண்டினால், யானை சுமக்கும் அளவு அரிசியைத் தருபவன் வள்ளுவன். அதனால் அவனது அறியாமையை,

> *"தேற்றா ஈகையும் உளதுகொல்*
> *போற்றார் அம்ம பெரியோர்தம் கடனே"* [95]

என்று கூறும்வழி அவன் புகழைப் புகழ்ந்துரைக்கிறார்.

பொதுவியல் திணை, பொருண்மொழிக்காஞ்சித் துறையில் பிசிராந்தையார் பிற புலவர்களிடம் தனக்கு நரை தோன்றாமைக்குரிய காரணம் பற்றிக் கூறுமிடத்து,

> *"யாண்டுபல வாக நரையில ஆகுதல்*
> *யாங்கு ஆகியர் என வினவுதிர் ஆயின்*
> *மாண்டஎன் மனைவியொடு மக்களும் நிரம்பினர்*
> *யான்கண் டனையர்என் இளையரும் வேந்தனும்*
> *அல்லவை செய்யான் காக்கும் அதன்தலை*
> *ஆன்றுஅவிந்து அடங்கிய கொள்கைச்*
> *சான்றோர் பலர்யான் வாழும் ஊரே"* [96]

என்று தன் உறவின் சிறப்பைக் கூறுகிறார்.

### 8.9 புலவர் பாணனிடம் கூறும் கூற்றுவழி உறவு

புலவர் பாணனிடம் கூறும் கூற்றாகப் புறநானூற்றில் 15 பாடல்கள்[97] உள்ளன. வாகைத் திணை வல்லாண் முல்லைத் துறையில், வீரை வெளியனார் என்பவர் வீரன் ஒருவனைக் காணச் செல்லும் பாணனிடம்,

வேடன் மனைவி தன் இல்லத்தில் முன்றிலில் ஆண்மானானது பெண்மானுடன் தழுவி இருப்பதைக் கண்டாள், அதனால் தன் கணவன் உறக்கம் நீங்கி எழுவானோ என்றும் ஆண் மான் பெண் மானை நீங்குமோ என்றும் அஞ்சி இல்லத்தில் நடக்காமல் உள்ளாள். அவ்வில்லத்தில் தங்கினால் உணவுடன் திறைப் பொருளையும், தன் மன்னன் தந்ததையும் பரிசிலாகப் பெறுவாய்[98] என்றுரைக்கிறார். இக்கூற்றால் பிற உயிரை மதிக்கும் உறவுப் பண்பும் விருந்தோம்பலும் கொடைச் சிறப்பும் புலனாகின்றன.

பாடாண் திணை பாணாற்றுப்படைத் துறையில், கோவூர்கிழார் சோழன் நலங்கிள்ளியின் பரிசில் குறித்துக் கூறுமிடத்து, நீ சென்றால், அவ்வரசன் பிறருடைய வாயிலை இரப்பதற்கு நினைத்துப் பார்க்காதவாறு பரிசில்களை மிகுதியாகத் தருவான். எனவே அவனிடம் செல்க[99] என்று உரைக்கிறார்.

பரணர் வையாவிக் கோப்பெரும் பேகன் என்ற வள்ளலின் ஈகையைப் பற்றிக் கூறும் போது,

*"எத்துணை ஆயினும் ஈத்தல் நன்றுஎன*
*மறுமை நோக்கின்றோ அன்றே*
*பிறர் வறுமை நோக்கின்று அவன்கை வண்மையே"* [100]

என்று பயன் கருதாது, பிறர் வறுமை அறிந்து கொடுக்கும் அவனுடைய மனிதநேய உறவைக் குறிப்பிடுகிறார்.

## 8.10 புலவர் - விறலி கூற்று

பாடாண்திணை விறலியாற்றுப்படைத் துறையில் ஔவையார், அதியமான் நெடுமான் அஞ்சி பொருளில்லாத நேரத்திலும்,

*"பொழுதுஇடைப் படாஅப் புலரா மண்டை*
*மெழுகுமெல் அடையிற் கொழுநிணம் பொருப்ப*
*வறத்தற் காலை யாயினும்*
*புரத்தல் வல்லன், வாழ்க அவன் தாளே"* [101]

என்று அவன் செய்யும் கொடைச் சிறப்பைக் கூறி விறலியை ஆற்றுப்படுத்துகிறார்.

இக்கூற்றுக்குக் 'கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே, சங்கு சுட்டாலும் வெண்மை தரும்'[102] என்ற நீதிக் கருத்து அரணாக அமைகிறது.

## 8.11 புலவர் வாயிலோனிடம் கூறும் கூற்றுவழி உறவு

பாடாண் திணை பரிசில் துறையில் ஔவையார்,

*"தன்அறி யலன்கொல் என்னறி யான்கொல்*
*அறிவும் புகழும் உடையோர் மாய்ந்தென*
*வறுந்தலை உலகமும் அன்றே அதனால்*
*காவினெம் கலனே சுருக்கினெம் கலப்பை*
*மரங்கொல் தச்சன் கைவல் சிறாஅர்*
*மழுவுடைக் காட்டகத்து அற்றே*
*எத்திசைச் செலினும் அத்திசைச் சோறே"* [103]

என்று தகுதி அறியாத அதியமானை இடித்துரைக்கிறார். மன்னனை இடித்துரைக்கும் துணிவும் உரிமையும் புலவர்க்குண்டு என அறியலாம்.

## 8.12 புலவர்-நெஞ்சிடம் கூறும் கூற்றுவழி உறவு

அகத்திணை போன்றே புறத்திணையிலும் புலவர்தன் நெஞ்சிடம் கூற்று நிகழ்த்துகிறார்.

பாடாண் திணை பரிசில் கடாநிலையில், ஔவையார் இடித்துரைத்த அதே அதியமான், தான் பலமுறை சென்றாலும், முதல்நாள் விருப்புடன் பரிசில் வழங்குவான் என்றும், அவன் பரிசில் நம் கையில் உள்ளது வருந்தாதே மனமே[104] என்றும் உரைக்கிறார்.

பாடாண் திணை பரிசில் துறையில் பெருஞ்சித்திரனார் இளவெளிமானின் கொடையை,

*"அருகிற் கண்டும் அறியார் போல*
*அகம்நக வாரா முகன்அழி பரிசில்*
*தாள்இலாளர் வேளார் அல்லர்*
*வருகென வேண்டும் வரிசை யோர்க்கே*
*பெரிதே உலகம் பேணுநர் பலரே"* [105]

எனப் புலவர்கள் உள்ளன்புடன் கொடுக்கும் பரிசிலை விரும்பினர் என்றும் அவ்வாறு தாராத மன்னரை இகழ்ந்துரைப்பதுடன் தனக்கு உலகம் பெரிது என்றும் கூறுகிறார்.

## 8.13 கணவனை இழந்த மனைவியின் நிலை எண்ணிக் கூறல்

பொதுவியல் திணை, தாபதநிலை துறையில் தாயங் கண்ணியார், இரவலரையும், தன்னால் பாதுகாக்கப்படுபவர்களையும் உடைய இல்லத்தில் மயிரை வழித்து, சிறிய வளையலை நீக்கி அல்லியரிசியினாலான உணவைக் கொண்ட மனைவியுடன் விளங்கும் நகரம் இனிய பால் சோற்றை உண்ணும் இளமையுடைய புதல்வர், தந்தை சுடுகாட்டை அடைந்த பின் பொலிவிழந்துள்ளதைச் சுட்டிக்காட்டி இரங்கி உரைக்கின்றார்.[106]

கணவனை இழந்த பெண்டிர்க்கு வளையலை நீக்கும் சடங்கு முறை சங்க காலத்தில் இருந்தது பற்றிக் குறிப்பிடும் தமிழண்ணல்,

***''தாலிக்கு இன்று எவ்வளவு மதிப்பு உண்டோ, அவ்வளவு மதிப்பு அன்று வளையல்களுக்கு இருந்தது. இன்று கணவனை இழந்ததற்கு அடையாளமாகத் தாலி கழற்றப்படுவது போல, அன்று கைவளையல்கள் கழற்றப்பட்டன''*** [107] ***என்கிறார்.***

கணவனை இழந்த பெண்டிர்க்கு மயிரை நீக்குவதும் வளையலைக் களைவதுமாகிய பழக்கமும் அல்லியரிசி உணவை உண்ணும் கட்டுப்பாடும் சங்ககாலச் சமுதாயத்தில் நிலவியமை புலனாகின்றது. மேலும் தலைவன் நீங்கிய நகரமக்கள் பொலிவிழந்துள்ளமை, அத்தலைவன் அம்மக்கள் மாட்டும் அவர்கள் அத்தலைவன் மாட்டும் கொண்டிருந்த பேரன்பைப் புலப்படுத்துகிறது.

## 8.14 பிறர் கூற்று நிலையில் புலவர் கூற்று

பெருந்திணை, குறுங்கலி துறையில் கபிலர் பாணன் கூற்றாகக் கூறும் கூற்று வள்ளல் பேகனின் கூடா ஒழுக்கத்தைத் திருத்த முயல்கிறது.

வள்ளல் பேகன் தன் மனைவி கண்ணகியைத் துறந்து நல்லூர்ப் பரத்தையிடம் புறத்தொழுக்கம் உடையவனானான். அதனால் கண்ணீர் சிந்தி அழும் கண்ணகியின் நிலையை, 'என் பாணச் சுற்றம் சுரத்தில் நடந்த பசியால் நின் ஊர் மன்றில் வந்து நின்னையும் நின் மலையையும் பாடியபோது, நில்லாத கண்ணீரோடு மிகவும் விம்மி ஒருத்தி அழுதாள். அவள் உன்னால் அருளத்தக்க யாரோ?' என வள்ளல் பேகன் மனைவியெனத் தாம் அறியாதுரைப்பது போலக் கூறி உடைந்த கணவன் மனைவி உறவை இணைய வைக்க முயற்சி எடுக்கும் கபிலர் பாடல் தனி மனித ஒழுக்கத்தைக் காக்க வழிவகுக்கிறது. மேலும் பேகன் ஆளும் நாடும் அவனைக் கண்டு ஒழுக்கக் குறைவடையும் என்பதைச் சுட்டிக் காட்டும் திறம் நோக்கத்தக்கது.[108]

புற ஒழுக்கம் மேற்கொண்ட வள்ளல் பேகனைத் திருத்தும் முயற்சியில் ஈடுபடும் பரணர், பாணன் கூற்றாகவே பாடுகின்றார். மாலைப் பொழுதில் செவ்வழிப்பண்ணிசைக்க, ஒருத்தி கண் கலங்கி அழுதாள். யாது கூறியும் ஆறுதல் பெறாத அவளிடம் எம் தலைவன் பேகனுக்கு உறவோ எனக் கேட்டோம். ஆனால் அவளோ யான் அவனுடைய உறவினள் அல்லள். அவன் என் போன்ற ஒருத்தியை விரும்பி நல்லூருக்குத் தேரில் வருவான் எனப்

பலரும் உரைப்பர் என உரைத்தாள்' எனப் பாடும் பரணர், பேகன் புறத்தொழுக்கம் நீங்கி அவன் மனைவிக்கு அன்பு காட்டாது போயின் அவள் இறப்பதாகிய பழி அவனைச் சேரும்[109] என்பதைக் குறிப்பால் உணர்த்துகிறார்.

புலவர்கள் பலர் தம்மைக் கிணைப் பொருநராகக் கொண்டு அவர்தம் கூற்றாகப் புரவலர்களின் வள்ளண்மையைப் போற்றிப் பாடியுள்ளனர். இந்த வகையில் கோவூர் கிழார் தம் வறுமை நீங்கி தாம் பிறர்க் களிக்குமாறு பரிசளிக்கவேண்டுமெனச் சோழன் நலங்கிள்ளியை வேண்டுகிறார்.[110]

ஔவையார் அதியமான் நெடுமான் அஞ்சியின் மகன் பொகுட்டெழினியும் கிணைப் பொருநராகிய தம்மினத்துக்குக் கிழிந்த ஆடை நீக்கி அழகிய ஆடை அணிவித்து விருந்து புரந்தான்[111] எனப் பாடியுள்ளார். மேலும் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை நல்லிறையனார்[112] எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார்[113] ஆகிய புலவர்களும் சோழிய ஏனாதி திருக்குட்டுவனை மதுரைக் குமரனார்[114] என்ற புலவரும் சேரமான் வஞ்சன் என்பவனைத் திருத்தாமனார்[115] என்ற புலவரும் தாமான் தோன்றிக் கோனை ஐயூர் முடவனாரும்[116] சோழன் நலங்கிள்ளியைக் கோவூர் கிழாரும்[117] பாடியுள்ளனர்.

கிணைப் பொருநர் கூற்றில் பாடியுள்ள இப்பாடல்களில் பொருநர் இனத்துக்கு மேற்கண்ட அரசர்கள் ஆடை அணிகலன் அளித்து விருந்தோம்பிய செய்திகள் சொல்லப் பட்டுள்ளன. உண்ண உணவும் உடுத்த நல்லுடையும் ஆகிய மனிதத் தேவையை உணர்ந்து புலவர்களையும் பொருநரையும் புரந்த வள்ளல்களின் கொடையுள்ளத்தில் ஈடிணையற்ற மனிதநேய உறவு திகழ்வதைக் காணமுடிகின்றது.

### 8.15 புலவர் அஃறிணைப் பொருள்களிடத்து நிகழ்த்தும் கூற்று

அகப்பாடல்களில் தலைவன், தலைவியர் அஃறிணைப் பொருள்களைப் பார்த்து அவை கேட்பனவாகக் கருதி உரைப்பது போலப் புறப்பாடல்களிலும் புலவர் பலர் அஃறிணைப் பொருட்களைப் பார்த்து நிகழ்த்தும் கூற்றுகளும் உள்ளன.

பறம்புமலைக்குரியவனாகிய பாரி இறந்தவுடன் அவன் பிரிவால் துன்புறும் கபிலர், பறம்புமலை முன்னர் தன்னுடன் உறவு கொண்டிருந்ததையும், பின்னர் பாரி மகளிரைத் திருமணம் செய்துகொள்ளத் தக்கவரைத் தேடி, தான் அம்மலையிடம் விடைபெற்றுச் செல்வதாகவும்[118] பாடியுள்ளார். ஓய்மான் நாட்டு நல்லியக் கோடனைக் காணமுடியாமல் வருந்தும் புறத்திணை நன்னாகனார் என்னும் புலவர், தன் விதியிடம் கூறுவாராய், தன்னால் காணப்பெற்ற அவன் அவ்விதியால் காணப்படக்கூடியவன் என்றும் அது அவனைத் துணையாகக் கொண்டது என்றும்[119] தன் ஆற்றாமையைப் புலப்படுத்துகிறார்.

இரவலர்க்குப் பரிசளிக்கும் புரவலன் ஒருவன் இறப்புக்கு வருந்தும் தாயங்கண்ணியார், அப்புரவலனை இழந்து தனித்து நிற்கும் அந்நகரத்தின் தனிமைக்குத் தான் வருந்துவதாக அந்நகரிடம் கூறுகிறார். செல்வன் ஒருவனுக்கு வாழ்வின் நிலையாமை உணர்த்தும் வகையில் கூற்றுவனிடம் நேரிட்டு, உரைநிகழ்த்துவதாகக் கயமனார் என்ற புலவர் பாடியுள்ளார்.[120]

இவ்வாறு மலை, வீதி, நகரம், கூற்றுவன் ஆகியவற்றுடன் தம் உணர்வுகளைப் பகிர்ந்து கொள்ளும் புலவர்கள் இவற்றைத் தமக்கு அந்நியப் பட்டவையாகக் கருதாமல் தம்மோடு ஏதோ ஒருவகையில் தொடர்புற்று வாழ்பவையாகக் கருதும் போக்கு எண்ணத் தக்கது.

## 8.16 புலவர் பொதுநிலையில் கூறும் கூற்று

புற இலக்கியங்களில், மன்னர், குறுநில மன்னர், வள்ளல், தலைவன் ஆகியோரின் வீரம், கொடைச் சிறப்பு ஆகியவை மிகுதியாகப் பாடப்பெற்றுள்ளன. இவை தவிரப் பொது நிலையில் மனித சமுதாயத்தை நன்னெறிப்படுத்துகின்ற நீதிநெறி முறைகளும் கூறப்பெற்றுள்ளன. மேலும் வாழ்வின் இறுதியாகிய சாக்காட்டின் பொருட்டு நிகழும் கையறுநிலை துன்பங்களும் பேசப்படுகின்றன.

காஞ்சித் திணையில் மகட்பாற் காஞ்சித் துறையில், பரணர், கபிலர், குன்றூர் கிழார், அள்ளூர் நன்முல்லையார், அரிசில் கிழார், அண்டர் நடுங்கல்லினார், அண்டர் மகன் குறுவழுதியார், மதுரை மருதனிளநாகனார், மதுரை மேலைக் கடைக் கண்ணம் புகுத்தாராயத்தனார், மதுரைப் படைமங்க மன்னியார், கடுமான் கிள்ளி ஆகிய புலவர்கள், மறக்குடி மகளிரை மன்னர் மணக்க விரும்ப, அதற்கு உடன்படாதவராகிய அம்மகளிர்தம் தந்தை, தமையன் ஆகியோருடன் போர்கொண்ட மன்னர் நிலை, அம்மன்னரின் நாட்டுநிலை, மகட்தர மறுக்கும் மறக்குடிப் பிறந்தோரின் மற மாண்பு, மறக்குடி மகளின் பெருமை ஆகியவற்றைப் பற்றிப் பாடியுள்ளனர். பெரும்பாலும் இப்புலவர்தம்[121] கருத்துகள் ஒன்றையொன்று ஒத்தனவாகவே உள்ளன.

சங்க இலக்கிய மறக்குடி மகளிர், மறம் நிறைந்த மாண்புடையார்க்கே தம் மணவினைக்கு உடன் பட்டு நின்றனர் எனும் மாண்பு புலனாகின்றது

தும்பைத் திணை குதிரை மறம் எனும் துறையில் அரிசில் கிழார் ஒற்றர் தம் மன்னனிடம் சென்று அம்மன்னனின் பகைவன் ஒருவன், 'நேற்று என் தமையனைக் கொன்றவனோடும் அவன் தம்பியோடும் நாளை போரிட்டு அழிப்பேன் எனவஞ்சினம்

கூறி போரிடற்குத் தகுதி வாய்ந்த குதிரைகளை ஆராய்கிறான்' என்று உரைத்தனர்; அதைக் கேட்ட வேந்தன் பாசறையில் இருந்த வீரர்கள், அவன் சொன்ன[122] வஞ்சினம் சொல்வேறு செயல்வேறு என்று ஆகாது என எண்ணி அஞ்சுகின்றனர் எனப் பாடுகின்றார்.

இது பண்டைய மன்னர்களின் பழிதீர்க்கும் பகை உறவைக் காட்டுகின்றது.

ஔவையார் பாடியுள்ள உவகைக் கலுழ்ச்சி என்னும் துறைப்பாடல், வெட்டுப்பட்ட உடல் வேறான தன்மகனின் மறமாண்பைக் கண்ட தாய் அன்பு மிகுந்து அவளின் வற்றிய மார்பினின்றும் சுரந்த பாலை உடையவளானாள்[123] என மறத்தாயின் மகிழ்ச்சியைக் கூறுகின்றது.

மகன் இறப்பைக் கண்டு புலம்ப வேண்டிய தாயின் இயல்பு, அத்தாய் மறக்குடித் தாயாதலின் மகனுடைய வீரம் புகழ் இறப்பு கண்டு பெற்றபோழ்து சுரந்த மார்பு வற்றியபோதும் அன்பினால் சுரக்கும் நிலை எய்தியது எனலாம்.

பொன்முடியார் பாடியுள்ள நூழிலாட்டு என்னும் துறைப்பாடல், 'போர்க்களத்தில் வீழ்ந்து கிடக்கும் தன் மகனின் மார்பில் தைத்துள்ள அம்பைக் கண்டபோது எழுந்த தாயின் எண்ணத்தை வெளிப்படுத்துகிறது. இளமைக் காலத்தில் கிண்ணத்தில் பாலேந்தி தன் மகனை உண்ணச் செய்ய அவன் உண்ணாமல் போக, தாயின் ஓங்கிய சிறுகோலுக்கு அஞ்சி உண்டான். இப்போது வீரம் உடையார்க்கு மகன் என்னும் பெருமையோடு யானையையும் குதிரையையும் கொன்று அழித்தான். இவ்வீர மகனைக்கண்ட தாய் என்னே இவன் வீரம்[124] என வியந்து மகிழ்கிறாள்.

வாகைத் திணை, அரச வாகைத் துறையில் வரும் ஔவையார் பாடல் பண்டைக்கால அரச குலத்து மரபைக் காட்டுகின்றது.

அதியமான் வேல் தாங்கி, வீரக்கழல் அணிந்து வாகை சூடி, பகைவரைச் சினத்துடன் பார்த்த கண்கள் புனிற்றிளம் மகனைப் பார்த்தும் சிவந்த நிறம் மாறாமல் உள்ளன. இவனைச் சினமடையச் செய்தவர் உயிர்பிழைக்கமாட்டார்[125] என அதியமானின் வீர இயல்பைப் போற்றுகிறார் ஔவையார்.

''பண்டைக் காலத்தில் மன்னர் முதல்மகன் பிறந்த சில நாள் கழித்துப் போர்க்கோலம் பூண்டு சென்று தன் மகனைக் காண்பது வழக்கம். இதன் நோக்கம் மகன் மனத்தில் போர்க்கோலமும் வீரமும் பதிய வேண்டும் என்பதே. இம்முறைப்படியே அதியமான் தன் முதல்மகன் பிறந்தபோது சென்று பார்த்தான்.[126] தன் மகனும் தன்னைப் போன்றே வீரனாகத்

திகழ்ந்து தன்னுறவை நிலைநாட்டவேண்டும் என்பதே அதியனின் நோக்கம் என்பதை அறிகிறோம்.

மூதின் முல்லைத் துறையில் அமைந்த ஒக்கூர் மாசாத்தியார் பாடலில், மூன்றாம் நாள் போரில் தன் தந்தையும், நேற்றைய நாட்போரில் தன் கணவனும் பகைவரை எதிர்த்து வீரமரணம் அடைய இன்று தன் ஒரே மகனைப் போர்க்கோலம் புனைந்து போர்க்களம் அனுப்புகிறாள் மறக்குடித் தாயொருத்தி.[127] இம்மறக்குடித் தாய்க்கும் இவளால் போர்க்களம் புகுந்து வீரமரணம் அடைந்தோர்க்கும் இடையிலான அன்புறவு வீரத்தை அடிப்படையாகக் கொண்டே மலர்ந்தது என்பதைத் தெளிவாக உணரலாம்.

மூதின் முல்லைத் துறையில் தங்கால் பொற்கொல்லனார் என்ற புலவர், தான் மறக்குடித் தலைவன் இல்லத்துக்குச் சென்றபோது, இல்லத்திலுள்ள மனைக்கிழத்தி உணவுப் பொருட்களைப் பாணருக்கும் பிற விருந்தினர்க்கும் படைத்து உண்பிக்கும் விருப்பத்தவள். அவள் கணவனும் பகைவரின் பெரும் போரில் தான் அழித்த யானைகள் அணிந்த பொன்னாலான பட்டம் முதலியவற்றைத் தன்னிடம் வந்த இரவலர்க்குப் பரிசிலாக வழங்குபவனாக உள்ளான்[128] எனக் கூறுகிறார்.

வீரக்குடித் தலைவன் தலைவியர் வாழ்வு பிறர்க்குத் தன்னிடம் உள்ளவற்றை அளித்துதவும் தகைமை உடைய உறவாகத் திகழ்வது தெரிகிறது.

பெயர் தெரியாத புலவர் ஒருவர் பாடிய மூதின் முல்லைத் துறைப்பாடல், தலைவன் ஒருவன் தனக்குச் சிறிய அளவில் விளைந்த வரகுக் குவியலில் தன்னை நெருக்கியக் கடன்காரருக்குக் கொடுத்ததுபோக எஞ்சியதைப் பசித்துவந்த பாணர் உண்டு சென்றனர். பின்னர் வறுமையுடன் வரும் சுற்றத்தாரின் வறுமையை நீக்கத் தன்னூரில் வாழும் செல்வரிடம் தனக்கு வேண்டும் அளவைச் சொல்லி கடனாய் வரகைப் பெற்றுக் கொள்கின்ற பெரும் புகழுடையவன் தலைவன். அத்தலைவன் பெருவேந்தர் போரைக் குறித்து வருவாரானால் அவரது பெரும் படையைத் தாங்கி வெல்லும் வல்லமை உடையவன் ஆவான்[129] எனத் தலைவனுடைய தாளாண்மையைக் கூறுகிறது.

வல்லாண் முல்லைத் துறையில் மாங்குடிக் கிழார், தலைவன் ஒருவனின் கொடைத் தன்மையைக் கூறுமிடத்து, தன் கையில் பொருளில்லாதபோதும் இரவலர் வரின் பகைவரிடம் உள்ள செல்வத்தைக் காட்டி அவற்றை இரவலர்களுக்குத் தருபவன். அவ்வாறு அவன் செய்வது இகழ்ச்சிக்குரியதன்று[130] எனக் கூறுகிறார்.

இரவலர்க்கு இல்லை யெண்ணாது எவ்வாறேனும் உதவவேண்டும் என்ற உயர்ந்த எண்ணமும் அதற்கு உறுதுணையாக உள்ள வீரமும், அவன் தன் வீரத்தின் மீது கொண்ட தன்னம்பிக்கையும் மனித நேயத்தின் அடிப்படையில் அமைந்துள்ளன.

ஔவையார் அதியமான் நெடுமான் அஞ்சியை வல்லாண் முல்லைத் துறையில் வைத்துப் பாடும்போது, அவன் சிறப்பைச் சான்றோர்க்கு அறிவிப்பது போலக் கூறுமிடத்து, அதியமான் பொருள் மிகுதியாக உள்ளவிடத்து இரவலர்க்குத் தந்து தானும் உண்பான்; குறைவாய் உள்ளபோது இரவலர்க்குக் கொடுத்துத் தான் உண்ணான்; தான் கடன்பட்டார்க்குத் தருவதினும் அதிகமாக இரவலர்க்கே அளிப்பான்; தன் தகுதி பாராமல் அறிவற்றவரோடும் உடனிருந்து உண்டும் மகிழும் உயர்குணம் உடையவன்[131] எனப் போற்றுகிறார். அதியன் இரவலரைப் பெரும் நட்புறவாய்க் கொண்டு அவர்களைப் புரந்துள்ளமை ஈண்டு நோக்கத் தக்கதாகும்.

வல்லாண்முல்லைத் துறையில் பாடும் பெருங்குன்றூர் கிழார் தன் மன்னன்பொருட்டுக் கடுமையாகப் போர் செய்யும் வீரனைக் கண்டு மன்னன் போரில் தோல்வி அடைந்தால் அவன் பொருட்டுப் போரியற்றும் வீரத்தலைவனின் ஊர் பெரும் பசித்துன்பம் அடையும் என வீரனின் கடிய போருக்குக் காரணம் உரைக்கிறார்.[132]

அவ்வீரன் தன்னூர் மக்கள் பசித்துன்பம் இன்றி வாழ வேண்டுமாயின், பகைவருடன் போரிடும் தன் மன்னன் வெற்றி பெறவேண்டும் என்பதால் அதன்பொருட்டுத் தான் பெரும்போர் ஆற்றினான். இது குடிமக்களிடத்துத் தலைவன் கொண்ட அன்பின் விளைவு எனலாம்.

மன்னன் மீது மக்கள் கொள்ளும் அன்பு பற்றிக் குறிப்பிடும் இளவழகனார்,

> ***"அரசன் ஆட்சியைப் பொறுத்தே குடிமக்களுக்கு அன்பு பெருகும். அரசன் தன் குடிமக்களைக் காக்கும் வகையில் பெரு வீரனாய்ச் செயல்கள் செய்யும்போது அவனுக்கு ஏதாவது ஒரு துன்பம் நேர்ந்துவிடுமானால், அவனிடம் அன்புள்ள குடிமக்கள் உண்ணவும் மனங்கொள்ளார். அப்படி அவர்கள் உள்ளம் அரசனோடு பிணிப்புற்றிருக்கும்"***[133]

எனக் கூறும் கூற்று இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

பாடாண் திணை இயன்மொழி வாழ்த்தில் 19 பாடல்கள்[134] உள்ளன.

வேள் பாரியின் கொடைத்தன்மை பற்றிப் பாடும் கபிலர், அவனிடம் பரிசில் வேண்டிச் செல்லும் இரவலர் அறிவற்றவராயினும், கீழ்மையான தீய குணங்கள் உடையவராயினும்

அவைபற்றி வெறுப்புக் கொள்ளாமல் கொடுக்கும் செயலைத் தன் கடமையாகக் கருதிக் கொடையளிப்பவன்' [135] என்று போற்றுகிறார்.

மேலும் அவன் ஈகை பற்றிக் குறிப்பிடும் கபிலர், பாரி தன்னிடம் வந்து இரந்தோர்க்கெல்லாம் தன் நாட்டைப் பகிர்ந்தளித்துவிட்டான்; இனி எஞ்சியிருக்கும் அவனையும் வேண்டுவராயின் கொடை அறத்தை மேற்கொண்டு அவரிடம் 'வாரேன்' என்னாமல் அவர்க்குத் தன்னைக் கொடை கொடுப்போனாய் அவருடன் சென்றுவிடுவான்'[136] எனக் கூறுகின்றார். மலையமான் திருமுடிக்காரி பரிசாக அளிக்கும் தேர்கள் மலை உச்சியில் பெய்த மழைத்துளிகளை விடப் பலவாகும்; அவனிடம் சென்று திறனல்லாத வீண் சொற்களைக் கூறினாலும் பரிசிலர் பரிசிலின்றி வெறுங்கையுடன் திரும்பிச் செல்லமாட்டார்கள்[137] எனக் கபிலர் திருமுடிக் காரியின் ஈகைப் பண்பைக் காட்டுகிறார்.

வேள் ஆய் அண்டிரன் அளிக்கும் யானைப்பரிசு, மேகமற்ற வானில் உள்ள நட்சத்திரங்களைக் காட்டிலும் அதிக அளவினது. வானம் கரியநிறமின்றி எல்லா இடங்களிலும் நட்சத்திரங்கள் தோன்றுமாயின் அவையே அவனளிக்கும் யானைப்பரிசுக்குச் சமமாகும்.[138] என்பார் உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்.

வேள் ஆய் அண்டிரனைத் தன் வாழ்நாளின் முற்பகுதியில் அன்றி பிற்பகுதியில் அறிந்து எண்ணியவராகிய புலவர் உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் தன் செயலுக்காகத் தன் மனம் அழிந்து போகவேண்டுமெனத் தன்னைத் தானே பழித்துக் கொள்கிறார். மேலும் வடக்கில் உள்ள இமயமலைபோல் தெற்கில் இவன் பிறந்த ஆய்குடி இல்லையாயின் இவ்வுலகம் கீழ் மேலாகிக் கெட்டழியும்[139] எனவும் அவன் குடிப்புகழை ஏற்றி உரைக்கின்றார்.

ஆய் அண்டிரன் அறம் செய்வது மற்றவர்போல மறுமை இன்பம் கருதியன்று என்பதைக் கூறும் முடமோசியார்,

> *''இம்மைச் செய்தது மறுமைக்கு ஆம் எனும்*
> *அறவிலை வணிகன் ஆஅய்அலன்''* [140]

என்பார். ஆய் அறத்தை மறுமையெனும் விலைக்கு விற்பவனல்லன்; வறியவர்க்கு வாழ்வளிக்கும் நெறி சான்றோர்க்குரித்து. அவ்வழியே ஆயும் மேற்கொண்டான் எனக் கூறுகிறார்.

வையாவிக் கோப்பெரும் பேகன்,

> *"கொடைமடம் படுதல் அல்லது*
> *படைமடம் படான்பிறர் படைமயக் குறினே"* [141]

என்கிறார் பரணர். பேகன் கொடையளிக்கும்போது இரவலர், வல்லவர், அல்லாதவர்; பழையர் புதியர் என எவர் வரினும் அறியாமையுடையவனாய் விளங்குகிறான். ஆனால் படைஎடுப்பில் போரறம் காத்து நிற்கிறான் என்பதாகும்.

வன்பரணரின் வறுமையைக் கண்ட கண்டீரக் கோப்பெருநள்ளி புலவரின் இனத்தோடு உண்ணுமாறு ஊனளித்து முத்துவடங்களும் முன்கை கடகமும் அளித்தான். புலவர், அவன் யார் எனவும் அவன் நாடு எது எனவும் வினவியபோது யாதும் கூறாதவனானான். அவன் நள்ளி என மற்றவர் மூலம், தான், புலவர் இனம் கேட்டறிந்ததாகப் பரணர் கூறுகிறார்.[142] நள்ளி தன் கொடையைப் பிறர் அறிய வேண்டாம் எனக் கருதியதால் தன்னைப் பற்றியும் தன் நாடு பற்றியும் கூறாதவனானான் என்பதாகும். வல்வில் ஓரியின் கொடைத்திறம் காணச் சென்ற கூத்தர் சுற்றத்திற்கு அவன் அளித்த பரிசுப் பொருட்களால், பின்னர் இசைக்கருவிகளை இசைத்து ஆடிப்பாடுதலை மறந்தவராயினர்[143] என வன்பரணர் கூறுகிறார்.

பீட்டங் கொற்றன் என்னும் தலைவனது கொடைச் சிறப்பைப் பாடும் காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக் கண்ணனார் என்னும் புலவர், தொழுவத்துடன் நிறைந்த எருதுகள், களத்தில் உள்ள நெற்குவியல், அணிகள் சேர்ந்த ஆண் யானைகள் ஆகியவற்றை நமக்கன்றி எவர் கேட்பினும் அளிக்கும் இயல்பினன். இன்றும், சிலநாள் கழித்தும், நாள்தோறும் சென்றாலும் முன்னாள் தந்தோம் என எண்ணாமல் விரும்பியபடி தருபவன். அத்தகையவன் உள்ளங்கால்களில் முள்ளும் தைத்தல் கூடாது; இவ்வுலகில் உயிர்வாழ்வோர் வாழ அவன் வாழ்க[144] என வாழ்த்துகிறார். குடித்தலைவன் பிறர் வாழ அளித்து மகிழும் உறவும் அவன் நலம் ஓங்க விழையும் இரவலர் நன்றிப் பண்பும் இதனால் தெற்றென விளங்குகிறது.

ஓய்மான் நல்லியக் கோடன், கொடைத்திறத்தை, தன் கிழிந்த ஆடை கண்டு புத்தாடையும் கள் தெளிவுடன் ஆட்டிறைச்சியும் தந்து வறுமை போக்கிய நாளிலிருந்து ஒரு நாளும் பிற வள்ளல்களின் தலைவாயிலில் சென்று நிற்பதில்லை[145] எனப் புறத்திணை நன்னாகனார் கிணைப் பொருநன் கூற்றாய்க் கூறுகிறார்.

பாடாண் திணை, கடைநிலை துறையில் ஆய் அண்டிரனின் ஈகைத் தன்மையைக் குறிப்பிடும் உறையூர் ஏணிச்சேரி முடமோசியார், ஆய் அண்டிரன் வந்தவர்க்கெல்லாம் வாரிக் கொடுத்து, தன் இல்லக் கிழத்தியின் மங்கல நாண் அன்றிப் பிறிதொன்றும் இல்லாத வறுமையாளன் ஆனான் என்கிறார்.[146]

சோழநாட்டு பிடவூர் கிழான் மகன் பெருஞ்சாத்தன் கொடைத்திறம் பற்றிக் கூறும் மதுரை நக்கீரர், பெருஞ்சாத்தனிடம் தான் பரிசுப் பொருள் பெறச் சென்றபோது அவன் அவனுடைய மனைவியிடம் தன்னை அறிமுகப்படுத்தி, என்னைப் போல் இவனுக்கும் நல்லுணவு அளித்து இவனைப் போற்றுவாயாக' [147] என்று தான் வியப்பு அடையுமாறு கூறினான் என்கிறார். ஒரு நாட்டுத் தலைவன் தன் மனைவியிடம் புலவன் ஒருவனை அறிமுகப்படுத்திப் போற்றுமாறு கூறுதல், புலவர் உறவு புரவலர்களின் குடும்ப உறவாக மலர்ந்து வளர்ந்திருந்ததைக் காட்டுகின்றது.

பாடாண் திணை வாழ்த்தியல் துறையில், அம்பர் கிழான் அருவந்தை என்னும் தலைவனைப் புலவர் கல்லாடனார், 'தான் அவன் வாயில் சென்று பாடாமல் பிறர் வாயிலில் நின்று தடாரிப்பறை முழக்கிப் பாடிக் கொண்டிருக்க அவன் தானாகவே தன்னிடம் வந்து தன் வறுமை நீங்க ஆடையளித்துப் பசித்துன்பம் நீக்கினான்' [148] எனப் போற்றி உரைக்கிறார். பிறர் தன்னை இரவாதிருக்கவும் தானே முன்சென்று கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தது எனும் கழைதின்யானையார் பாடல் கருத்துக்கு[149] எடுத்துக்காட்டாக அம்பர்கிழான் அருவந்தை திகழ்வதை அறியமுடிகின்றது.

பாடாண்திணை பரிசில்துறையில் கொண்கானங்கிழான் என்னும் தலைவனைப் பாடும் புலவர் மோசிகீரனார், பெருஞ்செல்வமுடைய பேரரசன் அருகில் புலவர் இருப்பினும், அவனிடம் பரிசில் கேட்டுப் பெறுவதை விடுத்து கொடைக்குணமுடையார் செல்வக் குறைவுடையவராயினும் அவரையே நாடிச் செல்வர். எனவே யான் உன்னிடம் பரிசில் பெற வந்தேன்[150] என்கிறார். இது வள்ளல்களிடம் பரிசுபெறும் புலவர்தம் பண்பாட்டு உறவைப் பகர்கின்றது.

அதியமான் நெடுமான் அஞ்சியைப் பெருஞ்சித்திரனார் பாடிச் சென்றபோது புலவரைக் காணாமலேயே பரிசில் பெற்றுச் செல்லுமாறு கூறினான். அதனால் சினங்கொண்ட புலவர்,

> *"காணாது ஈத்த இப்பொருட்கு யானோர்*
> *வாணிகப் பரிசிலன் அல்லேன்"* [151]

எனக் கூறி அப்பரிசிலைப் பெறாது மறுக்கிறார். சங்கப் புலவர்கள், தம் தகுதியை அறியாமல் தரும் எப்பொருளையும் விரும்பார் என்பதும், புரவலரை நேரில் கண்டு பாடி உரைநிகழ்த்தும் அன்புறவையே பெரிதும் விரும்பினர் என்பதும் தெளிவாகின்றன.

பொதுவியல் திணை, கையறுநிலை துறையில் புலவர்களின் அவலங்கள் பல வெளிப்படுகின்றன. பாரியை இழந்த கபிலர் அவன் மகளிரைத் திருமணம் செய்துவைத்தற்

பொருட்டு மன்னர்களிடம் அழைத்துச் சென்ற போதும் பாரி ஆண்ட பறம்பு மலையையும், பறம்பு நாட்டையும் கண்டு மனங்கலங்கி அவனை இழந்து நிற்கும் துன்பநிலையை எடுத்தியம்புகிறார்.[152]

பொந்தியார் என்னும் புலவர் தன்னையொத்த புலவராகிய பிசிராந்தையாரைப் பற்றி இரங்கியுரைக்கிறார். ஒருவரை ஒருவர் காணாது நட்புகொண்ட கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்தமையும் அதன்பொருட்டு பிசிராந்தையார் வந்தமையும், புலவர் வருவார் என மன்னன் உறுதியாகக் கூறியவாறே அப்புலவர் வந்து மன்னனுடன் வடக்கிருந்தமையும் ஆகிய யாவுமே வியப்புக்குரியன. அத்தகைய நட்பைப் போற்றும் சோழனை இழந்த நாடு என்னாகும்[153] என இரங்கிப் பாடுகிறார்.

புவியாளும் மன்னர்க்கும் கவியாளும் புலவர்க்கும் இருந்த நட்புறவின் பெருமை சங்க காலத்தின் தனிச்சிறப்பாகும்.

கண்ணகனார் என்னும் புலவர், கோப்பெருஞ் சோழனைக் காணாமலேயே அவனுடன் நட்புற்று அவன் பொருட்டு வடக்கிருந்து உயிர் துறந்த பிசிராந்தையார் செயலை எண்ணி இரங்குகிறார். எத்திசையினராயினும் சான்றோர் சான்றோரையே சார்வர். சான்றோர் அல்லார் அவரை ஒத்தாரையே சார்வர்[154] என உறவுத்தன்மையை ஒரு கொள்கையாகவே வியந்துரைக்கிறார்.

சோழன் கரிகால் பெருவளத்தான் இறப்பு குறித்துப் பாடும் கருங்குளவாதனார், அரண்களைக் கடந்து பாணர் கூட்டம் புரந்து வேள்வியை முறைப்படி செய்தவன் உரிமை மகளிர் மங்கல அணி இழக்க மறைந்தான். அவனை இழந்த உலகம் இரங்கத் தக்கது[155] என இரங்கியுரைக்கிறார்

அதியமான் எழினி இறப்பைக் கண்டு வருந்தும் அரிசில்கிழார், பல உயிர்களையும் கூற்றம் உண்ணுதற்குப் பகைவருடன் போரிட்டுத் தருகின்றவன் எழினி. அவனது உயிரை உண்ட கூற்றுவன் தனக்குத் தானே கேடு சூழ்ந்தது[156] எனப் பாடுகிறார்.

அதியமான் நெடுமான் அஞ்சி இல்லாத பகலும் இரவும் தனக்கு இல்லாமல் போகவேண்டும்; தான் வாழும் நாளும் தனக்கு இல்லாமல் ஒழியவேண்டும் எனத் தனக்குத் தானே இறப்பு வேண்டுமென ஔவையார் வருந்துகிறார்[157] மேலும் அதியமான் தங்களுடன் ஒருங்கமர்ந்து மதுவையும் உணவையும் உண்டமையை நினைவுகூறும் ஔவையார் இனிப் பாடுபவரும், பாடுவார்க்குத் தருவாரும் இல்லை; ஒரு பொருளையும் பிறர்க்குக் கொடுக்காமலேயே இறந்து போகின்ற உயிர்களும் இவ்வுலகில் பலவாகும் என அதியன்

தன்மாட்டுக் கொண்டிருந்த நட்புரிமையையும் அவன் ஈகைப் பண்பையும், ஈகையற்ற உலகியல்பையும் எடுத்தியம்பி இரங்குகிறார்.[158]

சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை தன் மனைவி இறக்க, அவளைத் தீப்படுக்கையில் இட்டு எரித்த பின்னரும் தான் உயிர் வாழ்வதை எண்ணியும் இவ்வுலகத்தியற்கையை எண்ணியும் வருந்துகிறான். மேலும் தன் மனைவி இறந்தபின்னும் தன்னுயிர் போகாமல் இருப்பது குடியோம்பும் தன் கடமையைச் செய்தற் பொருட்டென்பதைக் குறிப்பாக உணர்த்துகிறான் மாக்கோதை.[159]

பொதுவியல் திணை, பொருண்மொழிக் காஞ்சித் துறையில் அமைந்த மோசிகீரனார் பாடல், நாடாளும் மன்னன் உறவு இவ்வுலகிற்கு உயிர் போன்றது என்பதை,

> *''நெல்லும் உயிர்அன்றே நீரும் உயிர் அன்றே*
> *மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்''* [160]

எனக் கூறுகின்றது. நாடாளும் மன்னன் உயிர் என்பதால் மக்கள் அவ்வுயிர் குடிகொண்டுள்ள உடலாவர் என்பதாகும்.

'மோசிகீரனார் அவர் காலத்தையொட்டி மன்னவனே மாநிலத்தின் உயிர் என்று உரைத்தார். நாம் இக்காலத்தை ஒட்டி ''அரசாட்சியே மக்களின் உயிர்'' என்று மாற்றிக் கொண்டால் இக்காலத்துக்கும் இப்பாட்டின் கருத்து ஏற்றதாகும்.[161]

மோசிகீரனார் கூற்றுக்கு மாறாக பிற்காலத்தில் நாடாளும் மன்னனை உடலாகவும் குடிமக்களை உயிராகவும் கூறியுள்ளதும் உண்டு.

> *''செயிரிலா உலகினிற் சென்று நின்றுவாழ்*
> *உயிரெலாம் உறைவதோர் உடம்பு மாயினான்''* [162]

எனக் குடிமக்களாகிய உயிருக்கு மன்னன் தசரதன் உடலாக விளங்கினமையைக் காட்டுகிறார் கம்பர்.

முடியாட்சி நிலவிய சங்க காலத்தில் மன்னனுக்கு ஏற்றம் தரும் வகையில் அவனை உயிராக எண்ணியதையும், குடியாட்சி அல்லாதபோதும் குடியாட்சி போலக்கருதி மக்களுக்கு ஏற்றம்தரும் வகையில் மக்களை உயிராகக் கூறிய கம்பர் கூற்றையும் ஒப்புநோக்கினால் மன்னனுக்கும் மக்களுக்கும் இடையிலான உறவுமுறை தெற்றெனப் புலனாகின்றது.

நாடாயினும் காடாயினும் அது மேடாயினும் பள்ளமாயினும் அங்கு வாழும் ஆடவர் நல்லவராயின் அவையும் நலமுடையதாகும் எனக் கூறும் ஔவையார் கூற்று, நாட்டில்

நல்லுறவு செழிக்க ஆடவர்கள் நல்லோராய்த் திகழவேண்டும் என்பதை வலியுறுத்துகிறது.[163]

கணியன் பூங்குன்றனார்,

*"யாதும் ஊரே யாவரும் கேளிர்*

*...................................................*

*பெரியோரை வியத்தலும் இலமே*
*சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே"* [164]

எனக் கூறும் பாடல் சங்கத் தமிழர் எல்லா ஊர்களையும் தம்மூராகவும் எல்லா மக்களையும் தம் உறவினராகவும் கருதிய பண்பாட்டைப் பறைசாற்றுகின்றது.

மேலும் அறிவால் உயர்ந்த பெரியோரை வியந்து போற்றுவதும் இல்லை. அதைக்காட்டிலும், தம் அறிவால் தாழ்ந்தவராகிய சிறியோரை இகழ்தலும் இல்லை எனக் கூறுவது, அன்றைய தமிழர் வாழ்வு அறிவை முன்னிறுத்திக் கொள்ளும் உறவுடையதாகத் திகழாமல் தூய அன்பினை முன்னிறுத்திக் கொள்ளும் உறவாகவே திகழ்ந்தது என்பதை உணர்த்துகிறது.

ஒரேருழவர் என்னும் புலவர் உறவின் பிணிப்பைக் கூறுகையில், தான் துறவுநிலை மேற்கொண்டு உய்வடைய முடியாதவாறு தன் காலைத் தடுப்பது உறவினருடன் கூடி வாழும் வாழ்க்கை ஆகும்; அதனால் உறவுப் பிணிப்பினின்றும் தப்பித்து தான் உய்ய முடியாத நிலையில் உள்ளதாகக் கூறுகிறார்.[165] இப்புலவர் கூற்றில், உறவினரின் உறவில் இன்பம் காணமுடியாத இவரின் மன ஏக்கம் புலனாவதைக் காண முடிகின்றது. இற்றைக்கும் தூய அன்புறவு அரிதாகிப் போனதால் உறவை விரும்பி ஏற்போர் எண்ணிக்கை குறைவே எனலாம்.

பக்குடுக்கை நன்கணியார் பெருங்காஞ்சித் துறையில் பாடும் பாடல் உலக நிலையாமையைக் கூறுகிறது. ஒரு வீட்டில் சாவும், மறுவீட்டில் திருமணமும் கணவருடன் கூடியோர் மகிழ்வும் பிரிந்தோர் துன்பமும் அடையுமாறு இருவேறு நிலைகளைப் பண்பற்ற இறைவன் படைத்துள்ளான். இந்தக் கொடிய உலகியற்கையை உணர்ந்தோர் நற்செயல்களைச் செய்வாராக என உலக உறவின் முரண்பட்ட இருவேறு நிலைகளைக் காட்டி நன்னெறிப்படுத்துகிறார் புலவர் நன்கணியார்.[166]

மதுரை கணக்காயனார் மகன் நக்கீரர் வாகைத் திணை, கூதிர்ப்பாசறை எனும் துறையில், போர்ப் பாசறையில் இரவில் வீரர்கள் புண்பட்டிருக்க, பாண்டியன் நெடுஞ்செழியன் உறங்காமல் அங்கு நேரிட்டுச் சென்று, அவ்வீரர்களைக் கண்டு அவருற்ற

நோய்தீர உதவிசெய்தான் எனக் கூறுவதில் மன்னர்க்கும் வீரர்க்குமான நல்லுறவு அறியப்படுகின்றது.[167]

செந்துறை பாடாண்பாட்டுத் துறையில் களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் பாணர்க்களிக்கும் பரிசு குறித்துப் பாடும் காப்பியாற்றுக் காப்பியனார், 'பகைவர்க்குத் துன்பம் தரக்கூடியவனாயினும் பாணர்க்கு உணவும் அணிகலன்களும் அருள்கின்றவனாகிய நீ சான்றோர் நின்புகழை எடுத்துக்கூற வாழ்வும் வளமும் நிலைபெற வாழ்க' [168] எனப் போற்றுகிறார்.

கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவனின் பரிசில் சிறப்பைக் கூறும் பரணர், வீரர், போர்க்களப் பாணர், பொருநர் ஆகியோர்க்குக் கள்ளும் கூத்தர்களுக்குக் குதிரையும் அளித்தான்; பல்வேறு பரிசிலர்க்கும் அவர்க்கேற்ப பல்வேறு வகையாகப் பரிசளித்தான்[169] என்கிறார்.

ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைக் காக்கைப்பாடினியார் நச்செள்ளையார் பாடும்போது அவன் வீரர்களுக்குக் கவசம் போன்றவன் என்றும், தன் நாட்டில் இரவலர் இல்லாததால் இரப்பவர் வாராது போயினும் அவர்க்கு ஈந்து மகிழ்கின்ற இன்பத்தை விரும்பி, பிறநாடுகளிலிருந்து இரவலரைத் தேர் ஏற்றிக் கொணர்ந்து உண்ணும் உணவை மிகுதியாகக் கொடுக்கின்ற கேட்டார்ப் பிணிக்கும் மெய்ம்மொழியுடைய புகழமைந்த தோன்றல்[170] எனக் கூறுகிறார்.

காட்சி வாழ்த்து துறையில் செல்வக்கடுங்கோ வாழியாதனை ''அந்தணர்களுக்கு நீர் வார்த்துப் பரிசளிப்பான்; விறலியர்க்குப் பகைவரிடமிருந்து கைப்பற்றிய பொருட்களைக் கொடுக்கச் செய்வான்[171] எனக் கபிலர் புகழ்கிறார். மேலும் வாழியாதன் சான்றோர்க்குப் பணிந்து ஒழுகும் பண்பாளன்; பகைவர்க்கு வணங்காத ஆண்மையாளன்; முதியவரைப் போற்றிக் கடமையைச் செய்பவன்[172] எனவும் பாராட்டுகிறார் கபிலர்.

பல்யானைச் செல்குழு குட்டுவனைப் பாலைக் கௌதமனார் பெருஞ்சோற்று நிலை என்னும் துறையில் ஐந்துநில மக்களின் வாழ்வையும் விருந்தோம்பலையும் குறிப்பிடுகிறார். மேலும் வேடர் உணவிற்கு விலையாக வணிகரிடம் கள்ளைப் பெறுவர் எனவும் குறிஞ்சி நில மக்கள் வரும் விருந்தினர்க்குத் தினைமாவாகிய உணவை முறைமுறையாகத் தருவர் எனவும் கூறியுள்ளமையால் பண்டமாற்று முறையில் உண்டாகும் உறவும் விருந்தோம்பலால் விளையும் உறவும் பெறப்படுகின்றன.[173]

வஞ்சித்துறை பாடாண்பாட்டுத் துறையில் பல்யானைச் செல்கெழு குட்டுவனைப் பாலைக் கௌதமனார் பாடுமிடத்து, மக்கள் தம்முள் மற்றவரைத் துன்புறுத்தாமல் மற்றவர்க்குரிய தமக்குத் தொடர்பு இல்லாப் பொருளை விரும்பாமல், தம்மிடம் அன்புடன் வாழும் வாழ்க்கைத் துணையைப் பிரியாமல், பலர்க்கும் பகுத்துத்தந்து தாமும் உண்டு இனிது வாழப் பொருள் பலவும் உதவும் பேரரசர் வழியில் தோன்றியவன் குட்டுவன்[174] என்றுரைக்கிறார்.

செந்துறை பாடாண்பாட்டுத் துறையில் களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலைக் காப்பியாற்றுக்காப்பியனார் பாடுமிடத்து,

*''வசையில் செல்வ! வான வரம்ப*
*இனியவை பெறினே தனிதனி நுகர்வேம்*
*தருகென விழையாத் தாவில் நெஞ்சத்துப்*
*பகுத் தூண் தொகுத்த ஆண்மைப்*
*பிறர்க்கென வாழ்தி நீ ஆகல் மாறே''* [175]

என்றுரைக்கிறார்.

இக்கூற்றுகளால் அக்காலத்தில் உணவைப் பங்கிட்டு அளிக்கின்ற பொதுநிலை இருந்தமையை அறியலாம். மேலும் பகுத்துண்டு வாழ்தல் சிறந்த சமுதாய அறச் செயலாகக் கருதப்படுவதை,

*''பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்*
*தொகுத்தவற்றுள் எல்லாம் தலை''* [176]

என்னும் வள்ளுவர் குறள்மொழியால் அறியலாம்.

தம்மிடமுள்ளவற்றைப் பகுத்துண்ணும் பழக்கமுடையவனைப் பசி என்று சொல்லப்படும் தீய நோய் அணுகாது என்பதை,

*''பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னும்*
*தீப்பிணி தீண்டல் அரிது''* [177]

என்றும் குறள் பகர்கின்றது.

இப் பகுத்துண்ணும் செயலைப்பற்றிக் கூறும் வரலாற்றாய்வுக் குழுவினர்,

***''வெட்சி என்னும் போர் முறையில் கொண்டுவந்த பசுக்களைப் பூசலை மாற்றி நோயில்லாமல் கொண்டுவந்து, பசுக்களை நிறுத்த வேண்டும் எனச் சொல்லிய இடத்தில் கொண்டு வந்து நிறுத்தி; அப்பசுக்களைச் சமுதாய தருமப்படி பங்கிட்டுப் பின்னர் யாவரும் ஒரு முகமாக உண்டபின்***

*சமுதாயத்தில் வேண்டியவர்களுக்குக் கொடுத்தல் தொல்காப்பியனார் காலத்துப் பகுத்துண்ணும் சமதருமமாகும்''* [178]

என்றுரைக்கின்றனர்.

பரிபாடலில் திருமாலை வேண்டிக் கொள்வதாகப் பாடும் கீரந்தையார் தம் தலைகள் கீழே பொருந்துமாறு ஏத்தியும் வாழ்த்தியும் மெய்ப்பொருளைத் தாம் உணர்வதற்கு அருளுமாறு வேண்டுகிறார். இறைவழிபாட்டைத்[179] தம் உறவினரோடு சேர்ந்து வணங்கும் புலவர் நிலை புலப்படுகிறது.

தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனைப் பாடும் மாங்குடிமருதனார் அவனது விருந்தோம்பலுடன் கூடிய கொடைச்சிறப்பைப் புகழ்வதுடன்[180] பௌத்தப் பள்ளிக்குச்செல்லும் பெண்கள் தம் சிறுபிள்ளைகள் கூட்டத்திலிருந்து பிரிந்து போகாத வண்ணம் அவரைத் தம் கைகளால் பிடித்துக்கொண்டு அணைத்துச் சென்றனர் என, பெண்டிர் தம் பிள்ளைகட்கும் பக்தி உணர்வை வளர்க்கச் செய்யும் பண்பாட்டுறவைக் காட்டுகிறார்.[181]

இவற்றால் சங்க கால மக்களின் உறவு இறைவழிபாட்டு வழியும் வளர்ந்தோங்கிச் செழித்தமையை உணரமுடிகின்றது.

## 8.17 ஆய்வு முடிவுகள்

1. புற இலக்கியங்களில் மன்னன், வள்ளல், குறுநில மன்னன், தலைவன், வீரர் இவர்களின் வீரம், கொடை, விருந்தோம்பல் பற்றி அதிகமாகப் பேசப்படுகின்றன.
2. பேரரசனாக இருந்தாலும் புலவர் அவனுக்கு அறிவுரை வழங்கித் திருத்து கின்றனர்.
3. புலவர், இரவலராக இருந்தாலும் முறையான பரிசிலையே விரும்புகின்றனர். மாறாக முறையில்லாப் பரிசிலை வெறுத்து ஏற்காது மறுத்துச் செல்கின்றனர்.
4. அரசனையே இடித்துரைக்கும் துணிச்சல் புலவர்களுக்கு இருக்கின்றது.
5. பிரிந்திருக்கும் மனைவியை ஒன்று சேர்க்க முயல்கின்றனர்.
6. புலவர் தம்மொத்த புலவர், பாணன், விறலி போன்றோருக்குத் தாம் பெற்ற இன்பம் பெறும்படி உதவி செய்கின்றனர்.

7. புலவர், மன்னரிடம் கொண்ட உறவு, சிறந்த நண்பன், ஆசான், அமைச்சன் எனும் நிலைகளில் விளங்குகிறது.

8. குறுநில மன்னன், வள்ளல், தலைவன் ஆகியோரும் மன்னனைப் போலவே புலவர்களிடம் உறவு கொள்கின்றனர்.

9. மன்னன் புலவர்களைப் புதியவராகக் கண்டாலும் மதித்தும் விருந்தோம்பியும், பரிசளித்தும் போற்றுகின்றான்.

10. வீரக்குடிப் பெண், தன் மகனாகவோ, தன் கணவனாகவோ இருந்தாலும் அவர்தம் வீரத்தைப் போற்றுகிறாள்.

11. இரவலர்க்குக் கொடுக்கப் பரிசுப் பொருள் இல்லையெனில் புரவலர்கள் தம் பொருளை அடகு வைத்தோ, கடனாகப் பொருளைப் பெற்றோ கொடையளிக்கின்றனர்.

12. மன்னன், வள்ளல், வீரத் தலைவன் இவர்தம் இறப்பை எண்ணிப் புலவரும் மக்களும் வருந்துவதுடன் நடுகல்லாக்கி வணங்குவதையும் காண முடிகிறது.

# அடிக்குறிப்புகள்

1. இலக்குமிதரன் பாரதி, 'நமது சமூகம்' பக். 108
2. ஞா. தேவநேயன், 'பண்டைத் தமிழ் நாகரிகமும் பண்பாடும்' பக். 8
3. சாலினி இளந்திரையன், 'சங்கத் தமிழரின் மனித நேய மணி நெறிகள்' பக். 12
4. சி. பாலசுப்பிரமணியன், 'தமிழிலக்கிய வரலாறு' பக். 31
5. செந்துறை முத்து, 'சங்க காலச் சமுதாயச் சிந்தனைகள்' பக்.80
6. அ.மு. பரமசிவானந்தம், 'கவிதையும் வாழ்க்கையும்' பக். 306
7. சாமி சிதம்பரனார், 'எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும்' பக். 17
8. குறள். 394
9. Tamil Lexicon, Vol V, Pa. 2786
10. Tamil Lexicon, Vol V, Pa. 2785
11. கழகப் புலவர் குழுவினர், கழகத் தமிழ் அகராதி, பக். 631
12. ஞா. தேவநேயன், 'பழந்தமிழாட்சி' பக். 101
13. பொற்கோ, 'பி.பி.சி தமிழோசையியல்' ப-ள் 23-34
14. மா. இராசமாணிக்கனார், 'தமிழக ஆட்சி' பக். 105
15. சு. வித்தியாநந்தம், 'தமிழர் சால்பு' ப-ள் 84-85
16. தங்கங் கந்தசாமி, 'போரியல் அன்றும் இன்றும்' முன்னுரை பக். IX
17. புறம். 36, 45, 46, 57, 213
18. புறம். 36
19. புறம். 45
20. புறம். 46
21. புறம் 57
22. புறம். 213
23. தொல். பொருள். மெய். 10.
24. தொல். பொருள். மெய். 10 பேரா. உரை, பக். 16
25. லெ.ப.கரு. இராமநாதன், 'சங்க காலத் தமிழர் வாழ்வு' பக். 48
26. புறம். 109, 110
27. புறம். 109
28. புறம். 110
29. புறம். 17, 19, 20, 21, 25, 26, 31, 33, 37, 42, 43, 44, 52, 53, 66, 93, 98, 99.

30. புறம். 20
31. புறம். 43
32. புறம். 44: 9-12
33. புறம். 66.
34. புறம் 2, 5, 6, 35, 46, 55, 184
35. புறம். 2:15-16
36. தொல். பொருள். புறத். 65:9
37. புறம். 5
38. புறம். 6
39. புறம். 35
40. புறம். 184
41. புறம். 3, 13, 91, 367
42. புறம். 3
43. புறம் 91
44. புறம். 9, 10, 12, 14, 15, 34, 38, 39, 50, 92, 102
45. புறம். 9
46. புறம். 10
47. புறம். 50
48. புறம். 1, 196, 197, 198, 210, 211, 266
49. புறம். 196
50. புறம். 197
51. குறள் 657
52. புறம். 210, 211
53. புறம். 200-203
54. புறம். 200-202
55. புறம். 203
56. புறம் 397
57. புறம் 18, 28, 29
58. புறம். 18
59. புறம். 219, 222, 237
60. புறம். 219
61. புறம். 222

62. புறம். 363, 364
63. புறம். 363
64. புறம். 364
65. புறம். 126, 148, 161, 204, 379
66. புறம். 148 : 5-7
67. புறம். 204
68. புறம். 379
69. புறம். 136, 159, 160, 164
70. புறம். 159
71. புறம். 160
72. புறம். 164
73. புறம். 162, 165
74. புறம். 162
75. புறம். 165
76. புறம். 121
77. புறம். 236
78. புறம். 145, 146, 147
79. புறம். 163
80. புறம். 359, 360, 366
81. புறம். 359
82. புறம். 360
83. புறம். 366
84. புறம். 157
85. புறம். 175
86. புறம். 137, 389
87. புறம். 137
88. புறம். 389
89. புறம். 139
90. புறம். 205
91. புறம். 195:6-9
92. புறம். 246
93. இரா. சந்தோஷ்குமாரி, 'புறம் காட்டும் இறப்பு', 20ஆவது கருத்தரங்கு ஆய்வுக் கோவை, பக். 19

94. புறம். 333
95. புறம். 140
96. புறம். 191
97. புறம். 68, 69, 70, 138, 141, 155, 156, 172, 260, 280, 289, 291, 308, 320, 321
98. புறம். 320
99. புறம். 68
100. புறம் 141
101. புறம். 103
102. இராம. சுப்பிரமணியன், 'அறமலர்க் கொத்து' பக். 72
103. புறம் 206
104. புறம். 101
105. புறம். 207:3-7
106. புறம். 250
107. தமிழண்ணல், 'குறிஞ்சிப்பாட்டு இலக்கியத் திறனாய்வு விளக்கம்'. பக். 117.
108. புறம். 143
109. புறம் 144
110. புறம். 182
111. புறம். 390, 392
112. புறம். 313
113. புறம். 397
114. புறம். 394
115. புறம். 398
116. புறம். 399
117. புறம். 400
118. புறம். 113
119. புறம். 176
120. புறம். 361
121. புறம். 336-339, 341, 343 - 352, 354
122. புறம் 304
123. புறம். 295
124. புறம் 310
125. புறம். 100

126. ஆ. மாணிக்கனார் (உரையாசிரியர்) சங்க இலக்கியம், புறநானூறு, பக். 208
127. புறம் 279.
128. புறம். 326
129. புறம். 327
130. புறம். 313
131. புறம். 315
132. புறம். 318
133. இளவழகனார், 'சங்க இலக்கிய இன்கவித் திரட்டு' பக். 13
134. புறம். 96, 106, 107, 108, 123, 124, 129, 132, 134, 142, 150, 153, 171, 177, 376, 378, 380, 381, 388
135. புறம். 106
136. புறம். 108
137. புறம். 124
138. புறம். 129
139. புறம். 132
140. புறம். 134
141. புறம். 142 : 5-6
142. புறம். 150
143. புறம். 153
144. புறம். 171
145. புறம். 376
146. புறம். 127
147. புறம். 395
148. புறம். 385
149. புறம். 204
150. புறம். 154
151. புறம். 208
152. புறம். 114-120
153. புறம். 217
154. புறம். 218
155. புறம். 224.
156. புறம். 230
157. புறம். 232

158. புறம். 235
159. புறம். 245
160. புறம். 186:1-2
161. சாமி சிதம்பரன், 'எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும்' பக்.197
162. கம்பராமாயணம், பால; அரசி.பட; 10
163. புறம் 187
164. புறம். 192
165. புறம். 193
166. புறம் 194
167. நெடு. 181-188
168. பதிற். பத். 37
169. பதிற். பத். 42, 43, 48
170. பதிற். பத். 55
171. பதிற். பத். 64
172. பதிற். பத். 70
173. பதிற். பத் 30
174. பதிற். பத். 22
175. பதிற். பத். 38: 12-16
176. குறள். 322
177. குறள். 227
178. தமிழ்நாட்டு வரலாற்றுக் குழுவினர், 'தமிழ் நாட்டு வரலாறு - தொல்பழங்காலம்' பக். 309
179. பரி. 2, 9, 18
180. மது. 99-105, 210-219, 527-535
181. மது. 461-467

# 9. பிற புறமாந்தர் கூற்றுவழி உறவுகள்

| | |
|---|---|
| 9.0 | முன்னுரை |
| 9.1 | அரசன் கூற்றுவழி உறவுகள் |
| 9.1.1 | அரசன் பாணரிடம் உரைக்கும் கூற்றுவழி உறவு |
| 9.1.2 | அரசன் சான்றோரிடம் கூறும் கூற்றுவழி உறவு |
| 9.1.3 | அரசன் பொதுநிலையில் கூறும் கூற்றுவழி உறவு |
| 9.2 | வீரர் மனைவி கூற்றுவழி உறவு |
| 9.3 | வீரப்பெண் ஒருத்தி கூற்றுவழி உறவு |
| 9.4 | வீரத்தாய் கூற்றுவழி உறவு |
| 9.5 | பாணன்-பொருநன்-கூத்தன் கூற்றுவழி உறவு |
| 9.5.0 | விருந்தோம்பல் |
| 9.5.1 | பாணன் பிற பாணனிடம் கூறும் கூற்றுவழி உறவு |
| 9.5.2 | பொருநர் பிற பொருநரிடம் கூறும் கூற்றுவழி உறவு |
| 9.5.3 | கூத்தன் பிற கூத்தனிடம் கூறும் கூற்றுவழி உறவு |
| 9.6 | ஆய்வு முடிவுகள் |

# 9. பிற புறமாந்தர் கூற்றுவழி உறவுகள்

9.0 உறவு நிலையின் விரிவாகக் கருதப்படுவது புறநிலையில் அமையும் உறவுகள் ஆகும். இதற்கு முன் இயலில் புலவர்கள் பிறரிடம் கூறும் கூற்றுகள் ஆராயப்பட்டன. இவ்வியலில் புறத்திணை மாந்தர்களில் தலைமைக்குரியவராகிய அரசர், வீரர், வீரக்குடி மகளிர், சான்றோர், பாணன், பொருநர், கூத்தர் ஆகியோர் நிகழ்த்தும் கூற்றுவழி உறவுகள் ஆராயப்படுகின்றன.

## 9.1 அரசன் கூற்றுவழி உறவுகள்

காஞ்சித் திணையில் வஞ்சினக் காஞ்சி என்ற துறையில் ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன், பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், சோழன் நலங்கிள்ளி ஆகிய மூன்று மன்னர்களின் கூற்றுகள்[1] காணப்படுகின்றன.

மன்னர்தம் வஞ்சினம் பற்றிக் கூறும் தொல்காப்பியர்,

*"இன்னது பிழைப்பின் இதுவா கியரெனத்*
*துன்னருஞ் சிறப்பின் வஞ்சித் தானும்"* [2]

என்கிறார்.

புறப்பொருள் வெண்பா மாலையும்,

*"வெஞ்சின வேந்தன் வேற்றவர்ப் பணிப்ப*
*வஞ்சினங் கூறிய வகைமொழிந் தன்று"* [3]

எனக் கூறுகிறது. இப்பாடலுக்கு விளக்கவுரை தரும் பெருமழைப் புலவர்,

*"வஞ்சினம் இவ்வாறு செய்வேன், செய்யேனாகில் இன்னன் ஆவேன்"* [4]

எனப் பல்லோர் முன்னிலை நின்று உறுதி கூறுதல் என்று கூறுகிறார்.

எனவே நாடாளும் வேந்தர்கள் தம் வீரம் வெளிப்படுமாறு தம் வெற்றியின் பொருட்டுத் தமக்குத் தாமே ஊக்கப்படுத்திக் கொள்ளும் உளவியல் பாங்கே வஞ்சினக்கூற்று எனலாம்.

ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன், 'என்னுடன் போரிடுவோம்' என்று மன்னர்கள் கூறினர். அவர்களைப் போரிலே புறம் காணச் செய்வேன். அவ்வாறு செய்யவில்லையாயின் என் இனிய மனைவியைப் பிரிந்தேன் ஆவேன். திறனற்ற ஒருவனை வைத்து முறை திரிந்த கொடுங்கோல் ஆட்சி செய்பவன் ஆவேன். மாவன் ஆந்தை, அந்துவன்சாத்தன்,

ஆதன் அழிசி, இயக்கன் முதலிய நண்பருடன் கூடி மகிழ்கின்ற மகிழ்ச்சியை இழப்பேன் ஆவேன். மேலும் நாட்டைக் காக்கும் அரசுரிமை நீங்கிப் பிறர் நாட்டைக் காவல் செய்யும் குடியில் பிறப்பேன் ஆகுக'[5] என்று வஞ்சினம் கூறுகிறான்.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், பகைமன்னரை தான் போரில் வெல்லவில்லை யாயின்,

> *"குடிபழி தூற்றும் கோலேன் ஆகுக*
> *ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி*
> *மாங்குடி மருதன் தலைவன் ஆக*
> *உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்*
> *புலவர் பாடாது வரைகஎன் நிலவரை*
> *புரப்போர் புன்கண் கூர*
> *இரப்போர்க்கு ஈயா இன்மையான் உறவே"* [6]

என்று வஞ்சினம் உரைக்கின்றான்.

சோழன் நலங்கிள்ளி பகைவர் மெல்ல வந்து என் நல்ல அடியினைச் சேர்ந்து எமக்குத் தரவேண்டும் என்று கேட்டிருப்பார் எனின் என் அரசை அவர்க்கு அளிப்பது எனக்கு எளியதாகும். என் இன்னுயிரையும் கொடுப்பேன், அவ்வாறன்றி அறிவற்றோர் போல் என்னிடம் போர் செய்யின் அவரைப் போரிலே வெல்வேன். அவ்வாறு செய்யேனாயின்,

> *"தீதுஇல் நெஞ்சத்துக் காதல் கொள்ளாப்*
> *பல்லிருங் கூந்தல் மகளிர்*
> *ஒல்லா முயக்கிடைக் குழைகஎன் தாரே"* [7]

என்று வஞ்சின மொழி உரைக்கின்றான்.

இவற்றால் மன்னர்கள் வஞ்சினம் உரைக்கும்போது தங்களை நீதிநெறி தவறியவன், மனைவி, நண்பர்கள் ஆகியவர்களை நீங்கியவன், குடிமக்கள் பழிதூற்றும் கொடுங்கோலன், இரப்பவரின் துன்பம் துடைக்க முடியாத வறுமை அடைபவன், பரத்தை உறவு கொண்ட பழியுடையவன் என்று உலகம் தூற்றும் நிலை அடைவதை எண்ணிப் பார்க்கின்றனர் என்பதும், மனைவியன்றி பிற மகளிரை எண்ணாத ஒழுக்க மேம்பாடுடையவர் என்பதும் புலனாகின்றன.

### 9.1.1 அரசன் பாணரிடம் உரைக்கும் கூற்றுவழி உறவு

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் என்னும் அரசன் தன் நண்பனான சிறுகுடிகிழான் பண்ணன் என்னும் வேளாளர் தலைவனின் கொடைச் சிறப்பைப்

பாணர்களுக்கு உரைக்கும் நிலையில் பாடாண்திணை இயன்மொழி வாழ்த்துத் துறையில், பண்ணனிடம் உணவைப் பெற்ற சிறுவர்கள் முட்டை கொண்டு வரிசையாய்ச் செல்லும் எறும்பைப் போலச் செல்கின்றனர். இவ்வாறு பசிப்பிணி போக்கும் மருத்துவனான ''பண்ணன் யான் வாழும் நாளும் பெற்று வாழ்வானாக'' [8] என்று உரைக்கின்றான்.

அறத்தில் சிறந்த அறமாகப் போற்றப்படுவது பசிப்பிணியைக் களைதலே ஆகும். அதனைத் திறம்படச் செய்பவன் தன் குடிமகன் என்பதைக் கண்டு உணர்ந்த மன்னன் அவன் வாழ்நாளுடன் தன் வாழ்நாளையும் கூட்டி வாழ்த்தி உரைக்கின்றான். இதிலிருந்து மன்னனின் அருளுள்ளமும், பிறரைப் பாராட்டும் பண்பும் வெளிப்படுவதை அறியலாம்.

### 9.1.2 அரசன் சான்றோரிடம் கூறும் கூற்றுவழி உறவு

கோப்பெருஞ்சோழன் வடக்கிருக்கும் பொழுது தன் நண்பனான பிசிராந்தையார் பற்றி சான்றோரிடம் கூறும் கூற்று பாடாண்திணை இயன்மொழித்துறையில் அமைந்துள்ளது.

மன்னன் தனக்கும், புலவர்க்கும் உள்ள நட்பை,

*''இகழ்விலன் இனியன் யாத்த நண்பினன்*
*புகழ்கெட வரூஉம் பொய்வேண் டலனே''*

என்றும், ''என் பெயரைத் தன் பெயராகச் சொல்லும் மிகுந்த அன்புடன் கூடிய உரிமை உடையவன்; இத்தகு என் துன்பத்தில் அங்கு நில்லாது இப்போதே வருவான்; அவனுக்கும் ஓரிடத்தை அமைப்பீராக'' [9] என்றும் உரைக்கின்றான்.

*''புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்*
*நட்பாம் கிழமை தரும்''* [10]

என்ற வள்ளுவர் கூற்றிற்கேற்ப நட்பு கொண்ட பிசிராந்தையாரைப் பற்றி அரசன் கருதும் எண்ணம் அவர்தம் அன்பின் ஆழத்தைப் புலப்படுத்துகிறது.

### 9.1.3 அரசன் பொதுநிலையில் கூறும் கூற்றுவழி உறவு

சேரமான் கணைக்கால் இரும்பொறை, சோழன் செங்கணானிடம் தோல்வி அடைந்து சிறையில் இருக்கின்றான். அப்பொழுது நீர் வேட்கை எழ, காவலரிடம் கேட்டான். காவலர் காலம் நீட்டித்துத் தர, அவமானமடைந்தான். தன் உள்ளத் துன்பத்தைப் பாடலாக எழுதி வைத்துவிட்டு உயிர் துறக்கின்றான். இப்பாடல் பொதுவியல் திணையில் முதுமொழிக் காஞ்சித் துறையாக இடம் பெற்றுள்ளது.

*''குழவி இறப்பினும் ஊன்தடி பிறப்பினும்*
*ஆள்அன்று என்று வாளின் தப்பார்*
.........................................................

*தாம் இரந்து உண்ணும் அளவை*
*ஈன்ம ரோஇவ் உலகத் தானே?"* [11]

என்ற அம்மன்னனின் உள்ளத்து உணர்வைக் காணும்போது, தமிழர்தம் வீரமும் மான உணர்வும் வெளிப்படுவதைக் காணலாம். மேலும் தன்னைப் போன்ற மன்னனான சோழனும் இதனை உணராது இரக்கமற்ற செயலைச் செய்ததை, தான் எண்ணி வருந்த வேண்டும் என்பதைக் குறிப்பால் உணர்த்துவதையும் அறியமுடிகின்றது.

பொதுவியல் திணை, பொதுமொழிக் காஞ்சித் துறையில், சோழன் நலங்கிள்ளி, அரசு பாரம் பற்றி அவையில் பேச்சு எழுந்தபோது, தம் குடிமக்களிடம் வரி வாங்கும் உள்ளத்தவனான சிறியவன் அரசுரிமை பெற்றால் அது தாங்க முடியாத சுமையாக அவனுக்கு இருக்கும். பகைவரை எதிர்த்துப் போரிடும் வல்லமை உடையவன் அரசுரிமை பெற்றால் அது சிறுதண்டான நெட்டி, கோடையில் காய்ந்த சுள்ளி போல எளிதாகவும் மென்மையாகவும் விளங்கும்[12] என்று கூறுகிறான். இது மன்னனுக்கு வருவாய் ஈட்டல் மட்டும் கடமையன்று மக்களையும் நாட்டையும் பகைவரிடம் இருந்து காப்பதும் கடமையாகும் என்பதை உணர்த்துகிறது.

பொதுவியல் திணை பொருண்மொழிக்காஞ்சித் துறையில் அரசனின் கூற்றாக 6 பாடல்கள்[13] காணப்படுகின்றன.

கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி கலத்தில் செல்லும்போது கலம் கவிழ, தான் இறப்பதற்கு முன் சான்றோரின் இயல்பை வியந்து கூறுமிடத்து,

தேவர்க்குரிய அமிழ்தமே கிடைப்பதானாலும், அதனைத் தாம் மட்டும் உண்ணார். பிறர் அஞ்சும் துன்பத்திற்குத் தாமும் அஞ்சி, அதனைப் போக்குவதற்கான வழியினை மேற்கொள்வர்; புகழுக்காக உயிரையும் கொடுப்பர். பழி வருவதாயின் உலகையே பெறுவதாயினும் அதனை விரும்பார். இத்தகைய பிறர் நலம் பேணும் இயல்புடையார் உள்ளதால் இவ்வுலகம் இருக்கிறது[14] என்றுரைக்கிறான்.

இவ்வரசனது கூற்றுடன்,

*"சான்றவர் சான்றாண்மை குன்றின் இருநிலந்தான்*
*தாங்காது மன்னோ பொறை"* [15]

என்ற வள்ளுவர் கருத்து ஒப்பு நோக்கத்தக்கது.

சங்க காலச் சான்றோர் தம்பொருட்டன்றிப் பிறர் நலம் எண்ணி வாழ்ந்தமையால் அவர்தம் உறவின் மேன்மை வெளிப்படுவதுடன் இவ்வுலகமும் அவர் பொருட்டே நிலைபெற்று உள்ளது என்ற உண்மைத் தன்மையும் புலப்படுகிறது.

பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் கல்விச் சிறப்பைக் கூறுமிடத்து ஒரு தாய் தான் பெற்ற அனைத்துப் பிள்ளையிடத்தும் அன்புடையவளாக இருந்தாலும் கல்வி கற்றுச் சிறப்படைந்த பிள்ளை இடத்து மட்டும் பேரன்பு காட்டுவாள். ஒரு குடியில் பிறந்த பலருள் மூத்தோன் என்று எண்ணாமல் அறிவுடையவனின் வழியில் அரசும் செல்லும்; வேறுபட்ட நான்கு குலங்களுள் கீழ்க்குலத்தான் ஒருவன் கல்வி கற்றிருப்பின் அவனை மேல் குலத்தவனும் வணங்குவான். எனவே ஒருவன் தன் ஆசிரியரின் துன்பத்திற்கு உதவிசெய்து, மிகுந்த பொருளளித்து வணங்கி வெறுக்காது கற்பது நலம்[16] பயக்கும் என்றுரைக்கிறான்.

''அறிவுடையவனை அரசும் விரும்பும்'' [17] என்ற நறுந்தொகை என்னும் வெற்றி வேற்கை கருத்து எண்ணிப் பார்க்கத் தக்கது. இத்தகு கல்வியால் ஆசான் மாணவன் உறவு, தாய் மக்களிடம் காட்டும் அன்பின் உறவு, அரசு விரும்பும் உறவு, குலத்தின் உறவு ஆகியவற்றின் சிறப்பும் உயர்வும் புலப்படுகின்றன.

பாண்டியன் அறிவுடை நம்பி இல்வாழ்வின் பயனான குழந்தைச் செல்வத்தைப் பற்றிக் கூறுமிடத்து,

*''படைப்புப்பல படைத்துப் பலரோடு உண்ணும்*
*உடைப்பெருஞ் செல்வர் ஆயினும்*
*.........................................................*
*மயக்குறு மக்களை இல்லோர்க்குப்*
*பயக்குறை இல்லை தாம்வாழும் நாளே''* [18]

என்று கூறுகிறான்.

பாண்டியன் கூற்று இல்வாழ்வின் பயன் பொருள் பெறுதலல்ல. மக்களைப் பெற்று அப்புதிய உறவால் ஏற்படும் இன்பத்தை அனுபவித்தலே என்பதை உணர்த்துகிறது.

சோழன் நல்லுருத்திரன் நட்புறவு எவ்வாறு தமக்கு இருக்க வேண்டும் என்பதனை, எலி போன்று மற்றவர் பொருளைக் கவரும் எளிய முயற்சியுடையவரின் நட்பு தனக்கு வேண்டாம் என்றும், பசித்தாலும் இடப்பக்கம் வீழ்ந்த விலங்காகிய உணவை உண்ணாது காத்திருந்து வலப்பக்கம் வீழ்ந்த உணவை உண்ணும் புலி போலும் அரிய முயற்சி வலிமை உடையவரின் நட்பே தனக்கு வேண்டும்'' [19] என்றும் கூறுகின்றான்.

கோப்பெருஞ் சோழன் பாடாண்திணை இயன்மொழித்துறையில் தான் கண்டு பழகாத நண்பனான பிசிராந்தையார் பற்றிக் கூறுமிடத்து, தொலைவாக இருக்கும் பாண்டிய நாட்டுப் பிசிர் என்னும் ஊரிலுள்ள என் நண்பன் நான் செல்வம் உடைய காலத்தில் வாராது

இருந்தாலும் என் துன்பக் காலத்தில் வாராமல் நிற்க மாட்டான்''[20] என்று தம் நட்புறவின் ஆழத்தை உறுதியுடன் கூறுகிறான்.

## 9.2 வீரர் மனைவி கூற்றுவழி உறவு

ஒரு வீரனின் மனைவி காஞ்சித் திணையில் தொடாக்காஞ்சி என்னும் துறையில் மன்னனுடன் போருக்குச் சென்று புண்பட்டு வந்த தன் வீரக் கணவனின் புண்களைப் பேய் தீண்டாத வண்ணம் காக்க, தன் தோழியை அழைத்து, பெரிய இல்லத்தில் இரவமரத் தழையுடன் வேப்பிலையும் சேர்த்து வீட்டுமுன் செருகி, யாழுடன் பல இசைக்கருவியை இசைத்து, மையிட்டு வீட்டை அலங்கரித்து, வெண் சிறு கடுகு தூவி, ஆம்பல் குழல் ஊதி, மணியை அடித்து, காஞ்சிப்பண் பாடி, அகில்புகை புகைத்துப் பேய் வராமல் தடுப்போம்[21] என்று உரைக்கின்றாள்.

இவள் கூற்று ஒரு மனைவி தன் நெருங்கிய உறவான கணவனின் நோயுற்ற துன்பத்தைப் போக்க மேற்கொள்ளும் செயல்களையும் பண்டைய மருத்துவ முறையையும் புலப்படுத்துகிறது.

வாகைத்திணை வல்லான் முல்லைத் துறையில், ஒரு வீரன் போர் பொருட்டுச் சென்றிருந்த பொழுது பாணன் ஒருவன் அவன் இல்லத்திற்கு வர, அவனிடம் அவ்வீரனின் மனைவி, ''பாணனே! யான் இப்பொழுது உமக்கு எம்மிடம் உள்ள முயற்கறியைத் தருவோம். உண்டு உறங்குவாயாக! நாளை எம் தலைவன் போர் முடித்துப் பெரும் பொருளுடன் வருவான். அவன் நின் பாடினி பொன்னரிமாலை அணியவும் நீ பொற்றாமரை சூடவும் தருவான்'' [22] என்றுரைக்கிறாள்.

இது வீரனின் மனைவி தன் கணவனின் வீரத்தைப் போற்றுவதுடன் அவள் இல்லறச் சிறப்பாகிய விருந்தோம்பலையும், ஈகையையும் உடன் போற்றுபவள் என்பதைக் காட்டுகிறது.

பொதுவியல் திணை, முதுபாலைத் துறையில் வரும் கயமனார் பாடல், போர்க்களத்தில் இறந்து கிடக்கும் தன் கணவனான ஒரு வீரனைப் பார்த்து அவன் மனைவியான வீரப்பெண் கூறுவதாகும். அவள், 'போர்க்களத்தில் தன் கணவன் இறந்துவிட்ட செய்தியைத் தன் உறவினர்க்குச் சொல்ல, அது மகனின் செல்வமும் பெருமையும் தனக்கே உரியன' என நாள்தோறும் புகழும் அவனைப் பெற்ற தாய்க்குத் தெரிந்தால் அவள் நிலை என்ன ஆகும்? என எண்ணிப் புலம்புகிறாள். தன் கணவன் இறந்தமைக்குத் தன் பொருட்டு வருந்த வேண்டியவள் அவ்வருத்தத்தை உள்ளத்தடக்கி,

தன் கணவனை ஈன்றளித்த அத்தாயின் உள்ளத்தைப் புரிந்துகொண்டு, அவள் பொருட்டு வருந்தும்நிலை, மருமகளுக்கும், மாமியார்க்கும் நிலவும் ஒருவர் நலனை ஒருவர் நாடும் உளமொத்த உறவை வெளிப்படுத்துகிறது.[23]

மற்றொரு மறவனின் மனைவி அவன் இறப்பை அறிந்தாள். தன் கணவனின் இறப்பைக் குறித்து அழுதால், அவள் குரல் கேட்டுப் புலி வந்து அவன் உடலை எடுத்துச் சென்றுவிடும் எனக் கூறுகிறாள். அதனால் தன்னால் எடுத்துச் செல்ல முடியாத தன் கணவனைத் தன் முன்கையைப் பற்றிக் கொண்டு நடக்குமாறு வேண்டுகிறாள். அவ்வாறு நடந்துவந்தால் அப்புலியினின்றும் தப்பித் தம் மலைநிழலை அடையலாம் எனக் கூறித் தன் கணவனை இறக்கச் செய்த கூற்றுவனைத் தன்னைப் போல் நடுக்கம் கொள்ளுமாறு பழித்துரைத்துப் புலம்புகிறாள்.[24]

போரில் இறந்துபட்ட மற்றொரு வீரனின் மனைவி ஆற்றாளாகி, அவ்வூரில் மண்பாண்டங்களைச் செய்யும் குயவனிடம் தன் கணவனுடன் தன்னையும் சேர்த்து இட்டுப் புதைக்குமாறு சுடுகாட்டில் அகன்ற முதுமக்கள் தாழியைச் செய்யுமாறு புலம்பி உரைக்கிறாள்.[25]

இறந்த கணவனுடன் சிதையில் உடன்கட்டை ஏறுவதுபோல, வீர மரணமுற்று இறந்த தன் கணவனைப் புதைக்கும் முதுமக்கள் தாழியுள், அவனை நீங்காமல் தன்னையும் சேர்த்துப் புதைக்க எண்ணுகின்ற அப்பெண்ணின் கணவனைப் பிரிந்த அவலம் ஒருயிர் ஈருடலான அவர்தம் ஒத்த அன்பை உணர்த்துகிறது எனலாம்.

## 9.3 வீரப்பெண் ஒருத்தி கூற்றுவழி உறவு

மறக்குடி மகள் ஒருத்தி ஒரு மகனை வளர்த்தலில் பிறருக்குள்ள கடமைகள் குறித்துக் கூறுவதாக வாகைத் திணை மூதின்முல்லைத் துறையில் பொன்முடியார் பாடியுள்ளார். மகனைப் பெற்று வளர்த்தல் என் கடமை. அவனைச் சான்றோன் ஆக்குதல் தந்தையின் கடமை. அவனுக்கு வேல் முதலிய படைக்கருவிகளைச் செய்து தருவது கொல்லனின் கடமை. நல்லொழுக்கம் கற்பித்தல் நாடாளும் மன்னனின் கடமை, போரில் வாள் கொண்டு ஆண்யானையைக் கொன்று வருவது காளையின் கடமை[26] என்று ஒரு மறக்குடி மகள், தாய், தந்தை, கொல்லன், வேந்தன், மகன் ஆகியோர் கடமைகளைக் கூறுகிறாள். ஒரு ஆண்மகன் வளர்ப்பில் பிறர்க்குள்ள கடமைகள் வழி அம்மகனுக்கும் பிறருக்கும் உள்ள உறவின் தேவை புலப்படுகிறது.

## 9.4 வீரத்தாய் கூற்றுவழி உறவு

ஒரு வீரத்தாய் 'நின் மகன் எங்குள்ளான்' என்று வினவிய மற்றொரு வீரப்பெண்ணிற்கு உரைப்பதாக வாகைத்திணை ஏறான் முல்லைத் துறையில் காவற் பெண்டு பாடல் காணப்படுகிறது. 'புலி தங்கியிருந்து நீங்கிய கல்குகையைப் போல அவனைப் பெற்ற வயிறோ இதுவாகும். அவன் போர்க்களதத்தில் இருப்பான். அவனை அங்குச் சென்று காண்பாயாக[27] என்று கூறுவதன் வாயிலாக அவனுக்கும் தனக்கும் உள்ள உறவையும் அவனது போர் வீரத்தின் சிறப்பையும் உணர்த்துகிறாள்.

வீரத்தாய் ஒருத்தி தன் மகன் போரிலே மாண்டான் என்ற செய்தி கேட்டுக் கூறும் கூற்றுகள் தும்பைத் திணை உவகைக் கலுழ்ச்சித் துறையில் காணப்படுகின்றன. உத்திரையார் என்ற புலவர் பாடலின் வழி தாயொருத்தி தன் மகன் போரிலே தன்னை எதிர்த்த யானையைக் கொன்று தானும் இறந்தான் என்று சான்றோர் உரைத்த செய்தியைக் கேட்டு அவனைப் பெற்றபோது அடைந்த மகிழ்வினும் பெரிதும் மகிழ்ந்து கண்ணீர் சொரிந்தாள்[28] என்பதை அறிகின்றோம்.

நின் மகன் பகைவரின் படையைக் கண்டு அஞ்சிப் புறம் கொடுத்தான் என்று அறியாதவர் வந்து சொன்னதைக் கேட்ட முதுமகள் ஒருத்தி,

> *''மண்டு அமர்க்கு உடைந்தனன் ஆயின் உண்டஎன்*
> *முலை அறுத் திடுவென் யான்''*

எனக் கூறி வாளைக் கையில் எடுத்துக் கொண்டு போர்க்களத்துக்குச் சென்றாள். அங்கு விழுப்புண்பட்டுச் சிதைந்து வெவ்வேறு துண்டாகிக் கிடக்கும் தன் மகனின் உடல் உறுப்புகளைக் கண்டு அவனை ஈன்ற நாளினும் மிகவும் மகிழ்ச்சி அடைகின்றாள்.[29]

இவ்விரு தாயர் தம் செயலை எண்ணுமிடத்து

> *''ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்*
> *சான்றோன் எனக்கேட்ட தாய்''* [30]

என்ற வள்ளுவரின் வாக்கிற்கேற்ப அத்தாயர் உறவு அமைந்துள்ளதைக் காணலாம். மேலும் சங்கத் தாய் தன் மகனின் வீர மரணத்தையே போற்றினாள் என்பதும் அது கேட்டுத் தான் பெற்ற நாளினும் மகிழ்ந்தாள் என்பதும் புலப்படுகின்றன.

## 9.5 பாணன்-பொருநன்-கூத்தன் கூற்றுவழி உறவு

### 9.5.0 விருந்தோம்பல்

பாணன், பொருநன், கூத்தன் ஆகியோர் தாம் பெற்ற பரிசிலைத் தம்மை யொத்தப் பிறரும் பெறவேண்டி ஆற்றுப்படுத்தும் இடத்து வழியிடை உள்ள மக்களின் விருந்தோம்பல் பண்பை மிக விளக்கமாக ஆற்றுப்படை நூல்கள் தெளிவுறுத்துகின்றன.

இரவலர்கள் ஆற்றுப்படுத்தும் பண்பு பற்றிக் கூறும் தொல்காப்பியர்,

> *''கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்*
> *ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்*
> *பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்*
> *சென்றுபயன் எதிரச் சொன்ன பக்கமும்''* [31]

என்கிறார்.

இந்நூற்பாவிற்கு உரைகாணும் இளம்பூரணர்,

> *''பக்கம் என்றதினான், ஆற்றினது அருமையும் அவன்*
> *ஊரது பண்பும் கூறப்படும்''* [32]

எனக் கூறுகிறார். பரிசில் பெற்றுவந்த பரிசிலர் தம்மையொத்தப் பிற பரிசிலர் தம்மைப் போலப் பரிசில் பெற ஆற்றுப்படுத்துகின்றனர். அவர்கள் காலத்தோடும், தேடி அலைந்து துன்புறாமலும் செல்வதற்கு உதவியாக வள்ளல் இருக்கும் ஊருக்குரிய வழியைப் பற்றியும் அவன் பண்பு நலன்கள் பற்றியும் எடுத்துரைக்கிறார்கள். இச்செயல், தாம் பெறும் இன்பத்தைப் பிறரும் பெற வேண்டும் என்னும் உன்னதத் தமிழ்க் கோட்பாட்டைப் பண்டைப் பரிசிலர் தம் வாழ்வில் கைக்கொண்டமையை உணர்த்துகிறது.

இவ்விருந்தோம்பலைக் குறித்து ஆய்வாளர்கள் கூறியுள்ள பல்வேறு கருத்துகள் இங்கு நினைக்கத்தக்கன.

> ***''புதியதாக வருவாரே விருந்தினர் ஆவார். விருந்து என்னுஞ் சொல்லிற்குப் புதுமை என்பது பொருள். உற்றார், உறவினர், நண்பர் முதலியோர் விருந்தினராகார். முன்பின் பழக்கமின்றி வருவோரே விருந்தினராவர். அவர்க்கு உதவுதல் தொடர்பில்லாத மற்ற உயிர்களுக்கு உதவுதலாகும்'*** [33]

என்று திரு.வி.க. கூறுகிறார்.

> ***''அக்காலத்தில் உண்பதற்கான உணவு விடுதிகள் இல்லாத காரணத்தினால் வாணிபம் பற்றியோ அல்லது வேறுவினை பற்றியோ வீடு தேடிவரும்***

*விருந்தினர்களுக்கு (அக்காரணம் பற்றியே அக்காலத்தில் விருந்து என்ற சொல் புதுமை எனப் பொருள்பட்டது) வயிறார உணவளித்து, உடலார உறைவிடங் கொடுத்து, உள்ளங்குளிர புன்முறுவல் செய்து, இன்முகம் காட்டி, இனியவை கூறி விருந்தோம்புதல் வீடுதோறும் இல்லத்தாரின் இன்றியமையாக் கடமையாய் இலங்கிற்று''* [34]

என்று காமாட்சி குமாரசாமி கூறுகிறார்.

*''விருந்தோம்புதல் ஒரு வேள்வி; இந்த வேள்வியின் பயன் இவ்வளவு என்று கூறுவதற்கு ஓர் அளவு இல்லை; விருந்தினராக வந்தவரின் தகுதிக்கு ஏற்ப பயன் உண்டாகும். இவ்வாறு விருந்தினரைப் போற்றி இந்த வேள்வியின் பயனைப் பெறாதவர்கள் வாழும் இல்வாழ்க்கை பயனற்றதே''* [35]

என்று மு. வரதராசனார் கூறுகிறார்.

*''விருந்து ஓம்புதல் உலகமக்கள் எல்லோரையும் எத்தொடர்பும் இல்லாதவராயினும் கடவுள், குறிக்கோட் பண்புடன் அன்பால் அணைக்குமாறு செய்யப்படும் தீவிர முயற்சி எனக் கூறலாம்''* [36]

என்கிறார் இரா. அருளப்பா.

### 9.5.1 பாணன் பிற பாணனிடம் கூறும் கூற்றுவழி உறவு

வாகைத் திணை வல்லாண்முல்லைத் துறையில் மதுரை கள்ளிற் கடையத்தன் வெண்ணாகனார் என்ற பாணப் புலவன் பரிசில் பெற உள்ள பாணனிடம் கூற்று நிகழ்த்துகிறான்.

எம் வீரத் தலைவன் நேற்று தன்னிடம் வந்த விருந்தினரை உபசரிக்க வேண்டித் தன் பக்கத்தில் உள்ள பழைய வாளினை ஈடு வைத்தான். இன்று இக்கருமையான சிறிய யாழைப் பணயமாக நாம் வைக்கிறோம். எனவே அவனிடம் ஒன்றும் இல்லை என்று எண்ணாது கொடி போன்ற நின் பாடினியுடன் சென்று பொன்பெற்று, இனிது உண்டு மகிழ்வுடன் வருவாயாக[37] என்றுரைக்கின்றான்.

விருந்தோம்பல் என்னும் அறச்செயலுக்குத் தம்மிடம் உள்ள பொருளை ஈடாக வைத்தாவது அவ்விருந்தைச் செய்தனர் என்பதால் தலைவனுக்கும் பாணராகிய விருந்தினருக்கும் உள்ள அன்புறவு புலப்படுகிறது.

ஓய்மா நாட்டு நல்லியக்கோடன் என்னும் வள்ளலிடம் பரிசில் பெற்று வரும் ஒரு பாணன், தன்னையொத்த வறிய பாணன் ஒருவனை அவனிடம் செல்லுமாறு ஆற்றுப் படுத்துகின்ற இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் இயற்றிய சிறுபாணாற்றுப்படை பாடலில் மன்னனும் மக்களும் செய்கின்ற விருந்தோம்பல் பண்பு காணப்படுகிறது.

நல்லியக் கோடனை நயந்த கொள்கையுடன் மலையும் வளனும் பாடி முன் நாள் சென்றோம். பசியால் வருந்தி நுடங்கும் நுண் இடையாள் உகிரால் கிள்ளிய குப்பையிலிருந்த வேளைக் கீரையை உப்பில்லாமல் சமைத்து மடவோர் காண்பதற்கு நாணி வீட்டுக்கதவு அடைத்துப் பெரிய சுற்றத்துடன் ஒன்றாகச் சாப்பிட்டு அழியும் பசி வருத்தத்தைப் போக்கினோம். இந்நாள் யானையுடன் பெரிய தேரினைப் பெற்று வருகின்றோம்.[38] நீங்களும் பரிசில் பெறும் விருப்புடன் அவனைக் காணச் செல்வீராயின், நெய்தல் நில எயிற்பட்டினத்தில் பரதவர், நுளைச்சியர் உண்டாக்கிய பழைய களிப்புடைய கள்ளைப் பருகத் தருவர். குழலோசையின் தாளத்துக்கு ஏற்ப ஆடும் உம் விறலியருடன் உலர்ந்த குழல் மீன் ஆட்டிறைச்சியும் உண்டு மகிழ்வீர்.[39]

முல்லை சார்ந்த வேலூரை அடைந்ததும் எயிற்றியர் சமைத்த இனிய புளிச் சோற்றை நும் மகளிர் கூட்டத்தாருடன் ஆமான் இறைச்சியின் சூட்டுடனே பசிபோகப் பெறுவீர்.[40] மருதம் சார்ந்த ஆமூரைச் சேர்ந்ததும் உழவர் தங்கை குற்றிய அரிசியால் ஆக்கிய வெண்மையான சோற்றை நண்டின் கலவையுடன் பெறுவீர்.[41]

நல்லியக் கோடனின் விழா நடக்கும் ஊரை அடைந்து, நீ சில புகழினைக் கூறுவதற்கு முன்னமே, குற்றமற்ற உடையினை உடுக்கச் செய்து, பாம்பின் நஞ்சேறி மயக்கினால் போன்ற மயக்கும் கள்ளைப் பருகச் செய்து, பொன் உண்கலத்தில் நீ விரும்பி உண்பவற்றை உம்மிடம் கொண்ட மிகுந்த விருப்பத்தால் தானே நின்று ஊட்டுவான். பின்னர் யானை, குதிரை, அணிகலன் முதலான பரிசில்களைத் தந்து அன்றே விடுவிப்பான்[42] என்று பரிசில் பெற்ற சிறிய யாழ்ப் பாணன் பரிசில் பெற விழையும் மற்றொரு பாணனிடம் வழியிடை உள்ளார்தம் விருந்தோம்பலையும் நல்லியக்கோடனின் விருந்தோம்பல், கொடை ஆகியவற்றையும் எடுத்துரைக்கின்றான்.

தொண்டை நாட்டு மன்னனான இளந்திரையனிடம் பரிசில் பெற்ற பேரியாழ் பாணன் பரிசில் பெற விழையும் பாணனிடம் ஆற்றுப்படுத்துவதாக உருத்திரங்கண்ணனார் பாடியுள்ளார்.

புல் என்ற யாக்கை உடைய பாண! யாங்கள் தொன்று தொட்ட பசி மிக்க எம்முடைய சுற்றத்தாருடன் பிறருக்குக் கொடுக்கவும் மாளாத பெருஞ் செல்வத்தைப் பெற்று

புரவியுடன் களிறும் முகர்ந்து கொண்டு திரையனிடம் இருந்து வருகின்றோம். நீங்களும் திரையனைக் காணச் செல்வீர்களாக.[43] அவ்வாறு செல்லும் பொழுது வழியில், எயின மகளிர் சமைத்த கருவாட்டுடன் கூடிய உணவை, யாங்கள் இளந்திரையனின் பாணர் சாதியினர் என்றுரைப்பின் அவர்கள் தெய்வத்துக்குப் பலியிடுவதைப் போல் தேக்கு இலையில் குவிப்பர். நீவிர் அவற்றை நும் சுற்றத்துடன் உண்பீர்.[44]

பாலை நிலத்தைக் கடந்து எயினக் குறும்பில் சேர்ந்தால், அங்கு நெல்லினது அவிசோற்றை உடும்பினது பொரியலுடன் வீடுகள் தோறும் பெறுவீர்.[45] ஆயமகள் மோர் விற்றதனால் உண்டான நெல் முதலியவற்றால் சுற்றத்தாரை உண்ணப் பண்ணுவாள். அவ்விடையர் வீட்டில் தங்குவீராயின் தினையரிசியால் ஆன சிறுத்த சோற்றைப் பாலுடன் பெறுவீர்.[46] சிறு குடியிருப்புடைய ஊரில், வரகின் சிறிய அவிழ்களாகிய சோற்றை அவரை விதையினது பருப்பை இட்டுச் சமைத்த இன்சுவை மூரல் பெறுவீர்.[47] அந்நிலத்திற்கு மேல், உழவர் வாழும் ஊரில் தங்கினால், நெற்சோற்றைக் கோழிப் பெடையின் பொரியலோடு பெறுவீர். மேலும் கரும்புச் சாற்றை விருப்பமுடையவர் குடியுங்கள்.[48] நெய்தல் நிலத்தை அடைந்தால் நறிய கள்ளைப் பச்சை மீன் சூட்டுடன் தளர்ச்சியடைந்தபோது பெறுவீர்.[49]

அந்தணர் இல்லம் சென்றால், பார்ப்பனி பக்குவமாகச் சமைத்த இராசான்னம் என்ற பறவையின் பெயர் பெற்ற நெல்சோற்றையும் வெண்ணையில் வெந்த மாதுளைத் துண்டையும் மிளகுப் பொடியுடன் கருவேப்பிலை கலந்த மாவின்வடு ஊறு கறியையும் பெறுவீர்.[50] பட்டினம் சென்று சேறின், நெல்லை இடித்த மாவாகிய உணவைச் சாப்பிடச் செய்து ஆண் பன்றியின் கொழுப்புள்ள தசையுடன் களிப்பு மிக்க கள்ளைப் பெறுவீர்.[51] தோப்புக் குடிகளுடைய தனி வீட்டில் தங்கினால் பெரிய பலாப் பழத்தையும் தென்னை மரத்தின் இளநீரையும் வாழைப்பழத்தையும், பனைமரத்தின் நுங்கையும் வேறு பலவற்றையும் உண்டு வெறுப்பேற்படின் வள்ளிக்கிழங்கு முதலியவற்றை உண்பீர்,[52] என்றெல்லாம் இளந்திரையனைக் காணச்செல்லும் வழியிடைக் காணும் மக்கள் விருந்தோம்பலைப் பாணன் கூறினான்.

மேலும் இளந்திரையன் பற்றிக் கூறும் பாணன்,

> *"முறை வேண்டுநர்க்கும் குறை வேண்டுநர்க்கும்*
> *வேண்டுப வேண்டுப வேண்டினார்க்கு அருளி*
> *இடைத்தெரிந்து உணரும் இருள் தீர் காட்சிக்*
> *கொடைக் கடன் இறுத்த கூம்பா உள்ளத்து*
> *உரும்பு இல் சுற்றமோடு இருந்தோற்"* [53]

என அவன் சிறப்பைக் கூறி அவனிடம் பரிசில் பெறும் முறையையும் கூறுகிறான்.

அவனைக் கையால் தொழுது வாழ்த்துவீர். நின் நிலை தெரியும் முன்னமே, நின்னை அருகில் அழைத்து, நின் கந்தலாடை நீக்கிப் பால் ஆவி போன்ற நூலால் ஆன துகிலை நின் சுற்றத்துடன் சேர உடலுக்குப் பொருந்த உடுக்கும்படி செய்வான். மடையன் சமைத்த பல இறைச்சியில் கொழுவிய தசைகளும், நெடிய சோறும், பிறவும் வெள்ளிக் கலங்களைப் பரப்பியும் உம்மை,

> *''மகமுறை மகமுறை நோக்கி முகன் அமர்ந்து*
> *ஆனா விருப்பின் தான் நின்று ஊட்டி''*

பொற்றாமரையை நின் மயிரிடத்தே சூட்டுவான். விறலியர் கரிய மயிரில் பொன்னால் செய்த மாலையைச் சூட, நூலோர் கண்ட நான்கு குதிரைகளைப் பூட்டி பொன்னாற் செய்த தேரைக் கொடுத்தும் விருப்பம் நீங்கப் பெறான். பகைவர் விட்டுச் சென்ற பசும் படை தந்து, அவன் நீ சென்ற அந்நாளிலேயே உன்னை அனுப்பிவைப்பான்[54] என்று பரிசில் பெற்ற பேரீயாழ் பாணன், பரிசில் பெற விழையும் பாணனிடம் வழியுள்ளாரின் விருந்தோம்பலையும் மன்னன் இளந்திரையனின் விருந்தோம்பல் பண்பையும் கொடைச் சிறப்பையும் உரைக்கின்றான்.

### 9.5.2 பொருநர் பிற பொருநரிடம் கூறும் கூற்றுவழி உறவு

கரிகால் பெருவளத்தானிடம் பரிசில் பெற்ற பொருநர் பிறிதொரு பொருநனை அவனிடம் ஆற்றுப்படுத்துவதாக முடத்தாமக் கண்ணியார் பாடியுள்ளார்.

விழா முடிந்த மறுநாளில், அங்குப் பெறும் சோற்றை விரும்பாமல் அயல் இடம் செல்லுதலை விரும்பிப் புறம் போகும் பொருநனே![55] பழுமரம் நாடும் பறவை போலப் பரிசில் பெற்று வரும் யானும் முன்பு, அவனிடம் சென்று விடியற்காலையில் ஒரு பாடலைப் பாடினேன். அவ்வாறு பாடுவதற்கு முன்னரே, முன்பே தொடர்புடைய நாட்டவரைப் போல என்னுடன் உறவு கொள்ள விரும்பினான். இனிய முகமன் கூறி, அருகில் அமரச் செய்து, பருகுவான் போல் என்னைப் பார்த்து, வெண்ணெய் முதலியன உருகுவது போலச் செய்தான். என் ஆடை களைந்து மென்மையான பாம்பின் தோல் போன்ற ஆடையை அளித்தான். மங்கையர் குற்றமற்ற பொன் வட்டிலில் நிறைவாகக் கள்ளைப் பருகத் தந்தனர்.[56]

அரசன் எம்மைத் தக்க காலத்தில் அழைத்து இறைச்சித் துண்டங்களைப் பலமுறையும் உண்பீர் உண்பீர் என்று வற்புறுத்தித் தந்தான். யாங்கள் இனி இவை எமக்கு வேண்டாம் என்று கூறிய அளவிலேயே, இனிய பல பண்ணியங்களைத் தந்து உண்ணச் செய்தான். இவ்வாறு பல நாட்கள் இனிது பெற்றுக் கழித்தோம். ஒருநாள் மன்னன் அரிசிச் சோற்றை

பல கறிகளுடன் உண்ணும்படி செய்தான். எம் பற்கள் உணவுகளை உண்டமையால் மழுங்கின. எனவே உணவு உண்ணாது வெறுத்தோம். அதனால் மன்னனிடம் யாங்கள் எம் ஊர்ச் செல்ல விரும்பினோம் என்று கேட்ட அளவிலேயே, 'எம் கூட்டத்தை விட்டுப் போகின்றீரோ? என்று வெகுண்டான் போல் கூறி ஊர்திகள், ஆடைகள் அணிகலன்கள் முதலியவற்றைத் தந்தான். யான் மீண்டும் வறுமை வந்தடையாதவாறு பொருட்களை அள்ளிக் கொண்டு வந்தேன்.[57] நீவிர் கரிகால் பெருவளத்தானை அடைந்து நின்றால், கன்றை நோக்கும் பசுவினைப் போல உம்மைப் பார்த்து, எம் துயர் களைந்து நீக்கியதுபோல உம்மையும் உபசரித்து, அரிய பரிசில்களைத் தந்து, "காலின் ஏழ் அடிப்பின் சென்று" ஓட்டும் கோலின் தாற்று முற்களை அகற்றி 'இவ்வாறு ஏறுவாயாக' எனக் காட்டித் தேரில் ஏறச் செய்து நீவிர் செல்வீராக என விடையளித்து, உம்மை விரைவாக விடுவான் அல்லன்.[58]

மேலும் அவன் நாட்டில் நெய்யொடு கிழங்கை விற்றவர் அவற்றுக்கு விலையாக மீன் நெய்யையும் நறவையும் பெறுவர். இனிய கரும்புடன் அவலை விற்றவர் மானின் தசையையும் கள்ளையும் பெறுவர். குறிஞ்சிப் பண்ணைப் பரதவர் பாடவும் நெய்தல் கண்ணியைக் குறவர் சூடவும் முல்லை நிலத்தார் மருதப் பண்ணைப் பாடவும் உழவர் முல்லை நிலத்தைப் புகழ்வர்[59] என்று கரிகால் வளத்தானிடம் பொருநன் தான் பெற்ற விருந்தையும் கொடையையும் கூறி உனக்கும் அவ்வாறு கிடைக்கும் என்று உரைக்கின்றான். அவன் சோழ நாட்டுப் பண்டமாற்று முறையையும் மக்கள் வாழ்வையும் கூறுவதன் மூலம் நிலத்தொடர்பால் உண்டான உறவை எடுத்தியம்புகிறான் எனலாம்.

### 9.5.3 கூத்தன் பிற கூத்தனிடம் கூறும் கூற்றுவழி உறவு

நன்னன் சேய் நன்னன் என்ற வள்ளலிடம் பரிசில் பெற்ற கூத்தன் வழியிடை எதிர்ப்பட்ட கூத்தனை அவனிடம் ஆற்றுவிப்பதாகப் பெருங்கௌசிகனார் பாடியுள்ளார்.

காட்டின் வழி வருத்தத்தைக் கைவிட்டிருந்த ஈன்றணிமை இல்லாத கூத்தர் சுற்றத்துத் தலைவனே! யாம் நன்னனிடத்து இருந்து பொருள் பெருக்கத்துடன் வருகின்றோம்.[60]

அவனை நீ காணச் சென்று வழியிடை உள்ள சிறுகுடியில் தங்கினால் காட்டில் போர் செய்து இறந்த யானைக் கொம்புகளைக் காவுமரமாகக் கொண்டு கானவர் பன்றி முதலியவற்றின் தசைகளை வட்டில்களில் சுமந்து வருவர். அத்தகு உணவை உன் உறவினருடன் பெறுவீர்.[61]

மலைகள் நிறைந்த பாக்கம் அடைந்து, நன்னனுடைய கூத்தர் யாம் என்று கூறுவீரானால் நும் வீடு போல், வாயிலில் நிற்காது உள்ளே சென்று முன்னரே

உரிமையுடையவர் போல் அவரைக் கேட்காதே உறவு கொள்வதால், தூரத்திலிருந்து வந்த உமது வருத்தம் தீர இனிய மொழிகளைக் கூறுவர். அவர் சொரிந்த நெய்யிலே வெந்த தசைப் பொரியலுடன் தினைச் சோற்றைத் தரப் பெறுவீர்.[62]

நன்னனுடைய மலையின் உச்சியிலுள்ள நாடுகளில் விலங்கின் தசைகளையும், கள்ளையும், குறமகள் மூங்கில் அரிசியில் ஆக்கிய சோற்றையும் யாங்கள் விருந்தினைரைப் பெற்றோம் என்னும் ஆசையுடன் மனம் கலந்து தத்தம் பிள்ளைகளைக் கொண்டு முறை சொல்லிக் குறவர் தடுப்பதால் மனைகள் தோறும் தரப் பெறுவீர்[63] அவ்விடத்துப் பலநாள் நில்லாது நில நாடு செல்லுங்கள்.

உச்சி மலையில் காட்டைக் காத்திருக்கும் கானவர், உண்பதற்கு இனிமையான பழங்களையும், இனிய பூக்களையும் உமக்குக் காட்டுவர். மேலும் திசை மயக்கமற்ற வழியில் உங்களைச் செலுத்துவர்.[64] நீரும் ஆண்டுள்ள தெய்வங்களைக் கையால் தொழுது எம் குறை முடித்தால் நுமக்கு இவை தருதும் என்று பரவுக் கடன் பூண்டு வாழ்த்திப் போவீர்.[65]

தீய நிலத்தை வழி அறியாது போய் மீண்டு வருவீராயின் நுமக்குப் பின்னர் அவ்வழி வருபவர் வழியறியாமற் போகாமல் இருக்க பலவழிகளும் கூடும் அச்சந்திப்பில் ஊகம் புல்லை முடித்து வைப்பீர்.[66]

காட்டில் நிரைகாக்கும் ஆயர், நீங்கள் மனம் மகிழவும் உங்கள் நடை வருத்தம் நீங்கவும் பசுவின் இனிய பாலை உங்களுக்குத் தருவர். அங்கு இரவில் செல்வீராயின் பாலும் பாற்சோறும் உமக்கென்று சமைக்காது முன்பே தங்களுக்குச் சமைத்து வைத்திருந்ததைப் பெறுவீர். தோற்படுக்கையில் படுத்துறங்கச் செல்வீர். மேலும் வேடரிடத்து, நன்னனை நினைத்துப் போகின்றோம் என்று கூறின், தசைகளையும் கிழங்குகளையும் தந்து உண்ணச் செய்து உங்களைப் பாதுகாப்பர். அவர் கூறும் வழியில் போவீராக. ஏனெனில் காட்டின் தன்மை அத்தகையது.[67]

மேட்டு நிலத்தில் மூங்கில் அரிசிச் சோற்றில் மேட்டு நில நெல்லரிசியைக் கலந்து அவரை விதையால் சமைத்த புளியங்கூழை இரவில் உணவாகப் பகற்பொழுது வருத்தம் நீங்க குடிகள் தோறும் பெறுவீர்.[68] நன்னனுடைய மருத நிலத்தில் பல நாள் தங்கினும் ஒருநாள் தங்கிச் சென்றாலும் அந்நாடு உங்களுக்குச் செய்யும் நன்மைகள் பல. உழவர் மீனுடன் கள் தெளிவைத் தரப் பெறுவீர். அங்குத் தங்கிச் செல்க.[69] அரிய கோபுரவாயிலில் ஐயமின்றி புகுவீராக. கண்டோர் அனைவரும் கூத்தர் என எண்ணி நன்னனின் கொற்றமாக நினைத்து முகம் மலர்ந்து விருந்தினராய் ஏற்று நடப்பர். அவர்களைச் சேர்ந்திருப்பீராக.[70] நன்னன் அருகில் சென்று கடவுளை முறைப்பட வாழ்த்தி, பிறகு இசைப் பாடலையும்

இனிதே பாடியபின் அவன் புகழைப் பாடுங்கள். நீவிர் கூறி முடிக்கும் வரை காத்திராது என்னிடம் விருப்புற்று வந்ததே போதும், உம் வழியிடை வருத்தம் பெரிது என்று முகமன் கூறுவான்.[71]

நுண்ணிய நூலாற் செய்த துணியை அரையிலே உடுத்தி பசிய நிணத்தையுடைய தசைகளுடன் வெண் நெல்லரிசி உணவைத் தடையின்றி முதல் நாள் போன்ற விருப்புடனே பெறுவீர்.[72] எம் தொல் பதிக்கே பெயர்வோம் என மெல்லக் கூறினால், நும்முன் தலைவன் பொற்றாமரை சூடிக் கொள்ள, விறலியர் இழை அணிய, தேர்கள், யானைகள், எருதுகள், பசுக்கூட்டம், பொன் அணிகலன் அணிந்த குதிரைகள் ஆகியவற்றைச் செல்வம் கெடாதபடி வறுமை நீங்குமாறு பரிசில் வழங்கி நும்மை முதல் நாளிலேயே செல்லும்படி அனுப்புவான்.[73]

இவ்வாறு கூத்தன் ஒருவன் நன்னன் நாட்டிற்குச் செல்லும் வழியுள்ளார் விருந்தோம்பலும் நன்னன் இயல்பும் விருந்தும் கொடையும் பிற கூத்தருக்குக் கூறுகிறான்.

மேற்கண்டவாறு பாணன், பொருநன், கூத்தர் ஆகியோருக்கு வழியிடை உள்ள ஐந்து நில மக்கள் விருந்தளிப்பது, பண்டைத் தமிழர் விருந்தோம்பலை மிகச் சிறந்த இல்லறக் கடமையாகக் கொண்டிருந்தனர் என்பதையும் பழந்தமிழ் மக்களின் உறவு விருந்தாக வரும் எவர் மாட்டும் தொடர்புற்று விளங்கியமையையும் உணர்த்துகிறது.

விண்ணுலக அமிழ்தமேயாயினும் தம் இல்லத்திற்கு விருந்தினர் வந்தபோது அவர்க்குப் படைத்து மகிழாமல் தான் மட்டும் உண்ணல் ஆகாது என்பதை,

> *"விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா*
> *மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று"* [74]

என மொழிகிறார் திருவள்ளுவர்.

## 9.6 ஆய்வு முடிவுகள்

1. அரசர் தாம் வெற்றி பெறவில்லையாயின் தன் புகழ், வீரம், ஒழுக்கம் முதலியன தம்மைவிட்டு நீங்கிவிடும் என்ற எண்ணத்துடன் குடிமக்கள், உலகம் இவற்றின் தூற்றலையும் எண்ணி வஞ்சினம் உரைப்பதால் அவரது மான உணர்வு வெளிப்படுகிறது.

2. அரசர், தன் குடிமக்களை மதித்துப் போற்றும் நற்குணமுடையவர் ஆவர்.

3. உணர்ச்சிமிக்க நட்பை விரும்புபவராக அரசர் விளங்குகின்றனர்.

4. மானத்தைப் பெரிதாகப் போற்றுபவராக இருக்கின்றனர்.

5. அரசர் வீரம், கல்வி, குழந்தைச் செல்வம், சான்றோரின் பண்பு ஆகியவற்றைப் போற்றுவதுடன் அவற்றால் ஏற்படும் சிறப்பையும் மதிப்பையும் பரந்த உறவையும் அறிந்தவராய்த் திகழ்கின்றனர்.

6. வீரர் மனைவியர் தம் கணவரின் துன்பத்தைப் போக்கும் கடமையுடன் இல்லறத்தின் மாண்பாம் விரும்தோம்பலையும் ஈகையையும் தவறாது செய்யும் கடமை உடையவராயும் வாழ்கின்றனர்.

7. வீரத்தாய் ஒருத்தி தன் மகனின் வீரமரணத்தை அவனைப் பெற்ற நாளினும் மகிழ்வாக ஏற்றுக் கொள்கிறாள்.

8. பாணன், பொருநர், கூத்தர் ஆகியோர் தாம் பெற்ற இன்பம் மற்றவரும் பெறவேண்டும் என்ற சிந்தனையுடன் பிறரை நல்வழிப்படுத்துவதுடன் அவர்களுக்கு வழிகாட்டவும் செய்கின்றனர்.

9. நாடாளும் மன்னன், வள்ளல் ஆகியோர் மட்டுமல்லாமல் வழியில் உள்ள அனைத்து நில மக்களும் விருந்தோம்பல் செயலை மனமுவந்து செய்கின்றனர்.

10. வழியில் செல்வோர் தம்மைத் தொடர்ந்து வரும் மற்றவருக்குச் சரியான வழியைக் காட்டி ஆற்றுப்படுத்தி, சமுதாயத் தொண்டாற்றுகிறார். அவ்வாறே, வழியிடை வாழும் மக்களும் வழிப்போக்கர்களுக்கு வள்ளல்களை அடையும் வழியைக் காட்டி அவர்தம் வாழ்க்கைக்கு வளமை சேர்க்கின்றனர்.

# அடிக்குறிப்புகள்

1. புறம். 71, 72, 73
2. தொல். பொருள். புறத். 77:8-9
3. புறப். வெண். 69
4. புறப். வெண். 69, பெரு. உரை, பக். 82
5. புறம். 71.
6. புறம். 72 : 12-18.
7. புறம். 73.
8. புறம். 173.
9. புறம். 216.
10. குறள் 785.
11. புறம். 74.
12. புறம். 75.
13. புறம். 182, 183, 185, 188, 190, 214
14. புறம். 182.
15. குறள் 990
16. புறம். 183.
17. இராம. சுப்பிரமணியன், 'அறமலர்க் கொத்து', பக். 58
18. புறம். 188.
19. புறம். 190.
20. புறம். 215.
21. புறம். 281, 299.
22. புறம். 319.
23. புறம். 254.
24. புறம். 255.
25. புறம். 256.
26. புறம். 312.
27. புறம். 86.
28. புறம். 277.
29. புறம். 278.
30. குறள் 69.

31. தொல். பொருள். புறத். 88
32. தொல். பொருள். புறத். 88 இளம். உரை, பக். 149
33. திரு.வி.க. 'பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத் துணை நலம்' பக். 151.
34. காமாட்சி குமாரசாமி, 'தமிழர் இனிய வாழ்வு', பக். 12.
35. மு. வரதராசனார், 'திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம்' பக். 329.
36. இரா. அருளப்பா, 'திருக்குறள் கூறும் சான்றாண்மை', பக். 40.
37. புறம். 316.
38. சிறுபாண். 129-143.
39. சிறுபாண். 146-163.
40. சிறுபாண். 175-177.
41. சிறுபாண். 180-195.
42. சிறுபாண். 235-261.
43. பெரும்பாண். 23-28.
44. பெரும்பாண். 97-105.
45. பெரும்பாண். 129-133.
46. பெரும்பாண். 163-168.
47. பெரும்பாண். 192-196.
48. பெரும்பாண். 253-262.
49. பெரும்பாண். 275-282.
50. பெரும்பாண். 302-310.
51. பெரும்பாண். 336-345.
52. பெரும்பாண். 356-362.
53. பெரும்பாண். 443-447.
54. பெரும்பாண். 464-493.
55. பொருந. 1-3.
56. பொருந. 64-89.
57. பொருந. 102-129.
58. பொருந. 149-177.
59. பொருந. 214-221.
60. மலைபடு. 50-52.
61. மலைபடு. 145-157.
62. மலைபடு. 162-169.

63. மலைபடு. 170-185.
64. மலைபடு. 278-286.
65. மலைபடு. 355-360.
66. மலைபடு. 391-393.
67. மலைபடு. 408-427.
68. மலைபடு. 434-439.
69. மலைபடு. 449-470.
70. மலைபடு. 492-497.
71. மலைபடு. 539-548.
72. மலைபடு. 561-566.
73. மலைபடு. 567-583.
74. குறள் 82.

# 10. தொகுப்புரை

## அகமாந்தர் உறவு

**சங்க இலக்கியத் தலைவி** தன் பெற்றோர், தமர், செவிலித்தாய், தோழி, தலைவன், தன் புதல்வன், பின்முறை வதுவைக் கிழத்தி, பரத்தை, பிறர் ஆகியோருடன் உறவு கொண்டிருக்கிறாள்.

தலைவி பெற்றோரிடத்தும் தமரிடத்தும் அன்பும் மதிப்பும் உடையவள். அவர்களின் உளமறிந்து ஒழுகும் ஒழுக்கம் பெற்றவளாக இருக்கிறாள்.

நற்றாயைக் காட்டிலும் தன்னைக் குழந்தைப் பருவம் முதல் வளர்த்தெடுத்த செவிலித் தாயிடமே தலைவி மிக நெருங்கிய உறவு கொண்டவள் ஆவாள்.

தலைவிக்குப் பெண்மைப் பருவம் வாய்க்கப் பெற்றது முதல் களவு, கற்பு ஆகிய காதல் வாழ்வு மலர்ந்து இல்லற வாழ்வு நடத்தும் காலம் வரை நற்றாய், செவிலித்தாய் ஆகிய இருவரைக் காட்டிலும் தோழியே அவளுக்கு மிக நெருங்கிய உறவுடையவளாய் அமைகிறாள்.

தலைவி களவினும் கற்பு வாழ்விலேயே மிக அதிகமாகத் தலைவனுடன் நேர்முகமாய்ப் பேசுகிறாள். அவள் தன் கணவனை அன்னையாகவும் அருந்தந்தையாகவும் கருதுகிறாள்.

தலைவன் பரத்தையர் பிரிவினின்றும் மீண்டு வந்தபோது தன் இல்லற மாண்பும், உலகியலும் கருதி அவன்மீது கொண்ட ஊடலை நீக்கி அவனை ஏற்றுக்கொள்கிறாள்.

பிரிவின் பொருட்டு வருந்தும் தலைவி, தலைவனின் பொருள்வயிற் பிரிவை ஆடவற்குரிய கடமை என உணர்ந்து அதற்கு உடன்படுகிறாள்.

தன் புதல்வனைத் தலைவி பாலூட்டிச் சீராட்டி வளர்க்கிறாள். தன் தந்தையைப் போல் அவன் எதிர்காலத்தில் புறத்தொழுக்கம் இல்லாதவனாகத் திகழவேண்டும் என்றெண்ணி அவனை நல்லாற்றுப் படுத்துகிறாள்.

தலைவன் பின்முறை வதுவைக் கிழத்தியுடன் வருவதைக் காணும் ஒரு தலைவி அவளைத் தன் தங்கையாக ஏற்றுக் கொள்கிறாள். அவள், தனக்கு வாய்க்காத மகப்பேறு தன் தலைவனுடன் வந்தவளுக்குக் கிடைக்கவேண்டும் என்று கருதுகிறாள்.

தலைவனுக்குரிய பரத்தையைச் சில நேரங்களில் தலைவி தன் தங்கையாகக் கருதுகிறாள்.

கண்டோர், அந்தணர், தூதுவர் ஆகியோரைத் தலைவி தன் வாழ்வின் இன்ப துன்பங்களைப் பகிர்ந்து கொள்ளும் இனிய உறவினராக எண்ணுகிறாள்.

தற்காலத் தலைவியர்க்கு உள்ளதுபோலச் சங்க இலக்கியத் தலைவிக்குத் தன் பெற்றோருடன் பிறந்த குருதித் தொடர்பான உறவுகள் இருந்ததற்கான சான்றுகள் சங்க இலக்கியங்களில் காணப் பெறவில்லை.

மேலும் இக்காலக் குடும்பப் பெண்டிர்க்குத் தான் மணந்து கொண்ட கணவனைச் சார்ந்த குருதித் தொடர்பான உறவுகள் உள்ளதுபோல, சங்க இலக்கியத் தலைவிக்குத் தலைவனைச் சார்ந்த குருதி உறவுகள் இருந்ததற்கான சான்றுகள் வெளிப்படையாகக் காட்டப்படவில்லை. மாறாகத் தலைவியின் தாய் தன் மகளுக்கு அமைய வேண்டிய தலைவன் குடும்பத்தைச் சார்ந்த பெண் உறவுகள் பற்றி எண்ணிப் பார்ப்பதாகக் குறிப்பிடும் நிலையிலேயே காணப்படுகின்றன.

**சங்க இலக்கியத் தலைவன்** தன் தலைவி, அவள் பெற்றோர், தமர், தோழி, புதல்வன், பரத்தை, பாங்கன், தேர்ப்பாகன், பாணன், கண்டோர், பிற அஃறிணை உயிர்கள் ஆகியோருடன் உறவுள்ளவனாக விளங்குகிறான்.

தலைவன் களவுப் புணர்ச்சியில், உலகையே பெற்றாலும் அவளைப் பிரியமாட்டேன் என்பவன் கற்புப் புணர்ச்சியில் வினைமேற்கொண்டும் பொருள் தேடியும் பரத்தையை விரும்பியும் பிரிவு கொள்கிறான். இது தலைவனின் சொல்வேறு செயல் வேறுபட்ட ஒழுக்கமாக உள்ளது.

களவுக் கூட்டத்தின்போது தலைவியைத் தவிர தன் நெஞ்சைக் கவர்ந்த மகளிர் பிறரில்லை எனக் கூறும் தலைவன், கற்புக் கூட்டத்தின்போது பரத்தையர் பலரைக் கூடுகிறான்.

உடன்போக்கின்போது, கொடிய சுரத்தில் தலைவியை அழைத்துச் செல்லும் தலைவன், பொருள்வயிற் பிரிவின்போது வழியின் கொடுமை கூறி அவளை அழைத்துச் செல்ல மறுக்கிறான்.

தலைவன் தன் வாழ்வின் எந்தச் சூழலிலும் தலைவியைத் தன் உள்ளத்தில் எண்ணியே இருக்கிறான். பரத்தையர் பிரிவை மேற்கொள்ளும் போதும் அங்கேயே தங்கிவிடாமல் தலைவிமாட்டுப் பேரன்பு உடையவனாய்த் திரும்பி வருகிறான்.

தலைவன் புறவொழுக்கத்தால் தலைவிக்கு அஞ்சுவதோடன்றி, அவள் உள்ளம் மாறுபட்டால் விளையும் ஊடல் எண்ணி அவளுக்கு எப்பொழுதும் அஞ்சுபவனாகவே விளங்குகிறான்.

தலைவி தன்னுடன் ஊடியும் கூடியும் நிகழ்த்தும் இல்லற வாழ்வில் தலைவன் முழு நிறைவுற்றுப் பெருமகிழ்ச்சி உடையவனாகத் திகழ்கிறான்.

தலைவன் இல்லற வாழ்வில் தன்னுடன் கற்பறம் பூண்டொழுகும் தன் தலைவியை ஈன்றளித்த பெற்றோரை வாழ்த்தி மகிழ்கிறான்.

தனக்குக் களவிலும் கற்பிலும் பேருதவி புரியும் தோழியைத் தலைவன் போற்றுகிறான். ஆயினும் தன் குறை முடிக்காவிடத்து இழித்தும் பேசுகிறான்.

தலைவியை எவ்வாறேனும் மணக்க வேண்டும் எனும் எண்ணத்தால் மடலூர்வதாகத் தோழியிடம் கூறும் தலைவன், தலைவியின் பெற்றோர்தம் குடும்பப் பெருமை கருதி மடலூர்கின்றான் அல்லன். ஆயினும் கலித்தொகையில் மட்டும் தலைவன் மடலூர்ந்து தலைவியை மணந்ததாகக் காணப்படுகின்றது.

தலைவன் தன் புதல்வனுக்குத் தன் தந்தையின் பெயரைச் சூட்ட விரும்புகிறான்; புதல்வனின் குழந்தைமைச் செயல்களைக் கண்டும் கேட்டும் இன்புறுகிறான்; மேலும் அப்புதல்வனைத் தன் தலைவியிடம் வாயிலாக அனுப்பி அவள் அன்பைப் பெறுகிறான்.

தலைவன் பரத்தையுடன் உறவுற்றிருப்பினும் அவளுடன் அவன் உரையாடியதாகச் சான்றுகள் இல்லை.

தன் பாங்கனின் வினாக்களுக்குத் தலைவன் விடையளிக்கின்றானே அல்லாமல், தோழியைப் போல அவனிடமிருந்து உதவிகளைப் பெற்றான் அல்லன்.

தன் தலைவியையும் புதல்வனையும் காணுமாறு, தேரை விரைந்து செலுத்தி உதவிய தேர்ப்பாகனுக்குத் தலைவன் விருந்தளித்துப் பாராட்டுகிறான்.

பாணனைத் தன் தலைவியிடம் தூதாகவும் வாயிலாகவும் செல்ல, தலைவன் பயன்படுத்துகிறான்.

பொருள்வயிற் பிரிந்தபோது தலைவனுக்கு உண்டாகும் துன்பத்தை ஆற்றிக்கொள்ளும் வடிகாலாகக் கண்டோர் அமைகின்றனர்.

தலைவன் எவ்வுயிரிடத்தும் அன்புடையவனாகக் காட்டப்படுகிறான். தலைவன் தன் பெற்றோர், தலைவியின் பெற்றோர், தமர், செவிலித்தாய் ஆகியோருடன் உரையாடியதாகச் சான்றுகள் இல்லை.

திருமணத்திற்குப் பிறகு தலைவன் பெற்றோர், தம் மகனின் தவற்றைப் பெரிதாக எண்ணி அவனைத் திருத்தியதாகவோ அன்றி அவன்பொருட்டுத் தாம் வருந்தியதாகவோ சான்றுகள் காணப்படவில்லை.

தலைவன் தலைவியிடம் களவொழுக்கம் கொண்டு உறவுற்றவன் பின்னர் அவளை மணக்காமல் கைவிட்டதாகவோ அன்றிக் கற்பொழுக்கத்தில் அவளிடம் முரண்பட்டு மணவிலக்கு செய்துவிட்டதாகவோ சங்க இலக்கியத்தில் செய்திகள் காணப்படவில்லை.

சங்க இலக்கிய மாந்தர்தம் உறவு ஒருத்திக்கு ஒருவன் என அமைந்துள்ளதே அல்லாமல் ஒருவனுக்கு ஒருத்தி என அமையவில்லை.

**சங்க இலக்கியத் தோழி** தலைவி, தலைவியின் தமர், தலைவன், செவிலி, நற்றாய், பிறர் ஆகியோருடன் உறவு கொண்டிருக்கிறாள்.

தோழி தனக்கென வாழாமல் தலைவிக்காகவே வாழ்கிறாள். மேலும், தலைவிக்கு நல்லாசானாகவும் அன்புத் தாயாகவும் உற்ற தோழியாகவும் விளங்குகிறாள்.

தலைவி தலைவனிடம் முரண்படும் வகையில் செயற்பட எண்ணும் பொழுது அவளைக் கண்டிக்கும் உரிமையும் தோழியே பெற்றிருக்கிறாள்.

தோழி, தலைவன் தலைவியரின் களவு, கற்பு வாழ்வில் அவர்கட்கு அறிவுரை வழங்கியும், ஆற்றுப்படுத்தியும் அருந்தொண்டாற்றியும் உறுதுணையாக விளங்குகிறாள்.

தலைவன் வரைவை விரைவுபடுத்தும் நோக்கில் அவனிடம் கனிந்தும் முனிந்தும் உரையாற்றும் உரிமைப் பெண், தோழியே ஆவாள்.

தலைவிக்குத் தலைவனுடனான உறவுச் சூழல்களைப் பேசும் தோழி, தலைவியின் செயல்பாடுகளை யான், யாம், நம், நாம் எனும் சொற்களைக் கொண்டு தன்மேல் சார்த்திக் கூறுவதும் உண்டு.

தலைவியின் களவொழுக்கத்தை அவள் தமர்க்கு அறிவிப்பவளும், தலைவனுடனான அவள் திருமணத்திற்குத் தமரின் ஒத்துழைப்பை நல்கச் செய்பவளும் தோழியே ஆவாள்.

தலைவியின் களவைச் செவிலிக்கு வெளிப்படுத்தி அவள் திருமணம் நிகழ அச்செவிலியின் ஒத்துழைப்பைக் கனிவாகப் பேசிப் பெறும் சொல்லின் செல்வி தோழி ஒருத்தியே ஆவாள்.

தோழி நற்றாயிடம் உரைநிகழ்த்தும் கூற்றுகள் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

தலைவியின் கற்புக் கூட்டத்திற்கு உறுதுணையாகும் வகையில் கட்டுவிச்சி, வேலன், உழவர் ஆகியோரிடம் தோழி உரையாடுகிறாள். தலைவனுடைய வாயிலாக வரும் பாணன், விறலி, பாங்காயினார், குயவர் ஆகியோரிடமும் தோழி வாயில் மறுத்தும் நேர்ந்தும் பேசுகிறாள். அறிவரிடம் தலைவன் வரும் பருவம் குறித்து மட்டும் வினவுகிறாள்.

தோழியின் பெற்றோர்களில் செவிலி மட்டுமே தாயாகக் குறிப்பிடப்படுகிறாள். தோழியின் தந்தை பற்றியோ பிற தமர் பற்றியோ, அவளின் குடும்ப வாழ்க்கை பற்றியோ எந்தக் குறிப்பும் காணப்படவில்லை.

**நற்றாய்** தன் மகளாகிய தலைவி, தோழி, செவிலி, அயலாரிடம் உறவு கொண்டிருக்கிறாள்.

தான் ஈன்றெடுத்த தலைவியை நற்றாய் தன் உயிராக எண்ணி அன்பு பாராட்டுகிறாள்.

தலைவி தலைவனுடன் உடன்போக்கு சென்றபோது, தன் மகள் சென்ற வழி அவளுக்கு நன்மை தரக்கூடியதாக அருள வேண்டும் என நற்றாய் இறைவனை வேண்டுகிறாள்.

தன் மகளுக்குத் திருமணம் தன் வீட்டில் நடைபெறாமைக்கும், அதன் பொருட்டு நிகழ்த்தப் பெறும் சிலம்புகழி நோன்பும், தன் வீட்டில் நிகழாமல் தலைவன் வீட்டில் நிகழ்ந்தமைக்கும் நற்றாய் வருந்துகிறாள். ஆயினும் மகளுக்குத் திருமணம் நிகழ்ந்தமை குறித்த நற்றாயின் மகிழ்ச்சி குறிப்பிடத்தக்கதாகும்.

தன் மகளைத் தான் பிரிந்து துன்புறுவதைப் போலத் தலைவனை ஈன்ற தாயும் துன்பமடைய வேண்டுமெனப் பழிக்கின்றாள்.

தன் மகளுக்குத் தோழியாகிய செவிலியின் மகளைத் தானீன்ற மகளாகவே போற்றி உரைக்கின்றாள்.

நற்றாய் தன் தோழியாகிய செவிலியிடம் தன் மகளின் பிரிவு குறித்து ஆற்றாது புலம்புகிறாள். அவ்வாறே அயலாரிடமும் புலம்புகிறாள். நற்றாயின் இக்கூற்றுகள் தவிர வேறெவரிடமும் நிகழ்த்திய கூற்றுகள் இல்லை.

நற்றாய் தன் மகளை ஈன்றாளே அல்லாமல் அவளை வளர்த்தெடுத்தற்கான குறிப்புகளேதும் சங்க இலக்கியத்தில் காணப்படவில்லை.

**செவிலி** தலைவி, தன் மகளாகிய தோழி, தன்நெஞ்சு, கண்டோர், தலைவன் ஆகியோரிடம் உறவு கொண்டிருக்கிறாள்.

நற்றாய் மகளாகிய தலைவியை, செவிலித்தாய் தானீன்ற மகளாகக் கருதி குழந்தைப் பருவந்தொட்டே சீராட்டிப் பாராட்டி வளர்த்து ஆளாக்குகிறாள்.

தலைவியின் குழந்தைப் பருவத்தில் அவளைக் கடிந்து வளர்த்துக் காத்தல், பருவ மகளானபோது இரவு பகல் பாராமல் கண்காணித்தல் ஆகிய உரிமைகள் செவிலிக்கே உரியனவாக அமைந்திருக்கின்றன.

தலைவி, தலைவன் இல்லத்தில் மகவீன்றிருந்தபோது அவளுக்கு உதவும் பொருட்டுச் செவிலி அவளுடன் இருந்திருக்கின்றாள். இற்றைக்கும் தாயரே தம் மகளிரின் பேறுகாலப் பணியை உவந்து செய்வதைக் காணலாம்.

தலைவியின் இல்லற மாண்பைக் கண்டு மகிழ்வதும் அம்மகிழ்ச்சியை நற்றாயிடம் கூறிப் பகிர்ந்து கொள்வதும் ஆகிய செவிலித்தாயின் செயல்கள் அவளது உன்னதத் தாய்மைப் பண்பை உணர்த்துகின்றது.

தலைவி உடன்போக்கு மேற்கொண்டபோது செவிலித் தாய் தனக்குண்டான துன்பத்தைத் தன் மகளாகிய தோழியிடம் கூறிப் புலம்புகின்றாள். மேலும் செவிலித்தாய் தலைவியின் பிரிவால் உண்டான துன்பத்தைத் தன் நெஞ்சிடமும் அத்தலைவி சென்ற வழியில் பின்சென்று அவ்வழியில் கண்டோரிடமும் கூறிப் புலம்புகின்றாள்.

செவிலி தலைவனிடம் நேர்முகமாய்ப் பேசவில்லை என்றாலும் அவனது களவு வாழ்வில் அவனைப் பலவாறு வைதும் கற்பு வாழ்வில் அவனைப் பலவாறு வாழ்த்தியும் உரைக்கின்றாள்.

செவிலியின் இல்லற வாழ்வு உறவுகளைப் பற்றியோ அவள் மகளாகிய தோழியின் வளர்ப்பு, திருமணம் ஆகியவற்றின் பொருட்டு அவளாற்றிய கடமைகள் குறித்தோ எந்தச் செய்தியும் சங்க இலக்கியத்தில் இடம்பெறவில்லை.

**பரத்தை** தலைவன், தலைவி, அவர்தம் புதல்வன், தன்னையொத்த பரத்தையர் ஆகியோருடன் உறவு கொண்டிருக்கிறாள்.

பரத்தை தலைவன் உறவை 'நட்பு' எனும் சொல்லால் உரைக்கின்றாள். அவன் இன்பத்தைப் பெரிதும் விரும்புகிறாள். தலைவன் தன்னைப் பிரிந்திருப்பினும் தன் நெஞ்சில் அவன் இருப்பதாகவே எண்ணி மகிழ்கின்றாள்.

தன்னை ஒத்த பிற பரத்தையரிடம் தலைவன் நட்புகொண்டால் அவனிடம் ஊடல் கொள்கிறாள். ஆனால், தலைவன் தலைவியிடம் மீண்டு சென்றால் அவனை உலகியல் கருதி ஏற்றுக் கொள்கிறாள்.

பரத்தை தலைவியைத் தன் தங்கையாக எண்ணுகிறாள். ஆயினும் தன்னையும் தலைவனையும் அவள் சேர்த்துப் பழிக்கும்போது அத்தலைவியை இழித்துரைக்கிறாள்.

தலைவன் தலைவியின் புதல்வனைத் தன் புதல்வனாக எண்ணி, பரத்தை அன்பு பாராட்டுகிறாள்.

பரத்தையர்க்கும் தோழியர் இருக்கின்றனர்.

சங்க இலக்கியத்தில் கூறப்படும் பரத்தையர் தலைவனின் பொருளின் பொருட்டு இன்ப நுகர்ச்சி தரும் பொருட்பெண்டிரல்லர். மேலும் மூப்பு எய்திய பரத்தையரிடம் அக்கால ஆடவர் சமுதாயம் உறவு கொள்ளாமல் அவர்களை ஒதுக்கியது.

**பாங்கன்** தலைவனை இடித்துரைக்கும் உரிமை உடையவனாக இருக்கிறான்.

**பாணன்,** தலைவன் தலைவியர் பிரிவின்போது வாயிலாகவும் தூதாகவும் இருந்து இருவரும் கூடி மகிழ உதவுகிறான்.

**கண்டோர்,** உடன்போக்கு செல்லும் தலைவன் தலைவியர்க்கு வழியின் அருமை கூறியும், தலைவனைக் குற்றம் சாட்டியும் அவர்களுக்காக இரங்கியும் பேசுகின்றனர்.

உடன்போக்கு சென்றோர் திருமணம் முடித்து மீண்டு வருவதைக் கண்டும் வினைமுடித்து மீளும் தலைவன் தலைவியுடன் கூடி இனிய இல்லறம் இயற்றுவதைக் கண்டும் கண்டோர் மகிழ்வர்.

தலைவன் தலைவியர் உடன்போக்கைக் கண்டோர் நற்றாய்க்கு அறிவுறுத்துகின்றனர். உடன்போக்கு உலகியற்கை என்பதைச் செவிலித்தாய்க்கு உணர்த்தி அது அறச்செயல் என்பதை உணரச் செய்பவரும் கண்டோர் ஆவர்.

**தேர்ப்பாகன், உழையர், சான்றோர், ஆய்ச்சியர், சுற்றத்தார்** ஆகியோர் தலைவன் தலைவியரின் இல்லற மாண்பைக் கண்டு மகிழ்கின்றனர்.

பிற உறவுநிலையாகக் கருதப்படுவோர் தலைவன் தலைவியர் இல்வாழ்வின் இன்ப துன்பங்களில் பங்கேற்பவராகக் காணப்படுகின்றனரே அல்லாமல் அவரைப் பற்றிய பிற உறவு நிலைச்செய்திகள் ஏதும் காணப்படவில்லை.

சங்க இலக்கிய அகத்திணைத் தலைவன் தலைவியர் வாழ்வின் உறவுமுறை சிக்கலற்ற மகிழ்ச்சி உடையதாக விளங்குகிறது.

தலைவன் தலைவியர் தம் ஐந்திணை அன்புறவால் எவர்க்கும் எந்நிலையிலும் கேடு சூழவில்லை. மாறாக இல்லறக் கடமைகளை ஆற்றி மகிழ்ச்சியே அடைகின்றனர்.

தலைவன் தலைவியர் தம் இல்லற உறவால் விருந்தோம்பியும், பொருள் தேடி வறியார்க்கு ஈதல் செய்தும், இல்லற வாழ்வின் மாண்பினை அவ்வப்போது தமக்குள்ளும், பிறர் பொருட்டும் எடுத்தியம்பியும் சமுதாயத்திற்கு உதவிடும் வகையில் எடுத்துக்காட்டான மனிதநேய மாந்தர்களாகத் திகழ்கின்றனர்.

அகத்திணைத் தலைவன் தலைவியர் உறவு அவர்களோடு நெருங்கிய தொடர்புடையோர் மாட்டு அமைந்த குறிப்பிட்ட எல்லைக்குட்பட்டதாகவே விளங்குகிறது.

சங்க இலக்கிய அக மாந்தர் உறவு குறிப்பிட்ட எல்லைக்குட்பட்டதாக இருந்தபோதும் அவருள் தலைவன் தலைவியர் மனமொத்தப் பெருவாழ்வு வாழ்ந்தனர். பிறரும், அவர் வாழ்வுக்கு ஊறுவிளைக்காதவராய் உறுதுணை செய்து விளங்கினர். அத்தகைய மனமொத்த அன்பின் வாழ்வு இல்லாமை இக்காலத்துப் பெருகிவரும் மணமுறிவிற்கான காரணமாக உள்ளது.

## புற மாந்தர் உறவு

**சங்கப் புற இலக்கியம் பாடிய புலவர்கள்** அரசர், வள்ளல், தலைவன், வீரர், தன்னொத்தப் பிறபுலவர், பாணர், கூத்தர், விறலியர் ஆகியோருடன் உறவு கொள்கின்றனர்.

புலவர்கள் தம் குடும்ப வறுமையால் அரசரிடம் சென்று அவர்புகழ்பாடிப் பரிசில் பெறுகின்றனர். தாம் பெறும் பரிசில் தம் தகுதிக்கு உரியதாகவும், எதிர்பார்க்கும் காலத்தோடும் கிட்டாதாயின் அப்புலவர்கள் நாடாளும் அரசர் என்றும் எண்ணாமல் தம் தகுதியையும், கொடைதரும் முறைமையையும் அவர்க்கு எடுத்தியம்புகின்றனர். தனக்குக் கொடையிடா மன்னர்க்குப் பிற மன்னரிடம் தாம் பெற்ற கொடையை அளிக்கும் சான்றாண்மையாளராகவும் திகழ்கின்றனர்.

புலவர்கள், தாம் பெற்ற எத்தகைய உயர்ந்த பரிசிலையும், தம் எதிர்நாள் வாழ்வுக்காக இருப்புவைத்துக் கொள்ளாமல் தம் மனைவியரிடம், அவர் விரும்புகின்ற

வர்க்கும் வந்து கேட்கும் எவர்க்கும் அள்ளி வழங்குமாறு அறிவுறுத்திய அன்பினராய் இருக்கின்றனர்.

புலவர்கள், மன்னர்களுக்கு இடையே எழுகின்ற பகை உணர்ச்சியை அறிந்து சந்து செய்வித்து போர் மூளாது தடுத்தும், போர் மூண்டிருப்பின் அறத்தை வலியுறுத்திப் போரை நிறுத்தியும், உலக அமைதியை நிலைநாட்டி வாழ்கின்றனர்.

இருப்பினும் அறவழிப் போரில் மன்னன் பெற்ற வெற்றியின் பொருட்டு அவன் வீரத்தை வாழ்த்தி எந்நாளும் அறம் நிலைக்க ஆற்றுப்படுத்துகின்றனர்.

அரசரின் செங்கோல் முறை, இல்வாழ்க்கை நெறி ஆகியவை குறித்து இடித்தும் இசைவாகவும் கூறும் புலவர்கள் அரச குடும்பத்திற்குக் குல குருவாகவும், நல்லமைச்சராகவும் விளங்குகின்றனர்.

அரசரும் புலவரும் கண்டு, கேட்டுப் பழகும், ஒருவரை ஒருவர் அறிந்த புணர்ச்சியாலன்றி, உணர்ச்சியால் ஒத்து வாழ்விலும் இறப்பிலும் உளமொன்றிய நண்பராய்ப் புகழ்கொண்டிருக்கின்றனர்.

குடிமக்களுக்கும் தமக்கும் அரணாய் ஆண்ட அரசன் உயிர்நீத்த போது புலவர்கள் அவர்பொருட்டு இரங்கியும் அவர்தம் மனைவியரின் கைம்மை நோன்புகண்டு உளம் நைந்தும் உறவின் உயர்வுக்கு எடுத்துக்காட்டான எல்லையாய் இருக்கின்றனர்.

புலவர்கள் அரசரிடம் மட்டுமல்லாமல், தலைவர், குறுநிலமன்னர், வள்ளல் ஆகியோரிடத்தும் சென்று பாடிப் பரிசில் பெற்று, அவரிடம் தவறு கண்டபோது கண்டித்து நல்லாற்றுப்படுத்தி நாட்டுக்கு நலம் சேர்க்கின்றனர்.

புலவர்கள் நாட்டைக் காக்கும் போர்வீரர்களின் மறச்செயலையும், அவர்தம் குடிப்பெருமையையும் நேர்முகத்தும் பிறர்மாட்டும் புகழ்ந்துரைக்கின்றனர்.

தாம் துய்க்கும் இன்பம் தம்மொத்த பிறரும் துய்க்க வேண்டும் எனும் விரிந்த நல்லுள்ளம் கொண்ட புலவர்கள், அவ்வின்பத்தைத் தமக்களித்த புரவலரிடம் பிறரையும் ஆற்றுப்படுத்தும் மனித நேயச் செல்வர்களாக மாண்புற்றிருக்கின்றனர்.

நிலம், மொழி, இனம் ஆகியவற்றின் எல்லை கடந்த சிந்தனை பெற்றிருந்த புலவர்கள் அன்பின் வழியினால் உலகொன்றிய உறவைத் தமக்குரியதாக எண்ணிப் போற்றுகின்றனர்.

சங்க இலக்கியப் புலவர்கள் அவ்வப்போது வறுமையாளராயும் பரிசில் பெற்றபோது செல்வந்தராயும் மாறி மாறி விளங்குகின்றனர். ஆயினும் அவர்கள் செந்தமிழ்ப்

புலமையிலும், மனிதநேய மாண்பிலும் எக்காலத்தும் நிலைத்த நிறை செல்வராய் விளங்கியிருக்கின்றனர்.

**நாடாளும் மன்னர்** புலவர், தன் மனைவி, வீரர், குடிமக்கள் ஆகியோரிடம் உறவு கொண்டிருக்கின்றனர்.

மன்னர்கள், புலவர்களின் நற்புலமை, தமக்கு நன்னெறிகாட்டும் நல்லறிவு, நாட்டு நலன் கருதும் உயர்பண்பு, மாசற்ற தூய அன்பு ஆகியவற்றைப் போற்றி வணங்குகின்றனர்.

தம்மைச் செங்கோலனாய்க் காணப் புலவர்கள் மேற்கொள்ளும் முயற்சியாக இடித்துரைக்கும்போது அது பொறுக்காது அப்புலவரைத் தண்டித்தலை மன்னர்கள் ஒருபோதும் செய்கின்றார் அல்லர்.

மாறாக, புலவர் அறியாது செய்யும் பிழை பொருட்டு மன்னர் அவரைத் தண்டிக்காமல் அப்புலவரின் வாழ்நாள் பெருகி, தமிழ்நலம், தமிழ்நிலம், உலகநலம் காக்க வேண்டும் எனும் உயரிய நோக்கால் அவர்க்கு உதவிசெய்து போற்றுகின்றனர்.

புலவர்தம் அறிவுரை, தம் நல்லாட்சிக்கு உறுதுணை செய்வதால் மன்னர், தம் வாழ்நாளினும் அப்புலவரின் வாழ்நாள் பெருகி அவர்கள் வாழ்வதை விரும்பி, அதற்கான வழிவகைகளை மேற்கொள்கின்றனர்.

ஒருத்தி அல்லாமல் பலரை மனைவியராகக் கொள்ளும் அரசுரிமை தனக்கு அமைந்திருப்பினும் இல்லற மாண்புணரும் மன்னன் தன் பட்டத்தரசியின் இறப்புக்கு வருந்தி உயிர் துறக்க எண்ணுகிறான்.

சங்ககால மன்னர் மறப்போர் செய்யினும் அதைச் சிறந்த அறப்போராகவே கடைப்பிடிக்கின்றனர். தம் நாட்டைக் காத்தற்பொருட்டுப் பகைமன்னரிடம் போரிட்டு வீரப்புண் அடைந்த வீர்களைப் பாசறைக் கண் சென்று அவர்க்குத் தாமே மருந்தளிக்கும் மருத்துவராக விளங்கியும், வெற்றிபெற்றபோது அவர்தம் போர்வருத்தம் தீர உண்டாட்டு நிகழ்த்தியும் விளங்கும் அரசர், சிறந்த மனிதநேய மாமனிதராக வீற்றிருக்கின்றனர்.

மன்னன் மக்களுக்கு உயிராக விளங்கி, அவர்தம் துன்பத்தை நீக்குகிறான். தன் குடிமக்களின் விருந்தோம்பல் பண்பைப் பெரிதும் மதித்து அவர்தம் வாழ்நாள் தன் வாழ்நாளோடு சேர்ந்துப் பெருக வாழ்த்துகிறான்.

மன்னர் தம்மை நாடிவருவோர்க்கு இல்லை எண்ணாது அருளும் இரக்கம் உடையவராகத் திகழ்கின்றனர்; விருந்தோம்பல் அறத்தைச் செம்மையாகக்

கடைப்பிடிக்கின்றனர்; தம் மானத்தைப் பெரிதாகப் போற்றுகின்றனர். அதன் பொருட்டுத் தம் அரிய உயிரை விடவும் துணிகின்றனர்.

வீரம், கல்வி, குழந்தைச் செல்வம், சான்றோர் பண்பு ஆகியவற்றை மன்னர் வியந்து தாமே பாடிப் போற்றுகின்றனர்.

தம்மைத் தேடிவரும் இரவலர் பின்சென்று அவர்க்குப் பரிசளித்து அவர் தேர் புறப்படும் வரையும் காத்திருந்து வழியனுப்பும் பண்புச் செல்வராய் மன்னர் விளங்கி நிற்கின்றனர். சங்க கால மன்னரின் இப்பண்பின் எச்சமாக, இன்றும் விருந்தினரை வழியனுப்பி வைக்கும் பண்பு நம்மிடம் இருக்கின்றது.

மன்னர் நீதி காக்கும் முறைமையில் மனிதரிடம் மட்டுமன்றி, பிற அஃறிணை உயிர்களிடத்தும் மிகக் கவனம் காட்டுகின்றனர்.

சங்க கால மன்னராட்சி மரபுவழி சார்ந்த மன்னராட்சியாக இருப்பினும், குடியாட்சி போல மக்களின் உரிமைகள் மதிப்பளித்துப் பாதுகாக்கப்படுகின்றன.

**வள்ளல்கள்** எந்த எதிர்பார்ப்புமின்றி இரவலர்க்கும் புலவர்க்கும் பரிசில் வழங்குகின்றனர்.

தலைவன் தன்னிடம் பரிசில் பெற வருகின்ற இரவலர்க்குத் தரப் பொருளில்லையெனினும், தன் வீர வாளை ஒப்புவைத்தேனும், கடன்பெற்றேனும் பொருளை ஈட்டித் தன் வள்ளண்மை மரபைக் காத்து நிற்கின்றான்.

**பாணர், பொருநர், கூத்தர்** ஆகியோர் தமக்குப் பரிசிலளித்த புரவலரிடம் தம்மையொத்தப் பிறரை ஆற்றுப்படுத்தி அவர்க்கும் நல்வாழ்வு உண்டாக உதவுகின்றனர்.

**வீரத்தாய்** போர்க்களத்திற்குத் தன் ஒருமகன் உட்படக் குடும்பத்தின் ஆண் உறவினரையெல்லாம் அனுப்பி நாட்டைப் பாதுகாக்கும் முயற்சியில் ஈடுபடுகிறாள். மேலும் வீரத்தாயர், தம் புதல்வரின் விழுப்புண்பட்ட வீர மரணம் கண்டு ஈன்றபொழுதினும் பெரிதும் மகிழ்கின்றனர்.

**வீரரின் வீர மனைவியர்** விழுப்புண்பட்ட தம் கணவரின் அருகிலிருந்து மருந்தளித்துப் பாதுகாக்கும் கடமை ஆற்றுகின்றனர். மேலும் அவரது வீரமரணத்தை மனமுவந்து குடிப்பெருமையாகக் கருதி ஏற்றுக் கொள்கின்றனர்.

**வீரப்பெண்டிர்** வீரரையே தம் கணவராக மணக்க விரும்புகின்றனர்.

**கண்டோராகிய மக்கள்** புலவர், இரவலர் ஆகியோர் புரவலரைத் தேடிப் பரிசில் பெறச் செல்லும்போது, அவர்களை வழியில் கண்டு அவர்களுக்கு அன்புடன் விருந்தளித்து மகிழ்கின்றனர்.

பண்டமாற்றின் வழி ஐந்நிலமக்கள் ஒருவருக்கொருவர் உறவு கொண்டிருக்கின்றனர்.

தன்னைச் சேர்ந்தவர்களின் துன்பம் கண்டபோது அஞ்சி நெகிழ்ந்து அதைப்போக்கி இனியராய் விளங்கும் தன்மையையே சான்றோர், தம் செல்வம் எனப் போற்றுகின்றனர்.

புறமாந்தர் உறவும் அன்பின் அடிப்படையில் நிகழ்கின்றது. அன்பாகிய குருதியோட்டத்தில் இயங்கும் உலகளாவிய உறவு மனப்பான்மை ஒன்றே சங்க காலச் சமுதாய உயிரோட்டமாக நிலைத்திருக்கின்றது.

## எதிர்கால ஆய்வுப் புலங்கள்

இவ்வாய்வை அடியொற்றி ஆராய்ச்சி செய்வதற்குரிய சில ஆய்வுப் புலங்கள் குறிப்பிடத்தக்கன.

சங்க இலக்கியங்களை அடுத்துத் தோன்றிய காப்பிய இலக்கியங்கள், பக்தி இலக்கியங்கள், தற்கால இலக்கியங்கள் ஆகியவை காட்டும் மனித உறவுகளைத் தனித்தனி ஆய்வாகவும், தொகுப்பாய்வாகவும் செய்யலாம்.

அவ்விலக்கியங்களையும் கவிதை, உரைநடை, புதினம், சிறுகதை, நாடகம் என வகைப்படுத்தி அவற்றில் காணப்படும் உறவுகளையும் தனித்தனியாகவும் தொகுப்பாகவும் ஆய்வுக்கு உட்படுத்தலாம்.

காலப்போக்கில் இலக்கியங்கள் காட்டும் மனித உறவின் வளர்ச்சி குறித்தும் ஆய்வு நிகழ்த்தலாம்.

இருவேறுபட்ட இலக்கிய வகைகட்கான உறவுகளை ஒப்பீட்டாய்வாகவும் இயற்றலாம்.

வளர்ந்துவரும் அறிவியல் முன்னேற்றத்தால், மக்கட்பெருக்கத்தால், பொருளாதார வளர்ச்சியால் இன்றைய சமுதாயத்தில் நிலவும் உறவின் இயல்புகளையும் முரண்பாடுகளையும் தனித்தனி ஆய்வாகவும் தொகுப்பாய்வாகவும் மேற்கொள்ளலாம்.

# பின்னிணைப்புகள்

## அ) சங்க இலக்கியத்தில் அகமாந்தர் கூற்றுகள் - நூல்முறை தொகை

### தலைவி கூற்றுகள்

நற். : 1, 14, 17, 20, 24, 31, 38, 51, 54, 56, 64, 69, 70, 73, 74, 79, 84, 87, 94, 97, 102, 104, 107, 109, 116, 117, 118, 128, 130, 133, 136, 144, 153, 174, 177, 186, 187, 193, 196, 199, 214, 217, 218, 219, 224, 226, 236, 238, 240, 241, 243, 244, 249, 255, 260, 272, 275, 277, 280, 281, 287, 289, 296, 302, 303, 304, 309, 314, 327, 332, 335, 338, 340, 343, 347, 348, 350, 357, 364, 369, 381, 382, 388, 389, 397.

குறு. : 3, 4, 5, 6, 11, 12, 13, 20, 21, 24, 25, 27, 28, 30, 31, 33, 35, 36, 38, 39, 41, 43, 46, 49, 50, 54, 57, 60, 64, 65, 67, 68, 75, 76, 77, 79, 82, 86, 87, 91, 92, 93, 94, 96, 97, 98, 102, 103, 104, 105, 106, 107, 108, 110, 112, 118, 121, 122, 125, 126, 133, 134, 140, 141, 145, 148, 149, 150, 152, 153, 154, 155, 157, 158, 160, 161, 163, 169, 170, 171, 172, 174, 175, 181, 183, 185, 186, 187, 188, 190, 191, 192, 193, 194, 195, 197, 200, 201, 202, 203, 205, 207, 208, 216, 218, 219, 220, 221, 223, 224, 226, 228, 231, 234, 239, 240, 241, 243, 245, 246, 249, 252, 254, 257, 261, 264, 266, 269, 271, 278, 279, 281, 283, 285, 288, 289, 290, 293, 296, 299, 301, 302, 304, 305, 306, 307, 310, 311, 313, 314, 315, 316, 318, 319, 320, 322, 325, 326, 327, 329, 330, 334, 340, 341, 344, 349, 352, 360, 361, 368, 371, 377, 385, 386, 387, 391, 395, 398, 399, 401.

ஐங். : 11, 12, 13, 14, 15, 17, 18, 19, 20, 22, 23, 31, 32, 33, 34, 35, 36, 41, 42, 43, 47, 48, 49, 61, 62, 63, 64, 65, 66, 67, 68, 69, 70, 71, 80, 82, 83, 85, 95, 111, 112, 113, 114, 115, 116, 117, 118, 119, 120, 131, 132, 133, 134, 135, 136, 137, 138, 139, 140, 141, 142, 144, 146, 150, 151, 152, 154, 155, 157, 160, 161, 162, 163, 164, 165, 167, 169, 170, 181, 183, 184, 192, 201, 203, 204, 209, 213, 215, 221, 222, 224, 253, 262, 263, 265, 272, 274, 278, 286, 292, 295, 311, 312, 314, 317, 318, 319, 320, 331, 332, 333, 334, 335, 336, 337, 338, 339, 340, 341, 342, 343, 344, 345, 346, 347, 348, 349, 350, 369, 370, 384, 385, 392, 397, 451, 452, 453, 454, 455, 456, 457, 458, 459, 460, 473, 474, 475, 476.

கலி. : 6, 11, 20, 23, 24, 42, 51, 54, 55, 62, 64, 66, 67, 73, 75, 76, 77, 79, 80, 81, 82, 83, 84, 85, 86, 87, 88, 89, 93, 95, 96, 97, 98, 108, 110, 111, 112, 113, 114, 116, 118, 119, 122, 123, 128, 137.

அகம். : 1, 6, 8, 11, 16, 22, 23, 26, 31, 36, 37, 40, 45, 52, 53, 56, 58, 66, 67, 72, 74, 82, 95, 97, 101, 102, 103, 113, 115, 199, 122, 128, 133, 135, 138, 139, 141, 146, 147, 151, 155, 157, 163, 170, 175, 183, 185, 187, 194, 196, 205, 206, 217, 229, 235, 236, 241, 243, 247, 249, 252, 255, 260, 264, 265, 266, 267, 273, 277, 281, 290, 292, 293, 294, 298, 301, 303, 305, 309, 325, 328, 329, 331, 332, 333, 341, 345, 347, 348, 349, 352, 355, 364, 367, 375, 378, 388, 389, 391, 395, 398.

பரி. : 6, 12.

**தலைவி - தோழி கூற்று**

நற். : 1, 14, 17, 24, 31, 38, 51, 56, 64, 69, 73, 79, 84, 87, 94, 97, 107, 109, 116, 117, 128, 130, 133, 136, 144, 174, 177, 186, 199, 214, 217, 218, 219, 224, 226, 236, 238, 240, 241, 243, 244, 249, 275, 280, 281, 289, 296, 303, 304, 309, 327, 332, 338, 347, 357, 358, 364, 369, 381, 382, 388, 397.

குறு. : 3, 4, 5, 6, 12, 13, 20, 21, 25, 27, 28, 30, 31, 33, 35, 36, 38, 39, 41, 43, 46, 54, 57, 60, 64, 65, 67, 76, 77, 79, 82, 86, 93, 94, 96, 97, 98, 102, 103, 104, 105, 106, 108, 110, 112, 118, 121, 125, 126, 133, 134, 140, 141, 145, 148, 149, 150, 152, 153, 154, 158, 160, 161, 170, 171, 172, 174, 175, 181, 183, 185, 186, 187, 188, 190, 191, 192, 193, 194, 195, 197, 200, 201, 202, 203, 205, 207, 208, 216, 218, 219, 220, 221, 223, 224, 226, 228, 231, 234, 239, 240, 241, 243, 245, 246, 249, 252, 254, 257, 261, 264, 266, 269, 271, 278, 279, 281, 283, 285, 288, 289, 290, 293, 296, 299, 301, 302, 304, 307, 310, 311, 313, 314, 315, 316, 318, 319, 320, 322, 325, 326, 329, 330, 334, 340, 341, 344, 349, 352, 360, 361, 368, 371, 377, 385, 386, 387, 391, 395, 398, 399.

ஐங். : 11, 14, 15, 17, 19, 20, 22, 23, 31, 32, 33, 34, 35, 36, 111, 112, 113, 114, 115, 116, 117, 118, 119, 120, 141, 142, 144, 146, 150, 151, 152, 154, 155, 161, 162, 163, 164, 165, 167, 169, 170, 181, 192, 201, 203, 204, 209, 213, 215, 221, 222, 224, 253, 262, 263, 272, 274, 278, 286, 292, 311, 314, 317, 318, 319, 320, 331, 332, 333, 334, 335, 336, 337, 338, 339, 340, 392, 453, 454, 455, 456, 457, 459, 474, 475.

கலி. : 11, 24, 42, 51, 54, 55, 67, 75, 76, 111, 114, 119, 122, 128, 137.

அகம். : 1, 8, 11, 22, 23, 26, 31, 37, 40, 45, 52, 53, 56, 66, 67, 72, 74, 82, 95, 97, 101, 102, 103, 113, 115, 119, 122, 128, 133, 135, 138, 139, 141, 147, 151, 155, 157, 163, 175, 183, 185, 187, 194, 205, 206, 217, 229, 235, 236, 241, 243, 247, 249, 252, 255, 260, 264, 265, 267, 273, 277, 281, 290, 292, 293, 294, 301, 305, 309, 325, 328, 329, 331, 332, 333, 341, 345, 347, 348, 349, 352, 355, 364, 367, 375, 378, 388, 389, 391, 395.

**தலைவி - தலைவன் கூற்று**

நற். : 20, 260, 340, 350.

குறு. : 49, 169.

ஐங். : 42, 43, 47, 48, 49, 61, 62, 63, 64, 65, 66, 67, 68, 69, 70, 71, 80, 83, 85, 139, 160, 169, 369, 370.

கலி. : 6, 20, 23, 62, 64, 66, 73, 77, 79, 81, 88, 89, 93, 98, 108, 110, 112, 113, 116.

அகம். : 6, 16, 36, 58, 196, 266, 298.

## ஏ) துறைவழி தோழி கூற்று நிகழும், நிகழ்த்தும் நூல்-திணை-ஒழுக்கம்-புலவர்கள் — பக்கம் - 5

| துறை | நூல் | | | | | | திணை | | | | | ஒழுக்கம் | | கூடுதல் | அதிகம் பாடிய புலவர்கள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | நற்றிணை | குறுந்தொகை | ஐங்குறுநூறு | கலித்தொகை | அகநானூறு | பரிபாடல் | குறிஞ்சி | முல்லை | மருதம் | நெய்தல் | பாலை | களவு | கற்பு | | |
| 34. தலைவனின் புறத்தொழுக்கம் பற்றிக் கூறுதல் | — | — | 24 | — | — | — | 1 | — | 22 | 1 | — | — | 24 | 24 | ஓரம்போகியார் - 22, கபிலர் - 1, அம்மூவனார்-1. |
| 35. தலைவனை இயற்பழித்தல் | — | 2 | 1 | — | — | 1 | 1 | — | — | 2 | — | 4 | — | 4 | அம்மூவனார் - 1, பிறர் - 2, பெயர் தெரியாதவர் - 1. |
| 36. வதுவை கண்டு மகிழ்தல் | 2 | — | 1 | — | — | — | 1 | — | — | 2 | — | — | 3 | 3 | அம்மூவனார் - 1, உலோச்சனார் - 1, கபிலர் - 1. |
| 37. இல்வாழ்வு கண்டு மகிழ்தல் | 1 | 1 | 1 | — | 1 | — | 1 | — | 1 | 2 | — | — | 4 | 4 | உலோச்சனார் - 1, அம்மூவனார் - 1, பிறர் - 2. |
| 38. தோழியின் பிற கூற்றுகள் | 4 | 4 | 13 | 6 | 4 | 1 | 9 | 8 | 4 | 4 | 6 | 15 | 17 | 32 | கபிலர்-7, பேயனார்-3, நல்லுருத்திரன்-4, பெருங்கடுங்கோ-2, அம்மூவனார்-2, ஓரம்போகியார் - 2, கயமனார் - 1, பரணர் - 1, பிறர் - 9, பெயர் தெரியாதவர் - 1. |
| | 212 | 140 | 200 | 67 | 157 | 5 | 286 | 52 | 90 | 170 | 177 | 472 | 309 | 781 | |

* பரிபாடலில் திணை குறிப்பிடப்படவில்லை.

| ஏ) (1) அகமாந்தர் கூற்றுகள் | | | | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| நூல் பெயர் | தலைவி | தலைவன் | தோழி | நற்றாய் | செவிலி | பரத்தை | கண்டோர் | அயலார் | உணர்ந்தோர் | சான்றோர் | வாயில் | பாணன் | பாங்கன் | தேர்ப்பாகன் | உழையர் | சுற்றம் | ஆய்ச்சியர் | கூனும் குறளும் |
| நற்றிணை | 85 | 74 | 213 | 9 | 2 | 11 | 3 | — | — | — | — | — | — | 1 | — | — | — | — |
| குறுந்தொகை | 180 | 62 | 140 | — | 9 | 5 | 3 | — | — | — | — | — | 2 | — | — | — | — | — |
| ஐங்குறுநூறு | 148 | 91 | 200 | 13 | 13 | 21 | 7 | 1 | 1 | — | 1 | 1 | 1 | — | — | — | — | — |
| கலித்தொகை | 46* | 16* | 67 | — | 1 | 8 | 9 | — | — | 2 | 2 | 1 | — | — | — | 1 | 1 | 1 |
| அகநானூறு | 101 | 103 | 157 | 8 | 17 | 9 | 1 | — | — | — | — | 1 | — | — | 3 | — | — | — |
| பரிபாடல் | 2* | — | 5* | — | — | — | — | — | — | — | — | 2 | — | — | — | — | — | — |
| கூடுதல் | 562 | 346 | 782 | 30 | 42 | 54 | 23 | 1 | 1 | 2 | 3 | 5 | 3 | 1 | 3 | 1 | 1 | 1 |

* கலித்தொகையில் ஆறு பாடல்கள் தலைவனும் தலைவியும் உறழ்ந்து பேசுவன.
* பரிபாடலில் ஒரு பாடல் தலைவி கூற்றாகவும், தோழி கூற்றாகவும் உள்ளது.

பத்துப்பாட்டு – முல்லைப்பாட்டு, குறிஞ்சிப் பாட்டு, பட்டினப்பாலை

* நற்றிணையில் ஒரு பாடல் சிதைந்தும் ஒரு பாடல் கிடைக்காமலும் உள்ளன.
* ஐங்குறுநூற்றில் 2 பாடல்கள் கிடைக்கப்பெறவில்லை.
* அகப்பாடல் கூடுதல் : 1857

| ஏ) (2) புறமாந்தர் கூற்றுகள் | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| புறநானூறு | பதிற்றுப்பத்து | பரிபாடல் | ஆற்றுப்படை | மதுரைக் காஞ்சி | நெடுநல்வாடை | கூடுதல் |
| 398* | 80 | 14 | 5 | 1 | 1 | 499 |

* புறநானூற்றில் இரண்டு பாடல்கள் கிடைக்கப்பெறவில்லை.

# துணை நூற் பட்டியல்

## மூல நூல்கள்


1. சாமிநாதையர், உ.வே. பதிப்பாசிரியர் 1949 — 'ஐங்குறுநூறு மூலமும் பழைய உரையும்' 4-ஆம் பதிப்பு, கபீர் அச்சுக்கூடம், சென்னை.

2. ---------------- 1962 — 'குறுந்தொகை மூலமும் பழைய உரையும்' கபீர் அச்சுக்கூடம், சென்னை.

3. ---------------- 1956 — 'பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க் கினியர் உரையும்' கபீர் அச்சுக்கூடம், சென்னை.

4. ---------------- 1956 — 'பரிபாடல் மூலமும் பரிமேலழகர் உரையும்' 4-ஆம் பதிப்பு, ஸ்ரீதியாகராச விலாச வெளியீடு, சென்னை.

5. ---------------- 1971 — 'புறநானூறு மூலமும் பழைய உரையும்' டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை.

6. சோமசுந்தரனார், பொ.வே. விளக்கவுரை 1970 — 'கலித்தொகை நச்சினார்க்கினியர் உரை' இரண்டாம் பதிப்பு கழக வெளியீடு, சென்னை.

7. ---------------------- 1972 — 'ஐங்குறுநூறு' மூன்றாம் பதிப்பு கழக வெளியீடு, சென்னை.

8. துரைசாமிப் பிள்ளை, ஔவை.சு. உரை 1978 — 'ஐங்குறுநூறு' அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர்.

9. ---------------------- 1963 — 'பதிற்றுப்பத்து மூலமும் விளக்கவுரையும்' கழக வெளியீடு, சென்னை.

10. நாராயணசாமி ஐயர், பின்னத்தூர் 1967 — 'நற்றிணை நானூறு' நான்காம் பதிப்பு கழக வெளியீடு, சென்னை.

11. மாணிக்கனார், அ. உரை 1999 — 'ஐங்குறுநூறு மூலமும் உரையும்' தொகுதி I, II, முதற் பதிப்பு வர்த்தமானன் பதிப்பகம், சென்னை - 17.

12. ------------------ 1999 — 'அகநானூறு மூலமும் உரையும்' முதற்பதிப்பு, தொகுதி I, II, III, வர்த்தமானன் பதிப்பகம், சென்னை - 17.

13. ------------------ 1999 — 'புறநானூறு மூலமும் உரையும்' முதற் பதிப்பு வர்த்தமானன் பதிப்பகம், சென்னை - 17.

14. வேங்கடசாமி நாட்டர், அ.மு. வேங்கடாசலம் பிள்ளை, இரா. 1968 (பதவுரை, விளக்கவுரை) — 'அகநானூறு' ஆறாவது பதிப்பு கழக வெளியீடு சென்னை.

## இலக்கண நூல்கள்

1. ஐயனாரிதனார் 1969 — 'புறப்பொருள் வெண்பாமாலை' கழக வெளியீடு, சென்னை - 1.

2. தொல்காப்பியர் 1970 — 'தொல்காப்பியம் சொல்லதிகாரம்' சேனாவரையம் உரை கு. சுந்தரமூர்த்தி பதிப்பு, திருப்பனந்தாள்.

3. -------------- 1977 — 'தொல்காப்பியம் பொருளதிகாரம்' இளம்பூரணர் உரை கழக வெளியீடு, சென்னை.

4. ------------- 1973 — 'தொல்காப்பியம் பொருளதிகாரம்' நச்சினார்க்கினியர் உரை கழக வெளியீடு, சென்னை.

5. ------------- 1972 — 'தொல்காப்பியம் பொருளதிகாரம்' பேராசிரியர் உரை கழக வெளியீடு, சென்னை.

6. நக்கீரனார் உரை 1976 — 'இறையனாரகப் பொருள் விளக்கம்' கழக வெளியீடு, சென்னை.

7. நாற்கவிராச நம்பி 1971 — 'அகப்பொருள் விளக்கம்' பழைய உரையுடன் கழக வெளியீடு, சென்னை.


## அகராதிகள்


1. கதிரைவேற்பிள்ளை நா. பதிப்பாசிரியர் 1982 — 'தமிழ்மொழி அகராதி' 6-ஆம் பதிப்பு, ஆசிய கல்விச்சேவை, புதுடில்லி - 106.
2. கழகப் புலவர் குழுவினர் 1964 — 'கழகத் தமிழ் அகராதி' முதற் பதிப்பு கழக வெளியீடு, சென்னை - 1.
3. சிங்காரவேலு முதலியார் ஆ. 1983 — 'அபிதான சிந்தாமணி' மூன்றாம் பதிப்பு ஆசிய கல்விச்சேவை, புதுடில்லி - 106.
4. சென்னைப் பல்கலைக்கழகம் 1982 — 'தமிழ் அகராதி' (Tamil Lexican) தொகுதி - I–V.


## மேற்கோள் நூல்கள்


1. அந்திரேயெவ், இலி. 1987 — எங்கெல்சின், 'குடும்பம், தனிச் சொத்து, அரசு ஆகியவற்றின் தோற்றம்' முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ.
2. அருளப்பா, இரா. 1974 — 'திருக்குறள் கூறும் சான்றாண்மை' மெய்ப்பொருள் பதிப்பகம், சென்னை.
3. இரத்தினசாமி நாயகர் சன்ஸ் (பதிப்பு) 1939 — 'தனிப்பாடல் திரட்டு' முதல் பாகம், சென்னை 1939.
4. இராசமாணிக்கனார், மா. — 'தமிழக ஆட்சி' பாரி நிலையம், சென்னை.
5. இராமகிருட்டினன். ஆ. 1982 — 'அகத்திணை மாந்தர் ஓர் ஆய்வு' முதற் பதிப்பு சரவணா பதிப்பகம், மதுரை - 20.
6. இராமநாதன் செட்டியார், லெ.ப.கரு. 1967 — 'சங்க காலத் தமிழர் வாழ்வு' முத்தையா பதிப்பகம் - வெளியீடு.

7. இலக்குமிதரன் பாரதி, சோ. 'நமது சமூகம்'
1969

8. இளங்கோவன், கு.வை. 'உறவு - ஓர் ஆய்வு'
1995
முதற் பதிப்பு
முத்துப் பதிப்பகம், விழுப்புரம்.

9. இளவழகனார் 'சங்க இலக்கிய இன்கவித் திரட்டு'
1955
மூன்றாம் பாகம்
கழக வெளியீடு, சென்னை - 1.

10. உதயமூர்த்தி, எம்.எஸ். 'நாடு எங்கே செல்கிறது'
1984
முதற் பதிப்பு
வானதி பதிப்பகம், தி.நகர், சென்னை - 17.

11. கந்தசாமி, சொ.ந. 'குறுந்தொகைத் திறனாய்வு'
1978
முதற் பதிப்பு
அபிராமிப் பதிப்பகம், அண்ணாமலை நகர்.

12. கம்பர் 'கம்பராமாயணம்'
1983
கம்பன் கழகம், 'கற்பகச் சோலை'
கோட்டூர்புரம், சென்னை - 85.

13. கல்யாண சுந்தரம், திரு.வி. 'பெண்ணின் பெருமை' அல்லது
1969
'வாழ்க்கைத் துணை நலம்'
புனித நிலையம், சென்னை.

14. குருசாமி, ம.ரா.போ. 'சங்க காலம்'
1974
மெர்க்குரி புத்தகக் கம்பெனி,
கோயம்புத்தூர்.

15. குழந்தை, புலவர் 'தொல்காப்பியர் காலத் தமிழர்'
1959
முதற் பதிப்பு
பாரி நிலையம், சென்னை - 1.

16. சரளா இராசகோபாலன் 'சங்க இலக்கியத்தில் தோழி'
1986
முதற் பதிப்பு
ஒளிப் பதிப்பகம், சென்னை - 18.

17. ---------------------- 'சங்க இலக்கியம்' (அகம்)
1988
முதற் பதிப்பு
ஒளிப் பதிப்பகம், சென்னை - 18.

18. ----------------------- 1999 — 'இலக்கியப் பாதையில்' முதற் பதிப்பு ஒளிப் பதிப்பகம், சென்னை - 18.

19. சாம்பசிவன், சு. 1964 — 'தமிழ் இலக்கியத்தில் நெய்தல் திணை' மீனாட்சிப் புத்தக நிலையம், மதுரை.

20. சாமிநாத சர்மா, மொழிபெயர்ப்பு 1948 — 'பிளேட்டோவின் அரசியல் (அ) நீதியைப் பற்றிய ஆராய்ச்சி' பிரபஞ்ச ஜோதி பிரசுராலயம், சென்னை.

21. சாலினி இளந்திரையன் 1995 — 'சங்கத் தமிழரின் மனிதநேய மணிநெறிகள்' உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை - 113.

22. சிதம்பரனார், சாமி. 1962 — 'எட்டுத் தொகையும் தமிழர் பண்பாடும்' இரண்டாம் பதிப்பு ஸ்டார் பிரசுரம், திருவல்லிக்கேணி, சென்னை - 600 005.

23. சுப்பிரமணியன், இராம. 1998 — 'அறமலர்க் கொத்து' அன்னை சரசுவதி வெளியீடு, சென்னை - 11.

24. செந்துறை முத்து 1989 — 'சங்க காலச் சமுதாயச் சிந்தனைகள்' அருண்மொழிப் பதிப்பகம், சேலம்.

25. செயராமன், நா. 1975 — 'ஈன்ற தாய்' முதற் பதிப்பு மீனாட்சி புத்தக நிலையம், மதுரை.

26. ---------------------- 1976 — 'முல்லைப் பாடல்கள்' முதற் பதிப்பு குமரன் வெளியீடு, மதுரை.

27. ஞானசம்பந்தம், அ.ச. 1958 — 'அகமும் புறமும்' (புறம்) பாரி நிலையம், சென்னை - 1.

28. தங்கங் கந்தசாமி 1987 — 'போரியல் அன்றும் இன்றும்' சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை - 5.

29. தண்டாயுதம், இரா. 1978 — 'சங்க இலக்கியம்' (எட்டுத்தொகை) தமிழ்ப் புத்தகாலயம், சென்னை.

30. தமிழ்நாட்டு வரலாற்றுக் குழுவினர் - 1975 — 'தமிழ்நாட்டு வரலாறு - தொல்பழங்காலம்' தமிழ்நாடு அரசு வெளியீடு, சென்னை.

31. தமிழண்ணல் 1961 — 'குறிஞ்சிப் பாட்டு, இலக்கியத் திறனாய்வு விளக்கம்' வளர்தமிழ்ப் பதிப்பக வெளியீடு, முதற் பதிப்பு வைகாசி வ.ஆ. 1992.

32. தாயம்மாள் அறவாணன் 1987 — 'உறவு முறைகள் ஓர் ஆய்வு' தமிழ்க் கோட்டம், சென்னை - 29.

33. தேவநேயன், ஞா. 1961 — 'பழந்தமிழாட்சி' கழக வெளியீடு, சென்னை - 1.

34. ------------------- 1966 — 'பண்டைத் தமிழ் நாகரிகமும் பண்பாடும்' நேசமணி பதிப்பகம், காட்பாடி.

35. பரமசிவானந்தம், அ.மு. 1963 — 'கவிதையும் வாழ்க்கையும்' தமிழ்க் கலைப் பதிப்பகம், சென்னை - 30.

36. ---------------------- 1972 — 'சமுதாயமும் பண்பாடும்' இரண்டாம் பதிப்பு தமிழ்க் கலைப் பதிப்பகம், சென்னை.

37. பாலசுப்பிரமணியன், கு.வெ. 1986 — 'சங்க இலக்கியத்தில் புறப்பொருள்' மீரா பதிப்பகம், புதுக்கோட்டை.

38. பாலசுப்பிரமணியன், சி. 1978 — 'தமிழ் இலக்கிய வரலாறு' 13-ஆம் பதிப்பு பாரி நிலையம், சென்னை.

39. பாஸ்கரதாஸ், ஈ.கோ. 1979 — 'அகப்பொருள் பாடல்களில் தோழி' திருமனை வெளியீடு, கோவை - 18.

40. ---------------------- 1982 — 'அகப்பொருள் பாடல்களில் தலைவி' தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம் லிட். சென்னை.

41. பொற்கோ 1973 — 'பி.பி.சி. தமிழோசையியல்' முதற் பதிப்பு தமிழ் நூலகம், சென்னை.

42. ------------- 1999 — 'திருக்குறள் அரங்கம், கருத்துரை கட்டுரை' முதற் பதிப்பு பூம்பொழில் வெளியீடு, சென்னை - 20.

43. மாணிக்கம், வ.சுப 1962 — 'தமிழ்க் காதல்' சௌத் இந்தியா பிரஸ், காரைக்குடி.

44. மோகனராசு, கு. 1983 — 'திருவள்ளுவரின் குறிக்கோளியலும் உலகப் பொதுமையியலும்' சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை.

45. வரதராசனார், மு. 1967 — 'திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம்' பாரி நிலையம், சென்னை - 1.

46. --------------- 1991 — 'திருக்குறள் தெளிவுரை' 110ஆவது பதிப்பு, கழக வெளியீடு, சென்னை - 108.

47. வாசுகி அம்மையார், மோ. 1976 — 'நற்றிணையில் நற்றாய்' இன்பத் தமிழ் ஓசை, சென்னை.

48. வித்தியானந்தம், சு. 1971 — 'தமிழர் சால்பு' இரண்டாவது பதிப்பு பாரிப் புத்தகப் பண்ணை, சென்னை - 5.

49. வேதா 1973 — 'வாராய் தோழி' பிறைமுடி வெளியீடு, சென்னை.

50. ஜகந்நாதன், கி.வா. 1962 — 'தாமரைப் பொய்கை' அமுத நிலையம், சென்னை - 18.

51. ஜான் சாமுவேல், ஜி. 1977 — 'திறனாய்வுச் சிந்தனைகள்' முதற் பதிப்பு, ஒப்புரவு அச்சகம், சென்னை.

### கட்டுரைகள்

1. அருணாசலம், மு. 1940 — 'நெய்தல்' ஐங்குறுநூற்றுச் சொற்பொழிவுகள்' கழகம், சென்னை - 1.

2. இரத்தினம், கா.பொ. 1940 — 'அகநானூற்றுச் சொற்பொழிவுகள்' கழகம், சென்னை - 1.

3. இளவழகனார் 1928 — 'அறத்தொடு நிற்றல், செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு 6, பரல் 9', கழகம், சென்னை - 1.

4. காமாட்சி குமாரசாமி முதலானோர் 1957 — 'தமிழர் இனிய வாழ்வு' (கட்டுரைத் தொகுப்பு) இரண்டாம் பதிப்பு, தேனருவி பதிப்பகம், சென்னை.

5. சாலினி இளந்திரையன் — 'சங்க அக இலக்கியங்களில் பாத்திரங்களின் பண்போவியம்'
முதல் கருத்தரங்கு ஆய்வுக் கோவை.

6. சுப்பிரமணியம், ச.வே. 1976 — 'ஒன்று நன்று' குறுந்தொகையில் உள்ளுறை
முதற் பதிப்பு
தமிழ்ப் பதிப்பகம், அடையாறு.

7. சுப்புரெட்டியார், ந. — 'அகப்பொருளில் தோழி'
அடிசிற்கினியாள், சென்னை.

8. சௌரிராஜன், பொன். 1988 — 'மடல் ஊர்தலும் மடை மாற்றங்களும்'
இருபதாவது கருத்தரங்கு ஆய்வுக் கோவை
தொகுதி - 4.

9. பூரணலிங்கம் பிள்ளை, எம்.எஸ். 1927 — 'தாய், செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு - 4
கழகம், சென்னை.

10. மெய்யப்பன், சி. 1977 — 'சங்க இலக்கியத்தில் பெண்கள்'
இலக்கியத்தில் பெண்கள்,
முதற் பதிப்பு,
தி. பாக்கியமுத்து கிறித்துவ
இலக்கியச் சங்கம், சென்னை.

11. வெங்கடராமச் செட்டியார், செ. 1979 — 'கவைமகள் நஞ்சுண்டா அங்கு அஞ்சுவல்'
செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு 53, பரல் 9,
கழகம், சென்னை.

12. வெள்ளை வாரணன், க. 1969 — 'குறிஞ்சிப் பாட்டு'
பத்துப்பாட்டுச் சொற்பொழிவுகள்,
கழகம், சென்னை.

## பிஎச்.டி. ஆய்வேடுகள்

1. இரத்தினம், க. — 'சங்க அகப்பாடல்களில் கூற்று'
மதுரைப் பல்கலைக் கழகம், மதுரை.

2. கோகிலவாணி, சு. 1997 — 'சங்க இலக்கியத்தில் தாய்-சேய் உறவு'
ஓர் உளவியல் நோக்கு
சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை.

3. சுமதி, ச. — 'பழந்தமிழ் இலக்கியத்தில்
மனித இன ஒருமைப்பாடு'
சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை.

### பிற ஆய்வேடு


1. பாஸ்கரதாஸ், ஈ.கோ. — 'எட்டுத் தொகையில் தலைவி'<br>எம்.லிட். ஆய்வேடு.<br>சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை.


### ஆங்கில நூல்கள்


1. Arthur Schopenhauer, 1948 — "The World as will and Idea"<br>I Edition,<br>Routledge and Kegan Paul Ltd., London.<br>Vol. I, II, III.
2. Christopher Caudwell, 1956 — "Illusion and Reality"<br>I Edition,<br>Peoples Publishing House Ltd., Delhi.
3. Duneanmitchel, G., 1968 — "A Dictionary of Socialogy'<br>Routledge and Kegan Paul Ltd., London.
4. Fredu, Sigmund, 1953 — "Civilization and its Discontents"<br>I Edition,<br>Tr. by Joan Riviere,<br>The Hogarth Press Ltd., London.
5. Holling Worth Leta. S. — "The Psychology of the Adolescent"<br>Stapless Press Ltd., London.
6. Pillai, K.K., 1975 — "A Social History of the Tamils"<br>II Edition,<br>University of Madras, Vol. I.
7. Singaravelu, S., 1966 — "Social Life of the Tamils"<br>I Edition,<br>(The Classical Period)<br>Dept. of Indian Studies, University of Malaya,<br>Kulalumpur.


### PH.D. THESIS


8. Manickam, V.T., 1968 — "A Study of Maruthathinai in Tamil Literature"<br>Madras University, Madras.
9. Nagu, R.K., 1966 — "A Critical Study of Palaithinai in Cangam Literature"<br>Madras University, Madras.
10. Thiagarajan, T. — "Studies in Akananuru"<br>Madras University, Madras.

# சங்க இலக்கியம் காட்டும் மனித உறவுகள்

சென்னைப் பல்கலைக்கழகத்தின்

முனைவர் (பிஎச்.டி.,) பட்டப்பேற்றுக்காக

அளிக்கப்பெறும் ஆய்வேடு

**ச. இரேணுகா**

பகுதிநேர ஆய்வாளர், தமிழ்த்துறை

இராணிமேரி கல்லூரி

சென்னை - 600 004

*மேற்பார்வையாளர்*

டாக்டர் **இரா. சரளா,** எம்.ஏ., பிஎச்.டி.,

பேராசிரியர், தமிழ்த்துறை

இராணிமேரி கல்லூரி

சென்னை - 600 004

ஏப்ரல் — 2001

# 10. தொகுப்புரை

## அகமாந்தர் உறவு

**சங்க இலக்கியத் தலைவி** தன் பெற்றோர், தமர், செவிலித்தாய், தோழி, தலைவன், தன் புதல்வன், பின்முறை வதுவைக் கிழத்தி, பரத்தை, பிறர் ஆகியோருடன் உறவு கொண்டிருக்கிறாள்.

தலைவி பெற்றோரிடத்தும் தமரிடத்தும் அன்பும் மதிப்பும் உடையவள். அவர்களின் உளமறிந்து ஒழுகும் ஒழுக்கம் பெற்றவளாக இருக்கிறாள்.

நற்றாயைக் காட்டிலும் தன்னைக் குழந்தைப் பருவம் முதல் வளர்த்தெடுத்த செவிலித் தாயிடமே தலைவி மிக நெருங்கிய உறவு கொண்டவள் ஆவாள்.

தலைவிக்குப் பெண்மைப் பருவம் வாய்க்கப் பெற்றது முதல் களவு, கற்பு ஆகிய காதல் வாழ்வு மலர்ந்து இல்லற வாழ்வு நடத்தும் காலம் வரை நற்றாய், செவிலித்தாய் ஆகிய இருவரைக் காட்டிலும் தோழியே அவளுக்கு மிக நெருங்கிய உறவுடையவளாய் அமைகிறாள்.

தலைவி களவினும் கற்பு வாழ்விலேயே மிக அதிகமாகத் தலைவனுடன் நேர்முகமாய்ப் பேசுகிறாள். அவள் தன் கணவனை அன்னையாகவும் அருந்தந்தையாகவும் கருதுகிறாள்.

தலைவன் பரத்தையர் பிரிவினின்றும் மீண்டு வந்தபோது தன் இல்லற மாண்பும், உலகியலும் கருதி அவன்மீது கொண்ட ஊடலை நீக்கி அவனை ஏற்றுக்கொள்கிறாள்.

பிரிவின் பொருட்டு வருந்தும் தலைவி, தலைவனின் பொருள்வயிற் பிரிவை ஆடவற்குரிய கடமை என உணர்ந்து அதற்கு உடன்படுகிறாள்.

தன் புதல்வனைத் தலைவி பாலூட்டிச் சீராட்டி வளர்க்கிறாள். தன் தந்தையைப் போல் அவன் எதிர்காலத்தில் புறத்தொழுக்கம் இல்லாதவனாகத் திகழவேண்டும் என்றெண்ணி அவனை நல்லாற்றுப் படுத்துகிறாள்.

தலைவன் பின்முறை வதுவைக் கிழத்தியுடன் வருவதைக் காணும் ஒரு தலைவி அவளைத் தன் தங்கையாக ஏற்றுக் கொள்கிறாள். அவள், தனக்கு வாய்க்காத மகப்பேறு தன் தலைவனுடன் வந்தவளுக்குக் கிடைக்கவேண்டும் என்று கருதுகிறாள்.

தலைவனுக்குரிய பரத்தையைச் சில நேரங்களில் தலைவி தன் தங்கையாகக் கருதுகிறாள்.

கண்டோர், அந்தணர், தூதுவர் ஆகியோரைத் தலைவி தன் வாழ்வின் இன்ப துன்பங்களைப் பகிர்ந்து கொள்ளும் இனிய உறவினராக எண்ணுகிறாள்.

தற்காலத் தலைவியர்க்கு உள்ளதுபோலச் சங்க இலக்கியத் தலைவிக்குத் தன் பெற்றோருடன் பிறந்த குருதித் தொடர்பான உறவுகள் இருந்ததற்கான சான்றுகள் சங்க இலக்கியங்களில் காணப் பெறவில்லை.

மேலும் இக்காலக் குடும்பப் பெண்டிர்க்குத் தான் மணந்து கொண்ட கணவனைச் சார்ந்த குருதித் தொடர்பான உறவுகள் உள்ளதுபோல, சங்க இலக்கியத் தலைவிக்குத் தலைவனைச் சார்ந்த குருதி உறவுகள் இருந்ததற்கான சான்றுகள் வெளிப்படையாகக் காட்டப்படவில்லை. மாறாகத் தலைவியின் தாய் தன் மகளுக்கு அமைய வேண்டிய தலைவன் குடும்பத்தைச் சார்ந்த பெண் உறவுகள் பற்றி எண்ணிப் பார்ப்பதாகக் குறிப்பிடும் நிலையிலேயே காணப்படுகின்றன.

**சங்க இலக்கியத் தலைவன்** தன் தலைவி, அவள் பெற்றோர், தமர், தோழி, புதல்வன், பரத்தை, பாங்கன், தேர்ப்பாகன், பாணன், கண்டோர், பிற அஃறிணை உயிர்கள் ஆகியோருடன் உறவுள்ளவனாக விளங்குகிறான்.

தலைவன் களவுப் புணர்ச்சியில், உலகையே பெற்றாலும் அவளைப் பிரியமாட்டேன் என்பவன் கற்புப் புணர்ச்சியில் வினைமேற்கொண்டும் பொருள் தேடியும் பரத்தையை விரும்பியும் பிரிவு கொள்கிறான். இது தலைவனின் சொல்வேறு செயல் வேறுபட்ட ஒழுக்கமாக உள்ளது.

களவுக் கூட்டத்தின்போது தலைவியைத் தவிர தன் நெஞ்சைக் கவர்ந்த மகளிர் பிறரில்லை எனக் கூறும் தலைவன், கற்புக் கூட்டத்தின்போது பரத்தையர் பலரைக் கூடுகிறான்.

உடன்போக்கின்போது, கொடிய சுரத்தில் தலைவியை அழைத்துச் செல்லும் தலைவன், பொருள்வயிற் பிரிவின்போது வழியின் கொடுமை கூறி அவளை அழைத்துச் செல்ல மறுக்கிறான்.

தலைவன் தன் வாழ்வின் எந்தச் சூழலிலும் தலைவியைத் தன் உள்ளத்தில் எண்ணியே இருக்கிறான். பரத்தையர் பிரிவை மேற்கொள்ளும் போதும் அங்கேயே தங்கிவிடாமல் தலைவிமாட்டுப் பேரன்பு உடையவனாய்த் திரும்பி வருகிறான்.

தலைவன் புறவொழுக்கத்தால் தலைவிக்கு அஞ்சுவதோடன்றி, அவள் உள்ளம் மாறுபட்டால் விளையும் ஊடல் எண்ணி அவளுக்கு எப்பொழுதும் அஞ்சுபவனாகவே விளங்குகிறான்.

தலைவி தன்னுடன் ஊடியும் கூடியும் நிகழ்த்தும் இல்லற வாழ்வில் தலைவன் முழு நிறைவுற்றுப் பெருமகிழ்ச்சி உடையவனாகத் திகழ்கிறான்.

தலைவன் இல்லற வாழ்வில் தன்னுடன் கற்பறம் பூண்டொழுகும் தன் தலைவியை ஈன்றளித்த பெற்றோரை வாழ்த்தி மகிழ்கிறான்.

தனக்குக் களவிலும் கற்பிலும் பேருதவி புரியும் தோழியைத் தலைவன் போற்றுகிறான். ஆயினும் தன் குறை முடிக்காவிடத்து இழித்தும் பேசுகிறான்.

தலைவியை எவ்வாறேனும் மணக்க வேண்டும் எனும் எண்ணத்தால் மடலூர்வதாகத் தோழியிடம் கூறும் தலைவன், தலைவியின் பெற்றோர்தம் குடும்பப் பெருமை கருதி மடலூர்கின்றான் அல்லன். ஆயினும் கலித்தொகையில் மட்டும் தலைவன் மடலூர்ந்து தலைவியை மணந்ததாகக் காணப்படுகின்றது.

தலைவன் தன் புதல்வனுக்குத் தன் தந்தையின் பெயரைச் சூட்ட விரும்புகிறான்; புதல்வனின் குழந்தைமைச் செயல்களைக் கண்டும் கேட்டும் இன்புறுகிறான்; மேலும் அப்புதல்வனைத் தன் தலைவியிடம் வாயிலாக அனுப்பி அவள் அன்பைப் பெறுகிறான்.

தலைவன் பரத்தையுடன் உறவுற்றிருப்பினும் அவளுடன் அவன் உரையாடியதாகச் சான்றுகள் இல்லை.

தன் பாங்கனின் வினாக்களுக்குத் தலைவன் விடையளிக்கின்றானே அல்லாமல், தோழியைப் போல அவனிடமிருந்து உதவிகளைப் பெற்றான் அல்லன்.

தன் தலைவியையும் புதல்வனையும் காணுமாறு, தேரை விரைந்து செலுத்தி உதவிய தேர்ப்பாகனுக்குத் தலைவன் விருந்தளித்துப் பாராட்டுகிறான்.

பாணனைத் தன் தலைவியிடம் தூதாகவும் வாயிலாகவும் செல்ல, தலைவன் பயன்படுத்துகிறான்.

பொருள்வயிற் பிரிந்தபோது தலைவனுக்கு உண்டாகும் துன்பத்தை ஆற்றிக்கொள்ளும் வடிகாலாகக் கண்டோர் அமைகின்றனர்.

தலைவன் எவ்வுயிரிடத்தும் அன்புடையவனாகக் காட்டப்படுகிறான். தலைவன் தன் பெற்றோர், தலைவியின் பெற்றோர், தமர், செவிலித்தாய் ஆகியோருடன் உரையாடியதாகச் சான்றுகள் இல்லை.

திருமணத்திற்குப் பிறகு தலைவன் பெற்றோர், தம் மகனின் தவற்றைப் பெரிதாக எண்ணி அவனைத் திருத்தியதாகவோ அன்றி அவன்பொருட்டுத் தாம் வருந்தியதாகவோ சான்றுகள் காணப்படவில்லை.

தலைவன் தலைவியிடம் களவொழுக்கம் கொண்டு உறவுற்றவன் பின்னர் அவளை மணக்காமல் கைவிட்டதாகவோ அன்றிக் கற்பொழுக்கத்தில் அவளிடம் முரண்பட்டு மணவிலக்கு செய்துவிட்டதாகவோ சங்க இலக்கியத்தில் செய்திகள் காணப்படவில்லை.

சங்க இலக்கிய மாந்தர்தம் உறவு ஒருத்திக்கு ஒருவன் என அமைந்துள்ளதே அல்லாமல் ஒருவனுக்கு ஒருத்தி என அமையவில்லை.

**சங்க இலக்கியத் தோழி** தலைவி, தலைவியின் தமர், தலைவன், செவிலி, நற்றாய், பிறர் ஆகியோருடன் உறவு கொண்டிருக்கிறாள்.

தோழி தனக்கென வாழாமல் தலைவிக்காகவே வாழ்கிறாள். மேலும், தலைவிக்கு நல்லாசானாகவும் அன்புத் தாயாகவும் உற்ற தோழியாகவும் விளங்குகிறாள்.

தலைவி தலைவனிடம் முரண்படும் வகையில் செயற்பட எண்ணும் பொழுது அவளைக் கண்டிக்கும் உரிமையும் தோழியே பெற்றிருக்கிறாள்.

தோழி, தலைவன் தலைவியரின் களவு, கற்பு வாழ்வில் அவர்கட்கு அறிவுரை வழங்கியும், ஆற்றுப்படுத்தியும் அருந்தொண்டாற்றியும் உறுதுணையாக விளங்குகிறாள்.

தலைவன் வரைவை விரைவுபடுத்தும் நோக்கில் அவனிடம் கனிந்தும் முனிந்தும் உரையாற்றும் உரிமைப் பெண், தோழியே ஆவாள்.

தலைவிக்குத் தலைவனுடனான உறவுச் சூழல்களைப் பேசும் தோழி, தலைவியின் செயல்பாடுகளை யான், யாம், நம், நாம் எனும் சொற்களைக் கொண்டு தன்மேல் சார்த்திக் கூறுவதும் உண்டு.

தலைவியின் களவொழுக்கத்தை அவள் தமர்க்கு அறிவிப்பவளும், தலைவனுடனான அவள் திருமணத்திற்குத் தமரின் ஒத்துழைப்பை நல்கச் செய்பவளும் தோழியே ஆவாள்.

தலைவியின் களவைச் செவிலிக்கு வெளிப்படுத்தி அவள் திருமணம் நிகழ அச்செவிலியின் ஒத்துழைப்பைக் கனிவாகப் பேசிப் பெறும் சொல்லின் செல்வி தோழி ஒருத்தியே ஆவாள்.

தோழி நற்றாயிடம் உரைநிகழ்த்தும் கூற்றுகள் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

தலைவியின் கற்புக் கூட்டத்திற்கு உறுதுணையாகும் வகையில் கட்டுவிச்சி, வேலன், உழவர் ஆகியோரிடம் தோழி உரையாடுகிறாள். தலைவனுடைய வாயிலாக வரும் பாணன், விறலி, பாங்காயினார், குயவர் ஆகியோரிடமும் தோழி வாயில் மறுத்தும் நேர்ந்தும் பேசுகிறாள். அறிவரிடம் தலைவன் வரும் பருவம் குறித்து மட்டும் வினவுகிறாள்.

தோழியின் பெற்றோர்களில் செவிலி மட்டுமே தாயாகக் குறிப்பிடப்படுகிறாள். தோழியின் தந்தை பற்றியோ பிற தமர் பற்றியோ, அவளின் குடும்ப வாழ்க்கை பற்றியோ எந்தக் குறிப்பும் காணப்படவில்லை.

**நற்றாய்** தன் மகளாகிய தலைவி, தோழி, செவிலி, அயலாரிடம் உறவு கொண்டிருக்கிறாள்.

தான் ஈன்றெடுத்த தலைவியை நற்றாய் தன் உயிராக எண்ணி அன்பு பாராட்டுகிறாள்.

தலைவி தலைவனுடன் உடன்போக்கு சென்றபோது, தன் மகள் சென்ற வழி அவளுக்கு நன்மை தரக்கூடியதாக அருள வேண்டும் என நற்றாய் இறைவனை வேண்டுகிறாள்.

தன் மகளுக்குத் திருமணம் தன் வீட்டில் நடைபெறாமைக்கும், அதன் பொருட்டு நிகழ்த்தப் பெறும் சிலம்புகழி நோன்பும், தன் வீட்டில் நிகழாமல் தலைவன் வீட்டில் நிகழ்ந்தமைக்கும் நற்றாய் வருந்துகிறாள். ஆயினும் மகளுக்குத் திருமணம் நிகழ்ந்தமை குறித்த நற்றாயின் மகிழ்ச்சி குறிப்பிடத்தக்கதாகும்.

தன் மகளைத் தான் பிரிந்து துன்புறுவதைப் போலத் தலைவனை ஈன்ற தாயும் துன்பமடைய வேண்டுமெனப் பழிக்கின்றாள்.

தன் மகளுக்குத் தோழியாகிய செவிலியின் மகளைத் தானீன்ற மகளாகவே போற்றி உரைக்கின்றாள்.

நற்றாய் தன் தோழியாகிய செவிலியிடம் தன் மகளின் பிரிவு குறித்து ஆற்றாது புலம்புகிறாள். அவ்வாறே அயலாரிடமும் புலம்புகிறாள். நற்றாயின் இக்கூற்றுகள் தவிர வேறெவரிடமும் நிகழ்த்திய கூற்றுகள் இல்லை.

நற்றாய் தன் மகளை ஈன்றாளே அல்லாமல் அவளை வளர்த்தெடுத்தற்கான குறிப்புகளேதும் சங்க இலக்கியத்தில் காணப்படவில்லை.

**செவிலி** தலைவி, தன் மகளாகிய தோழி, தன்நெஞ்சு, கண்டோர், தலைவன் ஆகியோரிடம் உறவு கொண்டிருக்கிறாள்.

நற்றாய் மகளாகிய தலைவியை, செவிலித்தாய் தானீன்ற மகளாகக் கருதி குழந்தைப் பருவந்தொட்டே சீராட்டிப் பாராட்டி வளர்த்து ஆளாக்குகிறாள்.

தலைவியின் குழந்தைப் பருவத்தில் அவளைக் கடிந்து வளர்த்துக் காத்தல், பருவ மகளானபோது இரவு பகல் பாராமல் கண்காணித்தல் ஆகிய உரிமைகள் செவிலிக்கே உரியனவாக அமைந்திருக்கின்றன.

தலைவி, தலைவன் இல்லத்தில் மகவீன்றிருந்தபோது அவளுக்கு உதவும் பொருட்டுச் செவிலி அவளுடன் இருந்திருக்கின்றாள். இற்றைக்கும் தாயரே தம் மகளிரின் பேறுகாலப் பணியை உவந்து செய்வதைக் காணலாம்.

தலைவியின் இல்லற மாண்பைக் கண்டு மகிழ்வதும் அம்மகிழ்ச்சியை நற்றாயிடம் கூறிப் பகிர்ந்து கொள்வதும் ஆகிய செவிலித்தாயின் செயல்கள் அவளது உன்னதத் தாய்மைப் பண்பை உணர்த்துகின்றது.

தலைவி உடன்போக்கு மேற்கொண்டபோது செவிலித் தாய் தனக்குண்டான துன்பத்தைத் தன் மகளாகிய தோழியிடம் கூறிப் புலம்புகின்றாள். மேலும் செவிலித்தாய் தலைவியின் பிரிவால் உண்டான துன்பத்தைத் தன் நெஞ்சிடமும் அத்தலைவி சென்ற வழியில் பின்சென்று அவ்வழியில் கண்டோரிடமும் கூறிப் புலம்புகின்றாள்.

செவிலி தலைவனிடம் நேர்முகமாய்ப் பேசவில்லை என்றாலும் அவனது களவு வாழ்வில் அவனைப் பலவாறு வைதும் கற்பு வாழ்வில் அவனைப் பலவாறு வாழ்த்தியும் உரைக்கின்றாள்.

செவிலியின் இல்லற வாழ்வு உறவுகளைப் பற்றியோ அவள் மகளாகிய தோழியின் வளர்ப்பு, திருமணம் ஆகியவற்றின் பொருட்டு அவளாற்றிய கடமைகள் குறித்தோ எந்தச் செய்தியும் சங்க இலக்கியத்தில் இடம்பெறவில்லை.

**பரத்தை** தலைவன், தலைவி, அவர்தம் புதல்வன், தன்னையொத்த பரத்தையர் ஆகியோருடன் உறவு கொண்டிருக்கிறாள்.

பரத்தை தலைவன் உறவை 'நட்பு' எனும் சொல்லால் உரைக்கின்றாள். அவன் இன்பத்தைப் பெரிதும் விரும்புகிறாள். தலைவன் தன்னைப் பிரிந்திருப்பினும் தன் நெஞ்சில் அவன் இருப்பதாகவே எண்ணி மகிழ்கின்றாள்.

தன்னை ஒத்த பிற பரத்தையரிடம் தலைவன் நட்புகொண்டால் அவனிடம் ஊடல் கொள்கிறாள். ஆனால், தலைவன் தலைவியிடம் மீண்டு சென்றால் அவனை உலகியல் கருதி ஏற்றுக் கொள்கிறாள்.

பரத்தை தலைவியைத் தன் தங்கையாக எண்ணுகிறாள். ஆயினும் தன்னையும் தலைவனையும் அவள் சேர்த்துப் பழிக்கும்போது அத்தலைவியை இழித்துரைக்கிறாள்.

தலைவன் தலைவியின் புதல்வனைத் தன் புதல்வனாக எண்ணி, பரத்தை அன்பு பாராட்டுகிறாள்.

பரத்தையர்க்கும் தோழியர் இருக்கின்றனர்.

சங்க இலக்கியத்தில் கூறப்படும் பரத்தையர் தலைவனின் பொருளின் பொருட்டு இன்ப நுகர்ச்சி தரும் பொருட்பெண்டிரல்லர். மேலும் மூப்பு எய்திய பரத்தையரிடம் அக்கால ஆடவர் சமுதாயம் உறவு கொள்ளாமல் அவர்களை ஒதுக்கியது.

**பாங்கன்** தலைவனை இடித்துரைக்கும் உரிமை உடையவனாக இருக்கிறான்.

**பாணன்,** தலைவன் தலைவியர் பிரிவின்போது வாயிலாகவும் தூதாகவும் இருந்து இருவரும் கூடி மகிழ உதவுகிறான்.

**கண்டோர்,** உடன்போக்கு செல்லும் தலைவன் தலைவியர்க்கு வழியின் அருமை கூறியும், தலைவனைக் குற்றம் சாட்டியும் அவர்களுக்காக இரங்கியும் பேசுகின்றனர்.

உடன்போக்கு சென்றோர் திருமணம் முடித்து மீண்டு வருவதைக் கண்டும் வினைமுடித்து மீளும் தலைவன் தலைவியுடன் கூடி இனிய இல்லறம் இயற்றுவதைக் கண்டும் கண்டோர் மகிழ்வர்.

தலைவன் தலைவியர் உடன்போக்கைக் கண்டோர் நற்றாய்க்கு அறிவுறுத்துகின்றனர். உடன்போக்கு உலகியற்கை என்பதைச் செவிலித்தாய்க்கு உணர்த்தி அது அறச்செயல் என்பதை உணரச் செய்பவரும் கண்டோர் ஆவர்.

**தேர்ப்பாகன், உழையர், சான்றோர், ஆய்ச்சியர், சுற்றத்தார்** ஆகியோர் தலைவன் தலைவியரின் இல்லற மாண்பைக் கண்டு மகிழ்கின்றனர்.

பிற உறவுநிலையாகக் கருதப்படுவோர் தலைவன் தலைவியர் இல்வாழ்வின் இன்ப துன்பங்களில் பங்கேற்பவராகக் காணப்படுகின்றனரே அல்லாமல் அவரைப் பற்றிய பிற உறவு நிலைச்செய்திகள் ஏதும் காணப்படவில்லை.

சங்க இலக்கிய அகத்திணைத் தலைவன் தலைவியர் வாழ்வின் உறவுமுறை சிக்கலற்ற மகிழ்ச்சி உடையதாக விளங்குகிறது.

தலைவன் தலைவியர் தம் ஐந்திணை அன்புறவால் எவர்க்கும் எந்நிலையிலும் கேடு சூழவில்லை. மாறாக இல்லறக் கடமைகளை ஆற்றி மகிழ்ச்சியே அடைகின்றனர்.

தலைவன் தலைவியர் தம் இல்லற உறவால் விருந்தோம்பியும், பொருள் தேடி வறியார்க்கு ஈதல் செய்தும், இல்லற வாழ்வின் மாண்பினை அவ்வப்போது தமக்குள்ளும், பிறர் பொருட்டும் எடுத்தியம்பியும் சமுதாயத்திற்கு உதவிடும் வகையில் எடுத்துக்காட்டான மனிதநேய மாந்தர்களாகத் திகழ்கின்றனர்.

அகத்திணைத் தலைவன் தலைவியர் உறவு அவர்களோடு நெருங்கிய தொடர்புடையோர் மாட்டு அமைந்த குறிப்பிட்ட எல்லைக்குட்பட்டதாகவே விளங்குகிறது.

சங்க இலக்கிய அக மாந்தர் உறவு குறிப்பிட்ட எல்லைக்குட்பட்டதாக இருந்தபோதும் அவருள் தலைவன் தலைவியர் மனமொத்தப் பெருவாழ்வு வாழ்ந்தனர். பிறரும், அவர் வாழ்வுக்கு ஊறுவிளைக்காதவராய் உறுதுணை செய்து விளங்கினர். அத்தகைய மனமொத்த அன்பின் வாழ்வு இல்லாமை இக்காலத்துப் பெருகிவரும் மணமுறிவிற்கான காரணமாக உள்ளது.

## புற மாந்தர் உறவு

**சங்கப் புற இலக்கியம் பாடிய புலவர்கள்** அரசர், வள்ளல், தலைவன், வீரர், தன்னொத்தப் பிறபுலவர், பாணர், கூத்தர், விறலியர் ஆகியோருடன் உறவு கொள்கின்றனர்.

புலவர்கள் தம் குடும்ப வறுமையால் அரசரிடம் சென்று அவர்புகழ்பாடிப் பரிசில் பெறுகின்றனர். தாம் பெறும் பரிசில் தம் தகுதிக்கு உரியதாகவும், எதிர்பார்க்கும் காலத்தோடும் கிட்டாதாயின் அப்புலவர்கள் நாடாளும் அரசர் என்றும் எண்ணாமல் தம் தகுதியையும், கொடைதரும் முறைமையையும் அவர்க்கு எடுத்தியம்புகின்றனர். தனக்குக் கொடையிடா மன்னர்க்குப் பிற மன்னரிடம் தாம் பெற்ற கொடையை அளிக்கும் சான்றாண்மையாளராகவும் திகழ்கின்றனர்.

புலவர்கள், தாம் பெற்ற எத்தகைய உயர்ந்த பரிசிலையும், தம் எதிர்நாள் வாழ்வுக்காக இருப்புவைத்துக் கொள்ளாமல் தம் மனைவியரிடம், அவர் விரும்புகின்ற

வர்க்கும் வந்து கேட்கும் எவர்க்கும் அள்ளி வழங்குமாறு அறிவுறுத்திய அன்பினராய் இருக்கின்றனர்.

புலவர்கள், மன்னர்களுக்கு இடையே எழுகின்ற பகை உணர்ச்சியை அறிந்து சந்து செய்வித்து போர் மூளாது தடுத்தும், போர் மூண்டிருப்பின் அறத்தை வலியுறுத்திப் போரை நிறுத்தியும், உலக அமைதியை நிலைநாட்டி வாழ்கின்றனர்.

இருப்பினும் அறவழிப் போரில் மன்னன் பெற்ற வெற்றியின் பொருட்டு அவன் வீரத்தை வாழ்த்தி எந்நாளும் அறம் நிலைக்க ஆற்றுப்படுத்துகின்றனர்.

அரசரின் செங்கோல் முறை, இல்வாழ்க்கை நெறி ஆகியவை குறித்து இடித்தும் இசைவாகவும் கூறும் புலவர்கள் அரச குடும்பத்திற்குக் குல குருவாகவும், நல்லமைச்சராகவும் விளங்குகின்றனர்.

அரசரும் புலவரும் கண்டு, கேட்டுப் பழகும், ஒருவரை ஒருவர் அறிந்த புணர்ச்சியாலன்றி, உணர்ச்சியால் ஒத்து வாழ்விலும் இறப்பிலும் உளமொன்றிய நண்பராய்ப் புகழ்கொண்டிருக்கின்றனர்.

குடிமக்களுக்கும் தமக்கும் அரணாய் ஆண்ட அரசன் உயிர்நீத்த போது புலவர்கள் அவர்பொருட்டு இரங்கியும் அவர்தம் மனைவியரின் கைம்மை நோன்புகண்டு உளம் நைந்தும் உறவின் உயர்வுக்கு எடுத்துக்காட்டான எல்லையாய் இருக்கின்றனர்.

புலவர்கள் அரசரிடம் மட்டுமல்லாமல், தலைவர், குறுநிலமன்னர், வள்ளல் ஆகியோரிடத்தும் சென்று பாடிப் பரிசில் பெற்று, அவரிடம் தவறு கண்டபோது கண்டித்து நல்லாற்றுப்படுத்தி நாட்டுக்கு நலம் சேர்க்கின்றனர்.

புலவர்கள் நாட்டைக் காக்கும் போர்வீரர்களின் மறச்செயலையும், அவர்தம் குடிப்பெருமையையும் நேர்முகத்தும் பிறர்மாட்டும் புகழ்ந்துரைக்கின்றனர்.

தாம் துய்க்கும் இன்பம் தம்மொத்த பிறரும் துய்க்க வேண்டும் எனும் விரிந்த நல்லுள்ளம் கொண்ட புலவர்கள், அவ்வின்பத்தைத் தமக்களித்த புரவலரிடம் பிறரையும் ஆற்றுப்படுத்தும் மனித நேயச் செல்வர்களாக மாண்புற்றிருக்கின்றனர்.

நிலம், மொழி, இனம் ஆகியவற்றின் எல்லை கடந்த சிந்தனை பெற்றிருந்த புலவர்கள் அன்பின் வழியினால் உலகொன்றிய உறவைத் தமக்குரியதாக எண்ணிப் போற்றுகின்றனர்.

சங்க இலக்கியப் புலவர்கள் அவ்வப்போது வறுமையாளராயும் பரிசில் பெற்றபோது செல்வந்தராயும் மாறி மாறி விளங்குகின்றனர். ஆயினும் அவர்கள் செந்தமிழ்ப்

புலமையிலும், மனிதநேய மாண்பிலும் எக்காலத்தும் நிலைத்த நிறை செல்வராய் விளங்கியிருக்கின்றனர்.

**நாடாளும் மன்னர்** புலவர், தன் மனைவி, வீரர், குடிமக்கள் ஆகியோரிடம் உறவு கொண்டிருக்கின்றனர்.

மன்னர்கள், புலவர்களின் நற்புலமை, தமக்கு நன்னெறிகாட்டும் நல்லறிவு, நாட்டு நலன் கருதும் உயர்பண்பு, மாசற்ற தூய அன்பு ஆகியவற்றைப் போற்றி வணங்குகின்றனர்.

தம்மைச் செங்கோலனாய்க் காணப் புலவர்கள் மேற்கொள்ளும் முயற்சியாக இடித்துரைக்கும்போது அது பொறுக்காது அப்புலவரைத் தண்டித்தலை மன்னர்கள் ஒருபோதும் செய்கின்றார் அல்லர்.

மாறாக, புலவர் அறியாது செய்யும் பிழை பொருட்டு மன்னர் அவரைத் தண்டிக்காமல் அப்புலவரின் வாழ்நாள் பெருகி, தமிழ்நலம், தமிழ்நிலம், உலகநலம் காக்க வேண்டும் எனும் உயரிய நோக்கால் அவர்க்கு உதவிசெய்து போற்றுகின்றனர்.

புலவர்தம் அறிவுரை, தம் நல்லாட்சிக்கு உறுதுணை செய்வதால் மன்னர், தம் வாழ்நாளினும் அப்புலவரின் வாழ்நாள் பெருகி அவர்கள் வாழ்வதை விரும்பி, அதற்கான வழிவகைகளை மேற்கொள்கின்றனர்.

ஒருத்தி அல்லாமல் பலரை மனைவியராகக் கொள்ளும் அரசுரிமை தனக்கு அமைந்திருப்பினும் இல்லற மாண்புணரும் மன்னன் தன் பட்டத்தரசியின் இறப்புக்கு வருந்தி உயிர் துறக்க எண்ணுகிறான்.

சங்ககால மன்னர் மறப்போர் செய்யினும் அதைச் சிறந்த அறப்போராகவே கடைப்பிடிக்கின்றனர். தம் நாட்டைக் காத்தற்பொருட்டுப் பகைமன்னரிடம் போரிட்டு வீரப்புண் அடைந்த வீர்களைப் பாசறைக் கண் சென்று அவர்க்குத் தாமே மருந்தளிக்கும் மருத்துவராக விளங்கியும், வெற்றிபெற்றபோது அவர்தம் போர்வருத்தம் தீர உண்டாட்டு நிகழ்த்தியும் விளங்கும் அரசர், சிறந்த மனிதநேய மாமனிதராக வீற்றிருக்கின்றனர்.

மன்னன் மக்களுக்கு உயிராக விளங்கி, அவர்தம் துன்பத்தை நீக்குகிறான். தன் குடிமக்களின் விருந்தோம்பல் பண்பைப் பெரிதும் மதித்து அவர்தம் வாழ்நாள் தன் வாழ்நாளோடு சேர்ந்துப் பெருக வாழ்த்துகிறான்.

மன்னர் தம்மை நாடிவருவோர்க்கு இல்லை எண்ணாது அருளும் இரக்கம் உடையவராகத் திகழ்கின்றனர்; விருந்தோம்பல் அறத்தைச் செம்மையாகக்

கடைப்பிடிக்கின்றனர்; தம் மானத்தைப் பெரிதாகப் போற்றுகின்றனர். அதன் பொருட்டுத் தம் அரிய உயிரை விடவும் துணிகின்றனர்.

வீரம், கல்வி, குழந்தைச் செல்வம், சான்றோர் பண்பு ஆகியவற்றை மன்னர் வியந்து தாமே பாடிப் போற்றுகின்றனர்.

தம்மைத் தேடிவரும் இரவலர் பின்சென்று அவர்க்குப் பரிசளித்து அவர் தேர் புறப்படும் வரையும் காத்திருந்து வழியனுப்பும் பண்புச் செல்வராய் மன்னர் விளங்கி நிற்கின்றனர். சங்க கால மன்னரின் இப்பண்பின் எச்சமாக, இன்றும் விருந்தினரை வழியனுப்பி வைக்கும் பண்பு நம்மிடம் இருக்கின்றது.

மன்னர் நீதி காக்கும் முறைமையில் மனிதரிடம் மட்டுமன்றி, பிற அஃறிணை உயிர்களிடத்தும் மிகக் கவனம் காட்டுகின்றனர்.

சங்க கால மன்னராட்சி மரபுவழி சார்ந்த மன்னராட்சியாக இருப்பினும், குடியாட்சி போல மக்களின் உரிமைகள் மதிப்பளித்துப் பாதுகாக்கப்படுகின்றன.

**வள்ளல்கள்** எந்த எதிர்பார்ப்புமின்றி இரவலர்க்கும் புலவர்க்கும் பரிசில் வழங்குகின்றனர்.

தலைவன் தன்னிடம் பரிசில் பெற வருகின்ற இரவலர்க்குத் தரப் பொருளில்லை யெனினும், தன் வீர வாளை ஒப்புவைத்தேனும், கடன்பெற்றேனும் பொருளை ஈட்டித் தன் வள்ளண்மை மரபைக் காத்து நிற்கின்றான்.

**பாணர், பொருநர், கூத்தர்** ஆகியோர் தமக்குப் பரிசிலளித்த புரவலரிடம் தம்மையொத்தப் பிறரை ஆற்றுப்படுத்தி அவர்க்கும் நல்வாழ்வு உண்டாக உதவுகின்றனர்.

**வீரத்தாய்** போர்க்களத்திற்குத் தன் ஒருமகன் உட்படக் குடும்பத்தின் ஆண் உறவினரையெல்லாம் அனுப்பி நாட்டைப் பாதுகாக்கும் முயற்சியில் ஈடுபடுகிறாள். மேலும் வீரத்தாயர், தம் புதல்வரின் விழுப்புண்பட்ட வீர மரணம் கண்டு ஈன்றபொழுதினும் பெரிதும் மகிழ்கின்றனர்.

**வீரரின் வீர மனைவியர்** விழுப்புண்பட்ட தம் கணவரின் அருகிலிருந்து மருந்தளித்துப் பாதுகாக்கும் கடமை ஆற்றுகின்றனர். மேலும் அவரது வீரமரணத்தை மனமுவந்து குடிப்பெருமையாகக் கருதி ஏற்றுக் கொள்கின்றனர்.

**வீரப்பெண்டிர்** வீரரையே தம் கணவராக மணக்க விரும்புகின்றனர்.

**கண்டோராகிய மக்கள்** புலவர், இரவலர் ஆகியோர் புரவலரைத் தேடிப் பரிசில் பெறச் செல்லும்போது, அவர்களை வழியில் கண்டு அவர்களுக்கு அன்புடன் விருந்தளித்து மகிழ்கின்றனர்.

பண்டமாற்றின் வழி ஐந்நிலமக்கள் ஒருவருக்கொருவர் உறவு கொண்டிருக்கின்றனர்.

தன்னைச் சேர்ந்தவர்களின் துன்பம் கண்டபோது அஞ்சி நெகிழ்ந்து அதைப்போக்கி இனியராய் விளங்கும் தன்மையையே சான்றோர், தம் செல்வம் எனப் போற்றுகின்றனர்.

புறமாந்தர் உறவும் அன்பின் அடிப்படையில் நிகழ்கின்றது. அன்பாகிய குருதியோட்டத்தில் இயங்கும் உலகளாவிய உறவு மனப்பான்மை ஒன்றே சங்க காலச் சமுதாய உயிரோட்டமாக நிலைத்திருக்கின்றது.

## எதிர்கால ஆய்வுப் புலங்கள்

இவ்வாய்வை அடியொற்றி ஆராய்ச்சி செய்வதற்குரிய சில ஆய்வுப் புலங்கள் குறிப்பிடத்தக்கன.

சங்க இலக்கியங்களை அடுத்துத் தோன்றிய காப்பிய இலக்கியங்கள், பக்தி இலக்கியங்கள், தற்கால இலக்கியங்கள் ஆகியவை காட்டும் மனித உறவுகளைத் தனித்தனி ஆய்வாகவும், தொகுப்பாய்வாகவும் செய்யலாம்.

அவ்விலக்கியங்களையும் கவிதை, உரைநடை, புதினம், சிறுகதை, நாடகம் என வகைப்படுத்தி அவற்றில் காணப்படும் உறவுகளையும் தனித்தனியாகவும் தொகுப்பாகவும் ஆய்வுக்கு உட்படுத்தலாம்.

காலப்போக்கில் இலக்கியங்கள் காட்டும் மனித உறவின் வளர்ச்சி குறித்தும் ஆய்வு நிகழ்த்தலாம்.

இருவேறுபட்ட இலக்கிய வகைகட்கான உறவுகளை ஒப்பீட்டாய்வாகவும் இயற்றலாம்.

வளர்ந்துவரும் அறிவியல் முன்னேற்றத்தால், மக்கட்பெருக்கத்தால், பொருளாதார வளர்ச்சியால் இன்றைய சமுதாயத்தில் நிலவும் உறவின் இயல்புகளையும் முரண்பாடுகளையும் தனித்தனி ஆய்வாகவும் தொகுப்பாய்வாகவும் மேற்கொள்ளலாம்.